# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-25 ★ JANUARY 1986



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்..." லூக் 6:38

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. Ps. |
|---|---|---|
| 1. | 13 x 19 Printing Machine | 19000.00 |
| 2. | 32" Paper cutting Machine | 11000.00 |
| 3. | Proof Machine 13" x 22" | 800.00 |
| 4. | Perforating Machine 18" | 1000.00 |
| 5. | English Type & Cabinets | 11900.00 |
| 6. | Tamil Type & Cabinets | 11900.00 |
| 7. | Locking Plate 18" x 24" | 400.00 |
| | Total Rs. | 56000.00 |

+ Tax 10%
without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் தேவனுடைய பிள்ளைகளுக்கு எனது 1986-ம் புத்தாண்டு வாழ்த்துக்களை இயேசுவின் நாமத்தில் கூறிக்கொள்ளுகிறேன். தேவன் உலகத் தோற்றத்திற்கு முன்னே கிறிஸ்துவுக்குள் நம்மை தெரிந்து கொண்டபடியே (எபே. 1:4) என்று சத்திய வேத புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. உலகத்தோற்றத்திற்கு முன்னே தேவன் உலக சிருஷ்டிப்பையும், ஆதாம் சிருஷ்டிக்கப் படப்போவதையும், அந்த ஆதாம் விழுந்து போகப்போகிறதையும், விழுந்து போன மனுக்குலத்தை மீட்க கிறிஸ்து இயேசுவை அவர் அனுப்பி அவருக்குள்ளாய் அவர் மூலமாய் நாம் இரட்சிக்கப்பட்டு இவ்விதமாய் தேவ சந்நிதானத்தில் இருப்பதையும் தேவன் முன்னமே அறிந்திருக்கிறார்.

நம்மைக் குறித்தும் உலகத்தைக் குறித்தும் தேவன் தீர்மானித்த திட்டம் உண்டு. அது நம்முடைய நன்மைக் கேதுவாகவே இருக்கிறது. கிறிஸ்துவுக்குள் தேவன் நம்மை தெரிந்து கொண்டிருக்கிற படியினால் நாம் விழுந்து போகிறதோ, இழந்து போகிறதோ, ஏமாற்றமடைய போகிறதோ இல்லை. நம்மை ஒன்றும் சேதப்படுத்த முடியாது. தேவனுடைய சித்தமில்லாமல் எதுவும் நடக்காது. "தமது சித்தத்தின் ஆலோசனைக்கு தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானமே உலகில் நிறைவேறி வருகிறது" (எபே. 1:12). ஆகையால் தேவனுடையபிள்ளைகள் பயப்படாதவர்களும், அசையாதவர்களும், தேவனை ஸ்துதித்து எப்பொழுதும் நம்பிக்கையோடு முன்னேறுகிறவர்களாகவும் இருக்க வேண்டும். சத்துரு முறியடிக்கப்பட்டு போவதும், தேவ ஜனம்மேற்கொள்ளப் போவதும் சீக்கிரமாய் நிகழப்போகிற காரியமாகும்.

உலகத்தோற்ற முதல் தேவனுக்கு தம்முடைய கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது (அப். 15:18). ஆனபடியினால் தேவனுடைய பிள்ளைகள் சந்தோஷமாயிருக்கவும், தைரியம் கொண்டு சத்துருவை எதிர்த்து அவனை முறியடிக்க ஆயத்தப் படுங்கள்.

கர்த்தர் உங்களெல்லாரோடும் கூட இருப்பாராக!

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

**25. ஆண்பிள்ளை பரலோகத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுதல் (வெளி. 12 : 1 - 5 ; எஸ்தரின் புஸ்தகம்):**

பரிசுத்தவான்கள் அறியவேண்டியது, வெளிப்படுத்தின விசேஷம் 12-ம் அதிகாரத்தில் உள்ள சம்பவங்கள் பூமியிலே நிறைவேற வேண்டும். வெளிப்படுத்தின விசேஷம் 12-ம் அதிகாரம் 1முதல் 10வசனங்கள் நாம் மிக முக்கியமாய் கவனிக்க வேண்டிய வேதபாகம். இந்தப் பாகத்திலே வானத்திலே ஒரு ஸ்திரீ காணப்பட்டதாகவும், அவள் கர்ப்பவதியாயிருந்து பிள்ளை பெறும்படி வேதனைப்பட்டு அலறினதாகவும், அவள் பிள்ளை பெற்றவுடனே அந்த பிள்ளையை பட்சித்துப் போடும்படி சிவப்பான பெரிய வலுசர்ப்பம் அவளுக்கு முன்பாக நின்றதாகவும் எழுதப்பட்டுள்ளது. சகல ஜாதிகளையும் இருப்புக்கோலால் ஆளுகை செய்யும் ஆண்பிள்ளையை அவள் பெற்றாள். அவளுடைய பிள்ளை தேவனிடத்திற்கும் அவருடைய சிங்காசனத்தினிடத்திற்கும் எடுத்துக்கொள்ளப்பட்டது என்றும் எழுதப்பட்டுள்ளது.

அதன்பின்பு வானத்திலே யுத்தம் உண்டானதாகவும், வலுசர்ப்பம் (பிசாசு-சாத்தான்) தோல்வியடைந்து, பூமியிலே விழத்தள்ளப்பட்டதாகவும் அதனோடே கூட அதனுடைய தூதர்களும் தள்ளப்பட்டதாகவும், வானத்திலே அவர்கள் இருந்த இடமும் காணப்படாமற் போயிற்று என்றும் எழுதப்பட்டுள்ளது. இந்த வேத பாகங்கள் குறித்து கிறிஸ்தவ மண்டலத்தில் இரு வகையாக விளக்கங்கள் கூறிக் கொள்ளுகிறார்கள்.

1. ரோமன் மார்க்கத்தார் அந்த ஸ்திரீ மரியாள் என்றும், அந்த ஆண்பிள்ளை இயேசு கிறிஸ்து என்றும் வியாக்கியானம் பண்ணுகிறார்கள்.

2. பிராட்டஸ்டண்ட் கிறிஸ்தவர்கள் அந்த ஸ்திரீ சபை என்றும், அந்த ஆண்பிள்ளை வருகையில் எடுத்துக் கொள்ளப்படுகிற பரிசுத்தவான்கள் எல்லாரும் என்றும் வியாக்கியானம் பண்ணுகிறார்கள்.

இந்த இரண்டுவித விளக்கங்களுமே தவறு. இவ்விளக்கங்கள் விழுந்துபோன சபையிலிருந்து தோன்றின விளக்கங்கள் ஆகும். இவைகளிலேயும் இவைகளுக்குள்ளேயே ஒவ்வாமை உண்டு. வெளிப்படுத்தின விசேஷம் வெளிப்படுத்தின விசேஷமாயிருக்கிறபடியால் வெளிப்படுத்தல் இல்லாதவர்கள் இவைகளிலுள்ள சம்பவங்கள் பற்றி எழுதும் வியாக்கியானங்கள் எல்லாம் யூகமே. அப். யோவான் பத்மு தீவில் இருக்கும்பொழுது கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளாகி தான் கண்டதையும், கேட்டதையும், பின்பு நடக்கப் போகிற சம்பவங்களையும் எழுதினார்.

இவ்விதமாய் ஆவிக்குள்ளாகிறவர்களே (வெளிப்படுத்தல் பெற்றவர்களே) வெளிப்படுத்தின விசேஷத்தின் சம்பவங்களை விளங்கிக் கொள்ள முடியும். வெளிப்படுத்தின விசேஷம் 12-ம் அதிகாரத்தின் சம்பவங்கள் கடைசிக் காலத்தில் நிகழும் சம்பவமாகும். அங்கே காணப்படுகிற ஸ்திரீ கடைசிக் காலத்தில் எழும்புகிற தேவனுடைய மணவாட்டியாகிய திருச்சபையாகும். இந் நாட்களிலே சபை வேண்டாம், இரட்சிப்புதான் முக்கியம் என்போரும், எல்லாம் சபைதான் என்போரும், சபைக்கு அப்படி ஒரு பெயர் கிடையாது என்போரும், தேவையில்லை என்போரும், ஏதாவது ஒரு பெயரை வைத்துக்கொள்வோரும், தங்கள் விருப்பப்படி பெயர் சூட்டிக் கொள்வோரும் உண்டு. இவர்கள் எல்லாம் தெய்வீக வெளிப்படுத்தல் பெறாதவர்களும், தேவனிடத்தில் இருந்து கட்டளைப் பெறாதவர்களுமாகும்.

வேதாகமத்திலே திருச்சபையைப் பற்றி எழுதப்பட்ட தெய்வீக புஸ்தகங்களில் எஸ்தரின் புஸ்தகமும் ஒன்று. இதில் கிறிஸ்துவின் சபையைப் பற்றிய தெய்வீக இரகசியம் அடங்கியிருக்கிறது. இது சபைக்காகவே எழுதப்பட்ட புஸ்தக

மாகும். இந்த புஸ்தகத்தில் தேவன் என்று ஒரு வார்த்தைக்கூட இல்லாமல் இருந்தும் தேவ ஆவியானவர் இந்த புஸ்தகத்தை வேதாகமத்தில் இணைத்துள்ளார். இது அதிசயமே! இது சபைக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆதி சபை கீழ்ப்படியாமையினால் விழுந்து போனது அல்லது தள்ளப்பட்டது. அதற்கு வஸ்தி அடையாளமாய் இருக்கிறாள். பின்பு கன்னிகைகள் சேர்க்கப்பட்டார்கள். புறஜாதியாளாகிய (அரசனுக்கு புறஜாதியாள்) எஸ்தர் மணவாட்டியாக தெரிந்து கொள்ளப்பட்டு, அங்கீகரிக்கப்பட்டு, அரசனோடுகூட அரியணையில் அமர்ந்தாள். தேவ ஜனங்களை அழிந்துப்போகும்படியாக அரசனின் அதிகாரம் பெற்றிருந்த ஆமான் தள்ளப்பட்டு தூக்கிலிடப்பட்டான். அவனோடுகூட அவனுடைய குடும்பமும் அவனுடைய சகாக்களும் அழிக்கப்பட்டார்கள். அதற்கு முன்பு அவனுடைய அதிகாரமும் அவனுக்கு அரசனால் கொடுக்கப்பட்ட முத்திரை மோதிரமும், எஸ்தரின் மன்றாட்டினால் பறிக்கப்பட்டு தேவனுடைய மனுஷனாகிய மொர்தெகாய்க்கு அணிவிக்கப்பட்டது. இதற்குச் சட்டத்தை மீறி இராஜாத்தி இராஜாவின் சமுகத்தில் பிரவேசித்து இராஜாவினிடத்தில் மன்றாடி ஆமானுடைய அதிகாரத்தையும், அவனுடைய திட்டத்தையும் முறியடித்து தேவ ஜனங்களை அழிக்க வேண்டுமென்று ஆமான் பிரசித்தப்படுத்தியிருந்த கட்டளையை மாற்றி அமைக்க வேண்டும். சட்டம் என்னவென்றால் இராஜா அழைத்தாலொழிய யாரும் இராஜ சமுகத்தில் பிரவேசிக்கக்கூடாது. அதைமீறி எஸ்தர் இராஜ சமுகத்தில் பிரவேசித்து இராஜாவினிடத்தில் தயவு பெறுகிறாள்.

இதற்கொப்பாக சட்டத்தை மீறி ஒரு ஆள் (ஆண்பிள்ளை) பரலோகத்தில் பிரவேசிக்க வேண்டும். இன்று சாத்தான் அதிகாரமுடையவனாய், தடை செய்கிறவனாய் (சபை எடுத்துக் கொள்ளப்படாதபடி தடை செய்கிறவன்) இருக்கிறான். II தெசலோனிக்கேயர் புஸ்தகம் 2-ம் அதிகாரத்தில் 6, 7, 8 வது வசனங்களில் தடைசெய்கிறவன் என்று எழுதப்பட்டிருக்கிறவன் சாத்தானே.

கிறிஸ்தவர்களில் அநேகர் இந்த பாகத்தில் வருகிற தடை செய்கிறவன் பரிசுத்த ஆவியானவர் என்று பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். இது மகாபெரிய தேவதூஷணமாகும். இங்கே என்ன எழுதப்பட்டிருக்கிறது II தெ 2 : 1-12 தடைசெய்கிறவன் நடுவிலிருந்து நீக்கப்படும் பொழுது அந்திக்கிறிஸ்து வெளிப்படுவான் என்றும், (கேட்டின் மகனாகிய பாவ மனுஷன், அக்கிரமக்காரன்) அந்திக்கிறிஸ்து வெளிப்பட்ட பின்பே கர்த்தருடைய நாள் இருக்கும் என்றும், நாம் அவரிடத்தில் சேர்க்கப்படுவோம் என்றும் (சபை எடுத்துக்கொள்ளப்படுதல்) தெளிவாக எழுதப் பட்டுள்ளது. அப்படியிருந்தும் தடை செய்கிறவன் என்று இருப்பது பரிசுத்த ஆவியானவர் என்றும், பரிசுத்த ஆவியானவர் அந்திக்கிறிஸ்து வெளிப்படாதபடி தடையாய் இருக்கிறார் என்றும், முதலாவது இயேசு கிறிஸ்து வருவார்; சபை எடுத்துக்கொள்ளப்படும், தடை செய்கிறவராகிய பரிசுத்த ஆவியானவர் சபையோடுகூட பரலோகத்திற்கு போய் விடுவார். பின்பு அந்திக்கிறிஸ்து வெளிப்படுவான் என்றும் பொய்யாகப் பிதற்றுகின்றனர்.

தேவனுடைய மக்கள் II தெசலோனிக்கேயர் 2-ம் அதிகாரம் 1 முதல் 9 வரையுள்ள வசனங்களை தெளிவாய் வாசித்துப் பார்க்கவும். பரிசுத்த ஆவியானவரை வேதம் ஒருபோதும் அவன் என்றோ, அது என்றோ எழுதினதில்லை, எழுதாது. தேவஜனங்கள் இரட்சிக்கப்படாதபடி தடுப்பதும், பரிசுத்தமடையாதபடி தடுக்கிறதும், தடை செய்கிறதும், பரிசுத்தவான்கள் மேலெழும்பாதபடி தடையாய் நிற்பதும் சாத்தானே. "சாத்தானே எங்களை தடைபண்ணினான்" (I தெச 2 : 18; ரோம 1 : 13). அப்போஸ்தல நடபடிகள் 16-ம் அதிகாரம் 6, 7 வசனங்களில் ஆசியாவிலே வசனத்தை சொல்லாதபடி பரிசுத்த ஆவியானவரால் தடை செய்யப்பட்டதாகவும், ஆவியானவரோ அவர்களைப் போக வொட்டாதிருந்தார் என்று எழுதப்பட்டுள்ளது. அதே சமயத்தில் மக்கெதோனியாவுக்கு அவர்கள் கடந்து செல்லும்படியாகவும், அங்கே போய் கவி

சேஷத்தை அறிவிக்கும்படியாகவும் பரிசுத்த ஆவியானவர் ஒரு தரிசனத்தின் மூலமாய் அவர்களை நடத்தினார். அப்படியே அவர்கள் கடந்து சென்று பிலிப்பு பட்டணத்துக்கு அவர்கள் வந்து சுவிசேஷத்தை அறிவித்து திருச்சபையை ஸ்தாபித்தார்கள் என்றும் எழுதப்பட்டுள்ளது (அப் 16 : 6-40).

பரிசுத்த ஆவியானவரை தடைசெய்கிறவன் என்று ஒரு போதும் ஒருவரும் சொல்லக் கூடாது. தடைசெய்கிறவன் சாத்தான் என்றும், சொல்லப்படுகிற பழைய பாம் பாகிய வலுசர்ப்பமேயாகும் (வெளி 12 : 3-10). இந் நாட்களிலே சாத்தான் அதிகாரம் உடையவனாய் கிரியை செய்து கொண்டிருப்பதை உண்மையாய் உணரு கிற தேவ ஜனங்கள் எல்லாரும் ஒத்துக் கொள்வார்கள். அவன் கல்வாரியில் இயேசு கிறிஸ்துவினால் முறியடிக்கப்பட்டபோதிலும் அவன் இன்னும் பூமியிலே கீழே விழத் தள்ளப்படவில்லை. அவனுடைய அதிகாரங் கள் முற்றிலும் பறிக்கப்படவில்லை.

நாங்கள் (ஊழியர்கள்) ஒருமுறை ஓர் இடத்தில் சாத்தானை எதிர்த்து விரட்டினோம். அவன் சர்ப்ப ரூபத்தில் வேகமாய், தலை கீழாய் ஒரு குளத்தில் போய் விழுந்தான். விழுந்ததும், தலையை மாத்திரம் உயர்த்தி காண்பித்தான். அவன் வாயிலே ஒரு முத்திரை மோதிரம் இருந்தது. அதை தூக்கி காண்பித்து அவன் சொன்னதாவது: "நானும் அதிகாரம் பெற்றுதான் கிரியை செய்கிறேன், என்னை ஏன் விரட்டுகிறீர்கள்" என்றான்.

"...சாத்தான் மின்னலைப்போல வானத் திலிருந்து விழுகிறதைக் கண்டேன்." "இதோ சர்ப்பங்களையும் தேள்களையும் மிதிக்கவும், சத்துருவினுடைய சகல வல்ல மையையும் மேற்கொள்ளவும் உங்களுக்கு அதிகாரம் கொடுக்கிறேன்; ஒன்றும் உங்களைச் சேதப்படுத்தமாட்டாது" (லூக் 10 : 18 : 19) என்று இயேசுவானவர் திரு வுளம் பற்றினார்.

எப்பொழுது சாத்தான் வானத்திலிருந்து விழுந்தான்? இது இனி நடக்கப் போகிற சம்பவமாகும். தேவனுடைய ஊழியர் களினால் சுகமாக்கமுடியாத வியாதிகளுண்டு. விரட்ட முடியாத பிசாசுகள் உண்டு, சத்துரு பரிசுத்த ஸ்தலத்தை எல்லாம் கெடுத்துப் போட்டான். பரிசுத்தவான் களில் அநேகரை தன் வாலினால் (கள்ள உபதேசம், பாவம்) கீழே விழத்தள்ளிப் போட்டான் (வெளி 12 : 4).

இந்தக்கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வது இல்லை என்று இயேசு சொன்னார், ஆனால் ஆதிசபை விழுந்து போயிற்று. பாதாளத்தின் வாசல் கள் (பாவம்) சபைகளை மேற்கொண்டுள்ளது. ஆதி சபை விழுந்ததை இதற்கு உதாரண மாகச் சொல்லலாம்.

இப்பொழுதும் திருவசனத்துக்கு கீழ்ப் படியாதவர்கள் இடறுகிறார்கள் (I பேது 2 : 8) அப். பரி. பவுல் எபேசியர் 2-ம் அதிகாரம் வசனம் 2-லேயும் 6-ம் அதிகாரம் வசனம் 12-லேயும் இப்பொழுது கிரியை செய்கிற ஆகாயத்து அதிகாரப் பிரபுவாகிய ஆவி களைப் பற்றி எழுதியுள்ளார். இவைகளை இயேசுவின் நாமத்தினால் நாம் எதிர்க்க வேண்டும். அவன் ஆகாயத்தில் தன்னு டைய ஸ்தானத்தை ஸ்தாபித்திருக்கிறான். அவன் அங்கேயிருந்து கீழே விழத் தள்ளப் பட வேண்டும். அதற்குமுன் ஆண் பிள்ளை தேவனிடத்திற்கும், தேவனுடைய சிங்காசனத்திடத்திற்கும் எடுத்துக் கொள்ளப் பட வேண்டும். சட்டத்தை மீறி ஒருவர் இராஜ சமூகத்தில் பிரவேசிக்க வேண்டும்.

இதே கடைசி காலத்தில் எழும்புகிற ஒரு பரிசுத்தவான் உயிரோடே மறு ரூப மடைந்து தேவனிடத்திற்கும், தேவனுடைய சிங்காசனத்திடத்திற்கும் எடுத்துக் கொள் ளப்படுகிற ஒரு சம்பவமாகும்.

நியாயப்படி இயேசுவானவர் வரும் போது கிறிஸ்துவுக்குள் மரித்த பரிசுத்தவான் கள் உயிர்த்தெழும்புவார்கள். உயிரோடே ஆயத்தமாயிருக்கிற பரிசுத்தவான்கள் மறுரூபமடைந்துஎடுத்துக்கொள்ளப்படுவார் கள். இந்தசட்டத்தைமீறி இதற்கு முன்னாலே ஒருவர் மறுரூபமடைந்து தேவனுடைய சிங்காசனத்தண்டை எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். மரித்தோர் உயிர்த்தெழுந்து

எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்பதற்கு இயேசுகிறிஸ்து மாதிரியாக இருக்கிறார். அப்படியே உயிரோடு இருக்கிறவர்கள் மறுரூபமடைந்து எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்பதற்கு ஒரு மாதிரி வேண்டும். ஏனோக்கு எலியா மோசே போன்ற பரிசுத்தவான்கள் பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்கள். ஆனால் தேவனுடைய சிங்காசனத்தண்டை எடுத்துக் கொள்ளப்படவில்லை.

"என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு" என்று இயேசுவானவர் சொல்லியபடி இவர்கள் பரலோகத்தின் ஒரு பகுதியாகிய பரதீசில் (இளைப்பாறுகின்ற ஸ்தலத்தில்) தங்கியிருக்கிறார்கள். அவர்கள் மறுரூபமடைந்ததாக நாம் வேதத்தில் காண்பதில்லை. "இயேசுவானவரும் "பரலோகத்திலிருந்திறங்கினவரும் பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷ குமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனும் இல்லை" (யோவா 3:13) என்றும்; "தேவனை ஒருவனும் ஒருக்காலும் கண்டதில்லை..." என்றும் உறுதிப்படுத்தியுள்ளார் (யோவா 1:18).

ஆண்பிள்ளை கடைசிக் காலத்தில் தோன்றுகிற தேவனுடைய மணவாட்டியாம். திருச்சபையிலிருந்து புறப்படும் தேவனுடைய சபையைப்பற்றி அது ஒன்றே என்றும், அது மணவாட்டி என்றும், அதனுடைய பெயர் எருசலேம் என்றும், சூலமித்தி என்றும் எழுதப்பட்டுள்ளது. இராஜஸ்திரீகள் 60 பேரும், மறுமனையாட்டிகள் 80 பேரும் உண்டு; கன்னியருக்குத் தொகையில்லை (ஆம் இரட்சிக்கப்பட்ட கூட்டங்கள் அநேகம் இருக்கலாம்) என் புறாவோ என் உத்தமியோ ஒருத்தியே அவள் தன் தாய்க்கு ஒரே பிள்ளை. அவள் தன்னைப் பெற்றவளுக்கு அருமையானவள். குமாரத்திகள் அவளைக் கண்டு அவளை வாழ்த்தினார்கள் இராஜஸ்திரீகளும் மறுமனையாட்டிகளும் அவளைக் கண்டு போற்றினார்கள். "சந்திரனைப் போல் அழகும், சூரியனைப் போல் பிரகாசமும், கொடிகள் பறக்கும் படையைப் போல் கெடியும் உள்ளவளாய் அருணோதயம் போல் உதிக்கிற இவள் யார்?" (உன் 6:4-10) என்று எழுதப்பட்டுள்ளது. சந்திரனைப்போல் அழகு: சந்திரன் தனக்கு வேண்டிய ஒளியை சூரியனிடத்தில் இருந்து பெற்றுக் கொள்கிறது. அப்படியே திருச்சபையானது தனக்கு வேண்டிய ஒளியை கிறிஸ்துவினிடத்தில் இருந்து பெற்றுக் கொள்கிறது.

தேவன் பகலை ஆள பெரிய சுடராகிய சூரியனையும், இரவை ஆள சிறிய சுடராகிய சந்திரனையும் படைத்தார். இயேசுகிறிஸ்து இந்த உலகத்தில் இருந்த நாட்களில் இந்த உலகத்திற்கு வெளிச்சமாய் இருந்தார். அவர் பூமியில் இருந்த நாட்கள் பகலாகும். இப்பொழுது இரவு. சபையானது வெளிச்சமாய் உலகத்தில் பிரகாசிக்க வேண்டும். தேவனுடைய மெய்யான திருச்சபையே அப்படி பிரகாசிக்கும். சபைகள் என்று சொல்லப்படுகிற அநேக கூட்டாய்மைகளின் நாற்றமும், அச்சபைகளிலிருந்து உண்டாகிற இருட்டடிப்பும் மக்களை இடறச் செய்கிறது. மேலும் மணவாட்டியாகிய சபையானது கொடிகள் பறக்கும்படையைப் போல் கெடியும் உள்ளதாய், அருணோதயம் போல் உதிக்கும் என்று எழுதப்பட்டுள்ளது.

ஆம், கடைசிக்கால சபை ஒரு சேனையைப் போல் ஒழுங்கும், கிரமமும், கட்டுப்பாடும் உள்ளதாய், பிறர் பயப்படத்தக்கதான (கெடியுமுள்ளவாய்) தேவ சேனையாய் கர்த்தருடைய வார்த்தையின்படி செய்கிறதற்கு வல்லமையுள்ளதாய்; "விடியற்கால வெளுப்பு பர்வதங்களின் மேல் பரவுகிறது போல ஏராளமான ஒரு பலத்த ஜாதியாய் தீவிரமாய் வந்து பரவும்" (உன் 6:10; யோவே 2:2-11) என்று வேதத்தில் எழுதியுள்ளது.

இந்த சூலமித்தி (சாலேம்) இரண்டு சேனையின் கூட்டத்திற்கு சமானம் என்று வேதத்தில் எழுதப்பட்டுள்ளது (உன் 6:4-13). கடைசிக்காலத்தில் சபை இப்படி இருக்கும். இதிலிருந்து சகல ஜாதிகளையும் இருப்புக் கோலால் ஆளுகை செய்யும் ஜெயம் கொள்கிற ஆண்பிள்ளை பிறக்கும். (வெளி 12:1-5; வெளி 2:26, 27).

"உன் ஜனப்புத்திரருக்காக நிற்கிற பெரிய அதிபதியாகிய மிகாவேல் அக்காலத்திலே எழும்புவான்" (தானி 12 : 1) இது கடைசிக்காலத்தில் எழும்புகிற பரிசுத்தவானாகும்.

இது இயேசுகிறிஸ்து அல்ல. இந்த பிள்ளை பரலோகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பின்பு "வானத்திலே யுத்தமுண்டாயிற்று. மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதர்களும் வலுசர்ப்பத்தோடே யுத்தம் பண்ணினார்கள்; வலுசர்ப்பமும் அதைச்சேர்ந்த தூதரும் யுத்தம்பண்ணியும் ஜெயங் கொள்ளவில்லை" "வானத்தில் அவர்கள் இருந்த இடமும் காணப்படாமற் போயிற்று." "உலகமனைத்தையும் மோசம் போக்குகிற பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய பெரிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது, அதனோடே கூட அதைச் சேர்ந்த தூதரும் தள்ளப் பட்டார்கள்" (வெளி 12 : 7,8,9). இந்த வேதவாக்கியம் நிறைவேறப்போகிறது.

(தொடரும்)

---

"...தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்லாம் நிறைவேறித் தீரும்" - அப் 3 : 21

---

# வேத பாடம்

**ஆதி 37:5-11** யோசேப்பின் தரிசனங்கள்: ஒரு தரிசனத்தில் யோசேப்பு தன் சகோதரரோடு சேர்ந்து வயலில் அறுத்த அரிக்கட்டுகளை கட்டிக்கொண்டிருப்பதாகவும், யோசேப்பின் அரிக்கட்டு நிமிர்ந்து நின்றதாகவும், மற்ற அரிக்கட்டுகள் எல்லாம் அந்த அரிக்கட்டை சுற்றி வணங்கி நின்றதாகவும் சொப்பனங்கண்டு அதை தன் சகோதரருக்கு அறிவித்தான். அவர்கள் யோசேப்பை கோபித்து நீ எங்களை ஆளப்போகிறயோ என்று சொல்லி அவனைப் பகைத்தார்கள். யோசேப்பு இன்னொரு சொப்பனமும் கண்டான் அதில் சூரியனும், சந்திரனும், 11 (பதினொன்று) நட்சத்திரங்களும் தன்னை வணங்குகிறதாகக் கண்டு; இதை தன் தகப்பனுக்கும், சகோதரர்களுக்கும் அறிவித்தான் அவனுடைய தகப்பன் அவனைக் கடிந்து கொண்டு அனுப்பிய போதிலும் அந்த சொப்பனத்தை மனதிலே வைத்துக் கொண்டான். யோசேப்பின் சகோதரர்களோ அவனைப் பகைத்தார்கள்.

**ஆதி 37:12-24** *சில* நாட்களுக்குப் பின்பு ஆடு மேய்க்கச் சென்ற தன் சகோதரர்களைக் கண்டு சுகசேமம் விசாரித்து வரும்படி யாக்கோபு யோசேப்பை அனுப்பினான். அவன் தன் சகோதரர்களைத் தேடி அலைந்து கடைசியில் தோதாயீயில் அவர்கள் ஆடு மேய்க்கிறதாகக் கேள்விப் பட்டு அங்கே போனான். தூரத்திலே யோசேப்பு வருகிறதை அவன் சகோதரர்கள் கண்டு அவனைக் கொலை செய்யும்படி சதி ஆலோசனை பண்ணி, அவனை இன்று கொன்று போடுவோம் அவனுடைய சொப்பனங்கள் எப்படி முடியும் என்று பார்ப்போம் என்று சொல்லிக் கொண்டு அவனைப் பிடித்து அடித்து அவனுடைய அங்கியை கழற்றிக்கொண்டு கொலை செய்ய எத்தனித்தார்கள். ரூபனோ அவனைத் தப்புவிக்க மனதாய் நம்முடைய கையினாலே நாம் இவனை கொல்ல வேண்டாம்; இவனைத் தூக்கி இந்த தண்ணீரில்லா குழியில் போட்டுவிடுவோம் என்று சொல்லி, யோசேப்பு எவ்வளவோ கெஞ்சி மன்றாடி கேட்டும் அவனுக்கு செவிகொடாமல் அவனை தூக்கி குழியிலே போட்டார்கள். யோசேப்பின் சகோதரர்களுடைய திட்டம் என்னவென்றால்; யோசேப்பை கொன்று போடுவோம் அவன் கண்ட சொப்பனங்கள் எப்படி நிறைவேறும் என்று. இன்று சாத்தானும் அவனுடைய பிள்ளைகளும் பரிசுத்தவான்களைக் கொன்று போட்டால் அவர்களுக்கு தேவன் அருளிய வாக்குத்தத்தங்கள் எப்படி நிறைவேறும் என்று நினைக்கிறார்கள்.

தேவனுடைய வாக்குத்தத்தங்கள் நிறைவேறியே தீரும் என்பதற்கு யோசேப்பின் சரித்திரம் நமக்கு சாட்சியாயிருக்கிறது.

ஆதி 37:25-36 யோசேப்பை கொலைசெய்ய எத்தனித்த சகோதரர்கள் அந்த வழியாய் எகிப்துக்கு வியாபாரம் செய்ய போய்க்கொண்டிருந்த இஸ்மவேலரிடம் யோசேப்பை 20 வெள்ளிக் காசுக்கு விற்றுப்போட்டார்கள். அந்த மீதியானியர் யோசேப்பை எகிப்துக்குக் கொண்டுபோய் பார்வோனின் பிரதானிகளின் தலைவனாகிய போத்திபாரிடத்தில் அடிமையாக யோசேப்பை விற்று போட்டார்கள். யோசேப்பின் சகோதரர்கள் யோசேப்பின் அங்கியை ஒரு ஆட்டுக்குட்டியின் இரத்தத்தில் தோய்த்து தகப்பனிடம் கொண்டுபோய் இந்த அங்கியை வழியிலே கண்டெடுத்தோம் என்று பொய் சொன்னார்கள். யோசேப்பை துஷ்ட மிருகம் ஒன்று பீறிப்போட்டது என்று யாக்கோபு அழுது, புலம்பி அநேக நாள் தன் குமாரனுக்காக துக்கம் கொண்டு அழுது கொண்டிருந்தான். என்ன! சகோதரர்களுடைய பொறாமை. தேவன் ஒரு மனிதனுக்கு வரங்களும், வல்லமைகளும், ஆசீர்வாதங்களும் அருளும்போது நம்முடைய சகோதரன்தானே என்று சந்தோஷப்படவேண்டுமேயொழிய ஒருபோதும் பொறாமையே கொள்ளக்கூடாது. தேவன் தம்முடைய சித்த பிரகாரம் செய்யட்டும் என்று தேவனை ஸ்தோத்தரித்து சந்தோசமாய் இருக்க வேண்டும்.

(தொடரும்)

"...அவனுடைய சொப்பனங்கள் எப்படி முடியும் பார்ப்போம்..."— ஆதி 37:30

# மோட்ச வழி

## குரு—சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்:** இப்போது புதிய ஏற்பாட்டின் அபிஷேகம் என்றால் என்ன? என்று விளங்கிக் கொண்டேன். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! மேலும் நான் என்ன செய்ய வேண்டும்?

**குரு:** பரிசுத்தாவியின் அபிஷேகத்தைப் பெற்றபின் நீ ஒழுங்காய் திருவிருந்தை (நற்கருணை) ஆசரிக்க வேண்டும். அதாவது, கர்த்தருடைய பந்தியில் தவறாமல் பங்கு பெறவேண்டும்.

**சிஷ்யன்:** பரிசுத்தாவியின் அபிஷேகம் பெறாமல் திருவிருந்தில் பங்குபெறக் கூடாதா?

**குரு:** பரிசுத்தாவியின் அபிஷேகம் பெறாதோர் புதிய ஏற்பாட்டின் விசுவாசியாக இன்னும் ஆகவில்லை. ஒருவன் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து, முழுகி ஞானஸ்நானமும், பரிசுத்தாவின் அபிஷேகமும் பெற்றுக் கொள்ள வேண்டும். இதுவே புதிய ஏற்பாட்டு விசுவாசியின் நிலை. ஆகையால் முழுகி ஞானஸ்நானமும், பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெற்றபின்பே திருவிருந்தில் பங்கு பெறவேண்டும்.

**சிஷ்யன்:** அநேகமாக இப்பொழுது காணப்படுகிற எல்லா சபைகளிலும் ஞானஸ்நானம் பெற்றதும் அல்லது திடப்படுத்தல் பெற்றதும் திருவிருந்தில் பங்கு கொடுக்கிறார்களே அது எப்படி?

**குரு:** இந்த சபைகளெல்லாம் தவறு. அப்போஸ்தலனால் அஸ்திபாரம் போடப்படாதவைகள். ஒருவரைப் பார்த்து ஒருவர், ஒரு சபையைப் பார்த்து ஒரு சபை காப்பியடித்து

அப்படியே செய்கிறார்கள். இவர்களுக்கு வசனத்தெளிவும் கிடையாது. தேவனுடைய நேரடி கட்டளையும் கிடையாது. தேவன் அப்போஸ்தலர்களுக்கே கட்டளையிட்டார் (அப் 1:1). அவர்களே வேதத்தின்படியான சரியான அபிப்பிராயமிட முடியும். அது அசையாது. இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்தாவியினாலே அப்போஸ்தலர்களுக்கு தம்முடைய கடைசி கட்டளைகளை, திருச்சபைக்குரிய நியமங்களை கொடுத்தார்.

சிஷ்யன்: அப்போ, அபிஷேகம் பெறாதவர்கள் திருவிருந்தில் பங்கு எடுக்கக்கூடாது என்பதை தயவுசெய்து விளக்கிச் சொல்லவும்.

குரு: ஒருவன் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து முழுகி ஞானஸ்நானம்பெறும் பொழுது அவன் இயேசுகிறிஸ்துவை ஏற்றுக் கொள்கிறான். ஞானஸ்நானம் பெறாதோன் கிறிஸ்தவனே அல்ல. ஒருவன் ஞானஸ்நானம் பெறும்பொழுது தான் கிறிஸ்தவனாகிறான் (மாற். 16:16; கலா. 3:27). இவன் இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொண்டான் என்பதற்கு ஞானஸ்நானம் அடையாளமாக இருக்கிறது. இவனை இயேசுகிறிஸ்து (தேவன்) ஏற்றுக் கொண்டார் என்பதற்கு பரிசுத்தாவியின் அபிஷேகம் அடையாளமாக இருக்கிறது (அப். 10:44-48;15:8,9). நாம் தேவனுக்கு பலிசெலுத்துவது (தேவனுக்கு ஆராதனை செய்வது) நாம் தேவனுக்கு ஏறெடுப்பதாகும். அந்த பலியின் மேல் அக்கினி இறங்குவது தேவன் பலியை அங்கீகரித்தார் என்பதற்கு அடையாளம். ஆராதனையில் பரிசுத்தாவியானவர் இறங்கி ஆட்கொள்ளுவது தேவன் ஆராதனையை அங்கீகரித்தார் என்பதற்கு அடையாளமாய் இருக்கிறது. ஆனபடியால் தேவன் நம்மை ஏற்றுக் கொண்டார் என்பதற்கு பரிசுத்தாவியின் அபிஷேகம் சாட்சி (அப். 15:8).

(தொடரும்)

"தேவோப்பிலுவே, இயேசுவானவர் தாம் தெரிந்து கொண்ட அப்போஸ்தலருக்கு பரிசுத்தாவியினாலே கட்டளையிட்ட பின்பு..."—(அப் 1:1).

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

(தொடர்ச்சி)

அடுத்து 1982 பெப்ருவரி முதல் வாரத்தில் மீண்டும் கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். "நீங்கள் சீக்கிரமாய் இங்கிருந்து புறப்பட்டு தமிழ்நாட்டில் உருவாகியுள்ள எல்லா கிளை சபைகளையும் சந்தித்து பெலப்படுத்திவிட்டு நீங்கள் சென்னையிலிருந்து மலேஷியா செல்ல வேண்டும்" என்று.

உடனே கர்த்தருடைய சத்தத்திற்கு கீழ்ப்படிந்தோம். கையில் போதிய காசு கிடையாது ஆனாலும் அனுப்புகிறவர் ஐசுவரிய சம்பன்னர் அல்லவா! அவர் அவருடைய காரியமாம் நம்மை அனுப்புகின்றபடியால் தேவைகளை அவர் கவனித்துக் கொள்வார் என்ற நம்பிக்கையோடு பம்பாயிலிருக்கும் தலைமை மேய்ப்பருக்கும், எல்லாக் கிளை சபைகளுக்கும் அறிவிப்புக் கொடுத்துவிட்டு நாங்கள் புறப்பட்டோம். அன்றிலிருந்து இந்த மலேஷியா ஊழியத்தின் தேவைகளுக்காகவும், தேவன் எங்களை அங்கே அனுப்பி தம்முடைய தயவுள்ள சித்தத்தை நிறைவேற்றி முடிக்கும்படியாகவும்; எல்லா தேவனுடைய பிள்ளைகளும் ஐக்கியமாய் பரலோகத்தின் தேவனை நோக்கி விண்ணப்பம் பண்ணினார்கள்.

நாங்கள் சென்னை சென்றதும் மலேஷியாவிற்கு ஒரு லெட்டர் எழுதினோம். சீக்கிரமாய் நாங்கள் மலேஷியா வருவோம். உரிமைச் சீட்டு பெற்றதும் வரும் நாளைக் குறிப்பிடுகிறோம் என்பதாக எழுதினோம். எங்களுக்குத் தேவையான பணம் இன்னும் வந்து சேரவில்லை. தேவனுடைய பிள்ளைகள் தங்களால் இயன்ற காணிக்கையை அனுப்பிக்கொண்டிருந்தார்கள். நாங்கள் நினைத்தபடி மாத்திரம் கொடாமல் தங்கள் திராணிக்கு மிஞ்சியும் கொடுத்தார்கள். அதற்காக தேவனை ஸ்துதிக்கிறேன். நாங்கள் மலேஷியா செல்ல வேண்டிய நாள் நெருங்கி விட்டதை அறிந்து: சென்னையிலுள்ள சகோதரி ஒன்று தான் வைத்திருந்த தங்க நகை ஒன்றைக்கொண்டு வந்து, 'ஐயா இந்த நகையை விற்று கர்த்தருடைய ஊழியத்தை முடித்து வாருங்கள்' என்று நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு (நகையுடன்) வந்து சொன்னார்கள். தங்கள் ஆஸ்திகளினால் ஊழியம் செய்த சூசன்னாக்களும், யோவன்னாக்களும் 'புதிய எருசலேமுக்குள்ளும்' இருப்பது கண்டு கர்த்தரை மகிமைப் படுத்தினோம். கர்த்தருடைய ஆவியானவர் இன்னும் இரு தினங்களில் தேவையான பணம் வந்து சேர்ந்துவிடும் என்று பேசி இருக்கிறார். ஆகையால் உங்கள் நகையை வைத்துக்கொள்ளுங்கள். இரு தினங்கள் கழித்து பார்க்கலாம் என்று கூறி நகையைக் கொடுத்து சகோதரியை அனுப்பிவிட்டோம்.

என்ன ஆச்சரியம் "வடக்கை நோக்கி கொடு என்றும், தெற்கை நோக்கி வைத்திராதே என்றும் சொல்லுகிற வல்லமையுள்ள ஆண்டவர், தம்முடைய பிள்ளைகளின் உள்ளத்தில் பேசி இந்த ஊழியத்திற்கு தேவையான பண சகாயங்களைக் கட்டளையிட்டார். அவருக்கே மகிமையுண்டாவதாக. அன்றையதினமே சென்னை 'புதிய எருசலேம் சபை'யில் ஊழியம் செய்யும் ஊழியர் சாம் இஸ்ரவேலும், ஊழியர் ஹமீதும் எங்களுக்கு விமான டிக்கெட் வாங்கிவரச் சென்றார்கள்.

1982 பிப்ரவரி 26-ம் நாள் நாங்கள் மலேஷியா புறப்படுவதற்கான டிக்கெட் 23-2-82 ல் வாங்கி வந்தார்கள். அன்றைய தினம் மலேஷியாவிலிருந்து Mr. மாணிக்கம் அவர்கள் எங்களுக்கு ஒரு லெட்டர் எழுதியிருந்தார்கள், அதில் நீங்கள் விமானம் மூலம் பினாங்கில் வந்து இறங்கி நான் கொடுத்திருக்கும் விலாசத்தில் நீங்கள் தங்கியிருந்து, அங்கிருந்து எனக்கு தந்தி கொடுங்கள் அதன் பின்பு நான் உங்களை அழைத்துப் போவேன். ஞாயிற்றுக்கிழமை தவிர இடை நாட்களில் எனக்கு விடுமுறை கிடையாது. கோலாலம்பூரில் நீங்கள் வந்திறங்கினால் நான் உங்களை அழைத்து வருவதுசிரமம்" என்று தபாலில் செய்தி அனுப்பினார். நாங்கள் டிக்கெட் வாங்கியிருப்பது கோலாலம்பூருக்குத்தான். இவருடைய கடிதம் இவ்வாறிருக்க மிகவும் கலக்க முற்றோம். மீண்டும் கர்த்தரிடம் ஊக்கமாய் ஜெபித்தோம் "கலங்க வேண்டாம், கோலாலம்பூரிலிருந்து உங்களை அழைத்துச் செல்வதற்கு ஆட்களை நான் அனுப்புவேன். உங்களை அனுப்புவது நானல்லவா: தைரியமாய் கடந்து போங்கள்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

அப்படியே ஜெபத்தை முடித்துக் கொண்டு உடன் ஊழியர்களுடன் ஆலோசித்து Mr. மாணிக்கம் அவர்களுக்கு "26-2-82 ல் சென்னையிலிருந்து புறப்பட்டு பிற்பகல் 4.00 மணிக்கு கோலாலம்பூர் வந்து சேருவோம்" என்பதாக ஒரு தந்தி கொடுத்தோம். அதோடு மதுரை ஜில்லாவிலுள்ள கொடைரோடு சபையில் 1979 ல் சந்திக்கப்பட்ட ஒரு சகோதரர் கோலாலம்பூரில் இருப்பதாக தகவல் கிடைத்தது. அவருக்கும் ஒரு தந்தி கொடுத்துவிட்டு கர்த்தர் மேல் பாரத்தை வைத்துவிட்டு, பாஷை தெரியாத நாட்டிற்குப் போகிறோம். கர்த்தர் நம்மை நடத்துவார் என்ற நம்பிக்கையோடு, சபை மக்கள், ஊழியர்கள் யாவரும் 26-2-82 ல் சென்னை விமான நிலையத்தில் எங்களை வழி விட்டு அனுப்பினார்கள். கர்த்தர் எங்களுடனே பிரயாணத்தில் வந்த படியால் நாங்கள் கலங்கவில்லை. மழைமேகத்தின் காரணமாக அரைமணிநேரம் தாமதமாக எங்கள்

விமானம் கோலாலம்பூர் விமான நிலையத்தில் இறங்கினது. விமான நிலையத்தில் இறங்கி தேவாதி தேவனுக்கு எங்களது துதிஸ்தோத்திரத்தை ஏறெடுத்தோம். அப்பொழுதும் "உங்களை அழைத்துப்போக ஆட்கள் வந்திருக்கிறார்கள் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

பாஸ்போர்ட், டிக்கட் யாவும் பரிசோதனை செய்தபின் எங்கள் பெட்டிகள் பரிசோதிக்கப்பட்டு எங்களை வெளியே அனுப்பினார்கள். சுமார் 3-ஆண்டுகளுக்கு முன் கொடைரோடு சபையில் அபிஷேகம் பெற்ற சகோதரர் லாரன்ஸ் என்பவர் எங்கள் தந்தி கிடைத்ததும் எங்களை அழைத்துப்போக வந்திருந்தார். ஓடிவந்து எங்கள் கரங்களைப் பற்றிக்கொண்டு எங்களை விசாரித்துக் கொண்டிருந்தார். விமானத்தில் வந்த யாவரும் போய்விட்டார்கள். இப்படியிருக்க இன்னொரு நண்பர் கையில் ஒரு தந்தி (Telegram) யை வைத்துக்கொண்டு Mr. மாணிக்கம் அவர்களின் ஆட்கள் யார் என்று கேட்டுக் கொண்டே எங்களிடம் வந்தார். நாங்கள் சென்னையிலிருந்து Mr. மாணிக்கம் அவர்களுக்கு கொடுத்த தந்திதான் அது. அதை நாங்கள் வாங்கி பார்த்துவிட்டு நீங்கள் யார் என்றோம். Mr. மாணிக்கம் உங்களை அழைத்து வரும்படி எங்களை அனுப்பினார். சீக்கிரம் புறப்படுங்கள் போகலாம் என்றார். கார் கொண்டு வந்திருந்தார். சகோதரர் லாரன்சை மீண்டும் சந்திப்பதாகக் கூறிவிட்டு அங்கிருந்து சுமார் 150 கி. மீ. தொலைவிலுள்ள Mr. மாணிக்கம் வீட்டிற்கு இரவு 7.00 மணியளவில் வந்து சேர்ந்தோம் அவர் எங்களைக் கண்டதும் ரொம்ப ஆச்சரியப் பட்டார். அவருடன் சேர்ந்து இறைவனுக்கு நன்றி செலுத்தினோம். நாங்கள் அவரிடம் போய்ச் சேரும்வரையிலும் அவர் ஜெபித்துக் கொண்டேயிருந்திருக்கிறார். அவருக்கு விடுமுறை கிடைக்காததால் அவருடைய நண்பர் ஒருவர் கார் வைத்திருக்கிறார். அவரிடம் தந்தியைக் கொடுத்து எப்படியும் நீர் இந்த உதவியை எனக்குச் செய்ய வேண்டும். என்னை நம்பி இந்தியாவிலிருந்து வருகிறார்கள் என்று கூறினதும் அவருடைய நண்பர் கட்டாயம் நான் அவர்களை அழைத்து வருகிறேன் என்று கூறி தந்தியும் வாங்கிக்கொண்டார். ஆனாலும் குறித்த நேரம் கடரவே மிகவும் கலங்கிக் கொண்டிருந்தேன். கர்த்தர்தான் உங்களை இங்கே அழைத்து வந்தார் என்று சொல்லி அடிக்கடி ஆண்டவருக்கு நன்றி கூறினார்.

நாங்கள் குளித்துவிட்டு உணவருந்த உட்காருமுன் ஒரு அபாயத்திலிருந்து நீங்கள் தப்பியிருக்கிறீர்களே என்று கூறினார். என்னவென்று கேட்டோம். நீங்கள் வந்த விமானம் மயிரிழையில் தப்பினதாகவும், மழைமேகத்தால் மூடப்பட்ட மலை மேல் உங்களுக்குப் பின்னால் வந்த ஹெலிகாப்டர் மோதி உடைந்து விட்டதாகவும், T.V-ல் இப்போதுதான் செய்தி கேட்டேன் என்பதாகக் கூறினார். இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குகிறதுமில்லை, தூங்குகிறதுமில்லையே என்பதாக அவரிடம் கூறினோம். எங்களை அத்தகைய பயங்கரமான ஆபத்திலிருந்து காத்த தேவாதி தேவனை இன்னமும் ஸ்தோத்தரிக்கிறேன்.

மறுநாள், அங்குள்ள லூத்தர்மிஷன் போதகர் எங்களைப் பார்க்க வந்தார். அவர் சபையின் உபதேசங்களையும், எங்களை தேவன் மலேஷியாவிற்கு அனுப்பின நோக்கத்தையும் கேட்டு அறிந்து கொண்டார். அங்குள்ள லூத்தரன் சபைமக்களுக்கு அறிவிப்பு கொடுத்து ஒரு புதன் கிழமை Mr. மாணிக்கம் அவர்களுடைய வீட்டில் ஒரு ஜெபக்கூட்டம் நடத்த ஏற்பாடு செய்தார்கள். அநேகக் குடும்பங்கள் அந்த ஆராதனையில் கலந்து கொண்டார்கள். கூட்டம் மிகவும் ஆசீர்வாதமாக நடந்தது. வந்திருந்தவர்கள் தனித்தனியே ஜெபம் செய்து தேவ ஆலோசனைகளையும் பெற்றுக் கொண்டார்கள்.

நாங்கள் போயிருந்த பொழுது Mr. மாணிக்கம் அவர்கள் தனிமையாகத்தான் இருந்தார்கள். அவர்களுடைய துணைவியும், இளையமகனும், அவர்களுடைய மூத்த மகன் டாக்டர் லாரன்ஸ் (Dr. Lawrence) என்பவர் கண்மருத்துவராக பணி

புரிகிறது. அவர்களுடைய வீட்டிற்கு 'Kepala Batas' என்ற இடத்திற்கு போய் விட்டார்கள்.

(தொடரும்)

Pastor S. SUNDARRAJ Vallioor.

"...கர்த்தர் அவர்களுடனேக் கூடக் கிரியை நடப்பித்து அவர்களால் நடந்த அடையாளங்களினாலே வசனத்தை உறுதிப் படுத்தினார்" —மாற் 16 : 20.

# பிள்ளைகளே கூடி வாருங்கள்

தேவனுடைய பிள்ளைகள் கூடிவருவது தேவ சமூகத்தில் அதாவது தேவனுடைய முன்னிலையில். தேவமக்கள் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கூடும் போது இயேசுதாமே அங்கே எழுந்தருள்கிறார். இது நம்முடைய விசுவாசமட்டுமல்ல, அநுபவமும் கூட. சிலர் சொல்லுகிறார்கள் "நான் வேதம் வாசிக்கிறேன், ஜெபம் பண்ணுகிறேன், ரேடியோவில் செய்தி கேட்கிறேன், ஞாயிற்றுக் கிழமைகளில் ரேடியோ, டி. வி. முன் அமர்ந்து, ரேடியோ, டி. வி. ஆராதனைகளில் கலந்து கொள்கிறேன், ஆவிக்குரிய பத்திரிக்கைகளை தவறாமல் வாசிக்கிறேன். இவைகளே எனக்குப் போதுமானதாய் இருக்கிறது. ஆகையால் சபைக் கூட்டங்களில் கலந்து கொள்ள அவசியமல்ல" என்று. சிலர் வீட்டிலேயே, குடும்பத்தாரோடு ஆராதனை நடத்தி அதிலே திருப்தி அடைகிறார்கள். ஒரு குடும்பத்தில் கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இருந்தான். அவன் மனைவி வீட்டோரமுள்ள கனி தரும் திராட்சை செடி போல் அவனோடே இருக்க, அவன் பிள்ளைகள் ஒலிவ மரக்கன்றுகளைப் போல் அவனைச் சுற்றிலுமிருக்க, அந்த மனிதன் இந்தக் கர்த்தருடைய ஆசீர்வாதத்தால் மகிழ்ச்சியாய் ஜீவித்தான். அப்படியே தேவனும் தம்முடைய பிள்ளைகள் எல்லோரும் தமக்கு முன் கூடிவரும்போது சந்தோசமடைகிறார். அவருடைய ஒரு பிள்ளை வராமல்—கூடி வராமல் இருப்பதைக் கர்த்தர் கண்டு, தன்னுடைய பிள்ளைக்காய் ஏங்கி துக்கப் படுகிறார். தன்னுடைய பிள்ளைகள் எல்லாரும் கூடி இருக்கும் போது, கர்த்தர் சந்தோசப்பட்டு தம்முடைய மகிமையின் பிரசன்னத்தினால் நிரப்பி யாவரையும் சந்தோசமடையச் செய்கிறார் (ஏசாயா 56:7).

கூடிவருவதால் ஏற்படும் நன்மைகள்:

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே நாம் (தேவனுடைய பிள்ளைகள்)கூடிவரும் பொழுது ஆவியாய் இருக்கிற கர்த்தரும் நமது நடுவில் இருக்கிறார் (மத் 18:20). அவருடைய பிரசன்னத்தை நாம் கண்ணாடியில் காண்கிறது போல், நம்முடைய ஆவியில் காண்கிறோம் (II கொரி 3:18). கர்த்தர் ஒரு நாள் வெளிப்படுவார். அந் நாளில் அவர் எந்நிலையில் இருக்கிறாரோ அந்த வண்ணமாகவே அவரை தரிசிப்போம். அந்நியக்கண்கள் அல்ல, நம்முடைய கண்களே காணும் (I யோவா 3:3). அந்திக்கிறிஸ்துவின் ஆவி (சாத்தான்)யும் இப்போது உலகத்தில் கிரியை நடப்பித்துக் கொண்டு வருகிறது (I யோவா 4:3). கிறிஸ்துவின் ஆவியானவர் கிரியை செய்கிறது போல் அந்திக்கிறிஸ்துவின் ஆவியும் கிரியை செய்து வருகிறது. அந்திக்கிறிஸ்து தன் காலத்தில் வெளிப்படுவான். இயேசுகிறிஸ்துவும் ஒரு நாள் வருவார். இயேசு வரும் போது தம்முடைய வருகையின் பிரசன்னத்தினால் அவனை நாசம் பண்ணுவார் (IIதெச 2:8). அப்படிப்போலவே ஆவியாயிருந்து நம்மிலே பாவக்கிரியைகளை நடப்பிக்கிற பிசாசை இயேசு தாமே தன்னுடைய ஆவியின் பிரசன்னத்தினால் அகற்றுகிறார். மாம்சத்தில் இருந்த இயேசுவை அசுத்தாவிகள் கண்டபோது கலங்கின (மாற் 3:11). அவரே அசுத்தாவியை துரத்த அசுத்தாவி பிடித்தவனிடம் வரவேண்டி இருந்தது. நம்மிலே கிரியை நடப்பிக்கிற பிசாசுகள் நீங்க தேவ அதிகாரம் பெற்ற ஊழியனின் பிரசன்னம் அவசியம் (மாற் 3:14, 15; அப் 5:15, 16). ஏனெனில், அவனோடே இயேசு இருக்கிறார்

(மத் 28:20) அப்போஸ்தலனால் ஆளப்படுகிற மெய்த்திருச்சபையார் கூடி வரும்போது, அப்போஸ்தலன் தூரமாயிருந்தாலும் அவனுடைய ஆவியும் இயேசு கிறிஸ்துவின அதிகாரத்தோட கூடி வருமே, அதன் மேன்மை உனக்குத் தெரியுமா? (I கொரி5:4)

கூடி வருவதால் பரிசுத்தம் உண்டாகும்:

யாக்கோபு தன் குமாரர்களை நோக்கி, நீங்கள் கூடி வாருங்கள், கடைசி நாட்களில் உங்களுக்கு நேரிடுங் காரியங்களை அறிவிப்பேன் என்றார். பன்னிரண்டு குமாரர்களும் கூடி வந்தார்கள். அவர்களுடைய வருங் காரியங்களெல்லாம் அறிவிக்கப்பட்டது (ஆதி 49:1,2). வருங்காரியங்களை அறிவதால் நம்மைக் குறித்த தேவ திட்டத்தை அறியவும் அதன்படி செயல்படவும் ஏதுவாகிறது. சபையார் கூடி வரும்போது தீர்க்கதரிசன ஆவி கிரியை செய்து பாவங்களை உணர்த்தி, நற்கிரியைகளை உற்சாகப்படுத்தி ஊக்குவிக்கிறார். இதனால் சபை பக்திவிருத்தி அடைகிறது (II கொரி 14:4,23). கூடிவருவதால் பக்திவிருத்தி உண்டாகிறது.

யாரோடு கூடிவரவேண்டும்:

ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞானமடைவான் (நீதி 13:20) என்பது வேதவாக்கு. சிலர் சொல்லுகிறார்கள் "நான் இரட்சிக்கப்பட்டுவிட்டேன். ஆனாலும் இரட்சிக்கப்படாத மக்களை விட்டு பிரிந்துவர விரும்பவில்லை, காரணம் அவர்களும் இரட்சிக்கப்படவேண்டுமல்லவா?" என்று. நீ உன்னை ஞானி என்று எண்ணாதே, உன் சுயபுத்தியின் மேல் சாயாதே (நீதி 3:7,5). விசுவாசியாகிய ஒருவனின் (ஒருத்தியின்) அவிசுவாசியாகிய மனைவியோ (புருஷனோ) இரட்சிக்கப்படுவான்(ள்) என்பது நிச்சயமல்ல (I கொரி 7: 15, 16) என்று பரிசுத்தாவியானவர் சபைக்குச் சொல்லியிருக்க நீ எப்போதாவது சபையில் சந்திக்கிற ஒருவன் (ஒருத்தி) இரட்சிக்கப்படுவார்கள் என்று எண்ணுகிறாயா? விவேகத்தின் வழியை விட்டுத் தப்பி நடக்கிற மனுஷன் அல்லவா செத்தவர்களின் (இரட்சிக்கப்படாதவர்களின்) கூட்டத்தில் தாபரிப்பான் (நீதி 21 : 16). நீ உயிருள்ளவன்(ள்) என்று எண்ணினால் மாறுபாடுள்ள சந்ததியை விட்டு விலகி (அப் 2:40) சுத்த இருதயத்தோடு கர்த்தரை தொழுதுகொள்ளுகிறவர்களுடனே ஐக்கியப்பட்டு தேவனைத் தொழுது கொள் (II தீமோ 2:22). அவர்களுடைய ஐக்கியம் பிதாவோடும், அவருடைய குமாரனோடும் இருக்கிறபடியால், நீயும் அவர்களோடே ஐக்கியப்படவேண்டும் என பரிசுத்தாவியானவர் சொல்லியிருக்கிறார் (I யோவா 1:3). சுத்த இருதயத்தோடே கர்த்தரைத் தொழுது கொள்ளாத கூட்டத்தில் பரிசுத்தாவியானவர் ஆட்கொண்டாலும் அங்கே குழப்பம் இருக்கும் (I சாமு 19 : 23, 24). ஆகையால்தான் சில கூட்டத்தில் ஆவியில் நிறைந்ததும் சபை ஆராதனையில் அறியாமல் இடம் விட்டு இடம் போவதும், வஸ்திரம் விலகுவது தெரியாமலும் ஒழுங்கில்லாமலும் போகிறார்கள்.

எப்போது கூடி வரவேண்டும்:

எப்போதும் கூடிவரலாம். தேவ சந்நிதானத்திலே காத்துக் கிடக்கிற சின்னவன் பெரியவனாகிறான் (யாத் 33:11). இயேசு கிறிஸ்துவுக்கொரு வழக்கமிருந்தது. அதென்னவெனில் ஓய்வு நாளிலே ஜெப ஆலயத்துக்குச் செல்வதே (லூக் 4:16). நம்முடைய கர்த்தர் மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாளில் உயிர்த்தெழுந்தார். கர்த்தர் உயிர்த்தெழுந்தது வாரத்தின் முதல் நாளாகிய ஞாயிற்றுக்கிழமையே. அன்றைய தினமே தம்முடைய சீஷர்களுக்கு தரிசனமாகி அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து, தான் உலகத்தில் செய்யவேண்டிய ஊழியத்தை தமக்கு பதிலாக செய்யும்படி உலகத்தில் அனுப்பினார். அது முதல் உயிர்த்தெழுந்த கர்த்தரைத் தொழுது கொள்கிற யாவருக்கும் ஒரு முக்கிய நாளாயிற்று. இந்நாள் கர்த்தருடைய நாள் (வெளி 1:10) என்றும் அழைக்கப்படுகிறது. ஆகையால் ஆதிக் கிறிஸ்தவர்கள் வாரத்தின் முதலாம் நாளிலே தேவனை ஆராதிக்க கூடிவந்தார்கள். துரோவா பட்டணத்திற்கு பவுல் வந்தபோது அங்கே சபையாரை சந்திக்கவும் திருவிருந்து ஆராதனை நடத்தவும், ஜனங்களுக்கு

ஆலோசனை கொடுக்கவும் வாரத்தின் முதல் நாள்வரைக்கும் அந்தப்பட்டணத்தில் தங்கி இருந்துவிட்டு, ஞாயிறு பரிசுத்தாராதனை முடித்துவிட்டு அடுத்த நாள் புறப்பட்டுச் செல்கிறார் (அப் 20:6–11). [அப்போஸ்தலர்கள் யூதர்களாயிருந்தபடியால் யூதர்களுக்கு சுவிசேஷத்தை அறிவிக்கும்படி ஏழாவது நாளிலே யூத தேவாலயத்திற்குப் போனார்கள் (அப் 17:1,3). ஆனால் ஆவியினால் ஆராதனை செய்ய இயேசு கிறிஸ்துவின் சீஷர்களாய் கூடி வந்ததாக வேதத்தில் இல்லை].

இந்நாட்களிலும் ஞாயிற்றுக்கிழமை பரிசுத்த ஆராதனையை இறைவன் மிகவும் முக்கியப்படுத்துகிறார். இந்த ஆராதனையில் கூடிவராதவர்கள் தேவ ஆசீர்வாதத்தை இழக்கின்றனர். இந்த ஆராதனையில் கலந்து கொள்ளாதவர்களை தேவன் நேசிக்கிற தம்முடைய பிள்ளைகளை சிட்சிக்கிறார். சிலர் சரீரத்தில் தண்டனை பெறுகிறார்கள். சிலர் விபத்துக்குள்ளாகிறார்கள். சிலர் பொருள் நஷ்டமடைகின்றனர். ஒருவர் இந்த ஆராதனையில் கலந்துகொள்ளத் தக்கதாய் வேலை ஸ்தலத்தில் விடுப்பு(Leave) எடுக்க வாய்ப்பிருந்தும் வேலையை வருவாயை முக்கியப்படுத்தி கலந்து கொள்ளாமல் போவது தேவ ஆவியால் குற்றமாய தீர்க்கப்படுகிறது. ஆராதனையில் கலந்து கொள்ள வசதி வாய்ப்பிருந்தும் ஒருவர் கலந்து கொள்ளாமல் போகிறார் என்றால் அவர் சோர்ந்து அல்லது பின்மாறிக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தம். ஊழியக்காரரோடு வீணாக பகைமை கொள்கிறவர்கள் இந்த ஆராதனையினின்று தூரமாக்கப்படுகிறார்கள். ஆராதனையில் கலந்து கொள்ள வேண்டுமே என ஏங்குகிறவர்களுக்கு, அவர்களுடைய வேலை ஸ்தலத்தில் மனிதர் கண்களில் தயை கிடைக்க செய்து கூடிவர இறைவன் வாய்ப்பளிக்கிறார். ஆராதனையில் பங்கு பெற முடியாமல் பல தும் நிலைகளில் சிக்கிக்கொள்வது ஒரு சாபமான காரியமாகும். ஏனெனில் "நான் என் பரிசுத்த பர்வதத்துக்குக் கொண்டு வந்து என் ஜெபவீட்டிலே அவர்களை மகிழப் பண்ணுவேன்" என்று இறை வாக்களியிருக்கிறார் (ஏசா 56 : 7). (இவைகள் இறை வெளிப்படுத்தல்களும் அனுபவங்களுமாகும்). மேலும் நம்முடைய வருவாயில் தசமபாகம் இறைவனுக்குச் சொந்தமானதாய் காணப்படுகிறது. இதைச் செலுத்தாதவர்கள் இறைவனை வஞ்சிக்கிறவர்கள், (அதாவது அடுத்தவருக்குரியதை வஞ்சித்து தனதாக்கி கொள்வதாகும்) என்று எழுதப்பட்டிருக்கிறது (மல் 3 : 8,9). தசமபாகத்தைத் தவிர இறையுடைய பணிக்காய் உற்சாக காணிக்கைகள் செலுத்துகிறோம். அதிகமாய் கொடுக்கிறவர்கள் அதிகமாய் பெறுகிறார்கள் (IIகொரி 9 : 6). அப்படிப்போலவே ஞாயிறு ஆராதனையில் தசமபாகத்திற்கு சமமாகவும், இடைநாள் கூட்டங்கள், காலை, மத்தியான, மாலை கூட்டங்கள், உபவாச ஆராதனை, பண்டிகைக் கூட்டங்கள், முழு இரவு ஜெபங்கள், சோதனையை ஜெயிக்க சோதனையினின்று விடுவிக்கப்பட சபையார் கூடுகிறதான கூட்டங்கள் உற்சாக காணிக்கைகளுக்கும் சமமாகவும் இருக்கிறது. நாமும் நமக்குரியவைகளும் இறைவனுடையதே. அவைகளை அவருக்கென்றே பிரயோஜனப்படுத்துவோம், பிரயோஜனமடைவோம்.

வாருங்கள், கர்த்தரைக் கெம்பீரமாய்ப் பாடி நம்முடைய இரட்சணியக் கன்மலையைச் சங்கீர்த்தனம் பண்ணக்கடவோம் (சங் 95 : 2).

அன்புக்கும் நற்கிரியைகளுக்கும் நாம் ஏவப்படும்படி ஒருவரை ஒருவர் கவனித்து சபை கூடிவருதலை சிலர் விட்டு விடுகிறது போல் நாமும் விடாதிருப்போமாக— எபி 10 : 24,25.

# சாட்சி

நாங்கள் அப்போஸ்தலரின் நிருபமும் II கொரி 3 : 2 ; அப்போஸ்தல ஊழியத்திற்கு முத்திரையாயும் இருக்கிறோம் I கொரி 9 : 2.

நான் சிறுவனாயிருந்தேன். ஏறக்குறைய 25 வயதுள்ளவனானேன். இந்த இடை நாட்களில் நான் உலகத்தை ஆண்டேன். உலகமும் என்னை ஆண்டது. புகை பிடித்தேன். புகை பிடிக்காமல் வாழமுடியாது என்ற நிலை வரும் வரை கஞ்சா அடித்துப்பார்த்தேன். பைத்தியம்போல் சிரித்துக் கொண்டிருந்தேன். நான் பயந்தேன். அது என்னைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்றது. தீய பழக்கங்களை தண்ணீரைப் போல பருகினேன். வாழ்வின் நோக்கம் இதுதான். இதைவிட உலகில் என்ன இருக்கிறது என்று புலம்பினேன்.

வெளியில் ஒரளவுக்கு நல்ல பையன். ஆனால் என்னை நானே கெடுத்துக் கொண்டிருந்தேன். என் கல்விக்கூடமும், செல்வமும் என்னை அதிகமாய் இந்த பழக்கங்களில் ஆதரித்தது. கிறிஸ்தவர்களிடம் பேசினேன். மதவெறி கொண்டேன். இந்து மதத்தில் இல்லாததா கிறிஸ்தவத்தில் உள்ளது என்று திருக்குறளை சுட்டிக்காட்டி எதிர்த்து நின்றேன். ஆனால் என்னிடத்தில் அதிகமாய் ஆளுகை செய்தது பாவ சிந்தனையும்; மாம்சத்தின் இச்சையுமே.

தினமும் என் மாம்சம் அழிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. தீயபழக்கங்களைப் பார்த்ததாலும், தீய புத்தகங்களைப் படித்ததினாலும் அது என்னை முழுவதும் ஆட்கொண்டு என்னில் பெலன் கொண்டு ஆடியது. இதினிமித்தம் படிப்பில் தோல்வி, மாம்ச இச்சை ஜெயித்துக் கொண்டே இருந்தது. இந்தச் சூழ்நிலையில் நான் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டேன்.

என்னுடைய நண்பனொருவன் என்னுடன் புகைபிடிக்கவும் கஞ்சா பழக்கத்தை தொடரவும் ஆரம்பித்த அவன் திடீரென கிறிஸ்தவனாக மாறிவிட்டான். என்னுடைய கெட்ட பழக்கங்களைப் படிப்படியாக ருசித்துப்பார்த்த அவன் எப்படி மாறிவிட்டான் என்று ஆச்சரியப்பட்டு அவனிடம் பேச ஆரம்பித்தேன். அவன் சிலரோடு சேர்ந்து ஜெபிப்பதை பார்க்கப் போனேன். அவர்கள் சரீரம் வல்லமையில் இடைபட்டதையும், பல பாஷைகளைப் பேசுவதையும் கேட்டு என்னில் ஆச்சரியப்பட்டு அவனிடம் அதன் வல்லமையைக் குறித்து விவரம் கேட்டேன். அவன் இயேசுவையும், அவர் பூமியில் செய்த மகத்துவமான செய்கைகளையும் கூற ஆரம்பித்தான். என்னுடைய இருதயம் குழந்தையைப் போல யோசித்தது. அவனிடம் கேட்டேன்; நானும் அந்த வல்லமையைப் பெற்று இயேசு பூமியில் செய்த பலத்த கிரியைகளை நாமும் செய்ய முடியுமா? என்று கேட்டேன். அப்படிப் பேசுகையில் என் உள்ளத்தில் ஒருவித விசுவாசம் உருவாகியிருந்ததை இந்நாட்களில் எண்ணிப்பார்க்கிறேன். ஆனாலும் உலகப்பிரகாரமான வரட்டு கவுரவத்திற்காக எதிர்த்து நின்றேன்.

அந்த சமயம் கோவையில் கன்வென்சன் ஒன்று நடந்து கொண்டிருந்தது. என்னை அழைத்துச் சென்றார்கள். நான் சிகரெட் குடித்துக் கொண்டே வந்து பார்க்கிறேன் என்றேன். இன்று ஒருநாள் மட்டும் குடிக்காதே என்றார்கள். நான் உங்கள் ஆண்டவர் வல்லமை உடையவராய் இருந்தால் என்னை மாற்றட்டும் என்று சொல்லிக் கொண்டு புகையை விட்டுக் கொண்டே அவர்களிடம் கேலிப்பேச்சுடன் சென்றேன். அங்கே பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்வது பற்றி பிரசங்கம் நடந்தது.

முன்னமே அந்த வல்லமையை என் உள்ளம் நாடினபடியால் என்னில் அதைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசையில் இயேசுவை உள்ளத்தில் ஏற்க ஆரம்பித்தேன். இயேசுவே நீர் தான் உண்மையான கடவுள். எனக்கும் பரிசுத்த ஆவியைத்தாரும் என்று உள்ளத்தில் சொல்லிக் கொண்டே இருந்தேன். என் தலையின் மேல் கைவைத்து ஜெபிக்க ஆரம்பித்தார்

கள். என்னில் மாற்றம் உண்டாயிற்று. முழுக் கவனமும் இயேசுவைப் பார்க்கும் விசுவாசத்தில் காணப்பட எனக்குள் வல்லமை இறங்கியது. உடம்பு ஆட ஆரம்பித்தது. துதித்தல் அந்நியபாஷையாய் வெளிவர ஆரம்பித்தது. என்னைக் கூட்டிக் கொண்டு வந்த நண்பனின் கண்களில் ஆனந்த கண்ணீர் ததும்பியது. அவர் ஆண்டவரை அதிகமாய் மகிமைப்படுத்தியிருக்கக் கூடும். இதைத் தொடர்ந்து இயேசுவின் மேல் பக்திவைராக்கியம் உள்ளவன் ஆனேன். கிறிஸ்து என்னை ஆளும்படி, அவர் வார்த்தை என்னில் பெருகும்படி வளர ஆரம்பித்தேன். ஆவியின் வல்லமை பெற்றேன். வல்லமையுடன் அந்நிய பாஷைகளைப் பேசினேன். நேரம் கிடைக்கும் போதெல்லாம் வேதபுத்தகம் திறக்கப்பட்டிருக்க, பரிசுத்தஆவியின் வல்லமை நிரப்ப தேவரகசியங்களை அறிய, இவ்விதமாய் என்னுடைய வாழ்க்கை பயணம் மாறியது. என் தகப்பனார் சந்தோஷம் அடைந்தார் ஆச்சரியப்பட்டார். சினிமா கூட பார்க்காமல் சுத்தமாக மாறி விட்டானே என்று. உள்ளான என்னுடைய மாற்றம் வெளியேயும் பிரதிபலித்தது. முகத்தில் மாற்றம், ஹிப்பி தலையில் மாற்றம், ஆடையில் மாற்றம்.

நாங்கள் சகோதரர்களாய் கோவையில் ஜெபிக்கும் போது தேவ பிரசன்னம் எங்கள் முகத்தில் காணப்படுவதை பார்ப்போம். தேவ வல்லமையின் பிரசன்னத்தை ருசிப்போம் எங்கள் விசுவாசம் பெருகிற்று. என்னை பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையும் செய்ய எனக்குப் பெலன் உண்டு என்ற திருவசனம் எங்களிடையே வாசம் பண்ணியது. உலகத்தை வெறுத்தோம். உலகத்தைப் பாரோம் என்று உறுதி கொண்டோம். கிறிஸ்துவின் வல்லமை கோவையை அசைக்க ஆரம்பித்தது.

பல பெரியோர்களும், வாலிபப்பருவத்தில் இந்த நிலையில் உள்ளனரே என ஆச்சரியப்பட்டனர். ஆச்சரியமானவரை அறிய ஆரம்பித்தனர். உதாரணமாக;

சபையில் Elder Brother ஆக குஜராத்தில் இருக்கும் சாமுவேலின் தகப்பனார் எங்களை சந்தித்தார் பையனிடம் தைரிய விசுவாசம் கண்டு சந்தோஷப்பட்டார். உலகத்தின் நிலையைப் பார்த்து பையனுக்காக வருந்தினார். எங்களிடம் பேசினார், விசுவாசம் தேவைதான், தீவிரப்படக் கூடாது என்று. அது மாத்திரமல்ல நீங்கள் பெரிய விசுவாசிகளாய் இருந்தால் எங்கே தண்ணீரை திராட்ச ரசமாக மாற்றுங்கள் பார்க்கலாம் என்றார். நாங்கள் ஆவியில் நிறைந்தோம். கர்த்தர் செய்ய வல்லவர் என்று எங்களில் இருந்த ஆவியானவர் பேசினார். நாங்கள் மாற்றிக் காண்பிக்கிறோம்! தண்ணீரைக் கொண்டு வர கட்டளையிட்டோம். அவரில் நடுக்கமுண்டாயிற்று. தேவனைச் சோதிக்கப் போகிறோம் என்கிற பயம் அவரில் உண்டாயிற்று. அவர் சொன்னார், உங்களால் மாற்றிக் காட்ட முடியும். நம்புகிறேன் என்றார். அல்லேலூயா!

இது மாத்திரமல்ல, கிறிஸ்துவுக்காய் தைரியம் கொண்டு அநேகக் காரியங்களை நடப்பித்தோம். தேவவார்த்தையும், உபதேசமும் கோவையைக் கலக்கிற்று. சத்தியத்திற்கு விரோதமாய் பேசாதபடி தேவன் வல்லமையை அனுப்பிக் கொண்டிருந்தார். நாங்கள் எங்களைக் கர்த்தருக்கும், பின்பு அப்போஸ்தலருக்கும் ஒப்பு கொடுத்தோம் (II கொரி. 8 : 5).

'புதிய எருசலேம் சபை'யின் ஊழியர் எங்களுக்கு ஆவிக்குரிய தகப்பன்மாராய்க் காணப்பட்டார்கள் (I கொ 5 : 15). அதனால் எங்கள் விசுவாசம் தைரியமாக பெருகிற்று.

இப்படியிருக்க, வீட்டார் மனதில் என்னைப் பற்றிய பயமும், கரிசனையும் உண்டாக ஆரம்பித்தது. படிப்பின் காலம் முடிந்து வீட்டில் இருந்து கொண்டு சொந்த வேலையை பார்க்க ஆரம்பித்தேன்.

(தொடரும்)

BRO. K. CHANDRAN
Kalkarai.

# குடும்பம்

ஒரு நல்ல மனைவி தன்னுடைய, புருஷனுடைய, பிள்ளைகளுடைய சுகத்தையும், ஆரோக்கியத்தையும் தேடுவாள். குறித்த நேரத்தில் எழுந்து நல்ல ஆகாரம் சமைத்து, தன்னுடைய கணவனுக்கும், பிள்ளைகளுக்கும் கொடுப்பாள். கணவன் காலை வேலைக்குப் போகும்பொழுது, சோம்பல் உள்ளவளாய்க் கட்டிலில் (படுக்கையில்) அரண்டு புரண்டு கொண்டு இருக்க மாட்டாள். தன்னுடைய, புருஷனுடைய துணிமணிகள், பிள்ளைகளுடைய துணிமணிகள் சுத்தமாயிருக்க கவனமாயிருப்பாள். வீட்டை பெருக்கி, சுத்தம் பண்ணி ஒழுங்காக சுத்தமாக வைத்துக்கொள்வாள்.

அநேக ஸ்திரீகள் சோம்பல் உள்ளவர்களாயும், தங்களைப்போல் சோம்பல் உள்ள ஸ்திரீகளோடு கூட வாயாடி நேரம் போக்குகிறவர்களாயிருக்கிறார்கள். தங்களுடைய பிள்ளைகளை கவனித்து குளிப்பாட்டி சுத்தமாக்கிப் பேணுவதில்லை. வேலைக்குப் போய் வீட்டுக்குத் திரும்பும் கணவன் பிள்ளைகளுடைய நிலைமையும், வீட்டின் அலங்கோலத்தையும் கண்டு எரிச்சலடைந்து வீட்டிற்கு வருகிற விருப்பத்தை விட்டு, எவ்வளவு நேரம் வெளியே கழிக்க முடியுமோ அவ்வளவு நேரம் கழித்து விட்டு பிந்தி வீட்டிற்கு வர ஆரம்பிக்கிறான். இதனாலே வீட்டிலே சச்சரவும் சண்டையும் குழப்பங்களும் உண்டாகிறது. நல்ல ஆகாரம் தக்க சமயத்தில் தனக்கு கிடைக்காததினால் ஆண்கள் வெளியே நல்ல ஆகாரம் கிடைக்கும் இடங்களைத் தேடுகிறார்கள். அதிக நேரத்தை ஆண்கள் வெளியே செலவழிப்பதினால், கெட்ட நண்பர்களுடைய சிநேகம் உண்டாகி ஆண்களுடைய சம்பாத்தியத்தில் பெரும்பகுதி வெளியே வீணாக விரயம் ஆகிவிடுகிறது.

சிலர் சினிமாக்களிலும், சூதாட்டங்களிலும் பணத்தைச் செலவு செய்கிறார்கள். இதனால் வீட்டில் தரித்திரமும், கஷ்டமும் உண்டாகிறது. மனைவி, பிள்ளைகள் கந்தலான வஸ்திரங்களை உடுக்க வேண்டியதாகிறது. ஒரு குடும்ப ஸ்திரீயானவள் சுறுசுறுப்பும், முயற்சியும் உடையவளாய் இருந்து, தன் புருஷனுடைய சுகத்தை தேடுகிறவளாய், இருந்தால் அவளுக்கு எல்லா சந்தோஷமும் வீட்டில் உண்டாயிருக்கும். ஒவ்வொரு புருஷனும் தன்னுடைய மனைவியினுடைய சுகத்தையும், சந்தோஷத்தையும் தேடவும், ஒவ்வொரு ஸ்திரீயும் தன்னுடைய புருஷனுடைய சுகத்தையும் சௌகரியத்தையும் தேட வேண்டும்.

காயல்பட்டணம் என்னும் ஊரிலே வேதமாணிக்கம் என்றொரு வாலிபன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சாரோன். அவர்களுக்கு மூன்று ஆண்பிள்ளைகளும், ஒரு பெண்குழந்தையும் இருந்தது. அவன் அரசாங்க உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு சம்பளம் ரூ 500/-. அது ஒரு கிறிஸ்துவ குடும்பமாய் இருந்தது. அந்த வீட்டிலே தினம் சண்டையும் அடியும் பிடியுமாக இருக்கும். பிள்ளைகள் எல்லாம் துஷ்ட பிள்ளைகளாய் இருந்தார்கள். அழுக்கு வஸ்திரம் தரித்துக் கொண்டு எப்பொழுதும் அவர்கள் வெளியில் திரிவதைக் காணலாம். அந்த வீட்டில் காலையில் இல்லை என்றால் மாலையில் கண்டிப்பாக ஏதாவது ஒரு சண்டையிருக்கும். கணவன், மனைவி இருவரும் கத்தி, கர்ச்சித்து சண்டையிடுவார்கள். ஒருவருக்கொருவர் தாழ்ந்து போக மாட்டார்கள். அவன் உலக்கையை எடுத்தால் அவள் தடியை எடுப்பாள். சண்டை வேடிக்கைப் பார்க்க வேண்டுமென்பவர்கள் காலையிலேயாவது, மாலையிலேயாவது வேதமாணிக்கம் வீட்டுப் பக்கம் வந்து நிற்பார்கள்.

(தொடரும்)

---

"புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டுகிறாள்"—நீதி 14 : 1

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-26 ★ FEBRUARY 1986



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

# புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

## இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

**இயேசுகிறிஸ்து :** தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. அப் 1 : 1- 3].

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்--மத். 28 : 18 ; மாற்கு 16 : 15.

2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்- மத். 28 : 19.

3. திருச்சபையைக் கட்டி [மத். 16 : 18] நான் உங்களுக்குக் கட்டளையிட்டவைகளையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் மத் 28 : 20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்--யோவா 20 : 23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்--யோவா 21 : 15–17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு அப் 1 : 5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் -[கொரி 11 : 23-26.

**நான் :** ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

**இயேசு :** இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும் --எபி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப். 1 : 1 : 10 : 40-43.

**CHIEF PASTOR N. LAZAR**

# ஆசிரியர் உரை

காலம் கடைசியாயிருக்கிறபடியால் கள்ள சத்தியங்களும், மனித அபிப்பிராயங்களும் மலிந்து காணப்படுகின்றன. மக்கள் செவித்தினவுள்ளவர்களாயிருந்து; தாங்கள் இருக்கின்ற நிலைக்குத் தக்கபடி தங்கள் இருதயத்திற்கேற்றபடி பிரசங்கிக்கிற கள்ள பேய்ப்பர்களைத் திரளாய்ச் சேர்த்துக் கொள்கிறார்கள். மக்கள் சத்தியத்தை அறிவதோ, கண் திறந்து விடுவதோ சாத்தானுக்கு கொஞ்சமும் விருப்பம் இல்லாத காரியம். அஸ்திபாரங்கள் எல்லாம் நிர்மூலமாகிறதே. ஆதி சபை விழுந்தபடியால் சபை உலகத்துக்குள்ளும், உலகம் சபைக்குள்ளும் நுழைந்து கொண்டது. இதன் மத்தியில் இரண்டாம் விசை மறுபடியும் சுவிசேஷத்தை அநேக ஜனங்களுக்கும், ஜாதிகளுக்கும், ராஜாக்களுக்கும், தீர்க்கதரிசனமாய் அறிவிக்கும்படி தேவன் நமக்கு கட்டளையிட்டுள்ளார் (வெளி. 10:11). திரும்பவும் அஸ்திபாரம் இடும்படியாக தேவன் கட்டளையிட்டுள்ளார். ஆனபடியினால் திரும்பவும் சுவிசேஷம் வல்லமைகளோடும், வரங்களோடுங்கூட அநேக ஜனங்களுக்கும் ஜாதிகளுக்கும், இராஜாக்களுக்கும் "புதிய எருசலேம் சபை" மூலமாக சுவிசேஷம் இரண்டாம் முறையாக அறிவிக்கப்படுகிறது, அறிவிக்கப்படும். ஆனபடியினால் குழம்பியிருக்கிற அஸ்திபாரத்தை விட்டு; மறுபடியும் அஸ்திபாரம் போடுகிறபடியால் மக்கள் "புதிய எருசலேம் சபை"யின் மூலமாக வெளிவிடுகிற உபதேசங்களை; வான ஆதாரத்தோடுள்ள சத்தியங்களை, தெளிந்த இருதயத்தோடு கவனமாய் ஆராய்ந்து, கைக் கொள்ளும்படி இயேசுவின் நாமத்தில் வேண்டிக் கொள்ளுகிறோம்.

கர்த்தர் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதித்து, பூரண சத்தியத்திற்குள்ளாக வழி நடத்தி தமது வருகைக்கு ஆயத்தப்படுத்துவாராக!

இப்படிக்கு,

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

### பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரணவளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது (எபே. 4: 11-16)

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

28. தடை அகற்றப்படுதல்:-

(வலுசர்ப்பம் மத்திய ஆகாயத்திலிருந்து தள்ளப்படுதல்) II தெச 2:7; வெளி. 12:7-9.

தடைசெய்கிறவன் சாத்தான் என்று கடந்த இதழில் (January 1956) எழுதியிருந்தோம். இந்த சாத்தான் ஆதியிலே உன்னத நிலையிலிருந்து விழுந்துபோன தேவதூதனாகும். சாதாரண தூதனல்ல; பிரதான தூதர்களில் காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம் பண்ணப்பட்ட கேருப்பாக இவன் இருந்தான்.

இவன் முந்திய தோட்டமாகிய ஏதேனில் வைக்கப்பட்டிருந்ததாகப் பார்க்கிறோம் (எசே. 28:1-19). இவன் தனக்கு கொடுக்கப்பட்ட ஞானம், அழகு, தகுதியினிமித்தம் பெருமையடைந்து தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக தன் சிங்காசனத்தை உயர்த்த எண்ணி தன் பெருமையினிமித்தம் தேவனால் சபிக்கப்பட்டு தள்ளப்பட்டுப் போனான். அவனுடைய தற்கால குடியிருப்பு ஆகாய மண்டலத்தில் காணப்படுகிறது. வடபுறங்களிலுள்ள ஆகாய மண்டலத்தின் வடக்குத்திசையில் அவனுடைய குடியிருப்பு இருக்கிறது.

அங்கேயிருந்து அவன் உலகம் முழுவதையும் பார்க்க முடியும். வடதிசையின் மேற்பகுதியில் துருவ நட்சத்திரம் காணப்படுகிறது. சாத்தான் வடதிசையிலிருந்து உலக முழுவதிலுமுள்ள தேவனுடைய பிள்ளைகளையும் அவர்களுடைய கிரியைகளையும் கண்காணித்து தாக்குதல் நடத்த அவன் தனது படைகளை அனுப்புகிறான். யூதரின் சத்துருவாயிருந்த ஆமானுடைய அதிகாரம் பறிக்கப்பட்டு அவனுடைய வீட்டை இராஜாத்தியாகிய எஸ்தருக்கு இராஜா கொடுத்தான் என்றும்; எஸ்தர் மொர்தெகாயை ஆமானின் அரண்மனைக்கு அதிகாரியாக வைத்தாள் என்றும், ஆமானுக்கு கொடுக்கப்பட்ட அந்த அதிகாரமும் பறிக்கப்பட்டு இராஜாவினால் மொர்தெகாய்க்கு கொடுக்கப்பட்டது என்றும் வேதத்தில் வாசிக்கிறோம் (எஸ் 8:1,2). வேத ஆதாரங்களின்படி தேவனுடைய ஆராதனைக் கூடமும் வடதிசையிலுள்ள சீயோன் பர்வதத்தில் இருக்கிறது (சங் 48:2; 50:2; 68:17). அதற்கு கீழே தான் சாத்தான் தங்குகிற இடமிருக்கிறது என்று எண்ண இடமுண்டு.

தடை அகற்றப்படுதல்:-

அங்கே பெரும்பாதையான வழியும் இருக்கும், அது பரிசுத்த வழி என்னப்படும்; தீட்டுள்ளவன் அதிலே நடந்துவருவதில்லை அந்த வழியில் நடக்கிறவர்கள் பேதையராயிருந்தாலும், திசை கெட்டுப்போவதில்லை. அங்கே சிங்கம் இருப்பதில்லை; துஷ்டமிருகம் அங்கே போவதுமில்லை அங்கே காணப்படவுமாட்டாது;மீட்கப்பட்டவர்களே அதில் நடப்பார்கள் (ஏசா 35:8,9). இப்பொழுது அந்தப்பரிசுத்த வழியில் சிங்கமும், துஷ்டமிருகங்களும், சர்ப்பங்களும் காணப்படுகின்றன; அந்தப் பரிசுத்த வழியில் பரிசுத்தவான்கள் செல்லமுடியாதபடி தடுமாறுகிறார்கள்; திசை கெட்டுப் போகிறார்கள். அங்கே அப்பொழுது (ஆகாய மண்டலத்திலிருந்து சாத்தான் தள்ளப்பட்ட பின்பு) அந்த பரிசுத்த வழியின் தடைகள் அகற்றப்படும். அதிலே நடக்கிறவர்கள் பேதையராயிருந்தாலும் திசைகெட்டுப் போவதில்லை. (இப்பொழுதோ புத்திசாலிகளும், அநேக நல்லவர்களும் கூட விழுந்து போகிறார்கள்.) ஏனெனில் அங்கே அந்நாளில் சிங்கம் இருப்பதில்லை; துஷ்டமிருகம் காணப்படவுமாட்டாது. "கர்த்தரால் மீட்கப் பட்டவர்கள் திரும்பி ஆனந்தக்களிப்புடன் பாடி சீயோனுக்கு வருவார்கள். நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின் மேலிருக்கும் சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைவார்கள்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்" (ஏசா 35:10). உலக மனைத்தையும் மோசம் போக்குகிற பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்ட

பழைய பாம்பாகிய பெரிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே விழத்தள்ளப் பட்டது. அதனோடே கூட அதைச் சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள். அப்பொழுது வானத்திலே ஒரு பெரிய சத்தமுண்டாகி இப்பொழுது இரட்சிப்பும், வல்லமையும் நமது தேவனுடைய ராஜ்ஜியமும் அவருடைய கிறிஸ்துவின் அதிகாரமும் உண்டாயிருக்கிறது; இரவும் பகலும் நம்முடைய தேவனுக்கு முன்பாக நம்முடைய சகோதரர் மேல் குற்றஞ் சுமத்தும் பொருட்டு அவர்கள் மேல் குற்றஞ்சாட்டுகிறவன் தாழ தள்ளப் பட்டு போனான் (வெளி 12:9,10).

வானத்திலே யுத்தமுண்டாயிற்று. மிகாவேலும், அவனைச் சேர்ந்த தூதர்களும் வலுசர்ப்பத்தோடே யுத்தம் பண்ணினார்கள்; வலுசர்ப்பமும் அதைச் சேர்ந்த தூதரும் யுத்தம் பண்ணியும் ஜெயங்கொள்ளவில்லை; வானத்தில் அவர்கள் இருந்த இடமும் காணப்படாமற்போயிற்று (வெளி. 12:7,8). வலுசர்ப்பம் தான் பூமியிலே தள்ளப் பட்டதை அறிந்து, அந்த ஆண்பிள்ளையைப் பெற்ற ஸ்திரீயைத் துன்பப்படுத்தினது (வெளி 12:13). தடைசெய்கிறவன் நடுவிலிருந்து நீக்கப்படுவான். அல்லேலூயா! (II தெச 2:7). (தொடரும்)

"கிறிஸ்துவினுடைய நாள் சமீபமாயிருக்கிறதாகச் சொல்லப்பட்டால் உடனே சஞ்சலப் படாமலும், கலங்காமலும் இருங்கள்"— II தெச 2:2.

# பாவமன்னிப்பு பெறும் விதம்

தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனே இரக்கம் பெறுவான்—நீதி 28:13.

பாவம் செய்கிறவன் பாவி. எல்லோரும் பாவம் செய்து தேவமகிமையற்றவர்களானார்கள் (ரோம 3:23).

பாவஞ்செய்கிற ஆத்துமா சாகும் (எசே 18:4). பாவத்தின் சம்பளம் மரணம்(நரகம்) (ரோம 6:23). ஜீவ புஸ்தகத்தில் பேரெழுதப் பட்டவனாகக் காணப்படாதவனெவனோ அவன் அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலில் பங்கடைந்தான் (வெளி. 20:15). பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபச்சாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் என்றார் (வெளி 21:8).

பாவஞ்செய்கிறவன் பாவத்திற்காக மனஸ்தாபப்படவேண்டும். மனந்திரும்ப வேண்டும் (II கொரி 7:9, 10). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும் (அப் 16:31-33). தன் பாவங்களை மறைக்காமல் அறிக்கைசெய்து விட்டு விட்டு (நீதி. 28:13) கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் (பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே) பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளவேண்டும். அப்பொழுது அவன் செய்த பாவம் மன்னிக்கப்படும். கழுவப்படும் (அப். 22:16;2:38). பின்பு அவன் சபையில் ஐக்கியப்பட்டு (அப்போஸ்தலருடைய ஐக்கியத்தில்) கர்த்தரைத் தொழுதுகொள்ள வேண்டும். தவறிழைத்தால் சபையின் மத்தியில் பாவ அறிக்கை செய்ய வேண்டும். அல்லது அதிகாரம் பெற்ற ஊழியர் முன் தன் பாவங்களை மறைக்காமல் வெளிப்படுத்தி தனக்காக ஜெபிக்கும்படி கேட்க வேண்டும்.

பாவம் தேவனுடைய முகத்தை மறைக்கிறது. பிரிவினையையும் உண்டாக்குகிறது (ஏசா. 59:1). பாவிகளுக்கு தேவன் செவி கொடுப்பதில்லை (யோ. 9:31). தேவனோடும், திருச்சபையோடும் உள்ள ஐக்கியம் பாதிக்கப்படுகிறது. நீதிமானுடைய ஜெபத்தை தேவன் கேட்கிறார் (யாக். 5:16; யோ. 9:31). பாவிகளுடைய ஜெபத்தை தேவன் கேளார் (நீதி. 28:9; சக. 7:11-13).

பழைய ஏற்பாட்டில்

1 தேவனால் நியமிக்கப்பட்ட ஆசாரியர் தான் பாவநிவிர்த்தி செய்ய முடியும். யாதாமொருவன் அறியாமல் பாவஞ் செய்து அது தெரியவந்தால் பலியோடு ஆசாரியனிடம் வந்து தன் பாவத்தை அறிக்கையிட வேண்டும் ஆசாரியன் அவனுக்காக பாவநிவிர்த்தி செய்யக்கடவன். அப்பொழுது அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்படும் (லேவி 5:5-10).

2. தேவனால் நியமிக்கப்பட்ட ஊழியர்கள், நியாயாதிபதிகளுடைய விண்ணப்பத்தைக் கேட்டு பாவங்களை மன்னிக்கிறார்; அதனால் அவர்கள் முன்தான் பாவ அறிக்கை செய்யவேண்டும். காண்:

ஜனங்கள் மோசேயிடம் தாங்கள் பாவம் செய்ததாக அறிக்கையிட்டபோது: மோசே கம்பத்தில் தூக்கப்பட்ட வெண்கல சர்ப்பத்தை நோக்கிப் பார்க்க ஏவினார் பார்த்தவர்கள் பிழைத்தார்கள் (எண். 21:6-9).

மனிதன் பாவியாயிருந்தாலும் பாவத்தை மறைத்துக் கொண்டு மனிதர் முன் தன்னை நல்லவனாக காட்டி வருகிறான். தேவனிடம் போகும் போது (ஜெபத்தில்) தன் உண்மை நிலையைக் கூறுகிறான். மனிதரிடம் தன்னை மறைத்து நான் பாவம் செய்யவில்லை நான் சரியாயிருக்கிறேன் என்கிறான். ஆனபடியால் அறிக்கை என்பது தன்னை வெளிப்படுத்துவதேயாகும். தேவனிடம் தன்னை ஒருவன் வெளிப்படுத்த தேவையில்லை. தேவன் எல்லாவற்றையும் அறிகிறார். எல்லாம் அவர் பார்வைக்கு வெளியரங்கமாயும் நிர்வாணமாயுமிருக்கிறது. அவன் பாவம் செய்யும்போது மட்டுமல்ல அவ்வித எண்ணம் தோன்றும் முன்னே தேவன் அறிவார் (எபி. 4:13). தேவ மனிதர்(தேவஊழியர்கள்)தான் அறியார்கள், அவர்களிடம் தான் அறிவிக்க, தெரிவிக்க, அறிக்கை செய்யவேண்டும்.

மேலும் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட மனிதர்கள் ஜனங்களுக்காக தேவனால் நியமிக்கப்படுகின்றனர் (எபி. 5:1). ஜனங்களுக்காக, ஜனங்களின் தவறுதலுக்காக அவர்கள் (தேவனால் நியமிக்கப்பட்ட ஊழியர்கள், தீர்க்கர்கள், பரிசுத்தவான்கள்) விண்ணப்பம் செய்ய நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் விண்ணப்பம் செய்வதால் பாவிகளுடைய பாவங்களை தேவன் மன்னிக்கிறார். ஒரு விசுவாசி தன் பாவங்களை சபையின் மத்தியிலோ, தனிப்படவோ ஒரு மெய்யான தேவஊழியர் முன் அறிக்கை செய்து தனக்காக ஜெபிக்கும்படி கேட்க வேண்டும்.

பாவமன்னிப்பு பெறும் விதம்:-

பாவம் மூன்று வகைப்படும்.

1. மனிதன் தனக்கு விரோதமாய் செய்யும் பாவம்:- லாகிரி வஸ்துக்கள், புகைப் பிடித்தல், சுயபுணர்ச்சி, ஆண்புணர்ச்சி, விபசாரம், போன்றவைகள்.

2. பிறருக்கு விரோதமாய் செய்யும் பாவங்கள்:- பொய், திருட்டு,கொலை, கோபம், பொறாமை, வஞ்சகம், தூஷணம், புறங்கூறல் போன்றவைகள்.

3. சமுதாயத்திற்கு விரோதமான பாவங்கள்:- பாகுபாடு (ஜாதிவெறி) பொது இடங்களை அசுசிப் படுத்தல், லஞ்சம், பொது விதிகளை மீறல், சட்ட விரோதமான காரியங்கள் முதலியவை ஆகும். பொதுவாக பாவமெல்லாம் தேவனுக்கு விரோதமாய் செய்யப்படுவதே. தேவன் மனிதனுக்கு மனசாட்சியையும் பிரமாணங்களையும் கொடுத்து செய்யாதே என்பதால் அதைமீறி பாவம் செய்வதால் அது தேவனுக்கு விரோதமான பாவமேயாம்.மேலும் மனிதன் தேவனுடைய கைகிரியையாகிய தண்ணீரையும், காற்றையும், ஒளியையும், உலகத்தையும் அநுபவிப்பதினால் தேவனுக்கு நன்றி ஏறெடுக்க நன்றியுள்ளவனாய் ஜீவிக்க கடமைப்பட்டுள்ளான். அதைச் செய்யாத படியாலும் குற்றவாளியாகிறான். இவ்விதமாய் மனிதன் தான் செய்த பாவத்தை பாவம் என்றும், தான் இது வரை இருந்த நிலை தவறானதென்றும் அறிவுறுத்தப்பட்டவுடன்தன் பாவத்திற்காக வருந்தி மனந்திரும்பி (தேவனிடம்) இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து தன்னுடைய பாவங்களை தேவ சமுகத்தில் அறிக்கையிட வேண்டும். தனக்காக ஜெபிக்கும்படி தேவ

ஊழியர்களிடம் கேட்க வேண்டும். அப்பொழுது அவர்களுடைய பாவம் மன்னிக்கப்படும் (ஆதி. 20:7).

புதிய ஏற்பாட்டில், ஒரு மனிதன் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று மத். 3:5,6; மாற். 1:4,5 ன் படி ஞானஸ்நானம் பெறும்போதே அவன் பாவம் மன்னிக்கப்பட்டு கழுவப்படுகிறது.

பின் அவன் தவறிப் பாவம் செய்தால் மேற்கண்டபடி பாவ அறிக்கை செய்து பாவ மன்னிப்பு பெற்றுக் கொள்ள வேண்டும். பாவத்திலிருந்து தப்புவிக்க அப்பொழுது ஆலோசனையும் கிடைக்கும். காண்:- லூக். 3:7-14. தேவன் ஆதி அப்போஸ்தலருக்கு கொடுத்த அதிகாரங்களில் ஒன்று பாவமன்னிப்பாகும். இது அப்போஸ்தல அதிகாரம். அப்போஸ்தலரை உடையதே சபை. அப்போஸ்தலரில்லாதது சபையில்லை. பூரணமான சபையில்தான் பூரணமான உபதேசம் இருக்கும். அந்தச் சபையில் தான் இயேசுகிறிஸ்து கிரியை செய்து பூரண இரட்சிப்பை அருளுவார்.

---

நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து, எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் (1 யோ 1:9).

---

# மூடனுக்கு முரண்பாடு

| | |
|---|---|
| 1. "மூடனுக்கு அவன் மதியீனத்தின் படி மறு உத்தரவு கொடாதே; கொடுத்தால் நீயும் அவனைப் போலாவாய்" (நீதி. 26:4). | 1. மூடனுக்கு அவன் மதியீனத்தின்படி மறு உத்தரவு கொடு, கொடாவிட்டால் அவன் தன் பார்வைக்கு ஞானியாயிருப்பான் (நீதி. 26:5). |
| 2. நான் உங்களுக்காக விண்ணப்பம் செய்யாதிருப்பேனாகில் பாவம் செய்கிறவனாயிருப்பேன் (1 சாமு. 12:23). | 2. நீ இந்த ஜனத்துக்காக விண்ணப்பஞ் செய்ய வேண்டாம் அவர்களுக்காக மன்றாடவும், கெஞ்சவும் வேண்டாம்; அவர்களுக்காக பரிந்து பேசவும் வேண்டாம்; நான் உனக்கு செவிகொடுப்பதில்லை (எரே. 7:16). |
| 3. "ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு" (மத். 5:39). | 3. "...இயேசுவை ஒரு அறை அறைந்தான். இயேசு அவனை நோக்கி...நான் தகுதியாய் பேசினேனேயாகில் என்னை ஏன் அடிக்கிறாய்?" (யோ. 18:22,23). |
| 4. "துதித்தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்படுகிறது; என் சகோதரரே இப்படியிருக்கலாகாது" (யாக். 3:10). | 4. பேதுரு அவனை நோக்கி, "உன் பணம் உன்னோடே கூட நாசமாய் போகக்கடவது" (அப். 8:20). பவுல் பரிசுத்த ஆவியினால் நிறைந்தவனாய் அவனை உற்றுப் பார்த்து; "எல்லாக் கபடும் பொல்லாங்கும் நிறைந்தவனே, பிசாசின் மகனே,...கர்த்தருடைய கை உன்மேல் வந்திருக்கிறது; சில காலம் சூரியனைக் காணாமல் நீ குருடனாயிருப்பாய்" என்றான் (அப். 13:10,11). |
| 5. "சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்டாலும் ஜாக்கிரதையாய்த் திருவசனத்தை பிரசங்கம் பண்ணு" (II தீமோ. 4:2). | 5. ...ஆசியாவிலே வசனத்தைச் சொல்லாதபடிக்கு பரிசுத்த ஆவியினாலே தடை பண்ணப்பட்டு...(அப். 16:6). |

புதிதாகக் கட்டப்பட்டுள்ள தேவாலயத்தைக் குறித்து கேள்விப்பட்டு, அதைக் காணும்படி மூன்று பேர்கள் சேர்ந்து பிரயாணப்பட்டார்கள் ஒருவன் மூடன், இன்னொருவன் ஞானமில்லாதவனுயிருந்தும் தன்னை ஞானியென்று எண்ணிக் கொள்கிறவன், அடுத்தவன் ஞானி. மூவரும் வழியில் ஒரு நபரைக் கண்டு தேவாலயத்துக்குப் போகும் வழி எதுவென விசாரித்தனர். அவர், நேராக சென்று வலது பக்கமாய் போகிற ரோட்டில் போங்கள் என்ருர். அப்படியே மூவரும் சென்று வலதுபுறம் திரும்பி சுற்றி நடந்து பார்த்தார்கள். தேவாலயம் காணப்படவில்லை. அங்கே ஒருவரைக் கண்டு தேவலாயத்துக்கு வழி எதுவென வினவினர். அவர், இன்னும் நேராகச் சென்று இடதுபக்கம் திரும்பி நேராகச் சென்ருல் தேவலாயத்தைக் காண்பீர்கள் என்ருர். மூடன் கோபமடைந்து குழப்பமடைந்து ஒருவன் வலது பக்கம் போ என்ருன்; இவன் இடதுபக்கம் போ என்கிருன் வழிகாட்டின இருவரும் மூடர்கள் என தீர்த்து: நான் வரவில்லை நீங்கள் வேண்டுமானுல் போங்கள் எனக் கூறி வந்தவழியே திரும்பிவிட்டான். மதிகேடன் போனும் போகட்டும் வாங்க நாம் போகலாம் என இருவரும் இன்னும் நேராக நடந்தார்கள். போகையில் இடது பக்கம் வழி காணப்பட்டது ஞானி சொன்னுர் இதோ இந்த பக்கமாய் போவோம் என்று. ஞானியென்று தன்னை நினைத்துக் கொண்டவர் சொன்னுர்: நேராகத்தானே போகச் சொன்னுர்; நீர் ஏன் திரும்பிப் பார்க்கிறீர்? நான் நேராகத்தான் போவேன் என்று போய்விட்டார். வழி காட்டியவர் சொன்ன எல்லா வார்த்தைகளையும் கவனிக்காமல் பாதியை மாத்திரம் கேட்டு மனதில் வைத்துக் கொண்டு இப்படி போய்விட்டார். ஞானியோ வழிகாட்டிகள் இருவர் சொன்னதையும் கவனமாய்க் கேட்டு, மனதில் பதித்து அதன்படியே செய்து தேவாலயம் சென்றடைந்தார். இப்படியே நித்திய வீட்டிற்கு செல்லும் வழியை வேதத்தில் பல தேவமனிதர்கள், பலகாலங்களில் ஒரே ஆவியால் எழுதி வைத்திருக்கின்றனர். இதை அறிந்து கொள்ள முடியாத மந்த இருதயமுள்ளவர்கள்; வேதமானது சர்வஞானமுள்ள தேவ ஆவியால் எழுதப்பட்டது என்பதை மறுத்து முரண்பாடாய் கருதுகின்றனர்.

அரைகுறையாக அறிந்துக் கொண்டு, எல்லாவற்றையும் அறிந்து கைக்கொள்கிற ஞானவான்களாக எண்ணிக் கொண்டு, ஒரு பக்கத்தில் உள்ளதை மாத்திரம் பற்றிக் கொண்டு, மறுபக்கத்தில் உள்ளதை அறிய மனமற்றவர்களாயிருந்து: அன்று வேத வாக்கியங்களைக்குறித்து அறிவில்லாமல்(மத். 22:29) உயிர்த்தெழுதல் இல்லை என்று சாதித்து தப்பெண்ணங்கொண்ட சதுசேயர்களைப் போலிருக்கிருர்கள். இந்த அரைகுறைகளுக்கு "நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும் யாக்கோபின் தேவனுமாயிருக்கிறேன்" என்ற வேதவாக்கியத்தை கர்த்தர் காட்டி வாயடைத்தார் (மத். 22:31).

மேசியாவைக் குறித்து, தங்களைப்பெரும் வேதபண்டிதர்கள் என்று எண்ணிக் கொண்ட பரிசேயர்கள் அறிந்தது என்னவென்ருல் "அவர் பெத்லகேமிலிருந்து எழும்புவார்" (மத். 2:6) என்பது மட்டுமே. ஆனுல் நசரேயன் என்னப்படுவார் (மத். 2:23) என்ற தீர்க்கதரிசனத்தையும் அறியாதவர்களாய் கலிலேயாவிலுள்ள நாசரேத்திலிருந்து ஒரு தீர்க்கதரிசியும் எழும்புவதில்லை (யோ. 8:52) எனக் கணித்து இயேசுதான் மேசியா என்பதை ஏற்க மறுத்தனர். இயேசுவானவர் பெத்லேகேமில் பிறந்து நாசரேத்தில் வளர்ந்து தீர்க்கதரிசனங்கள் நிறைவேறியிருக்க; தாங்கள் அறிந்ததே பெரிதென்று எண்ணுகிற பரிசேயர்கள் இவைகளை விசாரித்தறிய மனமற்று ஆண்டவரை ஆக்கினைக்குள்ளாக தீர்த்தனர். இவர்களைப் போன்ற கிறிஸ்தவர்கள், ஆவிக்குரியவர்கள் என்று சொல்லிக்கொள்கிற அநேகருண்டு. வசனத்தெளிவு கிடையாது, இருபுறமும் கருக்குள்ள பட்டயம் வைத்திருக்கிறவன் எதிரிகளை இருபக்கத்திலும் வெட்டுவான். தேவனுடைய வார்த்தை இருபுறமும் கருக்குள்ள பட்டயமே (எபி.4:12). மூடனுடைய காரியமும், ஞானமில்லா ஞானியின் காரியமும் இப்படியிருக்க, மெய்ஞானிகளின் செய்கைகளைப் பாருங்கள்.

கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு சொல்லியிருந்தார்: நீங்கள் புறஜாதிகளண்டைக்கும் அவர்கள் உங்களண்டைக்கும் பிரவேசிக்கலாகாது என்று (I இரா. 11:2). அப்படிச் சொன்னதற்கு காரணமுண்டு. அதென்னவெனில், "புறஜாதிகள் நிச்சயமாய் தங்கள் தேவர்களை பின்பற்றும்படி உங்கள் இருதயங்களைச் சாயப்பண்ணுவார்கள்" என்பதற்கே (I இரா. 11:2). ஆனபடியால் இஸ்ரவேல் ஜனங்கள் புறஜாதி யாரோடே எவ்வளவேனும் தொடர்பில்லாமல் ஒதுங்கி ஒதுங்கி இருந்தார்கள். கர்த்தரை புறஜாதியான் நம்பி, விசுவாசித்து அவரைத்தெய்வமாகத் தொழுதுகொள்ளக் கூடாது என்று கர்த்தர் சொல்லவேயில்லை. புறஜாதியாரும் மெய்தெய்வத்தை ஏற்றுக் கொள்ளும் காலம் வந்தது. பரிசுத்தாவியானவர் பேதுருவை புறஜாதிகளிடம் பிரவேசிக்கச் செய்தார். நோக்கம்,பேதுரு அவர்கள் தெய்வங்களைப் பின்பற்ற வேண்டும் என்பதற்கல்ல. அவர்கள் இவர் தெய்வத்தை பின்பற்றச் செய்யும்படி. இவர் புறஜாதியாரிடம் பிரவேசித்தது மேற்சொன்ன வாக்கியத்திற்கு தோற்றத்தின்படி பலருக்கு முரண்பாடாய் தோன்றிற்று (அப். 11:3). அதற்கு பேதுரு தேவனைத்தடுக்கிறதற்கு நான் யார்? அவர் என்னை இவ்விதமாய் நடத்தினார் என்றார் (அப். 11:17). வேத வாக்கியங்கள் ஆராயப்பட்டன. வேத வாக்கியங்களின்படி புறஜாதியாருக்கும் கர்த்தர் இரட்சிப்பை கட்டளையிடுகிறார் என்பதைக் கண்டு மகிழ்ந்தனர் (அப். 15: 12-17). வேத வாக்கியங்கள் என்ன நோக்கத்துடன் எழுதப்பட்டிருக்கிறது அது சம்மந்தப்பட்ட ஜோடியான வாக்கியம் என்ன சொல்கிறது என்பதை கருத்தாய் ஆராய்ந்து ஆவியின் நடத்துதல்படி (ஏசா. 34:16) முடிவுக்கு வரவேண்டுமே அல்லாமல் எதையாவது ஒரு வாக்கியத்தை மாத்திரம் பிடித்துக் கொண்டு தொங்குவது ஞானமற்ற தன்மை.

இரவில் ஓர் ஊருக்குப் பிரயாணப்பட்டு நடக்கிற மனுஷன் ஆங்காங்கு வெளிச்சத்தை கண்டு; வெளிச்சம் கண்ட பகுதிக்கெல்லாம் ஓடுவானானால் சேரவேண்டிய இடம் சேரவே மாட்டான். ஊருக்கு போகிற பாதையை ஒருவர் காட்ட அந்தப்பாதையில் விளக்கு வெளிச்சத்தையும் காண்பானானால் இடறாது நிச்சயமாய் ஊர் போய் சேருவான். அதுபோல் எதையாவது ஒரு வசனத்தைக் கண்டு தெளிவில்லாமல் முடிவுக்கு வரக் கூடாது. பரிசுத்தாவியானவர் சொல்ல, அதற்கு வேதவாக்கியத்தை ஆதாரம் காட்ட அதன் படியே நடந்தால் இடறல் இல்லாமல் தெளிவோடு நடந்து முழுமையை அடைவோம். உதாரணம்:- பவுலுக்கு புறஜாதிகளிடம் செல்லும்படி கர்த்தர் கட்டளையிட்டார். அதற்கு "நீர் (இயேசு) பூமியின் கடைசி பரியந்தமும் இரட்சிப்பாயிருக்கும்படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன்" என்கிற வேத வாக்கியத்தை ஆதாரம் காட்டினார் (அப். 13:47).

பிரியமானவர்களே! ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின்படி போதிக்கக்கடவன் (I பேது. 4:11) என்ற வார்த்தையின் படி பரிசுத்தாவியானவர் சொல்லிவரான ஆதாரங்களோடு போதிக்கப் படுகிறவைகளை அவசரப்பட்டு நீங்கள் கேட்டு, அறிந்து கொண்டிருக்கிறதின்படி காலத்திற்கு முன் நீங்கள் அறியாதவைகளைக் குறித்து தவறு என்று தீர்க்காதிருங்கள் ஆக்கினையடைவீர்கள் (யூதா 10). நீங்கள் பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்றவர்களானால் வஞ்சகர்கள் யார்? சரியானவர்கள் யார்? யார் வார்த்தைக்குச் செவி கொடுக்க வேண்டுமென்று அவராலே பெற்ற அபிஷேகம் போதிக்கும் (I யோ. 2:26,27). அவர் போதித்தால் அது சத்தியத்தின்படியிருக்கும். இப்படி போதனை பெறும் அநுபவம் உங்களுக்கு இல்லையானால் நீங்கள் இன்னும் சிறு பிள்ளைகளாயிருக்கிறீர்கள். ஆகையால் வளர்ச்சியடைய பிரயாசப்படுங்கள். அதை விட்டு அறியாதவற்றை அவசரப்பட்டுத் தீர்த்து மூடர்களாகாதிருங்கள். எங்களுடைய உபதேசம் கெட்டுப் போகிறவர்களுக்கே பைத்தியமாயிருக்கிறது. மூடனுக்கே முரண்பாடு. ஞானிகளாகுங்கள் மெய் ஞானிகளாகுங்கள்!

---

"ஜென்ம சுபாவமான மனுஷனோ, தேவனுடைய ஆவிக்குரியவைகளை ஏற்றுக் கொள்ளான், அவைகள் அவனுக்கு பைத்தியமாகத் தோன்றும்"-I கொரி. 2:14.

# வேத பாடம்

ஆதி. 38: 1—11 யூதா, சூவா என்னும் கானானிய ஸ்திரீயாகிய பெண்ணைக் கண்டு விவாகம் பண்ணினான். அவள் அவனுக்கு ஏர், ஓனான், சேலா என்னும் மூன்று குமாரர்களைப் பெற்றாள். யூதாவின் மகனாகிய ஏருக்கு தாமார் என்னும் பெண்ணை விவாகம் முடித்தார்கள். ஏர் கர்த்தரின் பார்வைக்கு பொல்லாதவனாய் இருந்ததால் கர்த்தர் அவனை அழித்துப் போட்டார். அப்பொழுது யூதா ஓனானை நோக்கி உன் தமையன் மனைவியை விவாகம் பண்ணி உன் தமையனுக்கு சந்ததி உண்டாக்கு என்றார். ஓனான் தன் தமையனுடைய மனைவியைச் சேரும் பொழுது, தன் தமையனுக்குச் சந்ததி உண்டாகாத படிக்கு தன் வித்தை தரையிலே விட்டுக் கெடுத்தான். இஸ்ரவேல் தேசத்தில் இவ்விதச் சட்டம் உள்ளது: ஒரு கோத்திரத்தின் சுதந்திரம் வேறொரு கோத்திரத்திற்கு போகக் கூடாது. ஆனபடியால் இஸ்ரவேலின் குமாரத்திகள் அந்தந்த கோத்திரத்துக்குள் தங்களின் கணவன்மாரை தெரிந்து கொண்டு விவாகம் செய்து கொள்ள வேண்டும். நிலங்கள் அறுதியாக பிறருக்கு விற்கக் கூடாது. சகோதரர்கள் ஒருமித்திருக்கும் பொழுது மூத்த சகோதரன் சந்தானம் இல்லாமல் இறந்து போனால் அவனுடைய மனைவியை அடுத்த சகோதரன் விவாகம் பண்ணி, பிறக்கும் குழந்தைக்கு மூத்த சகோதரன் பெயரிட வேண்டும், மூத்தவனுடைய பாகச் சொத்தை அந்தப் பிள்ளைக்கு கொடுக்க வேண்டும் (உபா. 25:5,6).

ஓனான் தன் தமையனுக்குச் சந்ததியை உண்டாக்க விருப்பம் இல்லாமல் தன் வித்தை தரையிலே விட்டுக் கெடுத்ததினால் கர்த்தர் அவனைக் கொன்று போட்டார். சேலாவும் இவ்விதமாய் மரித்துப் போவான் என்று பயந்து; யூதா தாமாரைப் பார்த்து, என் மகனாகிய சேலா சிறியனவாய் இருக்கிறான். அவன் பெரியவனாகும் மட்டும் உன் தகப்பன் வீட்டில் போய் கைம்பெண்ணாய் இரு என்றான். அந்தபடியே தாமார் தகப்பன் வீட்டில் போய் கைம்பெண்ணாய் இருந்தாள். வெகுநாள் சென்ற பின்பு, சேலாவும் பெரியவனான போதும் தன்னைச் சேலாவுக்கு கொடுக்கவில்லை என்று தாமார் கண்டாள். யூதாவின் மனைவியாகிய சூவாவும் மரித்துப் போனாள்.

ஆதி. 38: 12– 26 யூதா தன் ஆடுகளுக்கு மயிர் கத்தரிக்கும் படியாக திம்னாவுக்கு போகிற செய்தியைத் தாமார் கேள்விப்பட்டு, தன் மாமனார் போகும் வழியிலே நீரூற்றண்டையிலே உட்கார்ந்து முக்காடிட்டுக் கொண்டிருந்தாள். அவளை ஒரு வேசி என்று நினைத்து யூதா அவளோடு சேர்ந்தான். தாமார் யூதாவினிடத்தில் அடையாளத்திற்காக சில பொருட்களை வாங்கினாள். பின்பு அவள் கர்ப்பவதியானாள். யூதாவுக்கும் சுற்றுப்புறத்தாருக்கும் தெரிய வந்து, யூதாவினால் கர்ப்பவதியானாள் என்று கண்டறியப்பட்டது. இஸ்ரவேலின் கோத்திரத்தாள் என்ற தகுதியை தான் இழந்து விடாதபடி இருக்க தாமார் இந்தக் காரியத்தைச் செய்ததாகத் தெரிகிறது. தாமாருக்கு பாரேஸ், சேரா என்ற இரட்டை ஆண்பிள்ளைகள் பிறந்தார்கள். இஸ்ரவேல் கோத்திரத்தின் பட்டியலில் தாமாரின் பெயர் இடம் பெற்றுள்ளது.

(தொடரும்)

"உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம்
உம்முடைய தேவன் என்னுடைய தேவன்" ரூத் 1:16

# பொருத்தனை

உலக சாதுரியவான்கள், தங்களுடைய களுக்கு வெகுமதிகளைக் (லஞ்சம்) கொடுத்து, காரியங்களை அநுசம்மந்தப்பட்ட மனிதர் சித்திபெறச் செய்கிறார்கள். உதாரணமாக

ஒருதொழிற்சாலை அமைக்க விரும்புகிற மனிதன் அதற்கு லைசென்ஸ் கொடுக்கும் அதிகாரி, மின்சாரம் வழங்கும் அதிகாரி இவர்களை சந்தித்து; இந்தக் காரியத்தை செய்துகொடுத்தால் இவ்வளவு பணம் தருவேன் என்று உடன்படிக்கை பண்ணுகிறான். அப்படியே காரியசித்தி அடைகிறான். இவன் இப்பிரபஞ்சத்தின் ஞானத்தை உடையவன்.

நம்மெல்லோருக்கும் நம்முடைய தேவனைப்பற்றி அறிவு உண்டு. அவர் சர்வ வல்லவர் அவராலே செய்ய முடியாதது ஒன்றுமில்லை. அவரால் எல்லாம் கூடும். அவர் சொல்ல ஆகும்; அவர் கட்டளையிட நிற்கும். இப்படிபட்டவரோடே நாம் உடன்படிக்கைபண்ணி, அதாவது பொருத்தனை பண்ணி காரியசித்தி அடைவது மேன்மையான காரியம். இறைவனிடமிருந்து நன்மை பெற்றுக்கொள்ள இது ஒரு வழியாகும்.

ஒரு தொழிலை துவக்கிறவன், அந்தத் தொழில் இறை சித்தப்படி ஆசீர்வாதமாய் நடைபெற இறைவனிடம் பொருத்தனை பண்ணலாம். தூர இடத்துக்குப் பிரயாணம் செய்கிற மனிதன் தன்னுடைய பயணம் செவ்வையாயிருக்க, காரியம் கைகூடிவர பொருத்தனை பண்ணலாம். உலகமக்கள் தங்களுடைமைகள் நஷ்டப்பட்டால் மறுபடியும் பெற்றுக்கொள்ள இன்சூர் பண்ணுவார்கள். நாமோ நம்முடைய உடைமைகள் பாதுகாப்பாய் இருக்க பொருத்தனை பண்ணலாம். யாக்கோபு பக்தன் தன்னுடைய சகோதரன் ஏசாவுக்கு பயந்து முன்பின் தெரியாத தன்னுடைய மாமன் வீட்டுக்கு ஓடிப்போகிறார். வழியிலே அவர் கர்த்தரிடம் பொருத்தனை பண்ணுகிறார்: "தேவனே நீர் என்னோடே இருந்து நான் போகிற இந்த வழியிலே என்னைக்காப்பாற்றி; உண்ண ஆகாரமும், உடுக்க வஸ்திரமும் தந்து' என்னை என் தகப்பன் வீட்டுக்கு சமாதானத்தோடே திரும்பிவரப்பண்ணுவீரானால் நான் இந்த கல்தூண் நிறுத்தின இந்த இடத்திலே தேவாலயம் ஏற்படுத்துவேன் (ஆதி. 35:3). அதுமட்டுமல்ல தேவரீர் எனக்கு தரும் எல்லா வற்றிலும் (ஆடுகொடுத்தால் ஆடு, மாடுகொடுத்தால் மாடு, சம்பத்து எதுவாக கிடைத்தாலும் அதில்) உமக்கு தசமபாகம் செலுத்துவேன் என்றார் (ஆதி. 28:20-22).

வெறுங்கையாய் போன யாக்கோபு 200 வெள்ளாடுகள், 20 வெள்ளாட்டுக் கடாக்கள், 200 செம்மறி ஆடுகள், 20 ஆட்டுக் கடாக்கள், பால்கொடுக்கிற ஒட்டகங்களுடன் அவைகளின் குட்டிகள், 40 கடாரிகள், 10 காளைகள், 20 கோளிகைக் கழுதைகள், 10 கழுதைக் குட்டிகள் ஆகிய இவைகளைத் தன் சகோதரன் ஏசாவுக்கு வெகுமானமாக கொடுக்கத்தக்க அளவுக்கு அவனுடைய சம்பத்தை தேவன் பெருகப் பண்ணினார்.

யாக்கோபு ஆலயம் கட்டுவேன் என்று பொருத்தனை பண்ணினார் எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுப்பேன் என்றார். நீயும் அப்படியே செய். சிலர் கடமைக்காய் தசமபாகம் கொடுக்கிறார்கள் தன் கையில் கிடைக்கிற (பிடித்தம்போக) காசுக்கு மட்டும் கணக்குப் பார்த்து தசமபாகம் கொடுக்கிறார்கள் எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுப்பதில்லை. சிலர் அனனியா, சப்பீராள் போல மீதியை வஞ்சித்து எடுத்துக் கொள்கிறார்கள். யாக்கோபு அவருக்கு கிடைத்தது எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுத்தார். தேவரீர், இந்த நன்மை எனக்கு வேண்டும். இது என்னால் ஆகிற காரியமல்ல தேவரீர் கொடுத்தாலொழிய நான் பெற்றுக்கொள்ள இயலாது. நீர் எனக்கு இந்த நன்மையைக் செய்வீரானால் நான் அதற்கு பதிலீடாக இதைத்தருவேன் என்று வாய்திறந்து பொருத்தனை பண்ணலாம்.

பிள்ளை வேண்டுமேயென ஏங்கித் தவித்த அன்னாள் வாய் திறந்து, "சேனைகளின் கர்த்தாவே எனக்கு ஒரு ஆண் பிள்ளையைக் கொடுத்தால் அவன் உயிரோடிருக்கும் சகலநாளும் நான் அவனைக் கர்த்தருக்கு ஒப்புக் கொடுப்பேன்" என்று பொருத்தனை பண்ணினாள் (I சாமு. 1:11) ஆண்பிள்ளையைப் பெற்றாள்; பொருத்தனையை நிறைவேற்றினாள். மாபெரும் தீர்க்கதரிசி சாமுவேல் எழும்பினார். கர்த்தர் அன்னாளைக் கடாட்சிக்க அவளுக்கு மூன்று பையன்களும், இரண்டு பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள்.

நாம் ஏங்குகிற நன்மை வராமல் ஏன் தடைபடுகிறது? நாம் இப்படிப்பட்ட பொருத்தனையை முழு இருதயத்தோடே செய்ய வேண்டுமென்றல்லவா? யூதாவே உன் பொருத்தனைகளைச் செலுத்து. ஆ கர்த்தாவே என்னுடைய அறியாமையாலே, மீறுதல்களாலே அடாத காரியத்தில் ஈடுபட்டு சிக்கிக் கொண்டேன், என் சமாதானம் எடுபட்டுப் போயிற்று. சத்துருக்கள் என்னைச் சூழ நெருக்குகிறார்கள். என் இருதயம் துவண்டு போகிறது அநுதினமும் பயத்தினால் வாதிக்கப்படுகிறேன் ஆபத்து என்னை நெருங்குகிறது. என்னுடைய அக்கிரமத்திற்காய் மனஸ்தாபப்படுகிறேன் இப்போதும் கர்த்தாவே, என்னை இந்த இக்கட்டினின்று தப்புவிப்பீரானால் நான் பதிலாக இந்தக் காணிக்கையை செலுத்துவேன் என்று பொருத்தனை பண்ணலாம் (சங். 50:14, 15).

நீ உன் தேவனாகிய கர்த்தருக்குப் பொருத்தனை பண்ணியிருந்தால் அதை செலுத்த தாமதஞ் செய்யாதே. உன் தேவனாகிய கர்த்தர் அதை நிச்சயமாய் உன் கையில் கேட்பார். அது உனக்கு பாவமாகும் (உபா. 33:21). நீ பொருத்தனை பண்ணாதிருந்தால் பாவமில்லை (உபா. 23:22) பொருத்தனை செய்தபின் யோசித்தால் அது கண்ணியாகும் (நீதி. 20:25) நீ உன் பொருத்தனையைச் செலுத்து.

---

"நீ தேவனுக்கு ஸ்தோத்திர பலியிட்டு உன்னதமானவருக்கு பொருத்தனை செலுத்து"—சங் 50:14.

---

## பரிசுத்த விவாகம்

சகோதரர் ஐசக் தேவபாலுக்கும் சகோதரி தமிழரசி என்ற எப்சிபாவுக்கும் 18-12-85 அன்று நாசர் கோவிலில் பரிசுத்த விவாகம் நடந்தது.

சகோதரர் தமிழ்ச் செல்வனுக்கும் சகோதரி மரிய செல்வராணிக்கும் 26-12-85 அன்று வள்ளியூர் புதிய எருசலேம் சபையில் பரிசுத்த விவாகம் நடந்தது.

சகோதரர் செல்லத்துரைக்கும் சகோதரி சாந்தாவுக்கும் 6-1-86 அன்று வள்ளியூர் புதிய எருசலேம் சபையில் பரிசுத்த விவாகம் நடந்தது.

சகோதரர் சாமுவேலுக்கும் சகோதரி ஸ்டெல்லாமேரி செல்விக்கும் 8-1-86 அன்று மதுரையில் பரிசுத்த விவாகம் நடந்தது.

சகோதரர் சுந்தரராஜனுக்கும் சகோதரி பொன்சேத்துக்கும் 22-1-86 அன்று வள்ளியூர் புதிய எருசலேம் சபையில் பரிசுத்த விவாகம் நடந்தது.

கர்த்தர் இந்த தம்பதிகளை ஆசீர்வதிக்க யாவரும் ஜெபிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

---

1-1-1986 அன்று வள்ளியூரில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 56 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளானார்கள்.

---

## சாட்சி

(தொடர்ச்சி)

உலகத்தார் பலவற்றைச் சொல்ல, எதிர்க்க ஆரம்பித்தனர். என் தகப்பனார் மனதில் பொருமிக் கொண்டிருந்தார்.

என் தாயார் என்னைக் கண்டு கண்ணீர் வடித்த நிலையில் நின்றார்கள். ஆவியில் நிறைந்து ஜெபம் பண்ணி என்னைக் காத்துக்

கொண்டிருந்தேன். திருமணம் முடிக்க வேண்டுமென்றுப் பிரயாசப்பட்டு சொத்தில் முடிக்க எண்ணினார்கள். நான் மறுத்தேன். என் மேல் உள்ள கோபத்தை என் தாயார் வாங்கிக் கொண்டே இருந்தார். என் தாயார் சாவை ஈடுவைத்து என்னிடம் அழுது கொண்டிருப்பார்கள். நானோ, கிறிஸ்தவப் பெண்ணைத்தான் மணப்பேன். உங்கள் இஷ்டபடி மாறினால் உங்களுடைய துக்கம் கூடுமே தவிர குறையாது என்று சொன்னேன். பாரம்பரியங்கள், சடங்காச் சாரங்கள் புகைந்து கொண்டிருந்தது. நானோ ஊக்கமாய் தேவனை பார்க்க ஆரம்பித்தேன்.

என்னுடைய எல்லா சகோதரிமார்களுக்கும் திருமணம் செய்து வைத்து விட்டு என்னை கட்டாயப்படுத்தினார்கள் தேவையை சொல்லி வாதிட்டனர். குடும்பத்தில் பெரியவர்கள், ஊர் பெரியவர்கள் ஆலோசனை சொல்ல ஆரம்பித்தனர்.

என் தகப்பனார் என்னிடம், படித்தவர்கள், பணக்காரப்பிள்ளைகள் உங்கள் சபையில் இருக்கிறார்களா? நீ மாத்திரம் இப்படிக் கெட்டு போனாயே என்று கர்ஜிப்பார். அதே சமயம் அந்தச் சூழ்நிலையில் உள்ள தேவபிள்ளைகளை அவர் சந்திக்கும் படியான சூழ்நிலையை தேவன் உருவாக்குவார்.

இந்திரா காந்தியைப் பார். அவருடைய மகனைப் பார் என்பார். ஆச்சரியம் நிகழ ஆரம்பித்தது. அந்தக் காலங்களில் அவர்கள் அரசியல் தோல்வியைக் கண்டனர்.

ஊரில் உள்ள பையன்களை, குறிப்பாக சம்பாதிக்கிற பையன்களை உதாரணம் காட்டுவார். அவர் காட்டின அநேகர் இன்று படுக்கையில் இருந்து கொண்டிருக்கின்றனர்.

தகப்பனாரின் வேகம் அதிகரித்தது. கடைசி சகோதரியின் திருமணம் முடிந்ததும் எல்லார் முன்னாலும் மனக்கவலையினால் அழ ஆரம்பித்தார். சகோதரிகளின் கணவன்மார்கள் என்னைக் கண்டிக்கும் பாவனையை உருவாக்கினார்கள். என்னிமித்தம் அவர்கள் படுகிற துயரங்களைப் பார்த்து நானும் அநேக நாட்கள் அழுததுண்டு. ஆண்டவரே அவர்கள் அறியாமலிருக்கிறார்களே. நான் என் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரையும் அதிகமாய் நேசிக்கிறேன் இது அவர்களுக்குத் தெரியவில்லையே என்று கண்ணீர் வடித்த நாட்கள் உண்டு. எதைப் பற்றியும் கவலைப்படாதவன் என்று என்னைப் பற்றி அபிப்பிராயம் கொண்டிருந்தனர். என் தகப்பனார் ஒன்றும் செய்ய முடியாமல் சகோதரிகள் வழி அனுப்பும் போது நான் உங்களைக் கடைசி முறையாகப் பார்க்கிறேன் என்று சொல்லி அழுதிருக்கிறார். நான் ஜெபித்தேன். தீவிரமான சத்துருவின் சதித் திட்டம் தீட்டப்பட்டது என்னிடம் நேருக்கு நேர் பேசி முடிவு செய்ய வேண்டுமென்பது அவர் நோக்கமாயிருந்தது என் சகோதரிகள் என்னிடம் கண்ணீர் வடித்தனர். தேவனே எனக் கதறிக் கொண்டு நாகர்கோவிலுக்குச் சென்றேன். அங்கு எனக்கு வேலைக்கான அழைப்பு வந்தது. கர்த்தரால் வழி உருவாகிறது என்பதை உணர்ந்தேன்.

வேலைக் கிடைத்ததில் குடும்பத்தில் ஒரு மாற்றம். இப்படியாக கர்த்தர் சோதனை நேரங்களிலெல்லாம் தப்பிக் கொள்ளும் படி வழியை உண்டாக்கிக் கொண்டிருந்தார். ஊட்டியில் வேலைக்கு அமர்ந்தேன். மலைகளிலிருந்து என் தேவனைப் பார்க்க முடிந்தது. கோவை புதிய எருசலேம் சபையால் போஷிக்கப்பட்டேன். பின்னர், தர்மபுரியில் தேவனைத் துதித்தேன், சேலம் புதிய எருசலேம் சபையால் தேற்றப்பட்டேன். பின்னர் விருது நகர் வந்து சேர்ந்தேன். இடையில் திருமணத்திற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. நான் தேவனை நோக்கி விண்ணப்பம் பண்ணினேன். என் ஆத்துமா தேவனிடத்தில் ஒன்றை அதிகமாய் வாஞ்சித்தது. தேவனே! என்னுடைய திருமணம் பரிசுத்தவான்கள் மூலமாக, நான் முழு பிரியத்தையும் வைத்திருக்கிற மகாத்துவமாக்கள் மூலமாக, தேவனுடைய பிள்ளைகள் மூலமாக ஆசீர்வாதமாய் உம்முடைய நாமம் மகிமைப்படுவதாய் அமைய வேண்டும். என் குடும்பமோ தடை விதித்தது. ஆனால் தகப்பனார் என்னை அதிகமாய் நேசித்தார். மறைமுகமாக அதை நான் அறிவேன். சொத்துக்களை எல்லாம் மாற்றி எழுதி வைத்து விடுவேன் என்று அடிக்கடி சொல்லுவார். வீட்டை விட்டு வெளியேற வேண்டும்

என்பார். தாலி போடாத ஒரு பெண் இந்த வீட்டில் நுழைய முடியாது என சொன்னார்.

நான் தேவனை அண்டிக் கொண்டிருந்தேன். என் செல்வத்தைப் பற்றியோ, எதிர் காலத்தைப் பற்றியோ கவலைப்படாது தேவனிடம் ஒப்படைத்தேன். நடந்தது என்ன தெரியுமா? என் தகப்பனார் என் பேருக்கு RiceMill கட்டினார். என் பெயருக்கு நிலங்களை வாங்க ஆரம்பித்தார். இதைப் பார்க்கும் போது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. கிறிஸ்துவினிமித்தம் எதை யெல்லாம் விட்டு விடுகிறோமோ அதை யெல்லாம் நாலத்தனையாய் சுதந்தரிப்போம் என்ற வார்த்தை என் வாழ்வில் உயிரோடிருப்பதை நிரூபித்தது

இப்படியாக கடந்து வந்த என்னுடைய கிறிஸ்தவ பாதையில் திருமணத்திற்காக மதுரையில் பெண் பார்க்க ஆரம்பித்தார்கள், அவள் ஒரு விசுவாசமான ஸ்திரீ. அவள் இதற்காக உபவாசம் இருந்து ஜெபம் பண்ண ஆரம்பித்தாள். அவளுடைய ஜெபம் என் தகப்பனாரை அசைக்க ஆரம்பித்தது. பெண் வீட்டிற்குச் சென்றார். ஒரு சக்தி என்னை இங்கு கொண்டு வந்தது என்று அங்கே சாட்சி கூறியிருக்கிறார். பெண்ணை நிச்சயம் பண்ணினார். திருமணம் நடைபெற நாள் குறிக்கப்பட்டது. சகோதரிகள் மத்தியில் சந்தோஷம், சபையில் சந்தோஷம், பரலோகத்தில் சந்தோஷம், குடும்பத்தில் சந்தோஷம் பெருகிற்று. அதே சமயம் விழிப்புடன் ஜெபிக்க வேண்டிய கட்டாயமாய் இந்தக் காரியம் காணப்பட்டது. குடும்பத்தில் மீண்டும் மனது கடினப்பட ஆரம்பித்தது. வெளியே செல்லவில்லை.

திருமணத்திற்கு முதல் நாள் சத்துருவின் பயங்கரப் போராட்டம் உருவெடுத்தது. எனக்கும், தகப்பனுருக்கும் இடையே அதை சத்துரு உருவாக்கினான். திருமணம் நடக்காது என இருவரும் சத்தம் போட ஆரம்பித்தோம். கலக்க முண்டாயிற்று. ஆவியானவரின் தூண்டுதல்படி, என் மேல் தவறு இருந்தால் மன்னியுங்கள் என்றேன். கோபமுண்டவராய் வீட்டிற்கு போய் விட்டார். நடந்த சம்பவங்கள் அநேக தேவ பிள்ளைகளுக்கும் தெரிந்திருக்கக் கூடும். திருமணம் நடக்காது என்பது சிலருடைய எண்ணமாயிருந்தது. கிறிஸ்தவ முறைப்படி திருமணம் நடக்காது என சிலர் கங்கணம் கொண்டிருந்தனர். சபை ஊக்கமாய் ஜெபித்தது. குறித்த நேரம் வந்தது. பரிசுத்தவான்களும் வந்தனர். தேவசித்தப்படி தேவனுடைய பிரமாணத்தின் படி திருமணம் ஆசீர்வாதமாய் முடிந்தது. இன்றும் இந்த காரியம் தேவன் செய்வித்த மிக ஆச்சரியமான காரியமாய்க் காணப்படுகிறது எப்படி என் திருமணம் நடந்தது? எப்படி என் பெற்றோர்கள் சம்மதித்தனர்? எப்படி இன்று எங்கள் குடும்பத்தில் ஆதரவு உண்டாயிற்று? இதைச் சிந்திக்கும் போது இன்றும் கர்த்தர் எனக்காக எதையும் செய்வார் என்ற விசுவாசம் வளர்கிறது. என்னுடைய விசுவாச வாழ்க்கை கர்த்தரிடத்தில் ஒப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பரிசுத்த ஆவியானவரை சார்ந்து போகும் வாழ்க்கையை விரும்பி தொடர்கிறேன். கர்த்தர் எனக்கு எல்லாவற்றிற்கும் போதுமானவராக இருக்கிறார். முழு குடும்பமும் இரட்சிக்கப்பட ஜெபியுங்கள்.

பரிசுத்தாவி உங்களிடத்தில் வரும் போது நீங்க பெலனடைந்து — எனக்கு சாட்சிகளாயிருப்பீர்கள் - அப் 1 : 8.

Bro. K. Chandran
Kalkarai.

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

(தொடர்ச்சி)

மாணிக்கம் அவர்கள்தான் எங்களுக்கு மூன்று வேளையும் சமையல் செய்து தந்தார். கர்த்தருடைய நாமத்தினால் வந்த எங்களை ஏற்றுக் கொண்டு எங்களுக்காக அவர்கள் செய்த எல்லா பணிவிடைகளுக்காகவும் என்றென்றும் அவர்களுக்கு நாங்கள் நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளோம்.

அவருடைய சொந்த காரிலேயே பல இடங்களுக்கு எங்களை அழைத்துப்போய் கர்த்தருடைய சித்தம் செய்ய எங்களுக்கு உதவினார்கள். Mr. மாணிக்கம் அவர்களுடைய நண்பர் மனோகரன், இவர்தான் எங்களை தன்னுடைய காரில் கோலாலம்பூரிலிருந்து அழைத்து வந்தார். அவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்தான். தமிழ் பேசுகிறார் ஆனால், தன்னுடைய சொந்த ஊர் எது என்றே தெரியாதாம். இந்தியாவிற்கு வந்ததே இல்லை என்றார். அவருடைய துணைவி கத்தோலிக்கக் கிறிஸ்தவப் பெண். இவரும் தன்னுடைய வீட்டில் அழைத்துப்போய் ஒரு நாள் எங்களுக்கு விருந்து வைத்தார். அன்றைய தினம் அவருக்கும், அவர் துணைவிக்கும் இரட்சிப்பின் வழியை தெளிவாய் போதிக்க தேவன் உதவி செய்தார்.

பின்னர் ஒரு நாள் (Teluk Anson) தெலுக் அன்சன் என்னுமிடத்திலிருந்து சுமார் 100 கி.மீ தொலைவிலுள்ள, சங்காட் சாலாக் எஸ்டேட் (Changkat Salak Estate) என்னுமிடத்திற்கு ஒரு குடும்பத்தைச் சந்திப்பதற்காக எங்களைத் தன்னுடைய காரில் மாணிக்கம் அவர்கள் அழைத்துப் போனார்கள். எங்களைக் கோலாலம்பூரில் சந்திப்பதற்காக வந்திருந்த சகோதரர் லாரன்ஸின் (Bro. Lawrence) பெற்றோர்களுடைய வீட்டிற்கு நாங்கள் இப்போது போகிறோம். ஜெபித்து விட்டு நாங்கள் பிரயாணப்பட்டு போகும் பொழுது சிறிது மேகஸ்தம்பம் ஆகாயத்தில் தோன்றியது. எங்கோ மழை பெய்வது போன்ற ஓசைகள் கேட்டது. அதாவது மெல்லிய இடிமுழக்கத்தின் சத்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது. திடீரென்று ஒரு புயல் காற்று எங்கள் காரின் வேகத்தை தடுத்து நிறுத்தி விட்டு கடந்து போய் விட்டது. Mr. மாணிக்கம் அவர்கள்தான் காரை ஓட்டினார்கள். அவர்களுக்கு இது ஒரு புது அனுபவமாக இருந்தது. அவர் எங்களிடம், பாஸ்டர் என்ன இது இப்படி நடந்து விட்டது. என்னுடைய வாழ்க்கையில் நான் ஒரு பொழுதும் இப்படிப்பட்ட அனுபவத்தைக் கண்டதில்லையே என்னுடைய கார் 80 மைல் வேகத்தில் வந்து கொண்டிருந்தது. இந்த வேகத்தை இந்தப் புயல் நிறுத்தி விட்டதானால், அது எத்தனை மைல் வேகத்தில் சென்று கொண்டிருக்க முடியும். கர்த்தருடைய பாதுகாவல் நமக்கு இல்லாது போனால் இன்று என் காரை இந்த புயல் காற்று தூக்கிக் கொண்டு போயிருக்க முடியுமே, என்று மிகவும் நடுங்கிய குரலில் கூறினார். கவலைப்படாதிருங்கள் இது சாத்தானுடைய வேலைகளில் ஒன்றாகும். எங்கள் மூலம் தேவன் செய்யும் திட்டங்களைத் தடை செய்வதில் சாத்தான் ரொம்ப கண்ணும் கருத்துமாய் இருப்பான். ஆகையினால்தான் இவனுக்கு தடை செய்கிறவன் என்ற பெயரை அப் பரிசுத்த பவுல் 'குட்டியுள்ளார்' அவன் எத்தனை முயற்சித்தாலும் முடிவில் வெற்றி நமது பக்கம்தான் நடக்கும் இது உங்களுக்கு புது அனுபவமாய் இருக்கிறபடியால் நீங்கள் கலங்கி விட்டீர்கள். நாங்கள் இப்படிப்பட்ட காரியங்களில் சோர்ந்து போகிறதில்லை என்று கூறிக் கொண்டே பிரயாணப்பட்டோம். கார். ஈப்போ (Eepho) என்ற பட்டணத்தை, தாண்டி சுமார் 20 கி.மீ தொலைவு போயிருக்கும் அதற்கு மேல் கார் போக முடியாது. சுமார் 3 மைல் தூரத்திற்கு எங்களுக்கு முந்தி போன கார்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக நின்று கொண்டேயிருக்கிறது. விஷயம் என்னவென்று கேட்டோம். சில வினாடிகளுக்கு முன்பு ஒரு புயல் காற்று வீசியதால் சுமார் ஒரு மைல் தூரம் வரையிலும் ரோட்டின் இரு புறங்களிலும் நின்ற மரங்கள் ஒடிந்து விழுந்து ரோட்டை மூடிவிட்டது. அதிகாரிகள் வந்து பார்வையிட்ட பின் மரத்தை அகற்றுவார்கள். அதன் பின்புதான் பிரயாணம் செய்ய முடியும் என்று கூறினார்கள். Mr. மாணிக்கம் கேட்டார்கள், பாஸ்டர் தடை செய்கிறவன் நம்முடைய பிரயாணத்தை தடை செய்து விட்டானே என்று துயரத்தோடே கூறினார்கள்.

கவலைப்படாதீர்கள். "தடைகளை நீக்குகிறவர் நமக்கு முன்னே நடந்து போகிறார். அவர் தடைகளையெல்லாம் நீக்கிப் போடுவார்". மீகா. 2:13 என்று ஆறுதல் கூறினேன். அப்பொழுது மாலை சுமார் 7 மணியிருக்கும். காரில் Mr. மாணிக்கம் அவர்களும், இன்னொரு நண்பரும், நானும் உடன் ஊழியருமாக நான்கு பேர்கள்

இருக்கிறோம். சரி நாம் இங்கே காத்து நிற்கும் நேரத்தில் பக்கத்து டௌனில் (Town) போய் ஏதாவது சாப்பிட்டு வரலாம் என்று காரை பின்னால் எடுத்துச் சில மைல்களுக்குப் பின்னாலுள்ள ஒரு சிறுடௌனில் கொண்டு வந்து ஒரு ஹோட்டல் முன்பு காரை நிறுத்தி விட்டு, ஹோட்டலினுள் போனோம். எங்களை ஒரு நாளாவது சீனர்களின் விசேஷித்த உணவாகிய "மீ" யைச் சாப்பிடவைக்க வேண்டுமென்று இவர் விரும்பியிருக்கிறார். அன்று சனிக்கிழமையாக இருந்தபடியால் நாங்கள் இரவில் சாப்பிடுகிறதில்லை என்பதை அப்பொழுது தான் அறிந்து மிகவும் வருந்தினார். நாங்கள் இருவரும் வெறும் தேநீர் மட்டும் பருகிக் கொண்டோம். அவர்கள் இருவரும் "மீ" சாப்பிட்டார்கள். சேமியா போன்ற ஆகாரம். இரு குச்சிகளின் உதவியால் சாப்பிட்டார்கள். நாம் சாப்பிட்டால் ஒன்றுமே வாய்க்குள் போகாது. அவர்கள் மிகவும் அழகாக குச்சி வைத்து சாப்பிட்டு முடித்தார்கள். பின்னர் காரை எடுத்து பழைய இடத்திற்கு வந்தோம். இப்பொழுது காரின் வரிசை இன்னும் பல மைல்களுக்குப் பின்னால் வந்து விட்டது. மரங்களை இயந்திர வாள்மூலம் வெட்டி அப்புறப்படுத்தும் வேலை நடந்து கொண்டிருப்பதாக நாங்கள் அறிந்தோம். ரோட்டின் இடது பக்கமாகவே கார்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தது. சில சிறிய கார்கள் வலப்பக்கமாக சைடு வாங்கி முன்னே போய்க் கொண்டிருந்தது. லாரிகள், பெரிய பஸ்கள் எல்லாம் எங்களுடன் நின்று கொண்டிருந்தது. இப்பொழுது எங்கள் காரையும் வலதுபக்கமாக ஓட்டி சிறிது முன்னால் கொண்டு நிறுத்தி விட்டால் வழி திறந்ததும் சீக்கிரமாய் போய் விடலாம் என்று எண்ணி Mr. மாணிக்கம் வலப் பக்கம் காலியாக இருந்த ரோட்டின் மீது காரை ஓட்டினார்கள். திடீரென்று ரோட்டிலுள்ள மரங்கள் அப்புறப்படுத்தப்பட்டு எதிர் திசையிலிருந்து வாகனங்கள் வர ஆரம்பித்து விட்டது. இங்கு போலவே எதிர் திசையிலும் பல மைல் தூரத்திற்கு கார்கள் நிற்கிறது. இப்பொழுது இடது பக்கத்து கார்களும் போய்க் கொண்டிருக்கிறது. எங்கள் கார் இடையில் அகப்பட்டுக் கொண்டது. மிகவும் சிக்கலாகி விட்டது. வலப்பக்கம் கொஞ்சம் இடைவெளி கிடைத்தது. அங்கே கொஞ்சம் புல்வெளி காணப்பட்டது. சரி இனி நமது காரை இடது பக்கமாக ஓட்ட முடியாது. இந்த வலது பக்கத்தில் ஒதுக்கி நிறுத்துவோம். இந்த 'Q' வரிசை எல்லாம் முடிந்தபிறகு போகலாம் என்று கூறி Mr. மாணிக்கம் அவர்கள் எங்கள் காரை வலதுபக்கமாக ஓட்டி நிறுத்தினார்கள். ஆனால் அது புல்தரையாகக் காணப்பட்டது. அது நல்ல அகழி. எங்கள் கார் உள்ளே அமிழ்ந்து போகக்கூடிய நிலைமையில் அந்த இடம் இருந்தது. Mr. மாணிக்கம் அவர்கள் ரொம்ப வருத்தப்பட்டார்கள். காரைக் கொஞ்சம் முன்னால் எடுத்தால் ஒரு தண்ணீர் நிறைந்த பள்ளத்தாக்கு. எப்படியும் பிரயாசப்பட்டு காரை பின்னால் எடுத்தார். நாங்கள் கர்த்தரைத் துதித்துக் கொண்டே இருந்தோம். எங்களுடைய நிலைமையைக் கண்ட ஒரு லாரி டிரைவர் தன்னுடைய லாரியை நடுரோட்டில் நிறுத்தி, இருபக்கமும் போக்குவரத்தை நிறுத்தி மத்தியில் ஓர் இடைவெளியை உண்டுபண்ணி எங்கள் காரை அதனூடே இடது பக்கத்து Q வரிசையில் போய் சேர்ந்து கொள்ள வழிகாட்டினார். அவாந்தரவெளியிலே தேவனுடைய பாதுகாவலை எண்ணி தேவனை ஸ்தோத்தரித்தோம்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

சிறுவர் பகுதி:

## அடியேனுக்காக... நினைத்தருளும்

"கர்த்தாவே, நீர் என்னை நம்பப் பண்ணின வசனத்தை உமது அடியேனுக்காக நினைத்தருளும்' என்று ராஜா ஜெபம் பண்ணிக்கொண்டிருந்தான் அன்றுகாலையில்.

ராஜா கெட்ட பையனாக இருந்தான். வீட்டிலும் பள்ளிக் கூடத்திலும் சேட்டை பண்ணுகிறவனாய் கெட்ட பெயர் எடுத்து கொண்டிருந்தான். எல்லா பாடத்திலும்

சைபர் (0) மார்க் வாங்குகிறவனும், சரியான மண்டுவாக இருந்தான்.

நேற்று அரைவருட பரீட்சையின் மார்க்குகளுடன் பள்ளிக் கூடத்திலிருந்து ரிப்போர்ட் அனுப்பியிருந்தார்கள். ராஜா எல்லா பாடத்திலும் தோல்வியடைந்திருந்தான். கெட்ட பையன் நடத்தை மோசம், படிப்பு மோசம் என்று ரிப்போர்டில் எழுதியிருந்தார்கள். ராஜா அப்பாவிற்கு ஒரே கோபம், வருத்தம் கவலை. வழக்கமாய் ராஜாவை அடிப்பார். ஆனால் நேற்று அடிக்காமல் ராஜாவை கூப்பிட்டு உன்னை இனி அடிப்பதில்லை. உன்னைப் பெற்றதற்காக தண்டனை ஏற்கும்படி இன்று நானும் உனது அம்மாவும் ஒன்றும் சாப்பிடாமல் பட்டினியாய் இருக்கப் போகிறோம் என்று சொன்னார்.

அப்படியே அன்று ஒருவரும் சாப்பிடவில்லை. ராஜாவுக்கு துக்கமாக இருந்தது. இராத்திரி படுக்கப் போகும் போது சோர்வாய் இருந்த தன் மகனிடம் வந்து ராஜாவின் அம்மா அழுது கொண்டு, ஏண்டா இப்படி எங்களை கஷ்டப்படுத்துகிறாய் என்றார்கள். ராஜா உடனே அம்மா, நான் படிக்க வேண்டும் என்று எவ்வளவோ ஆசைப்படுகிறேன், ஆனால் முடியவில்லை படிப்பதெல்லாம் மறந்து விடுகிறது. நல்ல பையனாய் இருக்க ஆசைப்படுகிறேன் ஆனா கெட்ட புத்தி வந்து விடுகிறது. என்றான் அழுது கொண்டு.

ராஜாவின் அம்மா, உடனே மகனே, நீ கடவுளைத் தேடவேண்டும். கடவுளுக்குப் பயந்து நடக்க வேண்டும். ஞாயிறு பள்ளிக்கு ஒழுங்காக போகவேண்டும், ஆலயத்திற்கு போகவேண்டும். ஜெபம் செய்ய வேண்டும். பெரியோர் சொல் கேட்க வேண்டும். அப்போது படிப்பு வரும். பைபிளில் சங்கீத புத்தகத்தில் "கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்; அவருடைய கற்பனைகளின் படி செய்கிறவர்களுக்கும் நற்புத்தி உண்டு"—சங் 111:10 என்று எழுதப்பட்டுள்ளது இதை நம்பு. அப்படியே செய். ஞானம், நற்புத்தி கர்த்தர் தருவார் என்று சொல்லி மகனைத் தேற்றினார்கள்.

ராஜா அன்று இரவு முழுவதும் தனது அம்மாவின் வார்த்தைகளையே சிந்தித்துக் கொண்டிருந்தான். ஆண்டவருடைய வார்த்தையை நம்பி, அவருக்குப் பயந்து அவருடைய கற்பனைகளின் படி நடக்க அன்று இரவே தீர்மானித்து விட்டான். எனவே காலையில் எழுந்தவுடன், எப்போதோ ஞாயிறு பள்ளியில் கேட்ட வசனத்தை ஞாபகப்படுத்தி கர்த்தாவே நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை அடியேனுக்காக நினைத்தருளி அடியேனுக்கு ஞானம், நற்புத்தி தாரும் என்று ஜெபித்தான்.

ராஜா ஞாயிறு பள்ளிக்கு ஒழுங்காக போக ஆரம்பித்தான். ஆலயத்திற்கும் ஒழுங்காக போவான். கெட்ட பிள்ளைகளிடம் சேருவதை விட்டுவிட்டான். வீட்டில் அமர்ந்து பாடங்களை படிக்க ஆரம்பித்தான். பாடங்களை அவனால் ஞாபகப்படுத்த முடியவில்லை. ஆனால் ஞாயிறு பள்ளியில் வசனங்களை படித்து பாராமல் சொல்ல ஆரம்பித்ததால் ஞாபக சக்தி கொஞ்சம் கொஞ்சமாக உண்டாக ஆரம்பித்தது.

இறைவனுடைய கற்பனைகளின்படி நடக்க ஆரம்பித்தான். இதனால் ராஜாவினுடைய கெட்ட பெயர் நீங்க ஆரம்பித்தது.

கொஞ்ச நாளில் பள்ளிக் கூடத்தின் இறுதிப் பரீட்சை நெருங்கி வந்தது. ராஜா கருத்தாய் படித்தான். எப்போதும் ஜெபம் பண்ணினான். நேரத்தை வீணடிக்காமல் பாடங்களையெல்லாம் திருப்பிப் பார்த்தான். பரீட்சை நாள் வந்தது. தேவன் அற்புதமாய் ஞாபக சக்தியும் ஞானமும் கொடுத்தார். ராஜா வாசித்த பாடங்களையெல்லாம் ஞாபகத்திற்கு வர கிருபை செய்தார். ராஜா அந்த வருடம் முதல் மாணவனாய் வெற்றி பெற்று முதல் பரிசு பெற்றான்.

ஆம், தேவன் ராஜாவின் விண்ணப்பத்தை கேட்டு அவருடைய வசனத்தை நினைத்தருளி அதன்படியே, வசனத்தின்படி நடந்த ராஜாவிற்கு ஞானமும், நற்புத்தியும் கிடைக்கச் செய்தார்.

சிறு பிள்ளைகளே! நீங்கள் எப்படியிருக்கிறீர்கள்? நீங்களும் ராஜாவைப் போல்

கிருபையும், ஞானமும், நற்புத்தியும் பெற ஆசைப்படுகிறீர்களா? கடவுளுக்குப் பயந்து அவருடைய கற்பனைகளின்படி நடந்தால் அப்படிப்பட்ட கிருபை கிடைக்கும்.

தேவனே, நீர் என்னை (எங்களை) நம்பப் பண்ணின வசனத்தை உமது அடியேனுக்காக (அடியார்களுக்காக) நினைத்தருளும் (சங். 119:49).

அதுவே என் சிறுமையில் எனக்கு ஆறுதல். உம்முடைய வாக்கு......உயிர்ப்பித்தது (சங். 119:50).

# தேவன் தேடும் நபர்

இந்த உலகத்தில் இயேசுகிறிஸ்துவைப் பற்றி அறிந்தவர்கள் கோடா கோடி பேர். இவர்களில் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் திரள் கோடிபேர். நாங்கள் பலநூறு ஆண்டுகளாக, பரம்பரையாக கிறிஸ்தவர்களாக இருக்கிறோம் என்று சொல்பவர்கள் ஏராளம் உண்டு [மத். 3:9]. இயேசு கிறிஸ்துவினால் சரீர சுகத்தை பெற்றுக் கொண்டதால் நாங்கள் கிறிஸ்தவர்களாயிருக்கிறோம் என்பாருண்டு [மாற். 7:26,27]. எங்களுக்கு வேலைவாய்ப்பு கிடைக்கிறது, வயிற்றை நிரப்ப ஒரு வழி கிடைக்கிறது, ஆகையால் கிறிஸ்தவர்களாயிருக்கிறோம் என்ற நிலையில் பலருண்டு [யோவா. 6:26].

இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் நான் பிசாசுகளை துரத்துகிறேன், தீர்க்க தரிசனம் சொல்கிறேன், என்னுடைய வாழ்க்கை எவ்விதமிருந்தாலும் பரவாயில்லை, நான் கிறிஸ்தவனே என்று சாதிப்போருமுண்டு [மத்.7:22]. நான் தவறாமல் தசமபாகம் கொடுக்கிறேன், காணிக்கைகள் செலுத்துகிறேன். ஊழியத்திற்கு பேருதவி செய்கிறேன், உபவாசமிருக்கிறேன், ஜெபம் பண்ணுகிறேன், ஆகையால் என்னை விட உயர்ந்த கிறிஸ்தவன் யாருண்டு என பெருமிதம் கொள்வோரும் உண்டு (லூக். 18:11). நாங்கள் வேலை செய்து நியாயமான வழியில் பொருளீட்டி சாப்பிடுகிறோம். காலை, மாலைகளில் தவறாத குடும்ப ஜெபம் உண்டு. ஞாயிற்றுக்கிழமை வழக்கமாய் ஆலயம் செல்வோம். அவ்வப்போது ஊழியத்திலும் கலந்து கொள்வோம், இயேசுகிறிஸ்துவே எங்கள் வீட்டு எஜமான் என்று பெயர் போட்டிருக்கிறோம், இப்படிச் சொல்கிற சன்மார்க்க கிறிஸ்தவர்களும் உண்டு.

இப்படி இந்த உலகில் பலதரப்பட்ட கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். இப்படிப் பட்டவர்களைத் தேவன் தேடுகிறாரா? இல்லை. தேவன் தேடும் நபர் யார் என்று ஒரு தரிசனத்தின் மூலம் தேவன் வெளிப் படுத்தினார். ஒரு ஊழியனால் கர்த்தர் காண்பித்த தரிசனமாவது: ஓர் அலுவலகம் காணப்படுகிறது. அதிலே பலர் வேலை செய்கிறார்கள். திடீரென தொலைபேசியின் மணி (Telephone Bell) ஒலிக்கிறது. உடனே ஒரு புற ஜாதி மனிதர் (Phone) போனை எடுக்கிறார். தூரத்திலிருந்து யாரோ பேசுகிறார்! அவர் "இங்கே கிறிஸ்துவுக்கென்று யாராவது இருக்கிறார்களா? என்று கேட்கிறார். அவர் பதிலாக (தன்னோடு வேலை செய்யும் கிறிஸ்தவர் ஒருவரை மனதில் கொண்டு) "இதோ இங்கே அருகில் கிறிஸ்தவர் ஒருவர் இருக்கிறார்" என்றார். உடனே தூரத்திலிருந்து பேசுகிறவர்: நான் கிறிஸ்தவர்களை கேட்கவில்லை கிறிஸ்துவுக்கென்று யாராவது உண்டா? என திரும்பவும் கேட்கிறார்.

பிரியமானவர்களே, தேவன் கிறிஸ்தவர்களை அல்ல கிறிஸ்துவுக்கென்று இருக்கிறவர்களையே தேடுகிறார்.

ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்து, வளர்ந்து வாலிபனானான் ஒருவன். அவன் தனியே இருப்பது நல்லதல்ல என்று அவன் பெற்றோர் அறிந்து, அவனுக்கு ஏற்றபடி ஒரு நல்ல குடும்பத்தில் பெண் பார்த்து "புருஷன் ஸ்திரீக்காக சிருஷ்டிக்கப் பட்டவன் அல்ல, ஸ்திரீயே புருஷனுக்காக புருஷனுக்கென்று சிருஷ்டிக்கப்பட்டவள்" (I கொரி 11 : 9) என்ற நியமத்தின்படி

அவனுக்கென்று அவள் மனைவியாய் இருக்கும்படி திருமணம் செய்து வைக்கின்றனர்.

இதுவரை தன்னுடைய விருப்பத்தையும், குடும்பத்தார் விருப்பத்தையும், நிறைவேற்றி வந்த பெண் தனக்கு தலைவனாயிருக்கிற புருஷனுடைய விருப்பத்திற்கு ஒப்புக்கொடுத்து அவனுக்கென்று ஜீவிக்க ஆயத்தமாகிறாள். கிறிஸ்துவுக்கென்று இருக்கிற மனிதனும் "ஆண்டவரே, நான் என்ன செய்ய நீர் சித்தமாக இருக்கிறீர்" (அப் 9:6) என்று தன்னை முற்றிலுமாய் ஒப்புவித்து தன்னுடைய மாமிசத்தையும், அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்தவர்களாய் (கலா 5:24) இருக்க வேண்டும்.

தனது புருஷன் தன்னுடைய அழகில் பிரியப்படும்படி அவள் தன்னுடைய தகப்பன் வீட்டார் எல்லாரைக் காட்டிலும் புருஷனையே அதிகமாய் நேசித்து, அவனுக்கென்றே ஜீவிக்கிறாள். இயேசு கிறிஸ்துவுக்கென்று ஜீவிக்கிற மனுஷனும் தகப்பன், தாய், சகோதரன், சகோதரி, மனைவி, பிள்ளை எல்லாரையும் விட அவரையே நேசித்து அவருக்கு மெய்சீஷனாயிருக்கிறான் (மத் 10:37).

தன்னுடைய சரீரம் தனக்கு சொந்தமானதல்ல புருஷனுக்கே சொந்தமானது (1கொரி 7:4)என அறிந்த அவள் தன்னுடைய புருஷன் விருப்பத்திற்கு சரீரத்தை ஒப்புக் கொடுக்கிறாள். அப்படியே நாமும் நம்முடைய சரீரத்தில் பெலன் இருக்கும் வரைக்கும், நமது ஆத்தும மணவாளனுடைய காரியமாகவே பயன்பட அதை அவருக்கென்று பயன் படுத்த வேண்டும்.

கணவனுடைய விருப்பத்தை (சித்தத்தை) முழுமையாய் நிறைவேற்ற தன்னை ஒப்புவித்து, அவனையே நேசித்து, அவனுக்காகவே உழைக்கிற ஸ்திரீ, அதனால் உண்டாகிற இன்பமே பெரிதென்றெண்ணி அதிலே திருப்தி அடைந்திருக்கிறது போலவே கிறிஸ்துவுக்கென்று ஜீவிக்கிறவனும், உலக நேசத்தை வெறுத்து (யாக் 4:4) அவரால் அவருக்குள் உண்டாகிற சந்தோஷத்திற்கு ஈடு இணை எங்கும் காணாதிருக்கிறான்.

வெறும் கிறிஸ்தவர்களாக அல்ல, கிறிஸ்துவுக் கென்று ஜீவியுங்கள். அவர் உங்கள் நாயகர்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-27 ★ MARCH 1986




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து : தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. [அப் 1 : 1—3].

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்—மத். 28 : 18; மாற்கு 16 : 15.

2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத். 28 : 19.

3. திருச்சபையைக் கட்டி [மத். 16 : 18] நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21 : 15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1 : 5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1கொரி 11 : 23-26.

நான் : ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—நீதி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப். 1 : 1 ; 10 : 40-43.

CHIEF PASTOR N. LAZAR

# ஆசிரியர் உரை

காலம் பொல்லாதது. நாம் கடைசி காலத்தில் இருக்கிறோம். தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களும் வஞ்சிக்கப்படத்தக்கதாக சாத்தான் பொய்யான அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பிப்பதோடு மாத்திரமல்ல, காதுக்கினிய உபதேசங்களையும், விளக்கங்களையும் பூமியிலே கொண்டு வந்திருக்கிறான். தேவனுடைய வசனத்தை அப்படியே பின் பற்றுவதைக் காட்டிலும் மனிதர்களுடைய வசனங்களுக்கு விளக்கங்களுக்கு செவி கொடுத்து விசுவாசத்தை விட்டு விலகி தெய்வீக பக்தி விருத்தியடையாதபடி மக்கள் வெறுமையாகிக் கொண்டிருக்கிற காலமாக இது இருக்கிறது. பூரணமான திருச்சபையின்றேல் பூரணமான இரட்சிப்பும் இல்லை. தேவனுடைய மெய்யான திருச்சபையின் ஐக்கியத்தில் இல்லாதவர்களும் மெய்யான திருச்சபையில் நிலைத்திராதவர்களும் விழுந்து போவார்கள். தேவனும், திருச்சபையுமே முக்கியம் சீர்திருந்த விருப்பமில்லாதவர்கள் சபையை வெறுப்பார்கள். இதனாலே சபை எவ்வளவு அவசியம் என்று எல்லாரும் அறிந்து கொள்ளலாம்.

தேவன் உங்களை ஆசீர்வதித்து உங்களை தம்முடைய எல்லா நல் வசனத்தினாலும் கிருபையினாலும் நிரப்புவாராக.

இப்படிக்கு

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

### 27. அந்திக்கிறிஸ்து தோன்றுதல் (II தெச 2 : 5-8)

"...ஏனெனில் விசுவாச துரோகம் முந்தி நேரிட்டு கேட்டின் மகனாகிய பாவ மனுஷன் வெளிப்பட்டாலொழிய அந்த நாள் வராது" (அந்த நாள் என்பது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வருகையில் நாம் அவரிடத்தில் சேர்க்கப்படுவதைக் குறிக்கிறது.)

இயேசு கிறிஸ்துவினுடைய வருகைக்கும், சபை எடுத்துக் கொள்ளப்படுவதற்கும் முன் அந்திக்கிறிஸ்து தோன்றுவான் என்று வேதாகமம் நமக்கு சுட்டிக் காட்டுகிறது. யூதர்கள் தங்களுக்கு மேசியா வரப் போகிறார் என்று இன்னும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். வரப்போகிற அந்திக் கிறிஸ்து யூதர்களுக்குத் தன்னை மேசியாவாய் காண்பிப்பான். அவர்களும் அவனை ஏற்றுக் கொள்வார்கள். இதைக் குறித்து நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொன்ன தீர்க்க தரிசனத்தையும் நினைவு கூறுவோமாக. "நான் என் பிதாவின் நாமத்தினாலே வந்திருந்தும் நீங்கள் என்னை ஏற்றுக் கொள்ளவில்லை, வேறொருவன் தன் சுய நாமத்தினாலே வந்தால் அவனை ஏற்றுக் கொள்வீர்கள்" என்றார் (யோவா 5 : 43). இதைக் குறித்து தானியேலும் "அவர்களுடைய ராஜ்யபாரத்தின் கடைசிக் காலத்திலோ வென்றால், பாதகருடைய பாதகம் நிறைவேறும் போது, மூர்க்க முகமும், சூதான பேச்சுமுள்ள சாமர்த்தியமான ஒரு ராஜா எழும்புவான்" (தானி 8 : 23) என்றும் சொல்லியிருக்கிறார்.

இந்நாட்களில் உலக நாடுகள் முழுவதிலும் ஒருவிதமான கலக்கமும் எதிர்பார்ப்பும் உண்டாகி இருக்கிறது. ராஜ்யங்கள் ஒவ்வொன்றோடு ஒன்று கூட்டுறவு செய்து தாங்களும், தங்கள் கூட்டு நாடுகளும் உலகத்தின் மகா பெரிய சக்தியாக விளங்க வேண்டுமென்று எண்ணுகின்றன. மேலும் எல்லோரும் பொதுவான வர்த்தக உடன்பாடும், பொதுவான ஆளுகையையும் எதிர்பார்க்கின்றனர். உலக முழுவதையும் அடக்கி ஆளத்தக்கதான ஒரு தலைவன் வேண்டுமென்ற எண்ணம் உண்டாகியிருக்கிறது. மதங்களையெல்லாம் ஒன்றாக்கி ஒரே மதமாகக் காணப்பட பிரயாசமும் நடைபெறுகிறது. இவைகள் எல்லாம் அந்திக் கிறிஸ்துவினுடைய வருகைக்கு ஆயத்தமான நிலைகளே. அந்திக் கிறிஸ்துவைக் குறித்து வெளிப்படுத்தல் ஆகமத்தில் மிருகம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. "பின்பு நான் கடற்கரை மணலின் மேல் நின்றேன். அப்பொழுது சமுத்திரத்திலிருந்து ஒரு மிருகம் எழும்பிவரக் கண்டேன்; அதற்கு ஏழு தலைகளும் பத்துக் கொம்புகளும் இருந்தன; அதின் கொம்புகளின் மேல் பத்து முடிகளும், அதின் தலைகளின் மேல் தூஷணமான நாமமும் இருந்தன.

நான் கண்ட மிருகம் சிறுத்தையைப் போலிருந்தது: அதின் கால்கள் கரடியின் கால்களைப் போலவும், அதின் வாய் சிங்கத்தின் வாயைப் போலவும் இருந்தன. வலுசர்ப்பமானது தன் பலத்தையும் தன் சிங்காசனத்தையும், மிகுந்த அதிகாரத்தையும் அதற்குக் கொடுத்தது. அதின் தலைகளிலொன்று சாவுக்கேதுவாய்க் காயப்பட்டிருக்கக் கண்டேன்; ஆனாலும் சாவுக்கேதுவான அந்த காயம் சொஸ்தமாக்கப்பட்டது. பூமியிலுள்ள யாவரும் ஆச்சரியத்தோடே அந்த மிருகத்தைப் பின்பற்றி, அந்த மிருகத்திற்கு அப்படிப்பட்ட அதிகாரங் கொடுத்த வலுசர்ப்பத்தை வணங்கினார்கள். அல்லாமலும்: மிருகத்திற்கு ஒப்பானவன் யார்? அதினோடே யுத்தம் பண்ணத்தக்கவன் யார்? என்று சொல்லி மிருகத்தையும் வணங்கினார்கள்.
(வெளி 13 :1 — 4).

வலுசர்ப்பம் தான் கீழே விழத்தள்ளப்பட்டவுடனே தன்னுடைய சிங்காசனத்தை

யும், அதிகாரத்தையும், வல்லமையையும் அந்திக்கிறிஸ்துவுக்குக் கொடுக்கிறான். அந்திக்கிறிஸ்து உலகத்திலே அரசனாக வும் (அரசியல் தலைவன்) மதத்தலைவனாக வும் காணப்படுவான். அவன் தந்திரமும் வஞ்சக மும், சாமார்த்தியமுமுள்ள ராஜா என்று எழுதப்பட்டிருக்கிறது. அவனுடைய நயவஞ்சக வசனிப்புக்குள்ளாக யூதர்களும் மயங்கி விழுவார்கள். அவன் யூதர்களுக்கு சில சலுகைகளைக் கொடுத்து அவர் களோடு உடன்படிக்கை செய்வான். அவர் கள் தேவாலயத்தைக் கட்டுகிறதற்கு உதவி யும் செய்வான்.

அநேக வேதசாஸ்திரிகளின் அபிப் பிராயத்தின்படியும், கணிப்பின்படியும் ரோமபுரி உன்னத நிலையையடைந்து ரோமபுரியிலே போப்பாக வருகிற ஒரு யூதனே அந்திக் கிறிஸ்துவாக வரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இன்னும் சில வேதவாக்கியங்களின்படி தனக்குரிய இடத்திற்கு கடந்து போன யூதாவே அந்திக்கிறிஸ்துவாக எழும்பலாம் (அப் 1 : 24). ஏனென்றால் "நீ கண்ட மிருகம் முன்னே இருந்தது. இப்பொழுது இல்லை அது பாதாளத்திலிருந்து ஏறிவந்து நாசமடையப் போகிறது. உலகத்தோற்ற முதல் ஜீவப் புஸ்தகத்தில் பேரெழுதப்பட்டி ராத பூமியின் குடிகள் இருந்ததும், இராமற் போனதும், இனி இருப்பதுமாயிருக்கிற மிருகத்தைப் பார்த்து ஆச்சரியப்படுவார் கள். ஞானமுள்ள மனம் இதிலே விளங்கும். ..." (வெளி 17 : 8, 9) என்று எழுதப் பட்டுள்ளது.

யூதாஸ் இயேசுகிறிஸ்துவுக்கு ஒரு முக்கியமான சீஷனாயிருந்தான். அவன் ஆரம்பத்தில் உண்மையுள்ளவனாய் இருந்த தினால்தான் பொக்கிஷதாரியின் உத்தியோகத்தை கர்த்தர் அவனுக்குக் கொடுத்தார் என்று அறிகிறோம் (யோவா 13 : 29). யூதாசுக்கு இயேசு கிறிஸ்துவைப் பற்றியுள்ள இரகசியங்கள் அநேகம் தெரியும். அவன் தோற்றத்திலும் இயேசுகிறிஸ்துவைப் போலிருந்தான் என்று பாரம்பரியம் சொல்லுகிறது ஆனால் அவனுடைய இருதயமோ இயேசு கிறிஸ்துவை விட்டு வெகுதூரம் பிரிந்திருந் தது அவன் பொருளாசையுடையவனாகவும், பதவி ஆசைப்பிடித்தவனாயும், தெய்வீக சிந்தனைக்கு முற்றிலும் தூரமானவனாயும் இருந்தான். அவன் படிப்படியாய் சாத்தானுக்கு இடங்கொடுத்து முழுவதும் சாத்தானாகவே மாறிப்போய்விட்ட ஒரு மனிதன். அவன் திருடனாக இருந்தான். அவனைக்குறித்து இயேசுகிறிஸ்து சொல்லும் போது"...பன்னிருவராகிய உங்களை நான் தெரிந்து கொள்ளவில்லையா? உங்களுக் குள்ளும் ஒருவன் பிசாசாயிருக்கிறான் என்றார்" (யோவா 6 : 70). "... அந்தத் துணிக்கையை அவன் வாங்கின பின்பு, சாத்தான் அவனுக்குள் புகுந்தான் ..." (யோவா 13 : 26, 27, லூக் 22 : 3) என்றும் எழுதப்பட்டுள்ளது.

இயேசுவைக் காட்டிக் கொடுக்கிறவர் களும், பரிசுத்தவான்களைக் காட்டிக் கொடுக்கிறவர்களும் (கொலை செய்யும்படி) சத்தியத்தை அறிந்தும், சத்தியத்தை தரை யிலே தள்ளிமிதித்து துணிகரமான பாவம் செய்கிறவர்களும் அந்திக் கிறிஸ்து வினுடைய ஆவியையுடையவர்களே.

அப். பரிசுத்த யோவான் சொல்லும் பொழுது, "பிள்ளைகளே, இது கடைசிக் காலமாயிருக்கிறது, அந்திக்கிறிஸ்து வருகிற னென்று நீங்கள் கேள்விப்பட்டபடி இப் பொழுதும் அநேக அந்திக்கிறிஸ்துகள் இருக்கிறார்கள்" என்றும் 'பிரியமானவர்களே உலகத்தில் அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றியிருப்பதினால், நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்தறியுங்கள்" என்றும் "மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கை பண்ணாத எந்த ஆவியும் தேவனால் உண்டானதல்ல. வருமென்று நீங்கள் கேள்விப்பட்ட அந்திக்கிறிஸ்துவினுடைய ஆவி அதுவே" என்றும், "நாங்கள் தேவனால் உண்டானவர்கள்; தேவனை அறிந்தவன் எங்களுக்குச் செவி கொடுக்கிறான்; தேவனால் உண்டாயிராதவன் எங்களுக்குச் செவிகொடுக்கிறதில்லை; இதினாலே சத்திய ஆவி இன்னதென்றும், வஞ்சக ஆவி

இன்னதென்றும் அறிந்திருக்கிறோம்." என்றும் சொல்கிறார் (1 யோவா 2:18 4::1,3, 6).

"மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கை பண்ணாத அநேக வஞ்சகர்கள் உலகத்தில் தோன்றியிருக்கிறார்கள். இப்படிப்பட்டவனே வஞ்சகனும், அந்திக் கிறிஸ்துவுமாயிருக்கிறான்" (II யோவா 7). அறிக்கை பண்ணுகிறதென்றால் வாயினாலே அறிக்கை பண்ணுகிறதும் சாட்சி கொடுப்பதுமாத்திரமல்ல, எழுதுகிறதும் பிரசங்கிக்கிறது மாத்திரமல்ல ஜீவியத்தினால் கிரியையினால் அறிக்கை பண்ணுகிறதுமாகும்.

"அவர்கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று அறிக்கை பண்ணுகிறார்கள், கிரியைகளினாலோ அவரை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களும் கீழ்படியாதவர்களும், எந்த நற்கிரியையுஞ் செய்ய ஆகாதவர்களுமாயிருக்கிறார்கள் (தீத்து 1:16).

இந்த நாட்களில் சத்தியத்தை அறிந்தும் சத்தியத்தை ஏற்றுக் கொள்ளாமல் சத்தியத்தின் மீது அன்பு கூராமல் இரட்சிப்பை வேண்டாமென்று ஒதுக்கி விடுகிற அநேக கிறிஸ்தவர்கள் உண்டு. இவர்களெல்லாரும் பொய்யை விசுவாசிக்கவும், பொய்யான அற்புத அடையாளங்கள் மேல் நம்பிக்கை வைத்துகெட்டுப் போகும்படியாக அவர்கள் பொய்யை விசுவாசிக்கத் தக்கதாக கொடிய வஞ்சகத்தை தேவன் அவர்களுக்குள் அனுப்புவார் (IIதெ 2:9 12). இதை இந்நாட்களில் நாம் கண்கூடாகக் காண்கிறோம். இயேசு கிறிஸ்துவை இறைவனாக விசுவாசிக்காமலும், ஏற்றுக் கொள்ளாமலும், அவரை வணங்காமலும் இருக்கிறவர்கள் பாவமனிதர்களை வணங்குவார்கள் வரப்போகிற மிருகத்தை, அந்திக் கிறிஸ்துவை வணங்குவார்கள்.

அந்தக்கிறிஸ்துவின் ஆவி அகித்தோப்பேலிலேயும், அப்சலோமிலும் கிரியை செய்தது பின்பு யூதாஸிலே கிரியை செய்தது. இந்தக் ஆவி காலாகாலங்களில் கிரியை செய்தபடி இக்காலத்திலும் பலரில் இறங்கி கிரியைச் செய்கிறது. இதனுடைய முழு நிலையோடு, முழுவல்லமையோடு சாத்தானுடைய முழு வல்லமையோடும் மிருக சுபாவமுள்ளவனாய் அந்திக்கிறிஸ்து இந்த கடைசி காலத்தில் வெளிப்படப் போகிறான். Anti-Christ என்றால் கிறிஸ்துவினுடைய எதிராளி என்று அர்த்தம். இயேசுகிறிஸ்து மனிதனாய் இவ்வுலகில் இருந்தது போல சாத்தானும் அந்திக்கிறிஸ்துவில் மனிதனாக தோன்றுவான அந்திக் கிறிஸ்து இயேசுகிறிஸ்துவைப் போலவே சாத்தானுடைய முழுவெளிப்பாடாய் இருப்பான்.

அந்திக்கிறிஸ்துவுக்கு கொடுக்கப்பட்ட பெயர்களே, அவனது குணங்களை வெளிப்படுத்துகின்றன.

1. மதியற்ற இடையன்(சக 11. 15)
2. அந்திக்கிறிஸ்து(I யோவா 2:18 ; 4:3)
3. பாவமனுஷன்(II தெச 2 . 3).
4. கேட்டின் மகன்(II தெ 2:3)
5. எதிராளி (II தெச 2:4)
6. மிருகம்(வெளி 13:1).

இயேசு தேவனும் மனிதனுமாய் இருந்ததுபோல அந்திக்கிறிஸ்துவும் சாத்தானும் மனிதனு மாயிருப்பான்.

இயேசுகிறிஸ்து தோன்றி 30 வயது வரைக்கும் மறைவாக ஜீவித்து பின் பரிசுத்த ஆவியினால் நிறையப் பெற்றவராய் பகிரங்கமாக வெளிப்பட்டு தன்னுடைய ஊழியத்தை செய்ததுபோல, அந்திக்கிறிஸ்துவும் இப்பொழுது எங்கோ மறைவாக ஜீவித்துக் கொண்டு இருக்கிறான என்றும், காலம் வரும்போது சாத்தானுடைய வல்லமையினால் ஆவேசமுடையவனாக வெளிப்படுவான் என்றும் சில வேதசாஸ்திரிகள் கூறுகின்றனர்.

இயேசுகிறிஸ்து எதற்காக பிறந்தாரோ அதற்கு நேர் விரோதமான நிலையில் அந்திக் கிறிஸ்து பிறப்பான். இயேசு கிறிஸ்து எதற்காக நிலைநின்றாரோ, என்ன போதித்தாரோ அதற்கு நேர் விரோதமாக அந்திக்கிறிஸ்து நிலைநிற்கவும், போதிக்கவும் கிரியை செய்கிறவனுமாய் இருப்பான். எப்படியும் அவன் ஒரு கீர்த்தி பெற்ற மதத்தலைவன் என்கிற முறையில் வெளிப்படுவான். அவனுக்கு

கீழ்ப்படிகிற எல்லா சபைகளையும் இணைத்து ஒரு சங்கமாக உயர்த்துவான். அதன் ஆரம்ப நிகழ்ச்சிகளை இந்நாட்களில் நாம் கண் கூடாக காண்கிறோம்.

சபைகளின் ஐக்கியம் என்று சொல்வது சத்தியத்தினிமித்தம், சத்தியத்திற்காகவா? அல்லது புறம்பான மாயமான அன்பினால் தூண்டப்பட்டு பெருங்கூட்டமாய் உலகத்தில் ஏதாவது சாதிக்கலாமென்று அரசியல் நோக்கத்தோடு கூடுகிற கூட்டமா? என்பதை நாம் கவனித்து பார்த்தால் நயமும், வஞ்சகமும் உள்ளதும், சாமர்த்தியமுமான பேச்சுமுள்ள அந்திக்கிறிஸ்துவினுடைய ஆவியின் தன்மை என்பதை ஆவிக்குரியவர்கள் அறிந்து கொள்வார்கள். சத்தியத்தினிமித்தம் சத்தியத்திற்காக இயேசு கிறிஸ்துவை உலகத்தில் உயர்த்தி காண்பிக்கும்படியான தெய்வீக நோக்கத்துடன் கூட்டுச் சேர்கிறதே தேவனுடைய சித்தமாயிருக்கிறது.

ஆவிக்குரியவர்களும் தேவனுடைய சத்தத்திற்குச் செவி கொடுக்கிற தேவனுடைய ஆடும் ஒரே மந்தையுமாய் ஒரே சபையாய் கூட்டிச் சேர்க்கப்படுவார்கள். அப்படியே தேவனுடைய வசனத்திற்கு செவி கொடாதவர்களும், கீழ்படியாதவர்களும் இடறி ஒரு பெரிய மாம்சீக கூட்டமாக கள்ள சபையாராக கூடுவார்கள்.

அந்திக்கிறிஸ்து மதங்களின் ஒற்றுமையை உருவாக்கவும், இராஜ்யங்களை ஒன்றாக்கவும் கிரியை செய்வான். ஐரோப்பாவிலும், ஆசியாவிலுமுள்ள அநேக நாடுகள் தம்முடைய இராஜ்யத்தை அவனுக்கு ஒப்புக் கொடுப்பார்கள்.

"நீ கண்ட பத்துக் கொம்புகளும் பத்து ராஜாக்களாம்; இவர்கள் இன்னும் ராஜ்யம் பெறவில்லை; இவர்கள் மிருகத்துடனேகூட ஒரு மணி நேரமளவும் ராஜாக்கள் போல அதிகாரம் பெற்றுக் கொள்ளுகிறார்கள். இவர்கள் ஒரே யோசனையுள்ளவர்கள்; இவர்கள் 'தங்கள்' வல்லமையையும், 'அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுப்பார்கள்" (வெளி 17 : 12, 13).

இப்பொழுதே அநேக அந்திக்கிறிஸ்துகள் இருக்கிறார்கள். வஞ்சகர்கள் இருக்கிறார்கள். சாத்தானுடைய உபதேசமுடையவர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய கனிகளினாலே அவர்களை அறிவீர்கள்—மரம் இன்னதென்று அதன் கனிகளினால் அறியப்படும். ஆதலால் அவர்களுடைய கனிகளினாலே அவர்களை அறிவீர்கள் (மத் 7 : 15-20). இவர்களெல்லாம் அந்திக்கிறிஸ்துவின் ஆவியையுடைய சாத்தானுடைய கையாட்கள். ஒருவேளை அவர்கள் இயேசுவின் நாமத்தினாலே ஊழியம் செய்கிறவர்களாய் இருப்பார்கள்.

இதோ அந்திக்கிறிஸ்து வருகிறான். அந்திக் கிறிஸ்து வெளிப்பட்டாலொழிய அந்த நாள் வராது (II தெச 2 : 1-3)

(தொடரும்)

---

"...மனுஷகுமாரன் பூமியில் வரும்பொழுது விசுவாசத்தைக் காண்பாரோ"...
லூக் 18 : 8.

---

## மூன்று காரியங்கள்

உலகத்தில் அநேகருக்கு அநேக விதமான காரியங்கள் சம்பவிக்கின்றன. அக்காரியங்களின் முடிவில், பொருள்நஷ்டமும், வேதனையும், துக்கமும், சமாதானமின்மையும், பிரிவும் உண்டாகின்றன. பலர் தங்கள் ஜீவனை இழந்து விடுகின்றனர். இக்காரியங்கள் சம்பவியாதபடியும், அப்படி சம்பவித்தால், முடிவு தங்களுக்குச் சாதகமாக, நன்மையாக ஜெயம் கிடைக்க முடிவெடுக்கின்றனர். அவர்களின் ஆலோசனையின் முடிவு ஜெயம் கிடைப்பது போல இருந்தாலும், நீர்க்குமிழிப் போல மறைந்து போகின்றது. மீண்டும் வேதனை, சமாதானக் குறைவு உண்டாகிறது. ஆவிக்குரியவர்களாகிய நமக்கும் அநேக காரியங்கள் சம்பவிக்கின்றன. அக்காரியங்கள் எவ்

வாறு சம்பவிக்கின்றன? அக்காரியங்களை எவ்வாறு மேற்கொள்ளலாம்? ஜெயம் யாரால் உண்டாகிறது? என்பதைக் குறித்து கவனமாக பார்ப்போமாக!

பாவம்: ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான் (II கொரி5 : 17). கிறிஸ்துவினால் மீட்கப்பட்ட ஒரு மனுஷன், பழைய பாவச் சுபாவங்களை விட்டு ஓய்ந்தவனாய், கிறிஸ்துவினால் பாவத்திலிருந்து விடுதலை பெற்றவனாய், புதுசிருஷ்டியாய், தேவ மனுஷனாய் இருக்கின்றான். தேவனோடு உறவாடுகின்றான், தேவனோடு சஞ்சரிக்கின்றான் (ஆதி 6 : 9) தேவனோடு போஜனம் பண்ணுகின்றான் (வெளி 3 : 20). இவ்வாறு தேவ ராஜ்யத்திற்குட்பட்ட மனுஷனை, தேவ ராஜ்யத்திலிருந்து பிரிக்கும்படி எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம் போல் வருகின்றான் (I பேது 5 : 8). தேவ மனுஷன் எந்தக் காரியத்தில் அஜாக்கிரதையாய் அல்லது விருப்பமாய் இருக்கின்றான் என்பதை சோதிக்கின்றான். மாம்சத்தையும், உலகப்பொருட்களையும் அவன் கண்முன் கொண்டு வருகின்றான்.

இப்பொழுது போராட்டம் உண்டாகின்றது. இந்த வேளையில் தேவனுடைய பிள்ளைகள், பரிசுத்தவான்களிடத்தில் ஆலோசனை பெற்று இக்காரியங்களினால் உண்டாகும் போராட்டங்களை மேற்கொள்ளவேண்டும். இவ்வாறு பரிசுத்தவான்களிடத்தில் ஆலோசனை பெறவிட்டால் அல்லது அவர்களின் ஆலோசனைகளுக்கு கீழ்படியாவிட்டால், தாவீது மாம்சத்திற்குட்பட்டு தேவ கோபத்திற்கு ஆளானது போலவும், பிலேயாம் உலகப் பொருளுக்காக கூலி பேசி, தேவ ஜனத்தை சபிப்பதற்கு செல்ல வேண்டாம் என்று கர்த்தர் சொன்னபோது (எண் 22:12). பிலேயாம் மீறிச் சென்றபோது, வழியிலே கர்த்தருடைய தூதனானவர் அவனுக்கு எதிராளியாக நின்றார் (எண் 22:22). இக்காரியங்கள் திருஷ்டாந்தமாக எழுதப்பட்டுள்ளது. மாம்சத்திற்கும், உலகப் பொருட்களுக்கும் அடிமையாகும்போது தேவ கோபம் உண்டாகின்றது. தேவ பிள்ளைகள் தேவ கோபத்திற்கு தப்பித்துக் கொள்ளும்படி, பரிசுத்தவான்களின் ஆலோசனைக்கு கீழ்படிய வேண்டும் (II இரா 5:14)

2. பொல்லாத ஆவிகள் :-

மாம்சத்தோடும், இரத்தத்தோடுமல்ல, துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும், இப்பிரபஞ்சத்தின் அந்தகாரலோகாதிபதிகளோடும், வான மண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளுடைய சேனைகளோடும், நமக்கு போராட்டம் உண்டு (எபேசி 6:12). தேவனுடைய பிள்ளைகளின் ஆவிக்குரிய வாழ்க்கையில் இரண்டாவது காரியமாக பொல்லாத ஆவிகளின் போராட்டம் உண்டாகின்றது இது ஏன் உண்டாகின்றது? கர்த்தருடைய வார்த்தையை புறக்கணிக்கிறபோது (I சாமு 15:23, I சாமு 16:14). இது எவ்வாறு ஏற்பட்டது? அமலேக்கியரை முற்றிலும் சங்கரிக்கும் வரை யுத்தம் பண்ணு என்று கர்த்தருடைய வார்த்தை சவுலுக்கு அறிவிக்கப்பட்டது (I சாமு 15:18). ஆனால் சவுல் முற்றிலும் சங்கரியாமல் முதல்தரமானவைகளையும், இரண்டாந்தரமானவைகளையும், ஆட்டுக்குட்டிகளையும் நலமான எல்லாவற்றையும், அழித்துப் போட மனதில்லாமல் தப்பவைத்து, அற்பமானவைகளும், ஆகாதவைகளுமானவற்றை மட்டும் சங்கரித்தான் (I சாமு 15:9).

இவ்வாறு கொள்ளையின் மீது இச்சித்து, கர்த்தருடைய வார்த்தையை புறக்கணித்தபடியால், பொல்லாத ஆவி சவுல் மீது வந்தது (I சாமு 16:4). பொல்லாத ஆவி கலங்கப்பண்ணிற்று. அடுத்ததாக இஸ்ரவேலின் ராஜா, கர்த்தருடைய தீர்க்கதரிசி மிகாயாவை நோக்கி, கீலேயாத்திலுள்ள ராமோத்தின் மேல் யுத்தம் பண்ண போகலாமா? போகலாகாதா? என்று கேட்டபோது, கர்த்தருடைய வார்த்தை மிகாயாவிற்கு உண்டானதாவது. அப்பொழுது அவன்: இஸ்ரவேலர் எல்லோரும் மேய்ப்பன் இல்லாத ஆடுகளைப்போல மலைகளில் சிதறக் கண்டேன். அப்பொழுது கர்த்தர்: இவர்களுக்கு எஜமான் இல்லை; அவரவர் தம்தம் வீட்டிற்குச் சமாதானமாகத் திரும்பக்கடவர்கள் என்றார் என்று சொன்னான் (II நாளா 18:16).

இந்த வார்த்தையை இஸ்ரவேலின் ராஜா ஆகாப் புறக்கணித்தபடியால், இஸ்ரவேலின் ராஜா ஆகாப் கீலேயாத்திலுள்ள ராமோத்தில் விழும்படிக்கு கர்த்தர் அவனிடத்திலுள்ள தீர்க்கதரிசிகளினிடத்தில் பொய்யின் ஆவியை அனுப்பினார் (II நாளா 18:19, 20, 21). பொய்யின் ஆவி கிரியை செய்தபடியால் அவன் மடிந்தான் (II நாளா 18:34). சவுல் கர்த்தருடைய வார்த்தையை புறக்கணித்தபடியால், சவுல் இராஜாவாயிராதபடிக்கு கர்த்தர் புறக்கணித்தார் (I சாமு 15:26). ஆகாப் கர்த்தருடைய வார்த்தையை புறக்கணித்தபடியால் கர்த்தர் ஆகாபை இறந்துபோகச் செய்தார். இவைகள் நமக்கு திருஷ்டாந்தமாக எழுதப்பட்டுள்ளது. நம்மை இறைவன் இராஜாக்களும் ஆசாரியர்களுமாய் அழைத்திருக்கிறபடியால் (வெளி 1:6) கர்த்தருடைய வார்த்தைக்கு கீழ்படிவோமாக. இல்லை என்றால் பொல்லாத ஆவி மேற்கொள்ளும் நீ சாவாய்.

3. சாத்தான்:-

மூன்றாவதாக கர்த்தருடைய பிள்ளைகளை சோதிக்கும்படியாக சாத்தான் வருகிறான். எந்தக் காரியத்தில் சோதிக்கிறான்? உத்தம காரியத்தில் சோதிக்கிறான். ஆம் யோபுவின் உத்தமத்தை சோதிக்கும்படியாக, அவர் தேவனுடைய நாமத்தை தூஷிப்பாரோ? என்று அறியும்படிக்கு உத்தமர் யோபுவினிடத்தில் சாத்தான் வந்தான் (யோபு 1:11, 12). உத்தமர் யோபுவினிடத்தில் சாத்தான் வந்தபடியால் அவருடைய உடைமைகள் அக்கினிக்கு இரையாயின; கொள்ளை பொருளாக கொண்டுபோகப் பட்டது. சபேயர் எருதுகளையும், கழுதைகளையும் ஓட்டிச் சென்றார்கள்; அக்கினி ஆடுகளையும், வேலைக்காரரையும் பட்சித்தது. கல்தேயர் ஒட்டகங்களை கொள்ளைப் பொருளாகக் கொண்டு போனார்கள்; குமாரரும், குமாரத்திகளும் இறந்துபோனார்கள் (யோபு 1:13-19). இவ்வாறு பொருள் நஷ்டத்தையும், உயிர்ச்சேதத்தையும் உண்டாக்கினால், பக்தன் யோபு தம்முடைய உத்தமத்தைவிட்டு விலகி, தேவனுடைய நாமத்தை தூஷிப்பார் என்று சாத்தான் கருதினான். ஆனால் அவனுடைய எண்ணம் நிறைவேறவில்லை என்ன நடந்தது? பக்தன் ஆபகூக் சொன்னது போல (ஆபகூக் 3:17,18) உத்தமர் யோபு சொன்னார்: கர்த்தர் கொடுத்தார்; கர்த்தர் எடுத்தார். கர்த்தருடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக என்றார் (யோபு 1:21).

இன்று அநேகர் இந்தப்பக்குவ நிலையை அடையவில்லை. தங்களுடைய எண்ணங்கள் நிறைவேறாவிட்டால், தாங்கள் நேசிக்கின்ற பொருட்கள், தங்களுக்கு அருமையானவர்கள், பிரியமானவர்கள் தங்களைவிட்டு பிரிந்து விட்டால், இறைவன் மீது மனம் கசந்து ஜீவ வழியை விட்டு விலகியோட ஆரம்பித்து விடுகின்றனர். இவ்வளவு பெரிதான இழப்பு உத்தமர் யோபிற்கு வந்தும், அவர் தேவனை குறை சொல்லவில்லை (யோபு 1:22); தம் உதடுகளால் பாவம் செய்யவுமில்லை (யோபு 2:20); என் உதடுகள் தீமையை சொல்வதில்லை (யோபு 27:3) என்றார். கர்த்தர் மீது கொண்ட விசுவாசத்தை; உத்தமத்தை வெளிப்படுத்தினார். அவரை உத்தமன் என்று கர்த்தர் சாட்சியிடுகிறார் (யோபு 2:3).

உத்தமர் யோபுவை சோதிக்கும்படி சாத்தான் கர்த்தரிடத்தில் அநுமதி பெற்றது போல நம்மையும் சோதிக்கும்படி சாத்தான் கர்த்தரிடத்தில் அநுமதி பெற்று வருகிறான் (லூக் 22:31). யோபுவின் உத்தமத்தைக் கண்ட இறைவன் யோபுவை இரட்டிப்பாய் ஆசீர்வதிக்கின்றார் (யோபு 42:10). நமக்கு வரக்கூடிய சோதனைகளில் நாம் உத்தமத்தை வெளிப்படுத்த வேண்டும் என்று கர்த்தர் விரும்புகிறார். நாம் உத்தமத்தை வெளிப்படுத்தும் படிக்கும், உத்தமமாய் முன் செல்லும்படிக்கும் கர்த்தர் நமக்கு அருள்புரிவாராக.

அடுத்ததாக தேவ வசனத்தின் மீது கொண்ட வைராக்கியத்தை சோதிக்கும் படியாக தேவபிள்ளைகளிடத்தில் சாத்தான் கடந்து வருகின்றான். வசனத்தைக் கேட்ட வுடனே சாத்தான் வந்து, அவர்கள் இருதயங்களில் விதைக்கப்பட்ட வசனத்தை எடுத்துப் போடுகிறான் (மாற் 4:15) நம்முடைய மீட்பராகிய கிறிஸ்துவினிடத்திலும் சோதிக்கும்படியாக சாத்தான் வந்தான். அவனை கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இருபுறம் கருக்குள்ள பட்டயமாகிய (எபி 4:12( சத்திய வசனத்தினாலே ஜெயம் கொண்டார்

(மத் 4:3-11) சாத்தானுடைய முயற்சிகள் தோல்வியுற்றது; அவன் வெட்கப்பட்டுத் திரும்பினான்.

நம்மிடத்தில் சாத்தான் வருகிறபடியால் அவனுடைய சகல சோதனைகளுக்கும் நாம் சோர்ந்து போகாமல் ஜெயம்பெற பரமகானானை நோக்கிச் செல்லும் இந்த இன்ப வனாந்தர யாத்திரையில், ஜெயக் கிறிஸ்து நமக்கு முன்பாக செல்கிறபடியால், சாத்தானை ஜெயங் கொண்ட அவர் நமக்கும் ஜெயமளிக்க வல்லவராய் இருக்கின்றார். ஜெயம் நம்முடையதே. நமக்கு ஏற்படுகின்ற சகல சோதனைகாரியங்களிலும் நாம் ஜெயங்கொள்ள, கர்த்தருடைய வார்த்தைக்கு கீழ்படிய வேண்டும்; பரிசுத்தவான்களின் ஆலோசனைக்கும் உட்பட வேண்டும் அப்பொழுதே ஜெயங்கொள்ள முடியும்.

பரிசுத்தவான்களின் ஆலோசனை கர்த்தருடைய கற்பனையே (I கொரி 14:37) அவர்களில் விடாய்த்தவனும், இடறுகிறவனும் இல்லை. தூங்குகிறவனும், உறங்குகிறவனும் இல்லை; அவர்களில் ஒருவனுடைய இடுப்பின் கச்சை அவிழ்வதும், பாதரட்சைகளின் வார் அறுந்துபோவதும் இல்லை (ஏசா 5:21) என்று திருவசனம் நம்மைப் பார்த்து கூறுகிறபடியால் ஆலோசனைக்குக் கீழ்படிவோமாக. கர்த்தருடைய கற்பனை பரிசுத்தவான்களுடைய ஆலோசனையே! கர்த்தர் நமக்கு அருள் புரிவாராக!

---

"...மூடர் பலியிடுவது போல் பலியிடுவதைப் பார்க்கிலும் செவி கொடுக்கச் சேர்வதே நலம்" (பிர 5:1).

---

# மோட்ச வழி

## குரு - சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்:** சிலர் திருவிருந்து தேவையில்லை, ஞானஸ்நானமோ, திருவிருந்தோ அவசியமில்லை, அவைகளின் உள்ளான கருத்து நம்மில் நிறைவேண்டும். விசுவாசந்தான் முக்கியம். இந்த சடங்காச்சாரம் அவசியமில்லை என்று சொல்லுகிறார்களே அதெப்படி?

**குரு:** மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாகப் போதித்துவீணாய் ஆராதனை செய்கிற சடங்காச்சாரங்களைத்தான் இயேசுகிறிஸ்து ரத்து செய்தார். திருச்சபை என்றால் இயேசுகிறிஸ்து கட்டளையிட்ட ஞானஸ்நானமும், திருவிருந்தும் (இராப்போஜனம்) அதிகாரம் பெற்ற அபிஷேகிக்கப்பட்ட ஊழியர்களும் உடையதே திருச்சபை, ஞானஸ்நானமும், இராப்போஜனமும் இல்லாதவைகள் சபைகளேயல்ல. நம்முடைய உள்ளான விசுவாசத்திற்கு வெளிப்படையான ஏதுகரணங்களும் தேவை. ஞானஸ்நானம், இராப்போஜனம் போன்றவைகள் தேவன் மனிதனுக்கு அருளுகிற கிருபைக்கு வெளிப்படையான கிருபையின் எத்தனங்களாக இருக்கின்றன. கர்த்தராகிய இயேசுகிறிஸ்து கட்டளையிட்ட எல்லா கட்டளைகளும் நம்முடைய இரட்சிப்புக்கு மிகமிக அவசியமானவைகளே. அவசியமில்லாதவைகளை அனாவசியமானவைகளை இயேசுகிறிஸ்து கட்டளையிடமாட்டார். ஆனபடியினால் முறையான ஞானஸ்நானமும், திருவிருந்தும் இயேசுகிறிஸ்து இரண்டாம் முறை இவ்வுலகத்திற்கு வரும்வரை அனுசரிக்கப்பட வேண்டியவைகளே ஆகும்.

**சிஷ்யன்:** திருவிருந்தினால் நமக்கு கிடைக்கும் பலன், பிரயோஜனம் என்ன?

**குரு:** திருவிருந்திற்கு பஸ்கா என்ற பெயரும் உண்டு. பாவமாகிய புளித்தமாவை விலக்கிவிட்டு பரிசுத்தத்தோடும் ஆயத்தத்தோடும், எதிர்பார்ப்போடும் இதில் பங்கு பெறுகிறவர்கள்; ஆசீர்வதிக்கப்பட்ட அப்பத்திற்குள்ளாக இயேசுகிறிஸ்துவின் மாம்சத்தை புசித்து, ஆசீர்வதிக்கப்பட்ட பாத்திரத்துக்குள்ளாக இயேசுகிறிஸ்துவினுடைய ரத்தத்தை பானம் பண்ணுகிறார்கள். அந்த அப்பத்திற்குள் இயேசுகிறிஸ்துவினுடைய மாம்சமும் அந்த பாத்திரத்தின் ரசத்திற்குள்ளாக இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தத்தின் ஐக்கியமும் உண்டா

யிருக்கிறது. இதில் பங்கு பெறுகிறவர்கள் ஆத்துமாவிலும், சரீரத்திலும் தேவகிருபையை பெற்றுக் கொள்கிறார்கள். மேலும் இயேசுகிறிஸ்துவின் பிரதான கட்டளைகளில் ஒன்றை நிறைவேற்றினதினால் உண்டாகும் மகிழ்ச்சியும், பரிசுத்த ஆவியின் நிறைவும் அவர்களுக்கு உண்டாகும்.

சீஷன்: இராப்போஜனம் எவ்வப்பொழுது ஆசரிக்க வேண்டும்? வருடத்தில் ஒரு முறை ஆசரித்தால் போதுமா?

குரு: வாரந்தோறும் ஆசரிக்க வேண்டும். விசேஷித்த நாட்களிலும் ஆசரிக்கலாம். நாம் எத்தனை முறை ஆசரித்தாலும் அது நமக்கு நன்மையே. ஆதி சபையார் தினந்தோறும் அப்பம்பிட்டு ஆசரித்தார்கள். (அப். 2:46). பின்பு வாரத்தின் முதல் நாள்தோறும் ஆசரித்து வந்தார்கள். கர்த்தருடைய நாளில் (ஞாயிற்றுக்கிழமை) சபை கூடிவருகிறதே இந்த அப்பம் பிட்குதல் ஆராதனையை நடப்பிக்கும்படிக்கே. நாமும் அப்படி செய்யலாம் (அப். 20:7). சிலர் சபை கூடி வருகிறதே எதற்கு என்று தெரியாமல் கூடி ஆடி பாடி ஆர்ப்பரித்து விட்டு கடந்து சென்று விடுகிறார்கள். சில சபைகளில் வருடத்திற்கு ஒருமுறை திருவிருந்து ஆராதனை, சில சபைகளில் ஆறு மாதத்திற்கு ஒரு முறை, சில சபைகளில் மாதம் ஒரு முறை, சில சபைகளில் எப்போதாவது, சில சபைகளில் திருவிருந்தே கிடையாது. இதெல்லாம் தவறே. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள். இதை செய்யும்பொழுதெல்லாம் என்னுடைய மரணத்தை தெரிவிக்கிறீர்கள். என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் (1கொரி. 11:23-26) என்ற இயேசுவின் கட்டளையை கைக் கொள்ளாதவர்களை கர்த்தர் தாமே திரும்ப வரும்பொழுது அவரும் அவர்களை நினைக்க மாட்டார். நீ என்னை நினைக்கவில்லை, என்னுடைய கட்டளையைக் கைக்கொள்ளவில்லை நானும் உன்னை அறியேன் என்று அவர்களுக்கு சொல்லுவார் (மத். 7:21-2.)

சீஷன்: சிலர் இரவில் தான் ஆசரிக்க வேண்டும் பகலில் ஆசரிக்கக் கூடாது என்று சொல்லுகிறார்களே அது அப்படித்தானா?

குரு: நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய மரணத்தை இரவில் தான் நினைவு கூரவேண்டும். பகலில் நினைவு கூரக் கூடாது என்று யாரும் சொல்லமாட்டார்கள் காலையிலும் நினைவு கூரலாம், மாலையிலும் நினைவு கூரலாம், மத்தியான வேளையிலும் நினைவு கூரலாம். எந்த வேளைகளிலும் நினைவு கூரலாம். வியாழக்கிழமைகளிலும், வெள்ளிக் கிழமைகளிலும் நினைவு கூரலாம். ஞாயிற்றுகிழமைகளிலும் நினைவு கூரலாம். வாரத்தின் எந்த நாளிலும் நினைவுகூரலாம். சுத்த இருதயத்தோடு தன்னை பரிசுத்தப்படுத்திக் கொண்டு, ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவிக் கொண்டு, பயபக்தியோடு இயேசுகிறிஸ்துவினுடைய பிட்கப்பட்ட சரீரத்தையும், சிந்தப்பட்ட உதிரத்தையும் பெற்று உட்கொள்வதாக எண்ணி அதில் பங்கு பெற்று தேவ ஆசீர்வாதம் பெற்றுக் கொள்வீராக! கர்த்தர் வரும் வரையிலும் அல்லது நீர் கர்த்தரிடம் எடுத்துக் கொள்ளப்படும் நாள் வரையும் தவறாமல் ஆசரிக்கவும்.

---

"நீங்கள் இவைகளை அறிந்திருக்கிறபடியினால் இவைகளை செய்வீர்களானால் பாக்கியவான்களாயிருப்பீர்கள்" (யோவா. 13:12-17)

---

# வேத பாடம்

ஆதி 39 : 1-6 யோசேப்பு தனக்கு தேவனருளிய சொப்பனங்களினிமித்தமும் மற்றப் பிள்ளைகளைக் காட்டிலும் யாக்கோபு யோசேப்பை அதிகமாய் நேசித்து பலவர்ண அங்கியைப் பண்ணி உடுத்துவித்ததினிமித்தமும் தன் சகோதரரால் பகைக்கப்பட்டு காய்மரம்

கொண்ட சகோதரரால் தன்னுடைய பதினேழாவது (17) வயதில் எகிப்துக்கு போகும் இஸ்மவேலராகிய வியாபாரிகளிடம் விற்கப்பட்ட சம்பவத்தை ஆதி 37, 39-ம் அதிகாரங்களில் பார்த்தோம். யோசேப்பை எகிப்தின் தலையாரிகளின் தலைவனாகிய போத்திபார் விலைக்கு வாங்கினான். யோசேப்போடே தேவன் இருந்தார். யோசேப்பு காரிய சித்திக்காரனாய் இருப்பதையும் அவனுடைய உண்மையையும் கண்டு யோசேப்பின் எஜமானாகிய போத்திபார் யோசேப்பை தன் வீட்டிற்கு விசாரணைக்காரனாக வைத்தான். யோசேப்பினிமித்தம் தேவன் போத்திபார் வீட்டை ஆசீர்வதித்தார் யோசேப்பு அழகும் சௌந்தரியமும் உடையவனாயிருந்தான்.

**ஆதி** 39 : 6-23. போத்திபாரின் மனைவியாகிய எஜமானி யோசேப்பின் மேல் கண்போட்டு அவனை பாவம் செய்ய வற்புறுத்தியும், யோசேப்பு தேவனுக்கு பயந்தும் எஜமானுக்கு துரோகம் செய்யக்கூடாது என்றும் கூறி மறுத்துவிட்டார். இதினிமித்தம் போத்திபாரின் மனைவி யோசேப்பின் மேல் பொய்யாய் குற்றம் சாட்டி, யோசேப்பை சிறைச்சாலையில் போடும்படி செய்தாள். யோசேப்பு சிறைச்சாலையில் போடப்படும் போது அவருக்கு வயது 27 (இருபத்தேழு). சிறைச்சாலையில் யோசேப்பு மூன்று வருஷம் இருந்தார் சிறைச்சாலைக்காரனுடைய கண்களிலும் யோசேப்புக்கு தயவு கிடைக்கும்படி தேவன் செய்தார். அதினால் சிறைச்சாலையிலும் யோசேப்பு விசாரணைக்காரனாகி சிறையில் போடப்பட்டவர்கள் ஒவ்வொருவரையும் பட்சமாய் விசாரித்து வந்தார். யோசேப்பு எங்கும் உண்மையுள்ளவராய் இருந்தார்.

**ஆதி** 40 : 1-23. ஒரு வருஷம் கழித்து எகிப்தின் ராஜாவின் பானபாத்திரக்காரனும், சுயம்பாகியும் குற்றம் செய்து தண்டிக்கப்பட்டு யோசேப்பு போடப்பட்டிருந்த சிறையிலே அடைக்கப்பட்டனர். அவர்கள் இருவரும் ஒருநாள் இரவில் வெவ்வேறு சொப்பனங்களைக் கண்டு கலங்கி இருந்தனர். யோசேப்பு அவர்கள் முகவாட்டத்தைக் கண்டு அவர்களை விசாரித்து காரியம் என்னவென்று அறிந்து அவர்கள் இருவருடைய சொப்பனங்களுக்கும் வெவ்வேறு அர்த்தம் சொல்லி மூன்று (3) நாட்களில் நிறைவேறும்; நீங்கள் வாழ்ந்திருக்கும் போது என் காரியத்தை ராஜாவுக்கு அறிவிக்க வேண்டும், நான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்றார். யோசேப்பு விளக்கம் கொடுத்தபடியே மூன்றும் நாள் சம்பவித்தன. பானபாத்திரக்காரன் மறுபடியும் தன் உத்தியோகத்தில் நிலைநிறுத்தப்பட்டான். ஆனாலும் அவன் யோசேப்பை இரண்டு வருஷமாய் மறந்துவிட்டான்.

(தொடரும்)

> "கர்த்தருடைய வழிகளைக் காத்துக் கொண்டு வந்தேன்; நான் என் தேவனுக்கு துரோகம் பண்ணினதில்லை" — II சாமு. 22 : 22.

மாதர் பகுதி

# குடும்பம்

(ஜனவரி மாத தொடர்ச்சி)

சாரோன் வீட்டிற்கு கொஞ்சம் தள்ளி ஒரு வாத்தியார் குடும்பம் வந்து தங்கியது வாத்தியாருடைய பெயர் ஞானசிகாமணி. அவருடைய மனைவியின் பெயர் நல்லமுத்து. இவர்களுக்கு விக்டர் என்ற பையனும்; லில்லி என்ற பெண்ணும் இருந்தனர். நல்ல கிறிஸ்தவ பக்தியுள்ள குடும்பம். வாத்தியாருக்கு என்னமோ ரூ. 700/- தான் சம்பளம். ஆனால் அந்த குடும்பம் ரூ. 1000/- சம்பளம் வாங்கும் குடும்பம் போல் சீரும் சிறப்புமாயிருந்தது. அவர்கள் மகிழ்ச்சியாயிருந்தார்கள். சரோன் வீட்டில் அடிபிடியாகி மற்ற ஜனங்கள் கேலி பண்ணி சிரித்து பேசுகிறதை அடிக்கடி கண்டு கேட்டு

நல்லமுத்து மற்றவர்களைப்போல் கேலி பண்ணி பேசாமல் ஐயோ பாவம் என்று சொல்லி அனுதாபத்தோடு பார்த்து வந்தாள்.

நல்லமுத்து தன்னுடைய பக்கத்து வீட்டுக்காரி தெபொராளைப் பார்த்து ஏன் அந்த வீட்டில் இவ்வளவு அடிபிடி கலாட்டா நடக்கிறது என்று கேட்டாள். அதற்கு தெபொராள் அந்த வீட்டுக்கார மாணிக்கம் விவாகத்துக்கு முன் நல்லவன் என்று எல்லாராலும் மெச்சிக் கொள்ளப்பட்டான். ஒழுங்காக தேவாராதனைக்குப் போவான். வெகு அமரிக்கையும், சாந்தமுமுள்ளவனாக விளங்கினான். விவாகமாகி (10) பத்து வருஷத்துக்குள் மிக கெட்டுப் போனான். குடும்பமே அழிந்து போயிருக்கிறது. பிள்ளைகளும் பெற்றோரைப் போலவே துஷ்டப்பிள்ளைகளாய் இருக்கின்றனர். வாலிபனாயிருந்த வேதமாணிக்கம் இவன் இல்லை என்று நினைக்கத் தோன்றுகிறது என்றாள்.

அதற்கு நல்லமுத்து அவன் மனைவி சரோனிடம் ஏதாவது தப்பு இருக்கும் என்று சொல்லி விட்டு தன் வீட்டு வேலையைக் கவனிக்கச் சென்று விட்டாள். நல்லமுத்து துணிகளை தைத்து மடித்து வைத்து விட்டு முழங்காலிட்டு வேதமாணிக்கம் வீட்டுக்காக ஜெபித்து தேவனே அந்தக் குடும்பத்தை கண்ணோக்கும் என்று ஜெபித்து விட்டு எழுந்தாள். அவளுடைய புருஷன் வீட்டிற்குள் நல்லமுத்து என்று கூப்பிட்டுக் கொண்டு வேகமாக வந்தார்.

இங்கே பார். அந்த வேத-மாணிக்கம் வீட்டில் ஒரே கூட்டம் என்ன என்று விசாரித்தேன். வழக்கம் போல் இருவருக்கும் சண்டை வந்ததாம் அந்த பெண் பாரடா இன்று கிணற்றில் விழுந்து செத்து உன் மேல் பழிபோடுகிறேன் என்று சொல்லிக்கொண்டு தெருவழியாய் கிணற்றண்டைக்கு ஓடினாளாம். கிணற்றண்டையில் போகும் போது கால் இடறி காரைக்கட்டில் குப்புற விழுந்து நெற்றியில் பலத்த காயமாம். வீட்டிற்குள் பிரவேசித்துப் பார்த்தேன். அந்த பெண் இரத்த வெள்ளத்தில் கிடக்கிறாள். பிள்ளைகளெல்லாம் அழுது கொண்டு நிற்கிறார்கள். அந்த மனுஷன் ஒரு மூலையில் பீடி குடித்துக் கொண்டு வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருக்கிறான். ஜனங்கள் கூட்டம் கூடி வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே ஒழிய ஒருவரும் அந்தப் பெண்ணுக்கு உதவி செய்வதாய் தெரியவில்லை. நீ போய் ஏதாவது உதவி செய்து ஏதாவது ஆறுதலான வார்த்தை சொல்லேன் என்றார். நல்லது போகிறேன் என்று சொல்லி நல்லமுத்து சரோன் வீட்டிற்கு விரைந்தாள்.

(தொடரும்)

"மதி கேடாய் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்கு சமானம்" நீதி 11 : 22.

# சாட்சி

## பெயர்க்கிறிஸ்தவனாக இருந்தேன் உண்மை கிறிஸ்தவனானேன்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே! அடியேனும் என் வாழ்க்கையில் பெற்றுக் கொண்ட இரட்சிப்பின் அனுபவத்தை சாட்சியாக எழுத வாய்ப்பு கிடைத்தமைக்காக என் தேவனை துதிக்கிறேன். நான் தேவபக்தியுள்ள ஒரு கிறிஸ்தவ குடும்பத்தில் கொடை ரோட்டில் (மதுரை Dt, தமிழ்நாடு : இந்தியா) பிறந்தேன். எனது சிறுவயது முதல் கிறிஸ்தவ மதபக்தியிலும், ஒழுக்கத்திலும் வளர்க்கப்பட்டேன். எனது பெற்றோர் CSI சபையை சேர்ந்தவர்களாக இருந்தபடியால் நான் வாரந்தோறும் ஆலயத்திற்கும், ஜெபக் கூட்டங்களுக்கும் செல்வதில் அதிக வாஞ்சையுடையவனாக இருந்தேன். ஆனாலும் கிறிஸ்துவை அறியாதவனாகவும் பெயரளவில் கிறிஸ்தவனாக ஜீவித்து வந்தேன். என் பள்ளி பருவத்தில் இருந்தே CSI ஆராதனைகளில் பங்கு கொள்ளும்

போதெல்லாம் வழக்கமாக ஜெபத்தில் சொல்லும் முதல் வசனம் என்னிடத்தில் அடிக்கடி பேசிக் கொண்டே இருந்தது.

அது என்னவென்றால் "தேவன் ஆவியாயிருக்கிறார் அவரைத் தொழுது கொள்கிறவர்கள் ஆவியோடும், உண்மையோடும், அவரைத் தொழுது கொள்ள வேண்டும்." (யோவா 4 : 24) என்பதே. அநேகரிடம் விசாரித்தும் சரியான விளக்கம் கிடைக்காதபடியினால் CSI சபை ஆராதனைகள் எனக்கு திருப்தி அளிக்கவில்லை. ஆராதனைகள் கடமைக்கென்றும் பொழுது போக்கிற்காகவும் பெயரளவில் செய்யப்படுவதாக தோன்றின, மேலும் அங்கு காணப்பட்ட ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமைகள் ஜாதி ஏற்ற தாழ்வுகள், கோஷ்டி சண்டைகள் குருவானவரின் கதை பிரசங்கங்கள் எனக்கு வெறுப்பையே அளித்தன.

அடியேன் புகுமுக வகுப்பில் தேர்ச்சியடைந்தபின் பொறியியல் கல்லூரியில் சேர வேண்டும் என்று விரும்பினேன். ஆனால் போட்டி அதிகமாக இருந்ததால் எனக்கு இடம் கிடைக்கவில்லை. ஆகவே மதுரையில் அமெரிக்கன் கல்லூரியில் (American College) சேர்ந்து B. SC. படித்து வந்தேன். ஆனாலும் எனக்கு B. SC. படிக்க விருப்பமில்லாதபடியால் தினமும் விசுவாசத்துடன் தேவனிடம் "ஆண்டவரே! நீர் ஜீவிக்கிற தேவனானால் என்னை உம்முடைய பிள்ளையாக கருதினால் எனக்கு பொறியியல் கல்லூரியில் இடம் கிடைக்க கிருபை செய்ய வேண்டும். என்னுடைய வாஞ்சையை நிறைவேற்ற வேண்டும்" என்று ஜெபித்து வந்தேன். என் விசுவாசம் வீண்போகவில்லை. ஜீவனுள்ள தேவன் என் விருப்பத்தை நிறைவேற்றினார். விசுவாசித்தால் தேவனுடைய மகிமையைக் காண்பாய் என்பது போல பொறியியல் கல்லூரி தொடங்கி மூன்று மாதங்களுக்கு பிறகும் கடைசியில் சேர்க்கப்பட்ட மாணவர்களில் ஒருவனாக சேர கிருபை செய்தார். தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை. யாரும் எதிர்பாராதபடி சேலத்திலுள்ள கல்லூரியில் கிடைத்தது. அது தேவ சித்தமே என்று பின்பு அறிந்து கொண்டேன்.

நான் கல்லூரியில் சேர்ந்தபின் தீய நண்பர்களின் சேர்க்கையால் தேவபயமற்று கொடிய பாவங்களுக்குள்ளானேன். பெருமையினால் கல்லூரி கலவரங்களிலும் மதுபானம் அருந்துவதிலும் புகை பிடிப்பதிலும் ஈடுபட்டேன். பாவம் செய்கிற எவனும் பாவத்திற்கு அடிமையாயிருக்கிறான் என்ற வாக்கின்படி பாவத்திற்கு அடிமையாக நடைபிணமாக ஜீவித்து வந்தேன். பொல்லாங்கு செய்கிற எந்த மனுஷ ஆத்துமாவிற்கும் உபத்திரவமும், வியாகுலமும் உண்டாகும் (ரோம 2 : 9) என்பதின்படி என்னுடைய பாவகிரியைகளினால் எனக்கு சந்தோசத்திற்கு பதிலாக துக்கமும், வியாகுலமும் ஏற்பட்டது நான் அநேக நாள் என் பாவங்களை கண்ணீரோடு இறைவனிடம் அறிக்கையிட்டு ஜெபித்தேன். ஆனாலும் பாவம் என்னை தொடர்ந்து பிடித்தது.

நான் இரண்டாம் ஆண்டு கோடை விடுமுறைக்கு கொடைக்கானல் சென்றிருந்த போது அங்கு நடைபெற்ற ஒரு ஆவிக்குரிய கூட்டத்தை பார்க்கும்படி வாய்ப்பு கிடைத்தது. அப்பொழுது அங்கே கூடியிருந்த மக்கள் பரிசுத்த ஆவியினால் நிறைந்து, அந்நிய பாஷைகளை பேசுகிறதையும், அற்புத அதிசயங்கள் நடக்கிறதையும் வெளியில் நின்று பார்த்துக் கொண்டிருந்த எனக்கு புதுமையாக தோன்றினாலும், ஆண்டவரே! இவ்வித அனுபவத்தை நானும் பெறவேண்டுமே என்று மனதில் ஜெபித்து விட்டு சென்று விட்டேன்.

நான் மூன்றாம் ஆண்டு படிக்கும் போது ஏற்பட்ட சம்பவங்கள், என் வாழ்க்கையில் பெரிய மாறுதலை ஏற்படுத்தியது. நான் இன்னும் பாவத்தில் ஜீவித்துக் கொண்டிருக்கும் போது கல்லூரியில் இருந்து சஸ்பெண்ட் (Suspend) செய்யப்பட்டேன். நான் கல்லூரியில் இருந்து நீக்கப்படுவதற்கு ஏதுவான குற்றத்தில் ஈடுபடாதவனாக இருந்தாலும் அச்சம்பவம் என் மனதில் பெரிய மாறுதலை உண்டாக்கியது. கல்லூரியில் இருந்து நிரந்தரமாக நீக்கப்பட்டால் ஏற்படும் விளைவுகளை சிந்தித்து பார்த்தேன்; இஞ்சினியர் (Engineer) ஆகவேண்டும் என்ற என் விருப்பம் நிறைவேறுமோ என கலங்கினேன். கஷ்டப்பட்டு படிக்க வைக்கும்

பெற்றோருக்கு என்ன பதில் சொல்வது என்று வருந்தினேன். அன்றிரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. கண்ணீரோடு ஜெபித்தேன். என் பாவங்கள் என் கண் முன் நின்றன. "ஆண்டவரே! நான் பாவியாயிருக்கிறேன் ஆனாலும் நீர் இந்த இக்கட்டான பிரச்சனையில் இருந்து விடுவித்தால் நான் இனி பாவம் செய்யமாட்டேன். உமக்கு பிரியமாக ஜீவிப்பேன்" என்று ஜெபித்தேன். எல்லாம் வல்ல தேவன் என்னை விடுவித்தார். ஒரு சில மாணவர்கள் கல்லூரியில் இருந்து நிரந்தரமாக நீக்கப்பட்டாலும் அடியேன் தொடர்ந்து படிக்க கர்த்தர் கிருபை செய்தார்.

அந்த ஆண்டில் தற்போது சென்னை புதிய எருசலேம் சபையில் ஊழியம் செய்யும் சாம் இஸ்ரவேல் அவர்கள் சேலம் பொறியியல் கல்லூரியில் ஆசிரியராக சேர்ந்தார். அவரிடம் தொடர்பு கொண்டு கிறிஸ்துவை பற்றியும் ஆவிக்குரிய அனுபவத்தைப் பற்றியும், அவருடைய சாட்சியையும் அறிந்து கொண்டேன். அவர் இந்துவாக இருந்து கிறிஸ்தவராக மாறின சாட்சியும், பரிசுத்த ஜீவியமும் எனக்கு கிறிஸ்துவின் மேல் வைராக்கியத்தையும் வாஞ்சையையும் உண்டாக்கியது

புதிய எருசலேம சபை பாஸ்டர்கள் சேலம் வந்திருந்த போது பாவமன்னிப்பின் உபதேசத்தை பற்றியும் பரிசுத்தாவி பெற்றுக்கொள்ள வேண்டிய அவசியத்தை பற்றியும் போதித்தார்கள். பாவத்தை வெளிப்படையாக அறிக்கை செய்ய வேண்டும் என்பது எனக்கு கடினமாக தோன்றினாலும், நான் தேவனிடம் அநேக நாள் அறிக்கையிட்டும் விடுதலை கிடைக்கவில்லையே என்ற வினாவும் எனக்குள் எழுந்தது. தாவீது தான் செய்த பாவத்தை மறைத்த போது தேவன் நாத்தானுக்கு வெளிப்படுத்தி அவர் முன்பாக பாவ அறிக்கை செய்து பாவமன்னிப்பை பெற்ற விதத்தை தேவன் உணர்த்தி, தேவனுக்கு மறைவானது ஒன்றுமில்லை யென்றும், நாம் பாவங்களை மறைத்தாலும் தேவன் தம் ஊழியர்களுக்கு அதை வெளிப்படுத்தலாம் அல்லவா என்ற என்ற எண்ணம் உண்டாயிற்று. யோவான் ஸ்நானகனிடமும் அப்போஸ்தலர்களிடமும் பாவங்களை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் என்ற தெளிவு உண்டாயிற்று. என் நினைவில் வந்த பாவங்களை வெளிப்படையாக அறிக்கை யிட்டேன். என்ன ஆச்சரியம்! அறிக்கை செய்த பாவங்களிலிருந்து விடுதலையையும் பாவ மன்னிப்பின் நிச்சயத்தையும் கர்த்தர் தந்தார்.

பரிசுத்தவான்கள் எனக்காக ஜெபித்த போது பரிசுத்தாவியின் அபிஷேகத்தை பெற்றுக் கொண்டேன். அன்று எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அக்கிரமங்களிலும், பாவங்களிலும் மரித்திருந்த என்னை உயிர்ப்பித்தார். இவ்வுலகம் கொடுக்க முடியாத சந்தோசத்தையும் சமாதானத்தையும் அடைந்தேன். என்னுடைய தீய பழக்கங்கள் சிறிது சிறிதாக என்னை விட்டு சென்றன. என் தீய நண்பர்கள் என்னை விட்டு அகன்றார்கள்.

புதிய எருசலேம் சபை ஆராதனைகளில் பங்கு கொண்டு தொழுது கொள்ளும் பொழுதெல்லாம் தேவனுடைய வல்லமை விளங்குவதையும், தேவபிரசன்னத்தையும், தேவன் பரிசுத்தவான்கள் மூலமாக பேசுதைக் கண்டேன் அதன் பின் அநேக சபை பிரிவுகள் இருக்கிறதே; இதில் தேவனுடைய சபை எது? என்ற இடறல் உண்டாயிற்று. ஆகவே நான் வேறு சில சபைகளுக்குச் சென்றேன். என் ஆத்துமா வெறுமையாயிற்று. பெற்ற சந்தோசத்தையும், சமாதானத்தையும் இழந்தேன். பிற சபை ஆராதனைகள் என் ஆத்துமாவிற்கு திருப்தி அளிக்கவில்லை. பாவம் என்னை மேற்கொண்டது பாவமன்னிப்பின் உபதேசம் மற்ற சபைகளில் இல்லை என்பதை உணர்ந்தேன். சமாதானமின்றி அலைந்தேன். புதிய எருசலேம் சபையில் பெற்ற அனுபவங்கள் எனக்கு முன் நின்றன. தேவன் என்னை நேசித்தபடியால் சிட்சித்து புதிய எருசலேம் சபையின் மேன்மையை அறிந்து கொள்ள கிருபை செய்தார். புதிய எருசலேம் சபையில் காணப்படுகிற சகோதர சிநேகமும், பரிசுத்தவான்களின் ஐக்கியமும், ஒற்றுமையும் என்னை கவர்ந்தது. மீண்டும் புதிய எருசலேம் சபையில் என் கால்கள் நிற்கலாயிற்று. சில ஆவிக்குரிய சபைகளுக்கும் சென்றிருக்கிறேன்

அவர்கள் ஆவியோடு ஆராதித்தாலும், அவர்கள் உண்மையோடு ஆராதிக்கிறதில்லை என்றும் ஜீவியத்தில் உண்மையும் பரிசுத்தமும் இல்லை என்றும் கண்டேன.

நான் நல்ல ஒழுக்கமுள்ளவனாய் மாறினது என் பெற்றோருக்கு மகிழ்ச்சியாக காணப்பட்டாலும் வேறு சபைக்கு செல்வதை எதிர்த்தார்கள். ஒருவன் ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான் என்ற வசனத்தின்படி ஜலத்தினால் முழுகி ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் என்று தெளிவு உண்டான போது, நான் இன்று மரித்து விட்டால் பரலோகம் செல்ல முடியாதே என்ற பயம் உண்டாயிற்று. என் பெற்றோர் ஞானஸ்நானம் எடுக்க என்னை தடை செய்தனர். ஆனாலும் என் ஆத்துமாவிற்கு நானே உத்திரவாதி என்று சொல்லி பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று திருச்சபையாய் இணைந்து கொண்டேன்.

பரிசுத்தவான்கள் எனக்காக முதன் முதல் ஜெபித்தபோது, தேவன் என்னுடைய குடும்பத்தை மீட்டு இரட்சிப்பேன் என்று வெளிப்படுத்தினார். அப்பொழுது என் சிந்தனைக்கு எட்டாததாகவும், அது எப்படி முடியும் என்று எனக்குத் தோன்றியது. கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்ற வாக்கின்படி இந்நாட்களில் என் பெற்றோரும், சகோதரனும் ஞானஸ்நானம் பெற்று இரட்சிக்கபட தேவன் கிருபை செய்தார்.

அடியேனும் புதிய எருசலேம் சபையாய் ஆவியோடும், உண்மையோடும், பரிசுத்த அலங்காரத்தோடும் தொழுது கொண்டு வருகிறேன். சபையில் அப்போஸ்தலர் தீர்க்கதரிசியைக் காண்கிறேன் வலது புறமாய், இடதுபுறமாய் சாயும் போது வழி இதுவே! இதிலே நடவுங்கள் என்று சொல்லும் வார்த்தைகளைக் கேட்கிறேன். அறிவோடும், புத்தியோடும் மேய்க்கும் தேவனுடைய இருதயத்திற்கேற்ற மேய்ப்பவர்களை காண்கிறேன்.

தேவன் என்னை வழி நடத்துகிற விதம் ஆச்சரியமானது. இந்நாட்களிலும் தேவன் எனக்கு ஒரு நல்ல வேலையைக் கொடுத்து ஆசீர்வதித்துள்ளார். என் ஜீவனுள்ள நாளெல்லாம் நன்மையும், கிருபையும் என்னை 'தொடரும், நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன். (சங் 23:6).

நானும் தேவ அழைப்பை பெற்று சென்னையில் "புதிய எருசலேம் சபையில்" ஒரு சிறு ஊழியம் செய்து வருகிறேன். கிறிஸ்து இயேசுவுக்குள் தேவன் அழைத்த பரம அழைப்பின் பந்தயப் பொருளுக்காக இலக்கை நோக்கி தொடர்கிறேன். நான் கர்த்தருக்குள் நிலைத்திருந்து என் இரட்சிப்பு நிறைவேற எனக்காக ஜெபிக்க கேட்டு என் சாட்சியை முடிக்கிறேன்! கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக! ஆமென்! அல்லேலூயா!

Eld. Bro. ஜாபின் பாக்கியராஜ்
சென்னை.

---

"நான் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன். அவர் என்னிடமாய் சாய்ந்து என் விண்ணப்பத்திற்குச் செவி கொடுத்தார்".

---

# காலம் சமீபமாயிற்று

விடியற்காலம் வருகிறது. இராக் காலமும் வருகிறது நீங்கள் கேட்க மனதானால் திரும்ப வந்து கேளுங்கள்–ஏசா 21 : 12

1. காலங்களின் விசேஷம்.
2. காலங்கள் மனித ஜாதிக்காக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. காலங்களை அறிந்து மனிதன் செயல்பட வேண்டும்.

4. காவற்காரனின் அறிவிப்பு.

வானத்தின் தோற்றத்தை நிதானிக்க உங்களுக்குத் தெரியுமே, காலங்களின் அடையாளத்தை நிதானிக்க உங்களுக்குத் தெரியாதா? (மத் 16 : 3). பிசாசுகள் சொல்கின்றன காலம் நிறைவேறு முன் எங்களை வேதனைப்படுத்தவா வந்தீர் (மத் 8 : 29).

கடவுள் காலத்திற்குள் நுழைந்து அதில் நடைபெறும் சம்பவங்களை ஆளுகிறார். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத நிகழ்ச்சிகளினால் மனித வரலாறு உண்டாகிறதென சிலர் எண்ணுகின்றனர். இது தவறு. இதற்கு எதிராக வேறு சிலர் நடப்பதெல்லாம் கடவுளுடைய சித்தத்தின்படி நடப்பதென்பர் இதுவும் தவறு. உண்மையாதெனில் நடக்கும் காரியங்களைக் கடவுள் தமது சித்தத்தை நிறைவேற்றும்படி பயன் படுத்துகிறார்.

தேவன் இருளுக்கு இரவு என்று பெயரிட்டார் (ஆதி 1:5). தேவனுக்கு இரவும், பகலும் சரி. தேவபிள்ளைகளுக்கு (இருளிலும்) இரவிலும் வெளிச்சமுண்டாகும் (சங் 139:12,11) இரவு போல் பட்டப் பகலிலும் இடறுகிறார்கள். (ஏசா 59 : 10).

ஒருவன் இருளிலே நடந்தால் இடறுவான் (யோ 11:10).

தூங்காதிருங்கள், வெறி கொள்ளாதிருங்கள் (1தெச 5:7).

இரவு என்றால் அந்தகாரம். அந்தகாரம் என்றால் சாத்தானுடைய ஆளுகை என்று அர்த்தம். சாத்தானுடைய ஆளுகை பல நூற்றாண்டுகளாய் மனு மக்களின் மேல் நடந்து கொண்டிருந்தது. ஆனால் உலகத்தின் ஒளியான இயேசுகிறிஸ்து வந்ததினால் அவனுடைய ஆளுகை கொஞ்சம், கொஞ்சம் நீக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது. ஒளி உலகத்தில் வந்தாயிற்று. இரவும் பகலும் ஒளியிலே நடக்கக் கூடிய தேவனுடைய பிள்ளைகள் உலகத்தில் எங்கும் காணப்படுகின்றனர். ஆனால் மறுபடியும் உலகத்திற்கு ஒரு இராக் காலம் அஞ்ஞான இருள் வருகிறது. ஒளியின் பிள்ளைகளும் ஒளியோடு கூட உலகத்தை விட்டு மறைந்து போகப் போகிறார்கள்

விடியற்காலம், மகிழ்ச்சியின் காலம் தேவனுடைய பிள்ளைகளுக்கு வருகிறது. இராக் காலமும் வருகிறது. உலகத்திற்கு பெரிய துன்பம் வரப்போகிறது. இரவு வரப் போகிறது. ஒருவருக்கும் வெளிச்சம் கிடைக்காத இராக் காலம் வருகிறது. அன்பான தேவ ஜனங்களே நீங்கள் இரவிலே [இருளிலே] சிக்கிக் கொள்ளக்கூடாது. எவ்வளவு நாளைக்கு இருளை விரும்புவீர்கள் (இரவை விரும்புவீர்கள்). இருளை விட்டு ஒளியினிடத்தில் வாருங்கள். எந்த மதக்காரராயிருந்தாலும் சரி. இருளில் இருக்கிறீர்களா? ஒளியினிடத்தில் வாருங்கள். ஒளியின் பிள்ளைகளோடு சேருங்கள், உலகத்தில் ஒளி இப்பொழுது இருக்கிறது. இயேசு கிறிஸ்து "நான் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன்" (யோ 8:12; 9:5).

ஒளியைப் பகைக்காதிருங்கள், ஒளியை பகைப்பதினால் உங்களுக்கு நன்மையுண்டாகாது. மக்கள் ஒளியைப் பகைப்பதினாலே ஆக்கினையடையப் போகிறார்கள் என்று வேதம் சொல்லுகிறது (யோ 3:19,20). தங்கள் பாவத்தினால் அல்ல ஒளியைப் பகைப்பதினால் ஆக்கினையடையப் போகிறார்கள். நீங்கள் கும்பிடும் சாமி, மதம், கொள்கை உங்களுக்கு இருளைவிட்டு விடுதலை தரவில்லை; மேலும் உங்களை இடறும் இருளுக்கு வழி நடத்துகிறது. உன் மதம் உன்னை பாவத்திலிருந்து, பிறனை பகைப்பதிலிருந்து, மற்றவர்களை தாழ்வாய் எண்ணுவதிலிருந்து, மற்றவன் பொருளை திருடுவதிலிருந்து, மற்றவர்களுக்கு வஞ்சகம் செய்வதிலிருந்து, மற்றவர்களை பலாத்காரம் செய்வதிலிருந்து மற்றவர்களை வஞ்சிப்பதிலிருந்து உன்னை விடுதலை செய்யாவிட்டால் நீ ஏன் உன் மதத்தைப் பின்பற்றுகிறாய். இயேசு வண்டை வா, நேரான வழியில் வா, இல்லையென்றால் இருள் வருகிறது இராக் காலம் வருகிறது. ஒருவனும் தப்பக் கூடாத ஒருவனும் கிரியை செய்யக் கூடாத இராக் காலம் வருகிறது (யோ 9:4). இராக்காலம் பகலல்ல. இரவு ஒளியல்ல இருள், விடியற் காலம் அல்ல இராக்காலம். ஆம், இராக் காலம் வருகிறது.

தேவன் இருளுக்கு இரவு என்று பெயரிட்டார் (ஆதி 1 : 5). இருள் அஞ்ஞான இருள்.

சேவிசிலிருந்து கூப்பிட்டு சாமக்காரனே இரவு எவ்வளவு சென்று போயிற்று என்றான். அப்பொழுது சாமக்காரன் விடியும் காலம் வருகிறது இராக்காலமும் வருகிறது என்றான்.

காலம் :-

1. காலத்தை சூரியனின் இயக்கத்தால் நாம் அறிந்து கொள்ளுகிறோம். ஆனால் கிபியோனின் பள்ளத்தாக்கில் யோசுவாவால் சூரியன் நிறுத்தப்பட்டது. அதனால் காலம் செல்லவில்லை என்று சொல்லலாமா? காலத்தோடு தொடர்புபடுத்தும் வேறு செயல்கள் உண்டு. சிலர் திங்கள் (சந்திரன்) இயக்கத்தால் காலத்தைக் கணிக்கிறார்கள். அப்படிப்பார்த்தால் மாதத்தில் 28 நாட்கள் தான் இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு 24 மணி நேரங்கள். காலை சூரியன் உதிப்பது முதல் அடைவது வரை 10 பிரிவுகள். சூரியன், சந்திரன் (ஞாயிறு, திங்கள்) ஆண்டு மாதம், மணி பிரிவுகள் காலத்தைக் கணிக்கும் கருவிகளேயல்லாமல் காலத்தை உண்டு பண்ணுபவைகளல்ல.

காலத்தை இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என்று நாம் பிரிக்கிறோம். ஆனால் அக்காலப்பிரிவுகளுக்குத் தெளிவான இலக்கணப் பிரிவுகளை கூறுதல் கூடாது. இப்போ நாம் வாழுங்காலத்தை நிகழ்காலம் என்றும், முன் வாழ்ந்த காலத்தை கடந்த காலம், இனி வாழப்போகும் காலத்தை வருங்காலமென்றும் சொல்லுவோம். அப்படியானால் காலமென்றால் என்ன? நாம் வாழ்கிறோம் காலத்தில் நாம் வாழ்வதினால் நடக்கும் செயல்கள் ஒன்றன்பின் ஒன்று நடப்பதை நாம் உணருகிறோம். ஆதி கிரேக்கருக்கும் இந்து சமயம் போன்ற சமயத்தினருக்கும் காலம் ஒரு சக்கரம் போன்றதென்றஎண்ணம் இருந்து வந்தது. இந்து சமயம் நான்கு யுகங்களும், அதற்குப் பின் பிரளயமும் தவறாமல் சுழன்று கொண்டு வந்து கொண்டிருக்கும் என்று சொல்லும் இவ்வாதம் காலத்தைப்பற்றி 2 (இரண்டு) கருத்துக்களைக் கொடுக்கும்.

1. காலம் கருத்தற்றது.
2. காலம் தானாய் செயலாற்றும் வல்லமையுடையது.

அதாவது காலச்சக்கரம் இயந்திரம் போல் வேலை செய்தால் கட்டாய ஒழுங்காய் காரியங்கள் நடைபெறும். குறிப்பிட்ட காலம் வரும் போது அது தனக்குரிய காரியங்களைத் தானே பிறப்பிக்கும். அது திரும்பி வரும்போது அதே செய்கைகள் மறுபடியும் நடைபெறும். எவருடைய விருப்பத்தினாலும் கட்டுப்பாட்டினாலும், உத்திரவாதத்தினாலும் காலம் செயல்படாமல் காலத்தின் கட்டுப்பாட்டினாலே செயல்கள் நிகழும் என்று சொல்லுகிறது. இக்கருத்து வலுவற்றது.

2. பைபிளில் காலத்தை அதில் நடந்த சம்பவங்களினால் யூதர்கள் கணித்தார்கள். காலை, மாலை, பிறப்பு, இறப்பு, உணவு, திருமணம், அறுப்பு, மழை, போர் முதலியவற்றால் சிறப்புற்றது. ஆகவே சம்பவங்கள் நடைபெறுங்காலம் வெறுங்காலம். சம்பவங்கள் குறித்த நேரங்களில் நிறைவேறும் பொழுது அக் குறித்தகாலம் நிறைவேறப் பட்டதாக பாராட்டப்பட்டுள்ளது. காலம் கடவுளுக்கு கீழ்ப்பட்டது. மனிதர்கள் காலத்திற்குள் தங்கள் காரியங்களை செய்து கொண்டிருந்த போதிலும் கடவுளே தமது சித்தத்தை காலத்திற்குள் நிறைவேற்றுகிறவராவார். பகற்காலத்தையும், இராக்காலத்தையும், ஒன்றன் பின்னால் ஒன்றாய் வரப்பண்ணுவதினால் காலத்தை மக்களின் நன்மைக்காக இறைவன் அனுப்புகிறார். மனிதன் தன்னுடைய கடமைகளைச் செய்யும்படி காலத்தைப் பற்றி தேவன் ஏற்படுத்தியிருக்கும் ஏற்பாட்டுக்கு இணங்க வேண்டும்.

(உ-ம்) காலையில் எழுதல், காலைக்கடனை நிறைவேற்றுதல், பகலில் வேலை செய்தல், புசித்தல், குடித்தல், உழைத்தல், இரவு தூங்கி இளைப்பாறுதல் முதலியன.

(தொடரும்)



## STATEMENT OF OWNERSHIP

FORM IV (SEE RULE 8)

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | — | 7, TRILOKSINGH CHAWL,JERIMERI BOMBAY - 400072 |
| 2. Periodicity of its Publication | — | MONTHLY. |
| 3. Printer's Name | — | Chief Pastor N. LAZAR. |
| 4. Publisher's Name | — | |
| 5. Editor's Name | — | |
| (Weather Citizen of India?) | — | YES |
| Address. | — | 7, TRILOKSINGH CHAWL,JERIMERI SAKINAKA (P.O). BOMBAY-400072. |
| 6. Names and address of Individuals who own the newspaper and Partner or shareholders holding more than one percent of the total Capital. | — | 'NEW JERUSALEM CHURCH' 7, TRILOKSINGH CHAWL,JERIMERI, SAKINAKA (P.O), BOMBAY – 400072. |

I. Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Sd.
Chief Pastor N. LAZAR.
Editor / publisher / Printer
PUDHIYA YERUSALEM CHEIDHI

Date : 28-2-86.

"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்..." லூக்கா 6:38

---

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. |
|---|---|---|
| 1. | 13 × 19 Printing Machine | 19000 |
| 2. | 32" Paper cutting Machine | 11000 |
| 3. | Proof Machine 13" × 22" | 800 |
| 4. | Perforating Machine 18" | 1000 |
| 5. | English Type | 10000 |
| 6. | Tamil Type & Cabinets | 11900 |
| 7. | Locking Plate 18" × 24" | 400 |

+ Tax 10%
without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-28 ★ APRIL 1986




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன என்று நீங்கள் அறியீர்கள்..... விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திவார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து : தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1 : 1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்— மத். 28 : 18; மாற்கு 16 : 15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத். 28 : 19.

3. திருச்சபையைக் கட்டி (மத். 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21 : 15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1:5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1 கொரி 11 : 23-26.

நான்: ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—நீதி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப். 1 : 1; 10 : 40-43.

CHIEF PASTOR N. LAZAR

# ஆசிரியர் உரை

"...என் தேவனாகிய கர்த்தர் வருவார் தேவரீரோடே எல்லா பரிசுத்தவான்களும் வருவார்கள்" என்ற வேத வாக்கியத்தின்படி நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பகிரங்கமாக ஒரு நாள் வரப்போகிறார். அவரோடே கூட அவருடைய பரிசுத்தவான்கள் எல்லோரும் வருவார்கள். அவரோடு கூட நாம் வரவேண்டுமானால் அதற்கு முந்தி நாம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். எடுத்துக் கொள்ளப்பட்டவர்கள்தான் அவரோடுகூடவருவர். நாம் உயிரோடே கூட மறுரூபம் அடைந்து எடுத்துக் கொள்ளப்படும் நாள் சமீபித்திருக்கிறது. அதற்கு நாம் ஆயத்தப்பட வேண்டும். எந்தக் காரியத்திலும் பிரயாணத்திலும் அதுஅதற்குரிய ஆயத்த மில்லாதவர்கள் அந்தக் காரியங்களில் வெற்றி அடைய மாட்டார்கள். ஆகையால் நீ கேட்டு பெற்றுக் கொண்ட வகையை நினைவு கூர்ந்து மனந்திரும்பு. நீ விழித்திராவிட்டால் திருடனைப் போல் உன் மேல் வருவேன். நான் உன் மேல் வரும் வேளையை அறியாதிருப்பாய் என்று கர்த்தர் சொல்கிறார். உன் மானம் காணப் படாதபடிக்கு உன் வஸ்திரத்தைக் காத்துக் கொள். உன் அங்கி களை ஆட்டுக்குட்டியானவருடைய இரத்தத்தில் தோய்த்து வெண்மையாக்கு.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து இங்கே ஏறி வாருங்கள் என்று சொல்லும் பொழுது மேகத்தில் ஏறி வானத்துக்குப் போக, எடுத்துக் கொள்ளப்பட ஆயத்தப்படு. அப்பொழுது எடுத்துக் கொள்ளப்படுவாய். பின்பு உலகத்தை ஆளுகை செய்ய கர்த்தரோடு கூட திரும்ப வருவாய். ஆனபடியினால் தேவ ஜனங்களே அவருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்பட ஆயத்தப்படுங்கள்.

இதோ, கர்த்தர் வருகிறார்.

இப்படிக்கு

Chief Pastor N. LAZAR.

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை (தொடர்ச்சி)

28. சபை (பிரிந்தவர்கள் ஒரே சபையாக கூட்டிச் சேர்க்கப்படுதல்) ஒன்றுதல் (யோ 17:21 23; 10: 16 ; எசேக் 37: 15-22; எபே 4:4,5,6).

இஸ்ரவேலருடைய எழுச்சியும், வீழ்ச்சியும் அவர்கள் மறுபடியும் கூட்டிச் சேர்க்கப்படுதலும் உலகத்திற்கு அடையாளமாக இருக்கிறது. தேவன் இஸ்ரவேலருக்கு வாக்குத்தத்தங்களையும், உடன்படிக்கைகளையும் அருளினார். அவை ஆவிக்குரிய இஸ்ரவேலராகிய திருச்சபைக்கும் உரியது. கடைசி நாட்களில் இஸ்ரவேலர்கள் தங்களுக்கு இறைவன் அருளிய தேசமாகிய பாலஸ்தீனாவில் ஒரு இராஜ்யமாக, ஒரு ஜாதியாக இருப்பார்கள் என்று கிறிஸ்துவுக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தேவனுடைய தீர்க்கதரிசிகள் தீர்க்கதரிசனம் உரைத்தனர். இஸ்ரவேலர்கள் தங்களுடைய பாவத்தினிமித்தம் கி. மு 6ம்(ஆறாம்) நூற்றாண்டில் பாபிலோன் அரசனாகிய நேபுகாத்நேச்சாரால் தோற்கடிக்கப்பட்டு சிறைபிடிக்கப்பட்டனர். எருசலேம் அழிக்கப் பட்டது. எருசலேமில் இருந்த தேவனுடைய ஆலயமும் அழிக்கப்பட்டது. இவ்விதமாய் சம்பவிக்கும் என்றும் 70(எழுபது) வருஷங்களுக்குப் பின்பு மறுபடியும் எருசலேம் கட்டப்படும் என்றும், ஆலயம் கட்டப்படும் என்றும் தேவன் எரேமியா தீர்க்கதரிசியின் மூலமாகவும் இன்னும் சில தீர்க்கதரிசிகள் மூலமாகவும் அறிவித்தார், அப்படியே சம்பவித்தது (எரே 25 : 11, 12).

70 (எழுபது) வருஷம் சென்றபின்பு பெர்சிய அரசனாகிய கோரேசின் காலத்தில் யூதர்கள் மறுபடியும் எருசலேமுக்கு வந்து பட்டணத்தையும் ஆலயத்தையும் கட்டும்படி தேவன் அனுக்கிரகம் செய்தார். தீர்க்கதரிசியின் மூலமாய் தேவன் சொன்னபடி நடந்தேறியது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து எருசலேமின் அழிவையும், எருசலேமின் ஆலயம் அழிக்கப்படுவதைக் குறித்தும் நம்முடைய இரண்டாம் வருகையைப் பற்றியும் மிகத் தெளிவான தீர்க்கதரிசனங்களைச் சொன்னார். அவர் சொன்னபடி கி. பி 70 (எழுபது) தில் எருசலேம் ஆலயம் இடிக்கப்பட்டது, எருசலேம் அழிந்தது. இஸ்ரவேல் ஜனங்கள் தங்களுக்கு இராஜ்யமின்றியும், தேசமின்றியும் 1800 (ஆயிரத்து எண்ணூறு) ஆண்டுகளுக்கு மேல் உலகமெங்கும் சிதறடிக்கப்பட்டுப் போனார்கள்.

இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையின் போது இஸ்ரவேல் தேசம் ஒரு ஜாதியாக ஒரு இராஜ்யமாக இருக்குமென்றும் அவர்கள் பூமியின் நான்கு திசைகளிலிருந்தும் கூட்டிச் சேர்க்கப்பட்டு ஒரே ஜாதியாக ஒரே இராஜ்யமாக இருப்பார்கள் என்றும் தீர்க்கதரிசிகள் தீர்க்கமாக வேதாகமத்தில் கூறியுள்ளார்கள்.

எந்த ஒரு ஜாதியும் இப்படி (1800) ஆயிரத்து எண்ணூறு வருஷங்களுக்கு மேல் சொந்த தேசமின்றியும் சொந்த இராஜ்யமின்றியும் இருந்து திரும்ப ஒரு ஜாதியாக இராஜ்யமாக ஸ்தாபிக்கப்பட்டதில்லை. ஆனால் இஸ்ரவேல் 1800 (ஆயிரத்து எண்ணூறு) வருடங்களுக்குப் பின் 1948ல் ஒரு இராஜ்யமாக ஸ்தாபிக்கப் பட்டு செழித்தெழும்பிக் கொண்டிருக்கிறது. உலகத்தில் நாலா திசைகளிலிருந்தும் யூதர்கள் இஸ்ரவேல் தேசத்தில் கூட்டிச் சேர்க்கப்பட்டு வருகிறார்கள். லூக் 21 : 5-33; மாற் 13 : 3 - 32; மத் 24 : 1 - 51; சகரியா 12 : 2, 3; 14 : 1 - 4 ; II தெச 2 : 4 ஆகிய வசனங்களின் மூலமாக இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையின்போது இஸ்ரவேலர் ஒரு ஜாதியாக, ஒரு தேசமாக கூட்டிச் சேர்க்கப்பட்டிருப்பார்கள் என்றும், தேவாலயம் கட்டப்பட்டிருக்குமென்றும், அந்த தேவாலயத்தில் கேட்டின் மகனாகிய பாவ மனுஷனாகிய அந்திக்கிறிஸ்து தேவன் போல் உட்கார்ந்து தன்னைத் தான் தேவ

னென்று காண்பிக்கிறவனும் இருப்பான் என்று வேதம் சொல்லுகிறது(II தெச 2:4)

இப்பொழுது இஸ்ரவேல் தேசத்தில் தேவாலயம் இருந்த அதே இடத்தில் தேவாலயம் கட்டப்படப் போகிறது. அப்படியே ஆதி சபை பெந்தெகொஸ்தே நாளில் எருசலேமில் எழும்பிற்று. (அப் 2ம் அதிகாரம்.) முதலாம் நூற்றாண்டின் இறுதியில் தீர்க்கதரிசனம் எழுதிய யோவான் அப்போஸ்தலன் (வெளிப்படுத்தின விசேஷம்) ஆசியாவிலுள்ள ஏழு சபைகளுக்கு எழுதிய எச்சரிப்பும், வாழ்த்துதலும் வெளிப்படுத்தின விசேஷம் 1, 2, 3 ஆகிய அதிகாரங்களில் எழுதப்பட்டுள்ளன. அப்பொழுது அக்காலத்தில் இருந்த சபைகள் இந்த 7 பிரிவுகளில் ஏதாவது ஒன்றின் தன்மையுடையதாக இருந்தது.

சிலர் இந்த 7 (ஏழு) சபைகளையும் ஆதி சபையின் ஆரம்பத்திலிருந்து இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை மட்டுமுள்ள காலங்களை ஏழு காலங்களாக பிரித்து இது ஏழாவது சபையின் காலமென்றும் கூறுகிறார்கள். அப்படிப் பார்த்தால் இது 7— வது சபையாகிய லவோதிக்கேயா சபையின் காலமாயிருக்கிறது. அப்படியானால் இந்த சபை தேவனுடைய வாயிலிருந்து வாந்தி பண்ணப் படத்தக்கதான சபையேயாகும். அப்போ கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப் படுவது எப்படி ? ஆனபடியினால் அந்த விளக்கம் தவறு.

வெளிப் படுத்தின விசேஷம் முதலாம் அதிகாரம் 1, 4, 19 ஆகிய வசனங்களில் சீக்கிரம் சம்பவிக்க வேண்டியவைகளை தேவன் தம்முடைய ஊழியக்காரனுக்கு காண்பித்தாரென்றும்; யோவான் ஆசியாவில் அப்பொழுது இருந்த ஏழு சபைகளுக்கே அவற்றிற்குரிய செய்தியை எழுதினாரென்றும் பரிசுத்தாவியானவர் மிகவும் தெளிவாக எழுதிவைத்துள்ளார். அதில் எழுதப்பட்ட பிரகாரம் அந்தந்த சபைகளுக்கு நடந்தேறி முடிந்தது. வெளிப்படுத்தின விசேஷம் 4-ஆம் அதிகாரம் முதல் வசனத்தில் 'இவைகளுக்குப் பின்பு' என்று எழுதப்பட்டுள்ளது. 4-ஆம் அதிகாரம் முதல் 18-ஆம் அதிகாரம் முடிய நாம் கவனமாய் வேதத்தை வாசிப்போமென்றால் இரண்டு ஸ்திரீகளைப் பற்றிய விவரங்கள் எழுதப்பட்டுள்ளது. வெளிப்படுத்தல் 17, 18 ஆம் அதிகாரங்களில் மகா வேசியான ஒரு ஸ்திரீயைப் பற்றியும் அவளுடைய முடிவைப் பற்றியும் எழுதப்பட்டுள்ளது. இதுகடைசிக் காலத்தில் காணப்படும் கள்ள சபையாகும். அதற்கு மகா பாபிலோன் என்றுபெயர்.

அச்சபை ரோமபுரியை தலைமையாகக் கொண்டு விளங்கும். திரளான தண்ணீர்களின்மேல் அந்த வேசி உட்கார்ந்திருக்கிறதாக எழுதப்பட்டுள்ளதற்கு அர்த்தம் அவைகள் ஜனங்களும், கூட்டங்களும் ஜாதிகளும் பாஷைக்காரருமாம் (வெளி 17:1, 15; 18:3)

இன்று ரோமன் மார்க்கம் செழித்திருக்கிறது. இதோடு கூட கள்ள சபைகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து கொள்ளும். ரோமன் மார்க்கம் சீர்கெட்டு விட்டதென்று 16-ஆம் நூற்றாண்டில் புராட்டஸ்டன்ட் (சீர்திருத்த சபைகள்) சபைகள் எழும்பின. அவைகளோ இன்று, கெட்டு ரோம மார்க்கத்தை விட சீர்கேடு அடைந்துள்ளன. காரணம் சுயத்தோற்றமான விளக்கங்களும், கள்ள உபதேசங்களும், அசுத்த ஆவிகளினால் நிரப்பப்பட்டிருக்கிற கள்ள ஊழியர்களுமே.

இஸ்ரவேலின் சீர்கேட்டிற்கு காரணம் கள்ள தீர்க்கதரிசிகளேயாகும். அவர்கள் மக்களை தவறான தீர்க்கதரிசனங்களினால் தேற்றி மக்கள் தங்கள் பாவங்களைவிட்டு மனந்திரும்ப விடாதபடி தடுத்தனர். மக்களும் அவ்வித பொய்யான தீர்க்கதரிசிகளுக்குச் செவி கொடுத்து அவர்களைப் பின்பற்றினர் (எரே 14:14,15; எரே.23:11-14,21 22,31; எசே 13:2,3). அவ்விதமாகவே கடைசிக் காலத்திலே கள்ளத் தீர்க்கதரிசிகளும், கள்ளப் போதகர்களும் எழும்பி ஜனங்களைக் கெடுப்பார்கள், கேட்டுக் கேதுவான வேதப்புரட்டுகளை தந்திரமாய் போதிப்பார்களென்று அப். பேதுரு இஸ்ரவேலர்களை உதாரணம் காட்டி திருச்சபையை எச்சரித்துள்ளார் (II பேது 2:1).

இந்த பாபிலோனிய மதத்தோடு (ரோமன் மார்க்கம்) புராட்டஸ்டன்ட் சபை

களும், பெந்தே கொஸ்து சபைகளில் பெரும் பகுதியும் சேர்ந்து மகா பாபிலோனாக கடைசிக் காலத்தில் விளங்கப் போகிறது என்று வேதம் அறிவிக்கிறது. புராட்டஸ்டன்ட் (Protestant) சபைகளில் அநேகம் சபைகளுக்கு ரோமன் மார்க்கத்தார் கூட ஒப்புக் கொள்ளுகிற அடிப்படை விசுவாசம் கிடையாது. வேதாகமம் பரிசுத்த ஆவியினால் எழுதப்பட்டது என்பதை அநேக புராட்டஸ்டன்ட் சபைகள் ஒப்புக் கொள்வதில்லை. இயேசுகிறிஸ்துவின் தெய்வீகத்தை அநேக புராட்டஸ்டன்ட் சபைகள் மறுதலிக்கின்றன. ஞானஸ் நானத்தை மறுதலிக்கிற புராட்டஸ்டன்ட் சபைகளும் உண்டு. இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையையும், ஆயிரம் வருஷ அரசாட்சியையும் நம்பாத புராட்ஸ்டன்ட் சபைகளும் உண்டு. அற்புத அடையாளங்களையும் கர்த்தருடைய கிரியைகளையும் மறுதலிக்கிற சபைகள் உண்டு. ஆவிக்குரியவர்கள் என்று சொல்லிக் கொண்டு மரித்தவர்களுக்காக ஆண்டுதோறும் கல்லறை தோட்டத்தில் போய் பூஜை பலிகள் செய்து (மரித்தவர்களுக்காக பிரார்த்தனை) அசுத்தாவிகளோடு தொடர்புடையவர்களாக இருக்கிற ரோமன் மார்க்க, புராட்டஸ்டன்ட் கிறிஸ்தவர்களே சிந்திக்கவும், நீங்கள் எந்த வேத ஆதாரத்தின்படி இதைச் செய்கிறீர்கள். வெளிப்படுத்தல் 17-ஆம் அதிகாரத்தில் காணப்படுகிற ஸ்திரீயைப்போல் பொன்னினாலும், வெள்ளியினாலும், விலையேறப் பெற்ற வஸ்திரங்களினாலும் தங்களை அலங்கரித்துக் கொண்டிருக்கிற ஸ்திரீகளால் உங்கள் சபைகள் நிரம்பியிருக்கவில்லையா? இப்பொழுது சொல்லுங்கள் நீங்கள் பாபிலோனிய மார்க்கத்தார்களா? இல்லையா? மகா பாபிலோனின் பிள்ளைகள்தான் நீங்கள் என்பதை உங்களுடைய செய்கை நிரூபிக்கிறதல்லவா?

கடைசிக் காலத்தில் எழும்பும் மெய் சபையைப் பற்றி வெளிப்படுத்தல் 12,14 ஆம் அதிகாரத்தில் எழுதப்பட்டுள்ளது. இது கடைசிக் காலத்தில் எழும்புகிற தேவனுடைய மணவாட்டியாகிய திருச்சபையாகும். இது ஏற்கனவே இருக்கிற ரோமன் சபையோ, அல்லது இதோடு சம்பந்தப்பட்டிருக்கிற கள்ள சபைகளோ அல்ல. இது ஆதிச்சபையைப்போல இருக்கும் ஆதி சபையின் தொடர்ச்சியாக முடிவான சபையாக காணப்படும். இது ஒரே உபதேசமும் விசுவாசமும், ஒரே ஆவியும் ஒரே ஞானஸ்நானமும் உடையதாய், ஒரே சரீரமாய் காணப்படும். இஸ்ரவேலர் கூட்டிச் சேர்க்கப் படுகிறதுபோல தேவனுடைய வருகைக்காய் முன்குறிக்கப் பட்ட பரிசுத்தவான்கள் ஒரே சரீரமாய், ஒரு மேய்ப்பனுக்குள்ளாக, சேர்க்கப் படுவார்கள் (யோவா 10:16.) அவர்கள் இயேசுகிறிஸ்துவினுடைய பிரதான மன்றாட்டின்படி ஒருமைப் பாட்டில் தேறினவர்களாய் கிறிஸ்துவுக்குள் ஒன்றாயிருப்பார்கள் (யோவா 17:21,22,23). இந்த சபை உலகமெங்கும் பரவி காணப்படும். தேவனுடைய வாக்குத்தத்தங்களெல்லாம் பூரணமாய் நிறைவேறி முடியும்.

"சீர்கெட்ட பிள்ளைகளே, திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; நான் உங்கள் நாயகர். நான் உங்களை ஊரில் ஒருவனும், வம்சத்தில் இரண்டு பேருமாகத் தெரிந்து, உங்களை சீயோனுக்கு அழைத்துக் கொண்டு வந்து, உங்களுக்கு என் இருதயத்துக்கு ஏற்ற மேய்ப்பர்களைக் கொடுப்பேன். அவர்கள் உங்களை அறிவோடும், புத்தியோடும் மேய்ப்பார்கள். நீங்கள் தேசத்திலே பெருகிப் பலுகுகிற அந்நாட்களிலே அவர்கள் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியென்று இனிச் சொல்வதில்லை; அது அவர்கள் மனதில் எழும்புவதும் இல்லை; அது இனி அவர்கள் நினைவில் வருவதும் இல்லை; அதைக் குறித்து விசாரிப்பதும் இல்லை; அது செப்பனிடப் படுவதும் இல்லை என்று கர்த்தர் சொல்லுகிறார். அக்காலத்திலே எருசலேமைக் கர்த்தருடைய சிங்காசனம் என்பார்கள்; சகல ஜாதியாரும் எருசலேமில் (திருச்சபையில்) விளங்கிய கர்த்தருடைய நாமத்தினிமித்தம் அதனிடமாகச் சேர்வார்கள்; அவர்கள் இனித் தங்கள் பொல்லாத இருதயத்தின் இச்சையின்படி நடவார்கள் (எரே 3:14-17)

எருசலேமில் யூதர்கள் ஒரே ஜாதியாய், ஒரே இராஜ்யமாக கூட்டிச் சேர்க்கப் பட்டு நிலை நாட்டப் படுகிறது போல பரிசுத்தவான்களும் மெய்யான திருச்சபையில் ஒரு சபையாய், ஒரே ஜாதியாய், ஒரே ராஜ்யமாய் கூட்டிச் சேர்க்கப்படுவார்கள் (எசேக் 37:19-28).

(தொடரும்)

---

"கர்த்தர் வருவார்,'
சகரியா 14:5

---

# ஸ்திரிகள் நகை போட்டுக் கொள்ளலாமா? நகையுடன் ஞானஸ்நானம் கொடுக்கலாமா?

ஆதிமனிதன் தேவனோடு உலாவிக் கொண்டிருந்தான். அப்போது அவனிடத்தில் பாவமில்லை. தேவசாயலாகவே இருந்தான். தேவன் அவனுக்கு கொடுத்திருந்த பிரமாணத்தை மீறினன், பாவியானன். தேவனை விட்டுப் பிரிந்தான். தேவனுடைய முகம் அவனுக்கு மறைக்கப்பட்டது. நமக்கும் தேவனுக்கும் நடுவாக பிரிவினை உண்டாக்குகிறது நம்முடைய அக்கிரமங்களே; அவருடைய முகத்தை நமக்கு மறைக்கிறது நம்முடைய பாவங்களே (ஏசா 59 : 2).

தேவன் இரங்கினர், அவருடைய தயவுள்ள சித்தத்தின்படி நாம் அவருடைய குமாரனுடைய சாயலுக்கொப்பாய் இருக்கும்படி முன்குறித்து விட்டார். அதற்கு அழைத்துமிருக்கிறர் (ரோம 8 : 29, 30). அவருடைய சாயலை இப்போது கண்ணடியில் நிழலாட்டமாய் காண்கிறோம். அவர் வெளிப்படும் போது அவருக்கொப்பாய் இருப்போமானல் அவர் இருக்கிற வண்ணமாகவே அவரைக் காண்போம் (யோவா 3 : 2).

தேவன் நம்மை முன் குறித்த நோக்கத்தின்படி நாம் நம்முடைய குமாரனுடைய சாயலை அடையும்படி நம்மை ஆயத்தப்படுத்துகிறர் (II கொரி 5 : 5) அவருடைய சாயலுக்கொப்பாய் மாருதவர்களுக்கு அவருடைய சாயல் மறைக்கப்பட்டே யிருக்கும். இப்படி மறைக்கிறது பாவமே. எந்த பாவம் அவரை நமக்கு மறைக்கிறது என்கிற அறிவே நமக்கில்லாதிருந்தால் நாம் எப்படி அந்த மறைவை மாற்றமுடியும்?

இதோ இந்த பாவம் என்று ஒருவர் சொன்னல் எளிதாய் அதை மாற்றிக் கொள்ளலாம். பாருங்கள் நியாயப்பிரமாணத்தினல் பாவம் இன்னதென்கிற அறிவு கிடைக்கிறது (ரோம 3 : 20). உதாரணமாக இச்சியாதிருப்பாயாக என்று நியாயப் பிரமாணம் சொன்னபடியால் இச்சிப்பது பாவம், ஒஹோ! இச்சிப்பது தேவனுக்குப் பிடிக்காத காரியம். இச்சியாமலிருப்பது அவருக்குப் பிரியம், அவருடைய சித்தம் என்கிற அறிவு நமக்கு வருகிறது. இதை அறிந்து அந்த பிரமாணத்தை கைக்கொள்வோமானல் அதினலே நாம் பிழைக்கிறோம். பாவத்தினல் மரித்த ஆத்துமா பிழைப்படைகிறது.

இப்படியே அவருடைய பரிபூரண சித்தமெல்லாம் நமக்கு தெரிய வருமானல், அந்த சித்தத்தின்படி நாம் நடப்போமானல் நம்முடைய ஜீவன் பரிபூரணமடையும். அவருடைய சாயலுக்கொப்பாக மாறி அவர் இருக்கிற வண்ணமாக அவரை தரிசிக்க முடியும்.

இஸ்ரவேலருக்கு நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டதென்றல் அது அவர்கள் பெற்ற பாக்கியம். அவர்கள் கர்த்தரிடத்தில் கிருபை பெற்றவர்களாகும், அதை அவர்கள் கைக்கொண்டு நடப்பார்களானல் அது அவர்களுக்கு ஜீவனகவும், இறைவனிடம் கிட்டி சேரப்பண்ணுகிற உபாயமாகவும் இருக்கிறது.

ஆனலும் இந்த நியாயப்பிரமாணத்தினல் பூரணப்படுத்தல் உண்டாகவில்லை (எபி 7 : 19).

நியாயப்பிரமாணத்தைப் பெற்றது கிருபையே. கிருபையும் சத்தியமும் இயேசு கிறிஸ்துவினால் உண்டானபடியால் கிருபை மேல் கிருபை பெற்றோம் (யோ 1:16, 17).

குமாரனாகிய கிறிஸ்துவே பிதாவை நமக்கு வெளிப்படுத்துகிறார். அவருடைய சித்தத்தை வெளிப்படுத்துகிறார். நான் உங்களுக்குச் சொல்கிறேன் என்கிறார். இறைவனுக்கு இது பிரியம், இது பிரியமில்லை என்று வெளிப்படுத்தினார். ஆஹா! இது இறைவனுக்குப் பிரியம், இதை நாம் செய்தால் இறைவன் நம்மில் பிரியப்படுவார் என அறிய கண்களைத் திறந்தார். சத்தியத்தை தந்தார். அந்த சத்தியம் பாவத்தின் அடிமைத்தனத்தினின்று விடுதலையாக்கி இறைவனிடம் சேர்க்கிறது.

தேவனை அவர் இருக்கிற வண்ணமாக தரிசிக்க அதாவது ஒப்பாகமாற, பரிபூரணப்பட, சகல சத்தியமும் தேவை. சத்தியத்தை அறியாத வரையிலும் பாவத்தின் அடிமைத்தனத்திலே இருப்போம் (யோவா 8 : 32-34).

இயேசுவானவர் பூமியிலிருந்த நாட்களில் சத்தியத்தை (வசனத்தை) சொன்னார். அவர் பேசினதெல்லாம் சத்தியமே. சீஷர்கள் அதைக் கேட்டார்கள். இன்னும் இயேசு அதிகமாக சொல்ல விரும்பினார். ஒரேயடியாக எல்லாவற்றையும் சொன்னால் அப்போதுள்ள சீஷர்கள் தாங்க மாட்டார்களென அறிந்து (யோவா16 : 12). சத்திய ஆவியானவர் வந்து உங்களை சகல சத்தியத்திற்குள்ளும் நடத்துவார். அவர் சுயமாய்ப் பேசாமல், என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பார் என்றார் ( யோவா 16 : 13, 15).

அதின்படியே பரிசுத்தஆவியானவர் வந்தார், அப்போஸ்தலர்களுக்கு சத்தியம் வெளிப்பட்டது. அவர்கள் அதை சபைக்கு உபதேசமாக போதித்தார்கள். (உம்) அரசாங்க அதிகாரங்களைக் குறித்து (ரோம 13), போஜனபதார்த்தங்களைக் குறித்து (I கொரி 7) விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்டவைகளைக் குறித்து (I கொரி 8).

இப்படி நாம் பூரணப்பட்டு, கிறிஸ்துவின் வருகைக்கு ஆயத்தப்படும்படி. ஆத்ம மணவாளனாகிய இயேசுவின் திருவுளத்தை, நாம் அறிந்து அதற்கேற்றபடி நம்மை அலங்கரித்துக் கொள்ளத்தக்கதாய், கிருபையாய் பரிசுத்தாவியால் இயேசுவினுடையதிலிருந்து எடுத்து பரிசுத்த அப்போஸ்தலர்களாகிய பேதுரு, பவுல் என்பவர்களால் பெண்களின் அலங்கார விஷயமாய் கொடுக்கப்பட்ட சத்தியம் என்னவென்றால்,

"ஸ்திரீகள் மயிரைப் பின்னுதலினாலாவது, பொன்னினாலாவது, முத்துக்களினாலாவது, விலையேறப் பெற்ற வஸ்திரத்தினாலாவது தங்களை அலங்கரியாமல் தகுதியான வஸ்திரத்தினாலும், தேவபக்தியுள்ள ஸ்திரீகளுக்கு ஏற்றபடியே தங்களை அலங்கரிக்க வேண்டும் (I தீமோ 2 : 9, 10).

மயிரைப்பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து, உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக் கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அலங்காரமாயிராமல், அழியாத அலங்காரமாயிருக்கிற சாந்தமும், அமைதலுமுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே உங்களுக்கு அலங்காரமாயிருக்கக்கடவது; அதுவே தேவனுடைய பார்வையில் விலையேறப் பெற்றது." (I பேதுரு 3 : 3, 4) என்பதே.

"அலங்காரமாயிராமல்" என்றுதான் சொல்லியிருக்கிறதேயொழிய அலங்கரிக்கக் கூடாது என்று சொல்லவில்லை என்று சொல்வோர் சிலருண்டு. நீங்கள் கவனிக்க: எபேசி. 5 : 18 ல் "துன்மார்க்கத்துக்கேதுவான மதுபான வெறி கொள்ளாமல் ஆவியினால் நிறைந்து...கீழ்படிந்திருங்கள்" என்று எழுதியிருக்கிறது. ஆனபடியால் உங்கள் மகனோ, கணவனோ, சகோதரனோ, மதுபானமும் பண்ணிக்கொண்டு ஆவியில் நிறைந்து அந்நிய பாஷையும் பேசிக் கொள்ளலாமா? மதுபான வெறிதானேக் கொள்ளக் கூடாது என்று சொல்லி மது குடிக்கலாமா?

ஓ! பழைய ஏற்பாட்டு ஸ்திரீகள் நகை போட்டிருந்தார்களே, ஆபிரகாமின் வேலைக்காரன் ரெபெக்காளுக்கும் நகைகள் போட்டு கொண்டு வந்தாரே என்பாருமுண்டு. ரொம்ப நல்லது; யாக்கோபுக்கு நான்கு மனைவிகள் இருந்தார்களே என்று உங்கள் கணவர் சொன்னால் உங்கள் கதி என்னவாகும்.

ஆபிரகாமுக்கு நியாயப்பிரமாணம் கொடுக்கப்படவில்லை. மோசேயின் மூலமாகவே கொடுக்கப்பட்டது. வெளியாக்கப்பட்டது வெளிப்படுத்தப்பட்டது நமக்குரியது. வெளியாக்கப்படாதது நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கே உரியது.

இப்பொழுது இருக்கிற நீ ஏன் பல ஆயிரவருஷங்களுக்கு முன் கடந்து போகிறாய். திருவசனத்துக்கு கீழ்ப்படியுங்கள். (இந்த திருவசனம் கிடைத்தது இயேசுவினால் நமக்குண்டான மாபெரும் கிருபை என்பதை அறியவேண்டும்.

செல்வாம்பிகையே, நீ நகையை கழற்றிவிட மனமில்லாதிருப்பதேன். உன் செல்வத்தை மற்றவர்கள் காண வேண்டும், தன்னை யாரும் ஏழை என்று எண்ணிவிடக்கூடாது. மற்றவர்களை கவர்ந்திழுக்க அழகு வேண்டுமே, நம்மை பெந்தெகோஸ்தே கிறிஸ்தவள் என்று அது சாட்சி கொடுத்து பாவிகளுடைய வழியினின்று நம்மை பிரித்துக் காட்டிவிடுமே என்பதினாலல்லவா? இல்லை என்றால் எதற்கு உனக்கு இந்த அலங்காரம்? இவள் புருஷன் இறந்து விட்டான், விதவையாகி விட்டாள் என்று இந்திய வழக்கப்படி பரியாசம் பண்ணுவார்கள் என்று பயப்படுகிறாயா? அவர் நிமித்தம் பரியாசம் பண்ணப்படுவது பெரும் பாக்கியம் என்றல்லவா (அப் 5 : 41) பக்தர்கள் எண்ணினார்கள். இன்றைக்கு உன்னை பரியாசம் பண்ணுவார்கள், நாளைக்கு உன்னை பரிசுத்தவாட்டி என அறிந்து பயப்படுவார்கள். நீயோ அநேகருக்கு முன்பாய் சாட்சியாவாய். மனிதரால் மேன்மையாய் எண்ணப்படுவது தேவனுடைய பார்வையில் அருவருப்பாயிருக்கிறதென்று இயேசு சொன்னாரே. மணவாளனுடைய விருப்பத்தை அசட்டை பண்ணுகிற எந்த பெண்ணை விவாகம் பண்ண ஒருவன் மனதாவான்? நீ பூரணப்பட முடியாது என்பதை அறிந்து கொள்.

ஆதியாகமத்திலிருந்து வேதத்தை ஒரு பக்தன் படிக்க ஆரம்பிக்கிறான். அவன் 1 கொரி 6 : 9 வாக்கியம் படிக்கும் வரைக்கும் சுயபுணர்ச்சி செய்வது பாவம் என்று அறியாதிருந்தான் இது வரைக்கும் அவன் ஜீவனுள்ளவனாயிருக்கிறான். இந்த கற்பனை (கட்டளை)யைக் கண்ட மாத்திரத்தில் பாவம் உயிர் கொண்டது. அவன் மரித்தான் (ரோம 7 : 9). இந்தக் கற்பனை வரும் வரை அவன் பாவம் எண்ணப்படவில்லை. நிச்சயமாகவே அது பாவம் தான், ஆனாலும் அது பாவம் என்று அறியாமலிருந்தபடியால் அது எண்ணப்படவில்லை. இப்போதோ அவன் போக்குச் சொல்ல இடமில்லை (ரோம 5 : 13; யோவா 15 : 22).

இப்படி கற்பனையினால் உயிர் கொண்ட பாவத்தை சிலுவையில் அறைந்தால், பாவத்துக்கு அவன் மரிக்கிறான், பாவத்தினால் மரித்த அவன் இயேசுகிறிஸ்துவுக்குள் ஜீவனடைகிறான். இந்த அனுபவம் ஞானஸ்நானத்தில் நடக்கிறது. ஞானஸ்நானத்தினால் பாவத்துக்கு மரித்த அவன் கிறிஸ்துவுடனே கூட அடக்கம் பண்ணப்படுகிறான். இப்படி அவருடைய மரணத்தின் சாயலில் இணைக்கப்பட்ட அவன் அவருடைய உயிர்த்தெழுதலின் சாயலிலும் இணைக்கப்படுகிறான் (ரோம 6 : 2-5)

பரிசுத்த வேதாகமத்தை கையிலேந்தி முழுவதையும் படித்திருக்கிற உன்னுடனே பேசுகிறேன். 1 தீமோ 2 : 9, 10, 1 பேது 3 : 3, 4. வசனங்களின்படி ஸ்திரீகள் நகையினால் தங்களை அலங்கரியாமலிருக்க வேண்டும் என்றபரிசுத்தாவியின் ஆலோசனை (கற்பனை) தெரிய வருகிறது. நகையோடே உன்னிடத்தில் ஞானஸ்நானம் பெற வருகிற ஸ்திரீ உன் பார்வையிலே இந்த கற்பனையின்படி, பாவம் உயிர் கொண்டிருக்கிற நிலையிலிருக்கிறாள். இந்த பாவத்துக்கு அவள் இன்னும் உயிரோடிருக்கிறாள். இந்த பாவத்தை இன்னும் சிலுவையில் அறையவில்லை. மரணப்படுக்கையில் இன்னும் உயிரோடிருக்கிற கிழவனைக் கொண்டுபோய் அடக்கம் பண்ணினால் அது கொலைக் குற்றமாகுமே. அப்படிப் போல பாவத்துக்கு மரிக்காத இந்த ஸ்திரீயை அடக்கம் பண்ணுதலுக்கொப்பாகிய ஞானஸ்நானப்படுத்தலாமா? சிலுவையில் கர்த்தர் மரித்த பின்பல்லவா இறக்கி அடக்கம் பண்ணப்பட்டார்.

இந்த வாக்கியங்களை மறுபடியும் கவனிப்பது நல்லது. நியாயப்பிரமாணம்

கொடுக்கப்படுவதற்கு முன்னும் பாவம் உலகத்தில் இருக்கத்தான செய்தது. ஆனால் நியாயப்பிரமாணம் இல்லாதிருந்தபடியால் இது பாவம் என்கிற அறிவில்லாதபடியால், பாவம் பாவம் என்றெண்ணப்படவில்லை, அறியாத காலங்களை தேவன் காணாதிருக்கிறார். நான் ஜீவனுள்ளவனாய் இருக்கிறேன். கற்பனை (commandment) வந்தது, பாவம் உயிர் கொண்டது நான் செத்தேன் (ரோம 5 : 13; 7 : 9).

நான் மனந்திரும்பி, பாவ அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்று கற்பனையினால் உயிர் கொண்ட பாவத்தை சிலுவையில் அறைந்து கொன்று விட்டு, பாவத்தினால் மரித்த என்னை உயிர்ப்பித்துக் கொள்கிறேன்.

ஆகவே I தீமோ 2 : 9,10, I பேது 3 : 3, 4ல் உள்ள கற்பனையின்படி நகையோடிருக்கிற ஸ்திரீ பாவத்தில் இருக்கிறாள். இவளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறவன் குற்றவாளியாவான்.

இயேசுகிறிஸ்துவால் அனுப்பப்படாத, வாசல் வழியாய் பிரவேசிக்காத ஊழியக்காரனே, கர்த்தர் உன்னை நியாயம் விசாரிப்பார். நீ மனிதர்களைப் பிரியப்படுத்தி உயிருள்ளவனை அடக்கம் பண்ணுகிறாய்.

வெளி 17 : 3-6 ல் சொல்லப்பட்டஸ்திரீயின் அலங்காரத்தைப்பார். இப்படிப்பட்ட ஸ்திரீகளால் உன் சபையை நிரப்ப விரும்புகிறாயா? மனுஷபிரியனே, நீ தேவ ஊழியனா?

இப்போது ஞானஸ்நானம் கொடுத்து விடுகிறேன். பின்னால் பரிசுத்தாவி சொல்லச் சொல்ல நகையை எடுத்து விடுவார்கள் என்கிறாயே, ஞானஸ்நானம் என்றால் என்ன என்று உனக்கு விளங்கவில்லையே. மரித்தவனை அடக்கம் பண்ணு. உயிரோடிருக்கிறவன்(ள்) சாகட்டும், அதுவரை காத்திரு.

சத்தியத்தையும் அறிவீர்கள் சத்தியம் உங்களை விடுதலையாக்கும் (யோ 8 : 32).

---

'மனுஷருக்குள் மேன்மையாய் எண்ணப்படுகிறது தேவனுக்கு முன்பாக அருவருப்பாயிருக்கிறது"—லூக் 16 : 15.

---

# மோட்ச வழி

## குரு சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்:** திரு விருந்து ஆசரிக்கா விட்டால் தவறு ஏதும் உண்டோ?

**குரு:** திருவிருந்து ஆசரிப்பு இறைவனுடைய பிரதான கட்டளைகளில் ஒன்றாகும் இஸ்ரவேலன் ஒருவன் தான் மீட்கப்பட்ட நாளை நினைவு கூற கட்டாயம் கடமைப் பட்டுள்ளான். அப்படியே கிறிஸ்தவனும் தான் மீட்கப்பட்ட நாளை பஸ்காவை (கர்த்தருடைய இராப் போஜனம்) ஆசரிக்க கட்டளை பெற்றுள்ளான். ஒருவன் தூர இடம் பிரயாணம் போகாமலும், தீட்டுப் படாமலும் இருந்தால் இதைக் கண்டிப்பாக ஆசரிக்க வேண்டும். அப்படியே,

1. கிறிஸ்தவன் ஒருவன் தான் பாவத்தினின்றும், அடிமைத் தனத்தின்றும், விடுதலையானதை நினைவு கூற வேண்டும்.

2. இயேசுவின் இரத்தத்தின் மேலுள்ள விசுவாசத்தினால் தொடர்ந்து மன்னிப்பையும் மரணத்திலிருந்து விடுதலையையும் பெற்றுக் கொள்கிறான்.

3. அவன் பஸ்காவை (திருவிருந்தை) ஆசரிப்பதன் மூலமாகதான் இந்த பஸ்காவாகிய தேவாட்டுக் குட்டியினால் மீட்கப் பட்டேன் என்று அறிக்கையிடுகிறான்.

4. இந்த பஸ்காவை சாப்பிடுகிறதினால் இந்த பஸ்கா ஆட்டுக்குட்டியாகிய இயேசு கிறிஸ்துவோடும், திருச்சபையோடும் ஐக்கியப் படுகிறான். அதினால் ஜீவனைப் பெற்றுக் கொள்கிறான்.

5. இஸ்ரவேலன் ஒருவன் கசப்பான கீரையோடு பஸ்காவை சாப்பிட வேண்டும். இது கிறிஸ்தவன் ஒருவன் மெய்மனஸ்தாபத்தோடும், பாவ அறிக்கை செய்து தன்னை சுத்தி கரித்துக் கொள்வதையும் குறிக்கிறது.

6. பிரயாணத்திற்கு ஆயத்தப்பட்ட நிலையில் பஸ்கா புசிக்கப் படவேண்டும். அப்படியே கிறிஸ்தவனும் மோட்ச பிரயாண ஆயத்தமுள்ளவனாய் இதை புசிக்கக் கடவன் பிரயாணத்திற்கான பெலனும், உற்சாகமும், ஆசீர்வாதமும் கிடைக்கும்.

7. திரு விருந்தை ஆசரிக்கிற ஒவ்வொரு தடவையும் கர்த்தருடைய வருகையை அவன் தியானிக்கிறான். அவருடைய வருகைக்கு ஆயத்தப்படுகிறான். அவருடைய வருகைக்காக இருந்த நாட்களில் ஒருவாரம் கடந்து விட்டது. அவர் சமீபித்து வருகிறார் என்று கர்த்தருடைய பந்தி ஞாபகமூட்டுகிறது.

8. கர்த்தருடைய சிறிதானதோ பெரிதானதோ கட்டளையை ஒரு விசுவாசி நிறைவேற்றும் பொழுது அதனதற்குரிய ஆவியின் நிறைவை மென்மேலும் பெற்றுக் கொள்கிறான். இப்படி இருக்கிறபடியால் திருவிருந்தாகிய கற்பனையை அவன் சரியாய் நிறைவேற்றி முடிக்கும் போது அவன் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்படுகிறான்.

9. திருச்சபையின் ஐக்கியம் என்பதே திருப்பந்தியின் ஐக்கியமாகும். கல்யாண வீட்டிற்கு வந்தவன் சாப்பிடாமல் போனால் அதனால் வருத்தமும், பகைமையும், பிரிவினையும் உண்டாகும். நீ திரு விருந்தில் ஐக்கியமில்லை யென்றால், திருச்சபையின் ஐக்கியத்தில் நிலைத்திருக்க வில்லை என்று அறிந்து கொள். அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அப்போஸ்தலர் களோடு சேர்ந்து அப்பம் பிட்குதலிலும் (திரு விருந்து நற்கருணை ஆசரித்தில்) அப்போஸ்தலர்களோடு சேர்ந்து ஜெபம் பண்ணுதலிலும் (ஆராதனை செய்தல்) தரித்திருந்தார்கள் (நிலைத்திருந்தார்கள்)— அப் 2 : 42.

10. இயேசு கிறிஸ்துவினுடைய பிரதான கட்டளைகளில் ஒன்றை நிறை வேற்றின மகிழ்ச்சியும், திருப்தியும் உனக்கு உண்டாயிருக்கும். வேளை வந்த போது அவரும் (இயேசுவும்) அவருடனே கூட பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியிருந்தார்கள் (லூக் 22: 14). கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வரும் வரை அல்லது நீ கிறிஸ்துவுக்குள் மரிக்கும் வரை திருவிருந்தை ஒழுங்காயும், பரிசுத்தமாயும் ஆசரி. ஆமென்.

> "நாம் ஆசீர்வதிக்கிற ஆசீர்வாதத்தின் பாத்திரம் கிறிஸ்துவினுடைய இரத்தத்தின் ஐக்கியமாயிருக்கிறதல்லவா? நாம்பிட்கிற அப்பம் கிறிஸ்துவினுடைய சரீரத்தின் ஐக்கியமாயிருக்கிறதல்லவா?" — கொரி 10 : 16

## வேத பாடம்

ஆதி 41 : 1 — 15 இரண்டு வருஷம் சென்ற பின்பு எகிப்தின் ராஜாவாகிய பார்வோன் ஒரு நாள் இரவில் நித்திரையின் போது அடுத்தடுத்து இரண்டு சொப்பனங்களைக் கண்டான். முதல் சொப்பனத்தில் 7 கொழுத்த பசுக்கள் மேய்ந்து கொண்டிருப்பதாகவும் வேறு ஏழு அவலட்சணமான மெலிந்த பசுக்கள் தோன்றி அந்த கொழுத்த ஏழு பசுக்களையும் பட்சித்துப் போட்டதாகக் கண்டான்.

அடுத்த சொப்பனத்தில் நல்ல செழுமையான ஏழு கதிர்கள் ஒரே தாளிலிருந்து ஓங்கி வளருகிறதாகவும், பின்பு சாவியான ஏழு கதிர்கள் முளைத்து முந்தின ஏழு செழுமையான கதிர்களை விழுங்கி போட்டதாகவும் கண்டு விழித்துக் கொண்டான். அவனுடைய மனம் கலங்கிற்று. அதனுடைய அர்த்தத்தை அறிந்து கொள்ள பார்வோன் பிரயாசப்பட்டான். எகிப்திலுள்ள மந்திரவாதிகள், சாஸ்திரிகள், ஞானிகள் ஒருவராலும் அதின் அர்த்தத்தைச் சொல்லக் கூடாதிருந்தது. அப்பொழுது பான பாத்திரக்காரரின் தலைவனுக்கு யோசேப்பைப்பற்றிய நினைப்பு வந்தது. அவன் பார்வோனிடத்திலே யோசேப்பு வரவழைக்கப்பட்டால் அச்சொப்பனத்தின் அர்த்தத்தை யோசேப்பு சொல்லுவான் என்று அறிவித்தான். இராஜா யோசேப்பை சிறைச்சாலையிலிருந்து விடுவித்து அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவ்விதமாகவே யோசேப்பும் சிறைச்சாலையிலிருந்து விடுவிக்கப்பட்டு சுத்திகரிக்கப்பட்டு புதுவஸ்திரம் தரிப்பிக்கப்பட்டு இராஜாவின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். அப்பொழுது ராஜா யோசேப்பைப் பார்த்து ஒரு சொப்பனங் கண்டேன் அதின் அர்த்தத்தைச் சொல்ல ஒருவரும் இல்லை நீ ஒரு சொப்பனத்தைக் கேட்டால் அதின் அர்த்தத்தைச் சொல்வாய் என்று உன்னைக்குறித்து நான் கேள்விப்பட்டேன் என்றார்.

**ஆதி 41 : 16 — 36** அதற்கு யோசேப்பு நானல்ல தேவனே பார்வோனுக்கு நல்ல உத்தரவு அருளுவாராக என்றான். பார்வோன் தன்னுடைய சொப்பனங்களை யோசேப்புக்கு அறிவித்தபோது யோசேப்பு உத்தரமாக பார்வோனுக்குச் சொன்னது: தேவன் தாம் செய்யப் போவதை பார்வோனுக்கு காண்பித்திருக்கிறார், அதென்னவென்றால் எகிப்து தேசம் முழுவதும் ஏழு வருஷம் செழுமையான விளைச்சல் உண்டாகியிருக்கும். பின்பு ஏழுவருஷம் கொடிய பஞ்சம் உண்டாகும். இந்தப் பஞ்சமானது அந்த ஏழுவருஷ செழுமையை இல்லாமல் போகச் செய்யும், ஆகையால் இராஜா அறிய வேண்டியது ஞானமும் விவேகமுமுள்ள ஒரு மனுஷனை தேசத்தின் மேல் அதிகாரியாக நியமித்து பரிபூரணமுள்ள ஏழுவருஷங்களின் விளைச்சலில் (ஐந்தில் ஒரு பங்கை) வாங்கி பண்டக சாலையில் சேமித்து வைத்து பஞ்சமுள்ள வருஷங்களில் தேசம் அழிந்து போகாதபடி இந்த தானியங்களை விநியோகிக்கலாம். இந்த ஏற்பாட்டை இராஜா உடனே செய்யவும் இது சீக்கிரமாய் சம்பவிக்கப் போகிறது என்பதை காண்பிக்கிறதற்காக சொப்பனம் இரட்டித்தது என்றான்.

**ஆதி 41: 37 — 44** இந்தவார்த்தை பார்வோனுடைய பார்வைக்கும் அவனுடைய ஊழியக்காரர் எல்லோருடைய பார்வைக்கும் நலமாகக் கண்டது. அப்பொழுது பார்வோன் தன் ஊழியக்காரரை நோக்கி தேவ ஆவி பெற்ற இந்த மனுஷனைப்போல் வேறுயாரும் உண்டோ என்றார். ஆம் யோசேப்பு தேவ ஆவியைப் பெற்றவராக இருந்தார். பழைய ஏற்பாட்டின் பரிசுத்தவான்களும் தேவ ஆவியைப் பெற்றவர்களாகவே இருந்தார்கள். (உ . ம்) மோசே (எண் 11 : 16, 17) : 70 மூப்பர்கள் (எண் 11: 24 — 26) ; யோசுவா (எண் 27: 18) தானியேல் (தானி 4: 8, 18; 5: 11) ஆனால் சில வேதப்புரட்டர்கள் பழைய ஏற்பாட்டின் பரிசுத்தவான்களிடத்தில் பரிசுத்தாவியானவர் தங்கியிருக்கவில்லை அவ்வப்போது வந்து கிரியை செய்து விட்டு கடந்துபோய் விடுவதாகவும், புதிய ஏற்பாட்டின் விசுவாசிகளிடத்தில் தான் நிரந்தரமாக தங்கியிருப்பதாகவும் பிதற்றுகிறார்கள். தீர்க்கதரிசியாகிய சாமுவேல் தாவீதை இராஜாவாக அபிஷேகம் பண்ணின அந்நாள் முதற்கொண்டு கர்த்தருடைய ஆவியானவர் தாவீதின் மேல் வந்து இறங்கியிருந்தார் என்று வேதம் சொல்லுகிறதைக் கவனிக்கவும் தள்ளப்பட்ட சவுலை விட்டு கர்த்தருடைய ஆவியானவர் நீங்கினார் என்பதையும் அந்த இடத்தில் வேறொரு பொல்லாத ஆவி வந்து அவனைக் கலங்கப்பண்ணினது என்பதையும் மறவாதிருப்போமாக (1சாமு 16 : 13, 14) தேவன் யோசேப்புக்கு இவையெல்லாவற்றையும் வெளிப்படுத்தினபடியால் உன்னைப் போல் ஞானமுள்ளவன் வேறொருவனும் இல்லையென்று சொல்லிபார்வோன் யோசேப்பை தனக்கடுத்த அதிகாரியாக நியமித்தான்.

ஆம் யோசேப்பு ராஜாவுக்கடுத்த இராஜாசனத்தில் அமர்த்தப்பட்டான். எகிப்து தேசம் முழுவதும் யோசேப்புக்குக் கீழ்ப்பட்டிருந்தது.

**ஆதி 41: 45 – 57** - யோசேப்பு எகிப்து தேசம் முழுவதையும் சுற்றிப் பார்த்து ஆங்காங்கு பட்டணங்களில் களஞ்சியங்களை கட்டி செழிப்புள்ள ஏழுவருஷங்களிலே யோசேப்பு கடற்கரை மணலத்தனையாய் அளவிறந்த தானியங்களைச் சேர்த்து வைத்தார். ஏழுவருஷங்கள் முடிந்ததும் பஞ்சமுள்ள ஏழுவருஷங்கள் ஆரம்பமாயிற்று. அந்த பஞ்சம் சகல தேசங்களிலும் உண்டாயிற்று. ஆனால் எகிப்தில் மாத்திரம் ஆகாரம் உண்டாகியிருந்தது. எகிப்து தேசத்தில் பஞ்சம் அதிகரித்தபோது ஜனங்கள் பார்வோனை நோக்கி ஆகாரத்திற்காக ஓலமிட்டார்கள். அப்பொழுது பார்வோன் நீங்கள் யோசேப்பினிடத்தில் போங்கள். அவன் சொல்லுகிறபடி செய்யுங்கள் என்றான். "தேசத்திலே பஞ்சம் வரப் போகிறது. அது ஆகாரக் குறைவினால் உண்டாகிற பஞ்சமல்ல, ஜலக்குறைவினால் உண்டாகிற தாகமுமல்ல. கர்த்தருடைய வசனம் கேட்கக் கிடையாத பஞ்சம் வரப்போகிறது" (*ஆமோஸ் 8: 11*).

கர்த்தருடைய வசனம் என்றால் வேதமல்ல. சிலர்வேதம் கிடைக்காது என்று நினைத்திருக்கிறார்கள். வேதம் கிடைக்கும். வேத புஸ்தகம் இருக்கும். ஆனால் அதினுடைய உண்மையான அர்த்தம் கர்த்தருடைய வசனம் கிடைக்கக் கூடாத பஞ்சம் வரும். இப்பொழுதே ஆரம்பமாயிருக்கிறது. தேவனை நோக்கி தேவனுடைய பிள்ளைகள் ஓலமிடுவார்கள். தேவனே தாம் நியமித்த யோசேப்பினிடத்தில் (அபிஷேகம் பண்ணப்பட்ட ஊழியக் காரனிடத்தில்) போகச் சொல்வார். இப்பொழுது திருச்சபையில் கர்த்தருடைய வசனம் சேமிக்கப்படுகிறது. வெளியிடப்படுகிறது. ஏனெனில் கடைசி நாட்களில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும் (ஏசா 2: 2, 3). பஞ்சம் கொடியதாய்க் காணப்பட்டது. சகல தேசங்களிலும் பஞ்சம் கொடியதாய் இருந்தபடியால், சகல தேசத்தார்களும் யோசேப்பினிடத்தில் தானியங் கொள்ளும்படி வந்தார்கள்.

> "யோசேப்பு அவர்களைக் குறித்துத் தான் கண்ட சொப்பனங்களை நினைவு கூர்ந்தான்"
>
> - ஆதி 42 : 9

# குடும்பம்

## மாதர் பகுதி

நல்லமுத்து சாரோன் வீட்டிற்குச் சென்றபோது சாரோன் கொஞ்சம் மயக்கம் தெளிந்து உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் சாரோனுடைய உறவினளாகிய ஒரு அம்மா உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தார்கள். நல்லமுத்துவைப் பார்த்ததும் சாரோன் வெகு ஆச்சரியத்துடன் நீங்கள் ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் வாத்தியாருடைய மனைவிதானே என்று விசாரித்தாள். நல்லமுத்து ஆம் என்று சொல்லி அவள் பக்கம் போய் உட்கார்ந்தாள். அப்பொழுது சாரோன் தன் புருஷனை வாயில் வந்தபடி திட்ட (வைய) ஆரம்பித்தாள். நல்லமுத்து அவள் கையைப்பிடித்து சாரோன் நீ களைப்பாய் இருக்கிறாய் அல்லவா? ஒரு கப் காபி போட்டு தரட்டுமா என்று கேட்க அவள் ஆம் என்று தலையசைத்தாள். நல்லமுத்து சாரோனுடைய உறவினளை சீக்கிரமாய் ஒரு கப் காப்பி போட்டுக் கொண்டுவர துரிதப்படுத்தி தானும் சமையலறைக்குப் போய் உதவியாயிருந்து அவசரமாக காபி கொண்டுவந்து கொடுத்தாள். அதைக் குடித்ததும் சாரோன் தெளிவடைந்து

பெலமும் அடைந்தாள். சுற்றிலும் நிற்கிற ஜனங்கள் வேடிக்கைப் பார்த்தார்களே தவிர தனக்கு நல்லமுத்துவைப் போல் உதவி செய்யாமையைக் கண்டதும் சாரோனுக்கு நல்லமுத்துவைப் பற்றி நல்ல எண்ணம் உண்டாயிற்று. அவளைத் தன்னருகில் உட்காரும்படி கேட்டுக் கொண்டாள். சிறிது நேரம் சும்மாயிருந்து விட்டு சாரோன் மறுபடியும் தன் புருஷனை ஏச ஆரம்பித்து விட்டாள். நல்லமுத்து சாரோனின் கையைப் பிடித்து நீ யாரை இப்படி வைகிறாய் என்றாள். அதற்கு சாரோன் என்னைக் கொண்டவனைத்தான் பேசுகிறேன். அந்த கொலைகாரப் பாதகனால் நான் இந்த கதியானேன். அவனாலே நான் நரகக் குழியிலிருக்கிறவர்களை விட, பத்துமடங்கு தினந்தோறும் வேதனை அனுபவிக்கிறேன். எனக்கு சாவும் வர மாட்டேன் என்கிறதே. நான் என்றைக்குச் சாவேனோ அன்றுதான் என் வேதனை தீரும் என்று இன்னும் பலவாறு சொல்லி புலம்பவாரம்பித்து விட்டாள். இதைக் கேட்டுக்கொண்டிருந்த நல்லமுத்து நீ இப்படி உன் புருஷனை மரியாதையின்றிக் கண்டபடி பேசிவிட்டுச் செத்தால் அதனால் உனக்கு ஆறுதல் இருக்கும் என்று நம்புகிறாயா? நீ இப்படி உன் புருஷனை வைவது தேவனுக்குப் பிரியமாய் இருக்குமோ? என்று கேட்டாள். அதற்கு சாரோன் உங்கள் புருஷனைப் போல் இந்த மனுஷன் நல்லவராயிருந்து நான் அநியாயமாய்த் திட்டினால் அது தேவனுக்குப் பிரியமாயிருக்காதுதான். இந்த மனுஷனை நான் திட்டுவதற்கு அநேக காரணங்கள் உண்டு. இந்த மனுஷன் என்னையாகிலும் சற்றென்கிலும் கவனிக்கிறதில்லை. சம்பாதிக்கிற பணத்தையெல்லாம் சினிமாவுக்கும், சூதாட்டத்திற்கும் செலவழித்து விட்டு எங்களுக்குப் போதுமான பணம் கொடுக்கிறதில்லை. நானும் என் பிள்ளைகளும் உடுக்கிறதற்கும் நல்ல துணியில்லை என்றாள். அதற்கு நல்லமுத்து என் புருஷன் ஒழுங்காக என்னையும் என் பிள்ளைகளையும் கவனிக்காவிட்டாலும் நான் இப்படி பேசமாட்டேன். ஆமாம் சாரோன் நீ விவாக சமயத்தில், புருஷனுக்கு கீழ்ப்படிந்து அவருக்கு பிரியமாய் நடப்பேன் என்று தேவ சமுகத்தில் வாக்கு கொடுக்கவில்லையா என்றாள். அதற்கு அவள் ஆம் என்றாள்.

தொடர்ந்து நல்லமுத்து அவளுக்குச் சொன்னதாவது, நீ உன் புருஷன் நல்லவராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறபடியால் நீயே முதலாவது நல்லவளாக இருக்க வேண்டும். அவருக்கு கீழ்ப்படிந்து அவருக்கு மரியாதை கொடுத்து அன்பு கூற வேண்டும். அப்பொழுது அவர் நல்லவராகி விடுவார். விவாகத்திற்கு முன் உன் புருஷன் மிகஒரு நல்ல கிறிஸ்தவராக இருந்தார் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனபடியினால் நீ அவரைப் பேசாதே என்று இவ்விதமாய் சில நல்ல புத்திமதிகளைச் சொல்லிவிட்டு நல்லமுத்து தன் வீட்டிற்குப் போனாள்.

சாரோனுக்கு நல்லமுத்து மேல் அன்பும், ஒரு மரியாதையும் உண்டாயிற்று. மறுநாள் நல்லமுத்து எப்பொழுது வருவாள் என்று சாரோன் ஆவலோடு காத்திருந்தாள்.

(தொடரும்)

---

"பாலிய ஸ்திரீகள் தங்கள் புருஷரிடத்திலும், தங்கள் பிள்ளைகளிடத்திலும் அன்புள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், வீட்டில் தரித்திருக்கிறவர்களும், நல்லவர்களும், தங்கள் புருஷருக்கு கீழ்ப்படிகிறவர்களுமாயிருக்க வேண்டும்"

தீத் 2:4, 5.

---

# புதிய எருசலேம் நடபடிகளில் சில

(பிப்ரவரி மாத தொடர்ச்சி)

இவரும் தங்களுடைய வீட்டிற்கு எங்களை அழைத்து தேவாலோசனை கேட்டார். அவரும் நீங்கள் சிலகாலம் இந்த பாகங்களில் தங்கி ஊழியம் செய்தால் அநேகருக்கு பிரயோஜனமாக இருக்குமே என்றார். நாங்கள் தேவனுடைய ஆலோசனை

இன்றி எங்கேயும்தங்க முடியாது. நாளைக்கே நாங்கள் தெலுக் அன்சன் (Teluk Anson) போக வேண்டும். அங்கிருந்து கர்த்தர் எங்கே அனுப்புகிறாரோ அங்கே சென்று விடுவோம் என்பதாகக் கூறி வந்தோம்.

அப்படியே மறுநாள் திரு. ராஜ மாணிக்கம் அவர்கள் வீட்டிலிருந்து நாங்கள் தெலுக் அன்சனுக்கு (Teluk Anson) புறப் பட்டோம். இந்த வீட்டார் எங்களிடம் பாராட்டிய அன்புக்கு நாங்கள் என் றென்றும் நன்றி செலுத்த கடமைப் பட்டுள் ளோம். தான் பெற்று வளர்த்த பிள்ளைகள் தூர இடம் செல்லும் பொழுது தாயின் உள்ளம் எவ்வாறு கலக்கமடையுமோ அப்படியே Mr. Rajamanickam அவர் களுடைய துணைவி எங்கள் தாயைப் போன்றவர்கள். நாங்கள் புறப்படும் பொழுது இனிமேல் உங்களை நாங்கள் எப்பொழுது காண்போம் என தழுதழுத்த குரலில் கண் கலங்க கூறினார்கள். கர்த்தர் அனுப்பினால் மீண்டும் நாங்கள் சீக்கிர மாய் வருவோம் கலங்காதிருங்கள் என்று அந்த தாய்க்கு ஆறுதல் கூறினோம். அவர் களுடைய பிள்ளைகளும் எங்களைத் தங்கள் உடன்பிறப்பு போல் அன்பு கூர்ந்தபடியால் அவர்களும் கலங்கிய கண் களுடன் எங்களுக்கு பிரியாவிடை அளித் தார்கள். Mr. Rajamanickam அனுப்பு வதற்காக எங்களுடன் எங்களது பொருட் களை எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

பிரியமானவர்களே! கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் அன்பு வார்த்தைகளில் ஒன்று எனக்கு அடிக்கடி ஞாபகத்திற்கு வரும். மாற் 10: 29, 30 வசனங்களே அது "என்னிமித்தமாகவும், சுவிசேஷத்தினி மித்தமாகவும் வீட்டையாவது, சகோதரரை யாவது, சகோதரிகளையாவது, தகப்பனை யாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டவன் எவனும் இம்மையிலே நூறத் தனை வீடுகளையும், சகோதர சகோதரி களையும், தாய்களையும், பிள்ளைகளையும் பெற்று மறுமையிலே நித்திய ஜீவனையும் அடைவான்" என்று சத்தியமாய் தேவன் கூறியிருக்கிறார்.

இந்த வசனங்கள் என்னுடைய வாழ்க் கையில் நிறைவேறுகிறதைக் கண்டு நான் அநேக வேளைகளில் ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறேன். அநேகமாக தாய்மார்கள் நாங்கள் ஊரை விட்டு புறப்படும்போது அவர்கள் கண்ணீருடன் எங்களை வழி யனுப்பிய காட்சிகளை நான் கண்டிருக் கிறேன். இறையன்பு அவர்கள் உள்ளங் களில் ஊற்றப்பட்டதற்காக என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன். இந்த அனுபவமே இந்த மலேஷியாவிலும் உண்டானது. அதற் காக என் தேவனை ஸ்துதிக்கிறேன்.

மீண்டும் நாங்கள் Changkat Salak Estate லிருந்து Teluk Ansion Mr Manickam அவர்களுடைய வீடு வந்து சேர்ந்தோம். கர்த்தர் செய்த காரியங்களையெல்லாம் திரு. மாணிக்கம் அவர்களுடன் பகிர்ந்து கொண்டோம். அன்று இரவு மாணிக்கம் அவர்களுடன் சேர்ந்து அவருடைய வீட்டிலே ஜெபம் பண்ணினோம். அப் பொழுது Mr. மாணிக்கம் அவர்கள் கர்த்த ருடைய ஊழியத்தில் தன்னை ஒப்புக் கொடுக்க வேண்டும் அவர்களுடைய நெருக் கங்களை மாற்றி அவரை ஆசீர்வதிப்பேன் அவரைக் கொண்டு அநேக பாவிகளைத் தம்மண்டை மனந்திரும்ப செய்வேன் என்றும் கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

ஜெபம் முடிந்ததும்; தேவன் வெளிப் படுத்தினபடி நான் அவருடைய ஊழியத் தைச் செய்ய வேண்டுமானால், என்னு டைய குடும்பத்தில் உள்ள பல துயரமான சம்பவங்கள் மாற்றப்பட வேண்டும். இல்லையேல் நான் அவருடைய சித்தம் செய்ய முடியாது என்று Mr. மாணிக்கம் கூறினார். உங்கள் குடும்ப பாரத்தை எங்களிடம் கூறுங்கள் அதற்காக நாங்கள் தேவனிடம் ஜெபிக்கிறோம் என்பதாகக் கூறினோம்.

(தொடரும்)

Pastor S. SUNDARRAJ,
Vallioor.

# சாட்சி

என்னுடைய பெயர் G. தங்கபாய். தமிழ்நாட்டில் நெல்லை ஜில்லாவில் உள்ள டோனாவூருக்குப் பக்கத்து ஊரான சந்தோஷபுரம், எனது சொந்த ஊராகும். என்னுடைய தகப்பனார் போலீஸ் அதிகாரியாக பணியாற்றினார்கள். அவர்களுக்கு நான் ஒரே பெண் குழந்தையாக நான் இருந்ததால், என்னை அதிகமான அன்பு செலுத்தி வளர்த்தார்கள். நல்ல பழக்க வழக்கங்களுடன் வளர்க்கப்பட்டேன்.

என்னுடைய பெற்றோர் பெயர் கிறிஸ்தவர்களாகவே இருந்தார்கள். என்னுடைய பாட்டியம்மா மிகுந்த தெய்வ பக்தி உடையவர்கள் அவர்களைப் பின்பற்றி நானும் சின்ன வயதிலிருந்தே தெய்வ நம்பிக்கை உடையவளாக இருந்தேன். என்னுடைய எதிர்காலத்தைப் பற்றி தேவன் அறிவித்திருந்தார். ஆனால் அதைப்பற்றி சிந்தனையற்றவளாகக் காணப்பட்டேன்.

என்னுடைய 15ஆம் வயதில் எனக்கு திருமணம் நடந்தது. கர்த்தர் எனக்கு ஒரு ஆண் குழந்தையைக் கொடுத்தார். அதன் பின்னல் எனக்கு வாழ்க்கையில் பல கஷ்டங்கள் ஏற்பட்டது. கர்த்தர் எனக்கு பொறுமையைக் கொடுத்து என்னைத் தேற்றினர். வேத புத்தகம் மட்டுமே எனக்கு ஆறுதலாக இருந்தது. இள வயதில் நுகத்தைச் சுமக்கிறது மனுஷருக்கு நல்லது முதிர் வயதிலே கனியும் புஷ்டியுமாக இருப்பாய் என்ற வசனங்கள் எனக்கு ஆறுதலாக உணர்த்திக் கொடுக்கப்பட்டது.

பின்பு நான் ஆசிரியர் பயிற்சி பெற்றேன். கர்த்தர் எனக்குப் படிக்க ஞானம் தந்தார். வேலையில்லாமல் [illegible] வேலைக்காக அழுது ஜெபித்தேன். கர்த்தர் எனக்கு ஒருதரிசனத்தைக் கொடுத்தார். புதிய எருசலேம் என்ற சத்தத்தைக் கேட்டேன். ஒரு ஆயிரம் ரூபாயும் ஒரு நூறு ரூபாயும் காண்பிக்கப்பட்டது. புதிய எருசலேம் சபைக்கு தசமபாகம் என்று தரிசனத்தின் விளக்கத்தை மற்றவர்கள் மூலம் அறிந்தேன். உடனடியாக எனக்கும் வேலை கிடைத்தது. என்னுடைய தசமபாகமாக பொருத்தனையையும் அப்படியே சென்று செலுத்தி வந்தேன். நாங்குநேரி ஊழியர் அவர்கள் முழுக்கு ஞானஸ்நானத்தைப் பற்றிப் பேசினார்கள். எனக்கு ஞானஸ்நானம் எடுப்பதற்கு மனமில்லாதிருந்தது.

என்னுடைய மகன் ஞானஸ்நானம் பெற ஆயத்தமாய் இருந்தான். என்னையும் அழைத்தான். துரைசாமி புரத்தில் ஞானஸ்நான ஆராதனை இருந்தது. அன்று எனக்கு ஒரு (Meeting) கூட்டம் இருந்தது. அது இல்லாமல் இருந்தால் போகலாம் என்று எண்ணினேன். அதிசயமாக அந்த மீட்டிங் இல்லாமல் போய் விட்டது. ஆனாலும் மறுபடியும் போகக் கூடாது என்று தீர்மானித்தேன். கர்த்தர் ஒரு தரிசனத்தைத் தந்தார். ஒரு மரத்தின் வேர் பக்கத்தில் ஒரு கோடாரி இருந்தது. நான் அந்த தரிசனத்தைக் கண்டு பயந்தவளாய் வேதாகமத்தை எடுத்து அந்த தரிசனத்துக்குரிய வசனத்தை ஆராய்ந்தேன்.

அது யோவான் ஞானஸ்நானம் கொடுக்கும்போது சொல்லப்பட்டது (மத் 3 : 10). "இப்பொழுதே கோடாரியானது வேர் அருகே வைத்திருக்கிறது; ஆகையால் நல்ல கனிகொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும்" இந்த வசனத்தின் மூலம் எச்சரிக்கப்பட்டு அன்றே என் மகனும் நானும் துரைசாமிபுரம் சென்று புதிய எருசலேம் சபையில் ஞானஸ்நானம் எடுத்தோம். கர்த்தருடைய கிருபையினால் இவ்வளவு பெரிதான இரட்சிப்பைப் பெற்றுக் கொண்டோம்.

ஞானஸ்நானத்திற்கு முன்பு சகோதரி ஒருவர் நகைகளைக் கழற்றும்படி சொன்னார்கள். நானும் கழற்றினேன். ஆனாலும் அதுபற்றி புரியாதவர்களாக இருந்தேன். அவர்கள் ஒரு வசனத்தைச் சொன்னார்கள். I தீமோ 2 : 9-ல் "ஸ்திரீகளும் மயிரைப்பின்னுதலினாலாவது, முத்துக்களினாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தினாலாவது தங்களை அலங்கரியாமல்,

என்பதைக் கட்டிக் காட்டினார்கள். எனக்கு அது சரியான திருப்தியளிக்க வில்லை. மறுநாள் வீட்டிற்குச் சென்றேன். பின் பள்ளிக்குச் சென்றேன். இரவிலே தரிசனத்திலே நான் பஸ்ஸில் போகும் நடந்த காரியங்கள் காட்டப்பட்டது.

நான் பஸ்ஸில் இருக்கிறேன். பஸ் போய்க் கொண்டிருக்கிறது. அப்பொழுது இசக்கி என்கிற அக்கா, தங்கைகளாகிய இரண்டு பிசாசுகள் வந்து வண்டியில் ஏறியது அப்படியே ஒவ்வொரு இருக்கை யிலும் (Seat) போய் இருக்கிற ஆட்கள் நகைகள், பூக்கள், துணிகள், துணிகளி லுள்ள டிசைன்கள் இவைகளையெல்லாம் தொட்டு, தொட்டுப் பார்த்து மகிழ்ச்சி யடைந்து கொண்டே வந்தது. அப்படியே நான் இருக்கும் இடத்தினருகே வந்ததும் இது பெந்தெகோஸ்து அம்மா என்று சொல்லிவிட்டு அப்படியே விழுந்தடித்து ஓடியது. அப்பொழுதுதான் எனக்கு நகை களை எதற்காக கழற்றினோம் என்பது புரிந் தது. நகை போட்டிருப்பவர்களை சாத்தான் தொடுவான என்று புரிந்து கொண்டேன். பெந்தேகோஸ்து சபையார் டிசைன்கள் இல்லாத பிளேன் உடைகளை உடுத்து வதும், வீணான அலங்காரங்கள் செய்யா மல் இருப்பதற்கும் காரணம் புரிந்து சாத்தான் தொட முடியாது என்பதைப் புரிந்து கொண்டேன்

அப்படியே என்னையும் தேவன் வீணான அலங்காரங்களை விட்டு, விட்டு சாட்சியாய் இருக்க உதவி செய்தார். அபிஷேகத்துக்காக அடிமை ஜெபித்தேன். நான்கு தேசி ஊழியர் அவர்கள் எனக்கு தலையில் கை வைத்து ஜெபித்தார்கள்.

அப்போது என் இதயத்தில் தேவ அன்பு ஊற்றப்பட்டு அப்படியே என் உடம் பெல்லாம் பாய்ந்து செல்வதைக் கண்டேன். பின் ஒரு கடற்கரைக் கூட்டத்தில் அபிஷேகம் பெற்றேன்.

Iயோவா 5 : 7, 8 பரலோகத்திலே சாட்சியிடுகிறவர்கள் மூவர், பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவி என்பவர்களே. இம்மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள். பூலோகத் திலே சாட்சியிடுகிறவைகள் மூன்று. ஆவி, ஜலம், இரத்தம், என்பவைகளே. இம் மூன்றும் ஒருமைப்பட்டிருக்கின்றது. I யோ 5 : 10 தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் அந்த சாட்சியை தனக்குள்ளே கொண்டிருக்கிறான் என்றபடி எனக்கும் தேவன் ஜலத்தினாலே மீட்பை யும், ஆவியினாலே பெலத்தையும் அனுக் கிரகம் செய்து பூலோகத்திலே சாட்சியாய் நிற்க தேவன் கிருபை செய்தபடியால் என் தேவனை மகிமைப்படுத்துகிறேன்.

பலவிதமான உபத்திரவங்கள் வேதனை கள், துன்பங்களின் மத்தியிலே என் தேவன் என்னை ஆற்றித் தேற்றி தம்முடைய மெய் சமாதானத்தை தந்து ஆதரிப்பதற்காய் என் தேவனைத் துதிக்கிறேன். யோபு 16:19-ல் இப்போதும் இதோ என் சாட்சி பரலோகத் திலிருக்கிறது, எனக்குச் சாட்சி பகருகிறவர் உன்னதங்களில் இருக்கிறார்.

சகோதரி G. தங்கபாய்
சந்தோஷபுரம்.

"...இதற்கு நாங்களெல்லாரும் சாட்சி களாயிருக்கிறோம்" அப் 2:32.

## காலம் சமீபமாயிற்று

பொதுவான ஏற்பாடுகளினால் மட்டு மல்ல திட்டமான செயல்களினாலும், தமது தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளிலிருக்கும் வன்மையினாலும கடவுள் காலத்திற்குள் புகுந்து அதில் நடைபெறும் சம்பவங்களை ஆளுகிறார் ஒன்றுக்கொன்று தொடர் பில்லாத பல நிகழ்ச்சிகளினால் மனித வரலாறு உண்டாகிறது என்று சிலர் நினைக்கின்றனர்.

இதுவும் தவறு. வேறு சிலர் நடப்பதெல் லாம் தேவசித்தம் என்பர் இதுவும் தவறாகும். உண்மை யாதெனில் நடக்கும் காரியங்களைத் தேவன் தமது சித்தத்தை

நிறைவேற்றும்படி பயன்படுத்துகிறார் என்பதே.

பழைய ஏற்பாட்டிலே இஸ்ரவேலர்கள் எவ்வளவாய் மீறுதல்கள் செய்த போதிலும் கடைசியில் கடவுள் வரலாற்றுக்குள் புகுந்து இஸ்ரவேலர்களை மீட்டுக் கொள்வார் என்று வேதம் சொல்லுகிறது ஆமோ 9 : 11, 12 ; மீகா 4 : 6 ; செப் 3 : 16.

3. இதுவே வரலாற்றில் கடவுள் நடத்தப்போகிற முக்கிய சம்பவமென்று வேதம் சொல்லுகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஏசா 61-ஆம் அதிகாரத்தை வாசித்து இன்றையதினம் இந்த சம்பவம் நிறைவேறிற்று என்றார் (லூக் 4 : 21). காலம் நிறைவேறிற்று கடவுளுடைய ராஜ்யம் சமீபித்திருக்கிறது என்று கூறி இயேசு கிறிஸ்து தமது பணிவிடையை ஆரம்பித்தார் (மாற் 1 : 15) கடவுளுடைய முக்கியமான காரியம் நிறைவேறிவிட்டபடியால் அதற்கு முந்திய காலத்திற்கும், பிந்திய காலத்திற்கும் வேற்றுமையுண்டு. இதைக் காட்டுவதற்கு இனி, இனிமேல், இதுமுதல் என்ற சொற்கள் பலமுறை புதிய ஏற்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. உ-ம் II கொரி 5 : 15 ஆகையால் வெறுமையான காலத்திற்குள் புதிய குணங்களுள்ள ஓர் ஒழுங்கு பிரவேசித்துள்ளது. இது எல்லோரும் வாழும் சாதாரண காலத்திற்குள்ளிருந்து கிரியை செய்த போதிலும் கீழ்காலத்திற்குரியதன்று. இது கடவுளுடைய சித்தத்தின்படி முழுவதுமாய் நடக்கும் வருங்காலத்திற்குரியது. ஆகவே பழைய புதிய கால ஒழுங்குகள் இந்த வெறுமையான காலத்தில்கிரியை நடப்பிக்கின்றன. ஆதலால் இரண்டு யுகங்கள் சந்திக்கும் காலத்தில் நாம் வசிக்கிறோம் என்கிறார் அப் பவுல் (I கொரி 10 : 11.)

4. புதிய யுகம் வருங்காலத்திற்குரியது. கடவுளுடைய ஆட்சி கிறிஸ்து இரட்சகரில் வந்து விட்டது. வரலாற்றின் முக்கிய நிகழ்ச்சி வந்து நடந்து விட்டது. கடவுளுடைய ஆட்சி கிறிஸ்து இரட்சகரில் வந்து விட்டது. வெற்றி பெற்று விட்டதும் மெய்தான். ஆனால் இன்னும் கடவுள் ஆட்சிக்கு உலகத்தில் எதிர்ப்பு உண்டு. புதிய யுகம் நிறைவேறியும் நிறைவேறாமலும் எதிர்பார்த்தும் இருக்கிறோம். ஆரம்பம் வேறு அந்தம் வேறு அந்தமும் வரும்.

மத் 13 : 39 "அவைகளை விதைக்கிற சத்துரு பிசாசு; அறுப்பு உலகத்தின் முடிவு, அறுக்கிறவர்கள் தேவதூதர்கள்"

மத் 13 : 40 "ஆதலால், களைகளைச் சேர்த்து அக்கினியால் சுட்டெரிக்கிறது போல, இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்"

மத் 13 : 49 "இப்படியே உலகத்தின் முடிவிலே நடக்கும். தேவதூதர்கள் புறப்பட்டு, நீதிமான்களின் நடுவிலிருந்து பொல்லாதவர்களைப் பிரித்து,"

மத் 13 : 50 "அவர்களை அக்கினிச் சூளையிலே போடுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்..." இந்த யுக முடிவு நெருங்குகிறது.

"...வானத்தின் தோற்றத்தை நிதானிக்க உங்களுக்குத் தெரியுமே, காலங்களின் அடையாளங்களை நிதானிக்க உங்களால் கூடாதா?" (மத் 16 : 3)

# நடைபெற்ற விவாகங்கள்

சகோ P. ஜெக்கப் விஜயகுமாருக்கும், சகோதரி எஸ்தருக்கும் 5—3—86 அன்று, சேலத்தில் பரிசுத்த விவாகம் நடைபெற்றது.

சகோதரர் வேதமணிக்கும், சகோதரி ஜெயராணிக்கும் 10-3-86 அன்று, மகிழ்ச்சிபுரத்தில் பரிசுத்த விவாகம் நடைபெற்றது.

இந்த விவாக தம்பதிகளை கர்த்தர் ஆசீர்வதிக்க யாவரும் ஜெபிக்க வேண்டுகிறோம்.

---

25-2-86ல் கோவைப்புத்தூரில் 10 பேர்களும் 6-3-86 பவானியில் 9 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று சபையோடு சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-29 ★ MAY 1986




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து: தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1 : 1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்— மத். 28 : 18; மாற்கு 16 : 15
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத். 28 : 19 [இயேசு மாதிரி (Through action) செய்து காண்பித்தார்.]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1:5-8
7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1 கொரி 11 : 23-26.

நான்: ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—தீதி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப். 1 : 1 ; 10 : 40-43.

CHIEF PASTOR N. LAZAR

# ஆசிரியர் உரை

மனிதன் தேவனுடைய சித்தத்தை அறியவும், அறிந்து அதன்படி செய்யவும் கடமைப் பட்டுள்ளான். தேவ சித்தத்தை செய்வதின் மூலமாக, இவன் உண்மையான மனிதனாக விளங்க முடியும். அவருடைய சித்தத்தின்படி செய்ய மனதுள்ளவனெவனோ அவன் இந்த உபதேசம் தேவனால் உண்டாயிருக்கிறதா, நான் சுயமாய்ப் பேசுகிறேனோ என்று அறிந்துகொள்ளுவான் (யோவான் 7:17). சிலர் நினைக்கிறபடி மனிதன் சுயாதீன சித்தமுள்ளவன் அல்ல. அவனுடைய சித்தம் ஒரு பக்கம் சாய்ந்தே இருக்கிறது. தனக்கு பிரிய மானதையே செய்ய நாடுகிறான். மனிதன் பாவியாயிருக்கிறபடியினால் பாவம் செய்கிறான் பாவம் செய்கிறதினால் அவன் பாவியல்ல. பாவியா யிருக்கிறதினால் பாவம் செய்கிறான். பாவம் என்பது தேவனுடைய சித்தமில்லாமல் செய்கிற நன்மையோ, தீமையோ எல்லாம் பாவம் தான். மனிதனுடைய சித்தம், சாத்தானாலும், சூழ்நிலைகளினாலும் தூண்டப்பட்டு அவன் பாவம் செய்கிறான். ஆனபடியினால் அவன் சுயாதீன சித்தமுள்ளவனல்ல. அவன் ஒரு அடிமை, அவன் கர்த்த ராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து, இரட்சிக்கப்படும் பொழுது அவனுடைய சித்தம் விடுதலையாகிறது. இப்பொழுது நன்மை தீமை இன்னதென்று பகுத்தறியும் அறிவு இறைவனிடமிருந்து அவனுக்கு வருகிறது. அது வேதத்தின் மூலமாகவும், பரிசுத்தாவியின் தூண்டுதலி னாலும், பரிசுத்தவான்களின் ஐக்கியத்தினாலும், ஆலோசனையினாலும் அவனுக்கு கிடைக்கும். இப்பொழுது தேவசித்தம் அறிவதும் செய்வதும் அவனுக்கு இலேசான காரியம். அநேகர் இரட்சிக்கப்பட்ட பின்பும் தங்களுடைய சுயசித்தத்தின்படி ஜீவிக்கவும், ஊழியம் செய்யவும் ஆரம்பித்து விடுகிறார்கள். பழையபடி தங்களுடைய சுயசித்தத்தை நிறைவேற்றுகிற அதே தவறை செய்கிறார்கள். உன்னுடைய ஜீவியம், உன்னுடைய ஆராதனை, உன்னுடைய ஐக்கியம், உன்னுடைய ஊழியம், தேவ சித்தத்தின்படி சரியானதுதானா? தேவனுடைய வசனத்தின்படி யிருக்கிறதா? என்பதை தேவவசனத்தைக் கொண்டு ஒத்துப் பார் கர்த்தர் உன்னை ஆசீர்வதிப்பாராக!

இப்படிக்கு

Chief Pastor N. LAZAR.

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

29. சபை 3½ வருஷம் வனாந்தரத்தில் போஷிக்கப்படுதல் (வெளி 12 : 6, 14).

வெளிப்படுத்தின விசேஷத்தை இது வரை வியாக்கியானித்தவர்கள், சபையானது 3½ வருஷம் வனாந்தரத்தில் போஷிக்கப்படுவதைக் குறித்து தெளிவாக எழுதாமல் விட்டு விட்டார்கள். வெளிப்படுத்தல் 12-ஆம் அதிகாரத்தில் காணப்படுகிற ஸ்திரீ இரட்சிக்கப்பட்ட சபை என்றும்; அந்த ஸ்திரீயிலிருந்து தோன்றுகிற ஆண பிள்ளை எடுத்துக் கொள்ளப்பட்டதை சபையிலே இரட்சிக்கப்பட்ட மக்களில் பூரணமாக்கப்பட்ட பரிசுத்தவான்கள் எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்றும்; அவர்களே ஆண் பிள்ளை என்றும்; அந்த ஸ்திரீயை கைவிடப்பட்ட சபை என்றும் வர்ணித்துள்ளார்கள். இது மகா தவறான உபதேசமாகும்.

இரட்சிக்கபபட்ட, பூரணமாக்கப்பட்ட சபையையே கைவிடப்பட்ட ஸ்திரீ என்றும் கைவிடப்பட்ட சபை என்றும் இவர்கள் சொல்வார்களானால் தேவனுடைய பிள்ளைகள் இவர்களிடத்திலிருந்து வேறு எந்த தேவ இரகசியங்களையும் அறிந்து கொள்ளப் போவதில்லை. இவர்களுக்கு வெளிப்படவும் செய்யாது. பூரணமான சத்தியம் இன்னும் இவர்களுக்கு வெளிப்படவில்லை.

சபைக்கு பலவிதமான பெயர்கள் வேதாகமத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. கட்டடம் என்றும் (எபேசி 2 : 22; I கொரி 3 : 10); ஆலயம் என்றும் (எபேசி 2 : 20, 21) சரீரம் என்றும் (எபேசி 1 : 23; ரோமர் 12:5 I கொரி 12:13) தேவனுடையபண்ணை என்றும் (I கொரி 3 : 9) திராட்சை செடியும் கொடியுமென்றும் (யோ 15 : 1-6); தேவனுடைய மந்தை என்றும் (யோ 10 : 16; அப் 20 : 28), ஸ்திரீ என்றும் (எபேசி 5 : 25-32) பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளில் விசேஷித்த விதமாய் திருச்சபையை ஸ்திரீ என்றுகுறிப்பிடப்பட்டுள்ளது (எபே 5:25-32; II கொரி 11 : 2).

இந்த சபையை கற்புள்ள கன்னிகையாக அப்போஸ்தலன் மாத்திரமே ஆயத்தப் படுத்தி கிறிஸ்துவுக்கு முன்பாக நிறுத்த முடியும் (II கொரி 11 : 2). ஆனபடியினால் சபையானது அப்போஸ்தலனால் எழுப்பப் பட்டிருக்க வேண்டும். சபைக்கு ஆரம்பமும், முதலாவதுமாக அப்போஸ்தலன் இருக்க வேண்டும் (II கொரி 11 : 2; I கொரி 3 : 10; 12 : 28)

சபைக்கு ஸ்திரீ என்று வேதாகமம் முழுவதிலும் உவமிக்கப்பட்டிருக்கின்றது. அப்படியே வெளிப்படுத்தல் ஆகமம் 12-ம் அதிகாரத்தில் நாம் காணுகிற ஸ்திரீ பூரணமான மணவாட்டியான சபையே. எடுத்துக் கொள்ளப்படுகிற ஆண்பிள்ளை சபையிலிருந்து தோன்றுகிற ஒரு பரிசுத்தவானே யாகும். (இந்த சம்பவம் சபை எடுத்துக் கொள்ளப்படுகிற சம்பவமல்ல). வெளி. 12 ஆம் அதிகாரத்தின் சம்பவம் வெளி. 3 ஆம் அதிகாரத்திற்கு அடுத்தாற்போல் வெளிப்படுத்தல் 4 ஆம், 5 ஆம் அதிகாரத்திற்கு இடையில் வாசிக்க வேண்டிய வேத பாகமாகும்.

வெளி 12 ஆம் அதிகாரம் வசனம் 13-ல் வலுசர்ப்பமானது தான் பூமியிலே தள்ளப்பட்டதை அறிந்து அந்த ஆண் பிள்ளையைப் பெற்ற ஸ்திரீயை துன்பப் படுத்தினது என்று எழுதப்பட்டுள்ளது.

மிகாவேல் வலுசர்ப்பத்தை பூமியிலே கீழே விழத் தள்ளியிருந்தால் வலுசர்ப்பமானது மிகாவேலையும், அவனைச் சேர்ந்த தூதரையுமல்லவா துன்புறுத்த வேண்டும். ஆனால் வேத வசனமோ தன்னை கீழே விழத்தள்ளின அந்த ஆண்பிள்ளையைப் பெற்ற ஸ்திரீயை வலுசர்ப்பமானது துன்பப் படுத்தினது-என்று எழுதப்பட்டுள்ளது.

ஆம்! சபையானது இன்னும் எடுத்துக் கொள்ளபபடவில்லை. அது பூமியிலே தான் இருந்தது. ஆனபடியினால் (சபையை) அந்த ஸ்திரீயை வலுசர்ப்பமானது துன்பப்

படுத்தினது. ஸ்திரீயானவள் கைவிடப்பட்ட சபையல்ல. ஒரு போதும் கர்த்தர் சபையை கைவிட்டார் என்றோ, சபையை கைவிடுவார் என்றோ, ஒருவரும் சொல்லக் கூடாது. அந்த ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள் என்று பார்க்கிறோம்.

ஆனபடியால் அது இரட்சிக்கப்பட்ட சபை. சந்திரன் மேல் அவள் நின்றதாகப் பார்க்கிறோம். ஆனபடியினால் அவள் உறுதியான அஸ்திபாரத்தின் மேல் நிற்கிறாள் என்று அறிந்து கொள்ளுகிறோம். அவளுடைய சிரசின் மேல் 12 நட்சத்திரங்களுள்ள கிரீடம் இருந்ததாகப் பார்க்கிறோம். இது அபிஷேகம் பெற்ற ஊழியம், அப்போஸ்தலருடைய ஆளுகையைக் குறிப்பிடுகிறது. இப்படிப்பட்ட பூரணமான சபையை கைவிடப்பட்ட சபை என்று சொல்லுவது மகா தவறான துர்உபதேசமாகும்.

சபைக்கு ஒரு இக்கட்டு காலம் வரப்போகிறது. அது அந்திக் கிறிஸ்துவினுடைய ஆளுகையின் ஆரம்ப காலத்தில் தன்னுடைய இலக்கத்தையாவது, நாமத்தையாவது; தங்கள் நெற்றிகளிலாவது, கரங்களிலாவது தரித்துக் கொள்ளாதவர்களை அந்திக் கிறிஸ்து துன்பப்படுத்தும் காலமாகும். தேவனுடைய ஜனங்கள் விற்கவும், வாங்கவும் முடியாதபடி நெருக்கடி உண்டாகும் (வெளி 13 : 16-18). அந்நாட்களில் தேவ ஜனங்கள் மிக நெருக்கப்படுவார்கள். கர்த்தருக்குக் காத்திருப்பார்கள். அவர்களுக்கு பெருங்கழுகின் இரண்டு சிறகுகள் கொடுக்கப்படும். இது பரிசுத்தாவியானவருடைய வல்லமையினால் சபை புதுப்பெலன் அடைந்து எழும்புகிற சம்பவமாகும் (ஏசா 40 : 31). அப்பொழுது பாம்பானது தன் வாயிலிருந்து ஒரு நதி போன்று வெள்ளத்தை ஸ்திரீக்குப் பின்னாக ஊற்றி ஸ்திரீயை வெள்ளம் கொண்டு போகும்படி செய்ய முயற்சித்தது. பூமியானது ஸ்திரீக்கு உதவியாக தன் வாயைத் திறந்து வலுசர்ப்பம் தன் வாயிலிருந்து ஊற்றின வெள்ளத்தை விழுங்கிற்று என்றும் எழுதப்பட்டுள்ளது (வெளி 12 : 15,16).

வெள்ளம் என்று எழுதப்பட்டுள்ளது திரளான தண்ணீர்களாகும். திரளான தண்ணீர்கள் ஜனக்கூட்டத்தைக் குறிப்பிடுகிறது. சாத்தான் துன்மார்க்க ஜனங்களைத் தூண்டி சபையை துன்பப்படுத்துவான் என்பதே இதனுடைய விளக்கம். ஆனால் பூமியானது ஸ்திரீக்கு உதவியாக பலவித வாதைகளினாலும், பூமியதிர்ச்சியினாலும், கொள்ளை நோய்களினாலும், பூகம்பங்களினாலும் இந்த துன்மார்க்க ஜனங்களை வாதித்து விழுங்கிப் போடும் என்பதாக அறிந்து கொள்கிறோம்.

சபையோ தேவனால் புதுப்பெலன் அடைந்து தேவன் அதற்கு ஆயத்தப்படுத்தியிருக்கிற வனாந்தரத்திற்கு 3½ வருஷ காலமாய் போஷிக்கப்படும்படி பாதுகாப்பான இடத்திற்கு கொண்டு போகப்படும். இதைக் குறித்து தீர்க்கதரிசிகளும் எழுதியுள்ளார்கள்.

பழைய ஏற்பாட்டின் ஜனங்களாகிய இஸ்ரவேல் சபை (பழைய ஏற்பாட்டு சபை) எகிப்திலிருந்து விடுவிக்கப்பட்டு செங்கடலைத் தாண்டி 40 வருஷம் அற்புத விதமாய் வனாந்தரத்தில் போஷிக்கப்பட்டது போல புதிய ஏற்பாட்டின் கடைசிகால சபையும் வனாந்தரத்தில் (இறைவனால்) தேவனால் 3½ வருஷம் போஷிக்கப்படும். அந்த நெருக்கடியின் காலத்தில் சபையை கர்த்தரே மேய்த்து ஆளுகை செய்வார்.

அந்திக்கிறிஸ்துவினுடைய ஆளுகையின் கொடூரத்திற்கு தேவனுடைய மணவாட்டியான சபை விலகி (நீங்கலாயிருக்கும்) பாதுகாப்பாக இருக்கும்.

கர்மேலின் நடுவிலே தனித்து வனவாசமாய் இருக்கிற உமது சுதந்தரமான மந்தையாகிய உம்முடைய ஜனத்தை உமது கோலினால் மேய்த்தருளும். பூர்வ நாட்களில் மேய்ந்தது போலவே, அவர்கள் பாசானிலும் கீலேயாத்திலும், மேய்வார்களாக.

நீ எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட நாளில் நடந்தது போலவே உன்னை அதிசயங்களைக் காணப்பண்ணுவேன் (மீகா 7 : 14, 15). எகிப்து தேசத்திலிருந்து இஸ்ரவேலர்கள் புறப்பட்ட நாளில் நடந்த அதிசயங்கள் அற்புதங்கள் பின்பு இது வரை நடைபெறவில்லை என்பதை நாம் அறிவோம், அது இனியேல் நடைபெறப்

போகிறது. மோசே, ஆரோன் என்பவர்களின் கையினால் தேவனுடைய ஜனங்கள் ஒரு ஆட்டு மந்தையைப்போல் வழிநடத்தப்பட்டதுபோல் தேவன் வழிநடத்துவார். இந்த நெருக்கடியான காலங்களினால் தான் தேவ ஜனங்கள் ஒருமனப்படுவார்கள், ஆயத்தப் படுவார்கள். எப்பொழுதுமே தேவஜனங்களுக்கு வெளியேயிருந்து எதிர்ப்பும், உபத்திரவமும் உண்டாகும் பொழுதே இவர்களிலே ஒருமனமுண்டாகும், ஆயத்தமுண்டாகும்.

எப்படியும் மெய்யான சபைக்கு உபத்திரவமும், துன்பமும் உண்டாகும் அந்திக்கிறிஸ்துவும் அவனுடைய ஆளுகையில் உள்ள ஜனங்களும் தேவ ஜனங்களை நெருக்குவார்கள். மாம்சத்தின்படி பிறந்தவன் ஆவியின்படி பிறந்தவனை அன்று துன்பப்படுத்தினது போல மாம்சத்தின்படியான கிறிஸ்தவர்களும் அந்திக்கிறிஸ்துவோடு சேர்ந்து தேவனுடைய சபையை துன்பப்படுத்துவார்கள், நிந்திப்பார்கள், நெருக்குவார்கள், பரியாசம் செய்வார்கள். அது இப்பொழுதே நாம் பார்க்கிறோம் (கலா 4: 29).

தேவஜனங்களுடைய ஜெபம் தேவனால் அங்கீகரிக்கப்படும். தேவனால் அவர்களுக்கு ஆயத்தமாக்கப்பட்ட ஒரு இடம் உண்டு. அந்த பாதுகாப்பான இடத்திலே அவர்கள் 3½ வருஷகாலம் போஷிக்கப்படுவார்கள்.

"கர்த்தர் சீயோனைக் கட்டி தமது மகிமையில் வெளிப்படுவார். திக்கற்றவர்களுடைய ஜெபத்தை அலட்சியம் பண்ணாமல் அவர்கள் விண்ணப்பத்தை அங்கீகரிப்பார் (சங் 102: 15, 16).

சீயோனை சேர்ந்த ஜனங்கள் எருசலேமில் வாசமாயிருப்பார்கள். இனி நீ அழுது கொண்டிராய் உன் கூப்பிடுதலின் சத்தத்திற்கு அவர் உருக்கமாய் இரங்கி அதைக் கேட்டவுடனே உனக்கு மறு உத்தரவு அருளுவார். ஆண்டவர் உங்களுக்கு துன்பத்தின் அப்பத்தையும், உபத்திரவத்தின் தண்ணீரையும் கொடுத்தாலும் உன் போதகர்கள் இனி ஒரு போதும் மறைந்திருக்கமாட்டார்கள். உன் கண்கள் உன் போதகர்களைக் காணும் (ஏசா 30: 19, 20).

ஜனங்களும் "மறக்கப்படாத நித்திய உடன்படிக்கையினால் நாம் கர்த்தரை சேர்ந்து கொள்ளுவோம் வாருங்கள் என்று சீயோனுக்கு நேராய் முகங்களைத் திருப்பி, சீயோனுக்குப் போகிற வழி எதுவென்று கேட்டு விசாரிப்பார்கள் (எரே 50:5).

ஆனபடியினால் 'வழிகளிலே நின்று, பூர்வ பாதைகள் எவையென்று கேட்டு விசாரித்து, நல்லவழி எங்கே என்று பார்த்து அதிலே நடவுங்கள்! அப்பொழுது உங்கள் ஆத்துமாவுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும் என்று கர்த்தர் சொல்லுகிறார்" (எரே 6:16)

---

"பறந்து காக்கிற பட்சிகளைப்போல் சேனைகளின் கர்த்தர் எருசலேமின்மேல் ஆதரவாக இருப்பார் ..." ஏசா 32:5

---

# வெளி. 12-ம் அதி.

பிரியமான தேவனுடைய பிள்ளைகளே:

வெளிப்படுத்தின விசேஷத்தை தேவ ஆவியானவருடைய உதவியோடு தியானிப்போமாக. அநேகர் தங்களுடைய சுய அறிவினால் தேவனுடைய இரகசியங்களை அறியமுயன்று தங்களுக்குத் தோன்றினபடி தாறுமாறானவைகளை மக்களுக்கு போதித்து விட்டார்கள்.

வெளிப்படுத்தலாகமம் இனிமேல் சம்பவிக்கப்போகும் காரியங்களையே குறிப்பிடுகிறது (வெளி 1:1). இவைகளில் அப்போஸ்தலனாகிய யோவானுடைய காலத்தில் ஆசியாவிலுள்ள ஏழு சபைகள் எப்படியிருந்ததென்றும், அவைகளின் குறைகள் சரிசெய்யப்படாவிட்டால்] அவைகளுக்கு வரும் முடிவுகள் எப்படிப்பட்டதென்றும், அவைகளில் ஜெயம் பெறுப

வர்கள் அடையப்போகும் மேன்மை இன்னதென்றும், வெளிப்படுத்தல் முதல் மூன்று அதிகாரங்கள் நமக்கு விளக்குகின்றது. இவைகளின்படியே அவைகளுக்கு (மேற்படி சபைகளுக்கு) சம்பவித்து முடிந்ததென்றும் நாம் உணரவேண்டும்.

வெளி 4 : 1—ல் "இங்கே ஏறிவா இவைகளுக்குப் பின்பு சம்பவிக்க வேண்டியவைகளை உனக்கு காண்பிப்பேன்" என்று விளம்பினது என்று எழுதப்பட்டிருக்கிறது. இதனால் முந்திய சம்பவங்கள் நடந்த பின்பே வேறு சம்பவங்கள் நடக்கப் போகிறது என்பதை நாம் காணுகிறோம். இப்படியிருக்க இன்றைக்கு வேத கலாசாலைகளிலும், சபைகளிலும் சபையின் காலங்களைக் குறித்து போதிப்பவர்கள் பெந்தேகோஸ்தே நாளிலிருந்து இது வரையிலும் ஆறு சபையின் காலங்கள் கழிந்ததென்றும், ஆறு தூதர்கள் தோன்றினார்கள் என்றும், ஏழாம் தூதனுடைய சத்தத்தின் நாட்களிலே தேவ இரகசியம் நிறைவேறுமென்றும் கூறுகிறார்கள். அந்த ஏழாம்சபை லவோதிக்கேயா சபை என்றும் அது அனலுமில்லாமல், குளிருமில்லாமல் இருக்குமென்றும் எழுதுகிறார்கள். இது இவர்களுடைய சொந்த அனுபவத்தை மனதில் வைத்து இப்படித்தான் கடைசி நாட்களில் சபை இருக்கும் என்று முடிவு செய்து கொள்கிறார்கள். அப்படியானால் இது தேவனுடைய வாயினின்று வாந்தி பண்ணிப் போடக்கூடிய சபையாகுமே. இப்படியிருந்தால் கர்த்தருடைய வருகையில் யார் எடுத்துக்கொள்ளப்படுவார்கள்.

ஆகையால் சகோதரரே இந்த ஏழு சபைகளும், ஒரு காலத்தில் ஆசியாவில் இருந்த சபைகளே. அவைகளுடைய காலங்கள் முடிந்து விட்டது.

நாம் வந்திருக்கும் காலம் ஓர் கடைசி காலமாகும். இந்த கடைசி நாட்களில் கர்த்தருடைய சபை (ஆலயம்) எப்படியிருக்கும் என்பதை நாம் அறிந்து கொள்வது மிக அவசியம். கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியிலே ஸ்தாபிக்கப்பட்டு மலைகளுக்கு மேலாய் உயர்த்தப்படும்; எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடி வருவார்கள்; திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து, நாம் கர்த்தருடைய பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள். அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும் (ஏசா 2: 2, 3 ; மீகா 4 : 1, 2: ஆகாய் 2 ; 9).

இப்படி கடைசி நாட்களில் உருவாகப் போகும் சபையின் மேன்மையைத்தான் அப்போஸ்தலனாகிய யோவான் தரிசனத்திலே கண்டு வெளி 12 : 1, 2 ல் எழுதுகிறார். அனேகமாக ஆவிக்குரியவர்கள் எல்லோரும் இந்த வெளிப்படுத்தல் 12 : 1-ல் காணப்படும் ஸ்திரீயை தேவனுடைய சபை மகிமையடைந்த தேவனுடைய சபை, பூரணமான தேவனுடைய சபை என்றே கூறுவார்கள்.

இந்த ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள், அவள் பாதங்களின் கீழ் சந்திரனும் அவள் சிரசின் மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடமும் இருந்தன (வெளி 12 : 1). சூரியன், சந்திரன், நட்சத்திரம், இம்மூன்றும் தேவன் படைத்த சுடர்களாகும் "பகலை ஆளப் பெரிய சுடரும், இரவை ஆளச் சிறிய சுடரும் ஆகிய இரண்டு மகத்தான சுடர்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார்" (ஆதி 1 : 16) என்று வாசிக்கிறோம்.

சபையாகிய ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள் என்று நாம் வாசிக்கிறோம்; இந்த சூரியனை இயேசுகிறிஸ்து என்று எல்லோரும் விளக்கம் தருகிறார்கள். அது சரியானதே "ஏனெனில் உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனை பேரோ அத்தனை பேரும் கிறிஸ்துவை தரித்துக் கொண்டீர்களே (கலா 3 : 27) ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள் என்று அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகின்றார். கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெறுதல், கிறிஸ்துவுக்கு வெளியே ஞானஸ்நானம் பெறுதல் என்று இரு பிரிவினரை நாம் பூமியில் இங்கே காணுகிறோம். ஒரு மனிதன் எப்படி கிறிஸ்துவுக்குள்

ணாகிறான் என்பதை நாம் அறிந்து கொள்வது நலமது. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து தோன்றி தொட்டு நடந்து வந்த தெளிப்பு ஞானஸ்நானம் என்ற போதனையிலிருந்து முழுக்கு ஞானஸ்நானம் என்ற போர்வைக்குள் மக்கள் நடந்து வந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்த முழுக்குதல் ஒரு மனிதனைக் கிறிஸ்துவுக்குள் காணப்படச் செய்கிறதா என்பதை அறிந்து உணர முடியாதவர்களாகவே இன்றைய சபைகளின் போதகர்கள் காணப்படுகிறார்கள். "இப்படியிருக்க ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான் பழையவைகள் ஒழிந்து போயின எல்லாம் புதிதாயின(II கொரி 5 : 17)என்று அப். பவுல் கூறுகிறார். ஒரு மனிதனுடைய பாவம் அல்லது அவனுடைய அக்கிரமச் செயல் அவனைத் தேவனிடமிருந்து பிரித்து விடுகிறது (ஏசா 59 : 2).

எனவே ஒரு மனிதன் தன்னுடைய பாவக்கிரியைகளினின்று விடுவிக்கப்பட்டு கிறிஸ்துவுக்குள்ளாக ஜீவிப்பதற்கு ஞானஸ்நானம் பெற வேண்டும் என்ற பிரதான கட்டளையை ஆலோசனையை தேவன் நமக்கு தந்திருக்கிறார். இந்நாட்களில் அனேகர் இப்படிப்பட்ட தேவ ஆலோசனையை தள்ளி விட்டு தங்களுக்கே கேடுண்டாக்கிக் கொள்ளுகிறார்கள்(லூக் 7 : 30). இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளும் பிரதான காரியம் என்னவென்றால், ஞானஸ்நானம் பாவ மன்னிப்புக் கென்று பெறுவதாகும் (அப 2 : 38). பாவம் போகக் கழுவப்படுவதாகும் (அப 22 : 16 ; யோ 13 : 10). ஞானஸ்நானத்தில்தான் ஒரு மனிதனுடைய பழைய ஜீவியம் மரிக்கின்றது (ரோம 6 : 2, 3). விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன்தான் இரட்சிக்கப்படுவான் (மாற் 16 : 16) என்று நமது அருமை இரட்சகரும் கூறுகிறார். நம்முடைய பாவம் மன்னிக்கப்பட வேண்டுமானால், நாம் அவைகளை அறிக்கை செய்ய வேண்டும் (I யோவா 1 : 8, 9). எனவேதான் யோவான் ஸ்நானனிடம் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள் (மத் 3 : 5, 6). இப்படி பரிசுத்தமான ஒரு வாழ்வைப் பெற்றுக் கொள்வதுதான் கிறிஸ்துவை தரித்துக் கொள்ளுதலாகும் கலா 6 : 17 ; ரோமன் 13 : 14).

மேலும் அந்த ஸ்திரீயின் தலையின் மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடமும் இருந்தன (வெளி 12 : 1) என்று வாசிக்கிறோம். கிரீடம் ராஜாக்களுக்கும், ஆசாரியர்களுக்கும் உரியதாகும். ஆரோனைப் போல் தேவனால் அழைக்கப்பட்ட தேவனுடைய ஊழியர்களை இது குறிப்பிடுகிறது. தேவனுக்கு ஆராதனை செய்பவர்களாகவும், தேவனுடைய மந்தையை மேய்த்து ஆண்டு நடத்துகிறவர்களாகவும் இருக்கிறார்கள். ஆகையினால் இந்தக் கிரீடமானது அப்போஸ்தலருடைய ஆளுகையைக் குறிப்பிடுகிறது.

அடுத்து அந்த ஸ்திரீயின் பாதங்களின் கீழே சந்திரன் இருந்ததென்று(வெளி12: 1)ல் வாசிக்கிறோம். சூரியனுக்கும், நட்சத்திரங்களுக்கும் ஆளத்துவை கொடுத்து வேதத்தை விளக்குகிறவர்கள் இந்த சந்திரனைக் குறித்து சரியான விளக்கங்கள் தருகிறதில்லை. சந்திரனைப் போல் விசுவாசத்தில் நிலைத்து நிற்பது என்று விளக்கம் தருகிறார்கள். நான்-தான் மனுஷ குமாரன் என்று சொல்லித் திரிகின்ற ஒருவரிடம் இந்த சந்திரனைக் குறித்து விளக்கம் கேட்ட பொழுது அவர் தந்த பதில்: இந்த சந்திரன் பெயர் கிறிஸ்தவ சபைகளாகும். அதை தங்களுடைய காலால் உதைத்து தள்ளிவிட்டு வெளியே வருபவர்கள் மணவாட்டிகளாவார்கள். ஆகையால்தான் பரிசுத்த ஆவியானவர் இப்படி எழுதி வைத்திருக்கிறார் என்று கூறினார். பரிதாபமான பதில்.

பிரியமானவர்களே, இந்த சந்திரனே இரவை ஆளுவதற்காக இருளில் இருக்கும் ஜனங்களுக்கு (சூரியனிடமிருந்து ஒளி பெற்று) வெளிச்சம் தருவதற்காக தேவன் படைத்த மகத்தான சுடராகும். நட்சத்திரங்கள் ஏராளம் உண்டு. ஆனால் சந்திரன் ஒன்றே. நட்சத்திரங்களை பரிசுத்தவான்கள் என்றும், அநேகரை நீதிக்குட்படுத்துகிறவர்கள் (தானி 12 : 3) என்றும் வேதம் கூறும் பொழுது இந்த சந்திரனைக் குறித்து நாம் அறியாதிருந்தால் நாம் எப்படி வெளிப்படுத்தல் ஆகமத்திற்கு பூரணமாக விளக்கம் கொடுக்க முடியும்? தெரிய முடியும்.

ஆகையால் வேதத்தை அறிந்தவர்களே திறந்த மனதோடு வேதவாக்கியங்களை ஆராயுங்கள். அப்பொழுது அவைகள் உங்களுக்கு விளங்கும். அன்று நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பன்னிரண்டு அப்போஸ்தலர்களை தமக்கு தெரிந்து கொண்ட பொழுது அவர்களில் பேதுருவை முதன்மையானவராக வைத்தார் என்று பார்க்கிறோம். அன்று பேதுருவைப் பார்த்து "இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன் (மத்16 : 18)என்று நமது கர்த்தர் கூறினார். அது போல் இந்தக் கடைசி காலத்திலும் எழும்பக் கூடிய திருச்சபையின் மாதிரியை அப். யோவானுக்குத் தேவன் காண்பித்தார்.

பரலோகத்தை பகல் என்றும், இந்த உலகத்தை இருள் நிறைந்த உலகம் என்றும் வேதம் கூறுகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்தில் இருந்த காலம் உலகத்துக்கு பகல் காலமாகும் (யோ 9 : 5; 12 : 35, 46). பரலோகத்தில் இயேசுக் கிறிஸ்து நீதியின் சூரியனாய் பிரகாசித்துக் கொண்டிருப்பது போல அவரிலிருந்து ஒளி பெற்று பாவ இருள் நிறைந்த உலகத்திற்கு ஒளி கொடுக்க ஒரு சந்திரனாகிய பரிசுத்தவானும் தேவை என்பதையும், அவர் மூலமாக, அல்லது அவரிலிருந்து அந்த சபை உருவாகிறது என்பதையே நமக்கு விளக்குகின்றது. ஸ்திரீயானவள் புருஷனிலிருந்து தோன்றுகிறதுபோல, புருஷனும் ஸ்திரீயினால் தோன்றுகிறான். சகலமும் தேவனால் உண்டாயிருக்கிறது (I கொரி 11 : 12).

பிரியமானவர்களே, இவ்விதமாய் மகிமையடைந்த சபையிலிருந்து ஓர் ஆண் பிள்ளை பிறப்பிக்கப்பட்டு அது தேவனிடத்திற்கும், தேவனுடைய சிங்காசனத்தினிடத்திற்கும் எடுத்துக் கொள்ளப்பட்டது. இனி அந்த ஆண்பிள்ளையை பெற்ற சபை என்ன ஆனது? என்பதை நாம் அறிந்து கொள்வது நல்லது. ஒரு காரியத்தை தவறாய் சொல்லி விட்டால் அதைச் சார்ந்த இன்னொரு காரியமும் தவறாகவே சொல்ல வேண்டியதாகி விடுகிறது. அந்த ஸ்திரீ பெற்றெடுக்கும் ஆண்பிள்ளையை முதல் வருகையில் எடுத்துக் கொள்ளப்படும் பரிசுத்தவான்கள் என்று பலர் விளக்கம் தந்து விட்டார்கள். பூரணமாக்கப்பட்ட சபையையே கைவிடப்பட்ட சபை என்று விளக்குவார்களானால் இப்படிப்பட்டவர்களிடம் இருந்து நாம் வேறொரு இரகசியத்தையும் அறிந்து கொள்ள முடியாதே.

நாம் வெளி. 12-ம் அதிகாரத்தையே மறுபடியும் வாசிப்போம். 12 13-ல் வலுசர்ப்பமானது தான் பூமியிலே தள்ளப்பட்டதை அறிந்து அந்த ஆண் பிள்ளையை பெற்ற ஸ்திரீயை துன்பப்படுத்தினது. சிலர் பிரசங்கிக்கிறது (எழுதுகிறது) போல் தேவதூதர்களில் ஒருவராகிய மிகாவேல் இந்த வலுசர்ப்பத்தை கீழே தள்ளியிருந்தால் இந்த ஸ்திரீயை இந்த வலுசர்ப்பம் துன்பப்படுத்தியிருக்க வேண்டாம். இந்த ஸ்திரீயினிடம் பிறந்த ஆண்பிள்ளையே வலுசர்ப்பத்தை கீழே தள்ளி விட்டபடியால் தான் இந்த சாத்தானுக்கு ஸ்திரீயின் மேல் கோபம்வந்து விட்டது.

இதற்குரிய விளக்கத்தை நாம் ஆதியாகமத்திலேயே காணுகின்றோம். ஆதி 3 : 15-ல் உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகையுண்டாக்குவேன். அவர் உன் தலையை நசுக்குவார் நீ அவர் குதிங்காலை நசுக்குவாய் என்று இப்பொழுது உள்ள மொழி பெயர்ப்பில் இருக்கிறது. ஆனால் இது சரியானதல்ல. It shall bruise thy head and thou shall bruise his heel" (அது உன் தலையை நசுக்கும் நீ அதின் குதிங்காலை நசுக்குவாய்) என்றிருக்க வேண்டும் (பழைய மொழி பெயர்ப்பில் இப்படியிருக்கிறது).

இயேசு கிறிஸ்து ஸ்திரீயின் வித்தல்ல. அவர் தேவனுடைய வித்து (I யோ 3 : 9) அவர் ஸ்திரீயின் வித்தாய் இருந்தால் அவர் தேவனாய் இருக்க மாட்டார். அவரும் பாவியாகவே காணப்படுவார். அவர் காலம் நிறைவேறின போது ஸ்திரீயினிடம் பிறந்தார் என்றே வேதம் கூறுகிறது (கலா 4 : 5). இன்னும் சிலர் சாத்தான் இயேசு கிறிஸ்துவின் குதிங்காலை நசுக்கினது அவரை சிலுவையில் அறையச் செய்ததாகும் என்று தைரியமாய் தேவ தூஷணமாய் சொல்லுகிறார்கள். அவர் நம்முடைய மீட்புக்காக தம்மை ஒப்புக் கொடுக்கவே

அவர் பரலோகம் விட்டு இந்த பூலோகத்துக்கு வந்தார் என்றே வேதவாக்கியங்கள் கூறுகிறது.

ஆகையால் ஆதி 3 : 15-ன் விளக்கம் என்னவென்றால் வெளி. 12-ம் அதிகாரத்தில் நாம் வாசித்த சபையாகிய ஸ்திரீயோடும், அதன் வித்தாகிய ஆண்பிள்ளையோடும் அது போராடுகிறது (எபே 6 : 12). சமாதானத்தின் தேவன் சீக்கிரமாய் சாத்தானை உங்கள் கால்களின் கீழே நசுக்கிப் போடுவார் (ரோ 16 : 20) என்று எழுதியிருக்கிறதே.

இப்பொழுது, "ஸ்திரீயானவள் அந்த பாம்பின் (தள்ளப்பட்ட வலுசர்ப்பம்) முகத்திற்கு விலகி, ஒரு காலமும், காலங்களும், அரைக்காலமுமாகப் போஷிக்கப்படத்தக்கதாய் வனாந்தரத்திலுள்ள தன் இடத்திற்கு பறந்து போகும்படி பெருங்கழுகின் இரண்டு சிறகுகள் கொடுக்கப்பட்டது (வெளி 12 : 14) என்று எழுதியிருக்கிறது. மேலே கூறியிருக்கும் ஒருகாலம், காலங்கள், அரைக்காலம் என்பது 3½ வருடங்களைக் குறிப்பிடும். அந்திக்கிறிஸ்து இந்த உலகத்தை 7 வருடம் ஆளுகை செய்வான். அதில் முந்திய பகுதியாகிய 3½ வருடத்தை இந்தக் காலங்கள் குறிப்பிடுகின்றது.

சிலர் பிரசங்கிப்பது போல் தடை செய்கிறவர் பரிசுத்த ஆவியானால் அது நடுவிலிருந்து நீக்கப்பட்டபின் இந்த உலகத்தில் பரிசுத்த ஆவியானவர் இருக்கமாட்டாரே. மேற்படி ஸ்திரீ வனாந்தரத்திலுள்ள பாதுகாவலான இடத்துக்குப் பறந்து செல்லும்படி பெருங்கழுகின் சிறகு (ஆவியின் நிறைவு ஏசா 40 : 31) கொடுக்கப்பட மாட்டாதே.

ஒரு போதகரிடம் இந்தக் காரியமாய் பேசினபோது அவர் சொன்னதாவது. பாதிப் பரிசுத்தாவியானவர் இங்கே இருப்பார். பாதிப் பரிசுத்தாவியானவர் பரிசுத்தவான்களை எடுத்துக் கொண்டு போய் விடுவார் என்று கூறினர். குழப்பமான பதில். ஆவியானவரின் துணையோடு நாம் வேத வாக்கியங்களை ஆராய்வோமாக. வெறும் ஒத்தவாக்கியங்கள் மூலம் வேதத்தின் ரகசியங்களை நாம் அறிந்து கொள்ள முடியாது.

இந்த ஸ்திரீயானவள் 3½ வருடகாலம் போஷிக்கப்படும்படி வனாந்தரத்திலுள்ள அதற்காக தேவன் ஆயத்தமாக்கியுள்ள தன்னுடைய இடத்திற்கு போகிறதாக நாம் வாசிக்கிறோம் (வெளி 12 : 14).

இந்த உலகத்தில் அந்திக்கிறிஸ்துவின் ஆட்சி நடந்து கொண்டிருக்கும். ஆக்கப்பட்டவை அனைத்தும் அரசாங்கத்திற்குச் சொந்தமாகிவிடும். அந்திக்கிறிஸ்துவாகிய அந்த மிருகத்தின் முத்திரையாகிய 666 என்ற எண்ணை வலது கையிலாவது, நெற்றியிலாவது தரித்துக் கொள்ளாதவர்கள் இந்த உலகத்தில் பொருள்கள் வாங்கவோ, விற்கவோ, தொழிற் செய்யவோ கூடாதபடி சட்டம் பிறப்பிக்கப்படும் (வெளி 13 : 16-18).

எனவே தேவன் தம்முடைய மணவாட்டியாகிய தம்முடைய சரீரமாகிய சபையை போஷித்து காப்பாற்றுகிறதற்காக (எபே 5 : 29) இந்த 3½ வருடங்களுக்கும் ஆயத்தமாக்கப்பட்ட ஓர் இடத்திற்கு சபை கடந்து போகும்படி செய்வார் (ஏசா 30 : 20, 21; மீகா 7 : 14). ஆமென்!

---

உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகையுண்டாக்குவேன்
—ஆதி 3 : 15.

---

# வேதபாடம்

ஆதி 42 : 1-9 எகிப்திலே தானியம் உண்டென்று யாக்கோபு அறிந்து தன் குமாரரை நோக்கி நாம் சாகாமல் உயிரோடிருக்கும்படி நீங்கள் எகிப்துக்குப் போய் தானியம் வாங்கி வாருங்கள் என்றார். யோசேப்பின் சகோதரர் 10 பேர் தானியம் கொள்ளும்படி எகிப்துக்குப் போனார்கள். யோசேப்பு அதிபதியாக இருந்து எல்லோருக்கும் தானியங்களை விற்றுக் கொண்டிருந்தான். யோசேப்பின் சகோதரர் வந்து முகங்குப்புற தரையிலே

விழுந்து யோசேப்பை வணங்கினார்கள். வந்திருப்பது தன் சகோதரர்கள் என்று யோசேப்பு கண்டு கொண்டார். ஆனால் யோசேப்பின் சகோதரர்களுக்கோ யோசேப்பை அடையாளம் தெரியவில்லை. யோசேப்புக்கு தான் அவர்களைக் குறித்துக் கண்ட சொப்பனம் நினைவுக்கு வந்தது. யோசேப்பு அவர்களைப் பார்த்து நீங்கள் வேவுக்காரர்கள்; வேவு பார்க்க வந்தீர்களோ என்று கேட்டார்.

**ஆதி 42 : 10-25** யோசேப்பின் சகோதரர்கள் பயந்து நாங்கள் வேவுகாரர்கள் அல்ல. ஒரே தகப்பனுடைய பிள்ளைகள். நாங்கள் பன்னிரெண்டு பேர். எங்களில் ஒருவன் காணாமற்போனான். எல்லோருக்கும் இளையவன் கானான் தேசத்தில் எங்கள் தகப்பனுடன் இருக்கிறான் என்றார்கள். அப்பொழுது யோசேப்பு நீங்கள் வேவுக்காரர்கள் என்று நான் சொல்வது சரி. உங்கள் இளைய சகோதரன் இங்கு வந்தாலொழிய உங்களை நான் விடுவதில்லை என்று சொல்லி அவர்களை மூன்று நாட்கள் காவலில் வைத்தார்.

பின்பு அவர்களை விடுதலையாக்கி சிமியோனை மாத்திரம் காவலில் வைத்து மற்றவர்களை அவர்களுக்கு வேண்டிய தானியங்களைக் கொடுத்து அவர்கள் தகப்பனிடத்திற்குப் போகும்படி அனுப்பினார். அதோடு கூட நீங்கள் இனி வரும் பொழுது உங்கள் இளைய சகோதரனை அழைத்துக்கொண்டு வந்து, நீங்கள் உண்மையுள்ளவர்கள் என்று காண்பித்து விட்டு பின், இந்த உங்கள் சகோதரனையும் அழைத்துக் கொண்டு போகலாம் என்று கட்டளையிட்டான். யோசேப்பின் சகோதரர்கள் தங்களுக்குள்ளே கலக்கமடைந்து நாம் நம்முடைய சகோதரனாகிய யோசேப்புக்கு செய்த துரோகம் நம்மேல் சுமந்தது. அவனுடைய இரத்தப்பழி நம்மிடத்தில் வாங்கப்படுகிறது என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள். யோசேப்பு மொழிபெயர்ப்பாளர் உதவியுடன் அவர்களுடன் பேசினபடியால் தாங்கள் பேசினது யோசேப்புக்குத் தெரியாது என்று எண்ணினார்கள்.

**ஆதி 42 : 26-38** யோசேப்பின் சகோதரர்கள் வழியிலே தங்கள் சாக்குகளைத் திறந்த போது அவரவர் சாக்கிலே அவரவர்கள் கொண்டு சென்ற பணம் வைக்கப்பட்டிருந்தது. அவர்களுக்கு மேலும் கலக்கமாகிவிட்டது. அவர்கள் தகப்பனிடத்திற்கு திரும்பி வந்து நடந்த காரியங்களை விவரமாக தங்கள் தகப்பனாகிய யாக்கோபுக்கு சொன்னார்கள். அப்பொழுது யாக்கோபு உங்களுக்கு இன்னும் ஒரு சகோதரன் மீதியாயிருக்கிறான் என்று ஏன் சொன்னீர்கள். யோசேப்பும் இல்லை. சிமியோனும் இல்லை, பென்யமீனையும் கொண்டு போகப் பார்க்கிறீர்கள் இதெல்லாம் எனக்கு விரோதமாய் நேரிடுகிறது என்றார்.

**ஆதி 43:1-10** அவர்கள் கொண்டுவந்த தானியம் செலவழிந்து போயிற்று. யாக்கோபு தன் புத்திரர்களைக் கூப்பிட்டு எகிப்துக்குப் போய் தானியம் வாங்கி வரும்படி சொன்னார். பென்யமீனை எங்களுடன் கூட அனுப்பாவிட்டால் நாங்கள் போக மாட்டோம் என்று சொன்னார்கள். யாக்கோபுக்கோ பென்யமீனை அனுப்ப சம்மதியில்லை. பென்யமீனுக்கு ஏதாவது மோசம் வருமென்று பயந்தார். யூதா பென்யமீனுக்காக உத்திரவாதம் பண்ணுவேன் இவனை எங்களுடன் அனுப்பும். அவனை உம்மிடத்தில் கொண்டுவந்து நிறுத்தா விட்டால் அந்தக் குற்றம் என்மேல் இருப்பதாக அவனுக்காக நான் உத்தரவாதம் பண்ணுவேன். அவனை என்னிடத்தில் கேளும் என்று பொறுப் பெடுத்தான்.

நாம் ஒவ்வொருவரும் நம்முடைய சகோதரர்களை தேவ சந்நிதானத்தில் கொண்டுபோய் நிறுத்த பொறுப்பெடுக்க வேண்டும். அவர்களுக்காக உத்தரவாதம் பண்ண தீர்மானிக்க வேண்டும். யூதா என்றால் ஸ்துதி என்று அர்த்தம். யூதாக்கோத்திரத்தில் தோன்றின இயேசுகிறிஸ்து நம்மை சகோதரர் என்று சொல்லி நம்மை தேவ சந்நிதானத்தில் கொண்டுபோய் நிறுத்த உத்திரவாதம் எடுத்திருக்கிறார். நாமும் இவ்விதமான உத்திரவாதம் உடையவர்களாக விளங்குவோமாக.

ஆதி 43 : 11-26 யாக்கோபு யோசேப்புக்கு காணிக்கைகள் கொண்டு போக ஏற்பாடு செய்து கூட பென்யமீனையும் அனுப்பி வைத்தார். இரட்டிப்பான பணமும் கையிலே கொண்டு சென்றார்கள். யோசேப்பு தன் சகோதரர்களோடுகூட பென்யமீன் வந்திருக்கிறதைக் கண்டு தன் வீட்டிற்கு அவர்களை அழைத்துக் கொண்டுபோய் தன்னோடுகூட அவர்கள் மத்தியானம் சாப்பிடுவதற்கு ஆயத்தப்படுத்தும்படி தன் வேலைக்காரர்களுக்கு கட்டளையிட்டார். வேலைக்காரர்கள் சிமியோனையும் கட்டவிழ்த்து விட்டார்கள். மத்தியானம் யோசேப்பு வீட்டுக்கு வந்ததும் யோசேப்பின் சகோதரர்கள் வீட்டுக்குள் பிரவேசித்து யோசேப்புக்கு முன்பாக காணிக்கைகள் படைத்து அவரை முகங்குப்புற விழுந்து வணங்கினார்கள். யோசேப்பு கண்ட தரிசனம் நிறைவேறிற்று (ஆதி 37 : 7). இதோ சொப்பனக்காரன் வருகிறான் அவனை இப்பொழுது கொன்று போட்டால் அவன் கண்ட சொப்பனம் எப்படி நிறைவேறும் என்று யோசேப்பின் சகோதரர்கள் ஒரு காலத்தில் சொன்னார்கள் (ஆதி 37 : 19,20). தேவனோ தாம் வெளிப்படுத்தியவைகளை நிறைவேற்றியே முடிப்பார்.

உலகத்தின் மனிதர்கள் எல்லோரும் தேவனுக்கு துரோகம் செய்து அவரை எதிர்த்து நின்று பாவம் செய்தாலும் தம்முடைய சகோதரர்கள் துரோகம் செய்தாலும், சாத்தானும் அவனால் தூண்டப்பட்ட ஜனங்களும், தேவனுடைய பிள்ளைகளை அடிப்போம் வெட்டுவோம், குத்துவோம், கொல்லுவோம் என்றும் இவர்கள் சொல்வது எப்படி நிறைவேறும் என்று பார்ப்போம் என்று சொல்லி அப்படியே செயல்பட்டாலும் தேவன் சொன்னது, தேவன் திட்டமிட்டது, தேவன் தம்முடைய உண்மையான பிள்ளைகளுக்கு காண்பித்த தரிசனங்கள் வெளிப்படுத்தல்கள் நிறைவேறியே தீரும். சாத்தானல்ல தேவன் சொன்னதே நிறைவேறும். மெஜாரிட்டி அல்ல ஒரு தனித்த மனிதனாய் இருந்தாலும் தேவனே அவரோடு கூட இருந்தால் தேவன் அவருக்கு சொல்லியது நிறைவேறியே தீரும்.

சாத்தானும் அவனுடைய கையாட்களும் செய்கிற துர்க்கிரியைகளையும், தேவன் தம்முடைய சித்தத்தை செய்கிற கருவியாக மாற்றிப்போடுகிறார். ஆனபடியால் தேவனை அறிந்தவர்களே திடமாயிருங்கள். சத்துருக்களுக்குப் பயப்படாதிருங்கள்.

(தொடரும்)

"நீங்கள் எனக்கு தீமை செய்ய நினைத்தீர்கள் தேவனோ அதை நன்மையாக முடிய பண்ணினார்"
ஆதி 50 : 20.

# கர்த்தர் பேசுகிறார்

நம்முடைய தேவனாகிய கர்த்தருடைய தன்மைகளிலொன்று மாறாமலிருப்பது (Unchanging). நான் கர்த்தர். நான் மாறாதவர் (மல் 3 : 6) என்று அவரும் சொல்லியிருக்கிறார். ஆதிகாலமுதலாய் தமக்கு ஏற்ற, தாம் தெரிந்துகொண்ட மனிதர்களோடே அவர் பேசுகிறவராய் இருக்கிறார். ஆதாமோடே பேசினார். நோவாவோடே பேசினார். ஆபிரகாமோடே பேசினார். தாவீதோடே பேசினார். யோவான் ஸ்நானகனோடே, பேசினார். ஆதி அப்போஸ்தலர்களோடே பேசினார். ஆதி திருச்சபையாரோடே பேசினார். இப்படி முன்னோர்களோடேயெல்லாம் பேசிய அந்த மாறாத கர்த்தர் தானே இன்றும் ஜீவிக்கிறார். இந்த நாட்களில் ஜீவிக்கிற நம்மோடே அவர் பேசாதபடி நம்முடைய குணத்தை அவர் மாற்றிக் கொண்டாரோ?

அந்த நாட்களிலே கர்த்தர் பேசி எழுதப்பட்ட திருவார்த்தைகளை வேத புத்தகமாக கைகளிலே வைத்திருந்தாலும், அவைகள் தேவ ஆவியினால் ஏவப்பட்டு தேவனுடைய பரிசுத்த மனிதர்கள் எழுதினார்கள் என்பதை மறுதலிக்கிற கிறிஸ்தவர்களும் உண்டு. அவர்கள் அதை வம்சவரலாறாகவும், நல்ல மனிதர்களாலுண்டான நீதி போதனைகளாகவும், கருதுகின்றனர். இன்னும் சில கிறிஸ்தவர்கள் ஒரு வேளை அவைகளெல்லாம் தேவ ஆவியால் எழுதப்பட்டிருக்கலாம். அப்படியே இருந்தாலும் நமக்கென்ன வென்று எண்ணுகின்றனர். பரிசுத்த வேதாகமத்தை முழுமையாய் நம்புகிற கிறிஸ்தவர்கள் அநேகர் "எல்லாம் புத்தக வடிவில் வேதாகமமாக கையிலே எழுதிக் கொடுத்தாயிற்று" கர்த்தர் பேசி அப்போதே முடித்து விட்டார். ஆகையால் கர்த்தர் முன்பு பேசினது போல் பேசமாட்டார் என நம்புகின்றனர். இதற்கு வேதத்தில் எந்த ஆதாரமும் கிடையாது.

ஆவிக்குரியவர்கள் என்று சொல்லிக் கொள்கிற கிறிஸ்தவர்கள் கர்த்தர் இப்படியெல்லாமா பேசுவார் என்று சொல்லி கர்த்தர் பேசுவதை நம்ப மறுக்கின்றார்கள்.

"நான் உனக்குப் போதித்து, நீ நடக்க வேண்டிய வழியை உனக்குக் காட்டுவேன், உன்மேல் என் கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்" (சங் 32 : 8). "எவர்கள் தேவ ஆவியால் நடத்தப்படுகிறார்களோ அவர்கள் தேவனுடைய புத்திரராயிருக்கிறார்கள்" (ரோம 8 : 14). ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு ஆக்கினைத் தீர்ப்பில்லை (ரோம 8 : 1). கிறிஸ்துவின் ஆவியில்லாதவன் அவருடையவனல்ல

"கடைசி நாட்களில் (நாளில்லை) நான் மாம்சமான யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன்" என்ற வாக்குத்தத்தத்தை அநேகர் நம்பி பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்கிறார்கள். ஆனால் இந்தப் பரிசுத்த ஆவியை ஒருவன் பெறும் போது அந்த ஆவியினால் அவன் பெறும் அனுபவம் தொடர்ந்து எழுதப் பட்டிருந்தாலும், அதை விசுவாசிப்பது கிடையாது. "கடைசி நாட்களில் மாம்சமான யாவர்மேலும் என் ஆவியை ஊற்றுவேன். அப்பொழுது (பரிசுத்தாவியை பெற்றிருக்கும் போது) உங்கள் குமாரரும், குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள், உங்கள் வாலிபர் தரிசனங்களை அடைவார்கள், உங்கள் மூப்பர் சொப்பனங்களைக் காண்பார்கள். (அப் 2 : 17)

மெய்யாகவே ஒரு கூட்டத்தார் பரிசுத்தாவியை பெற்றிருப்பார்களானால், அவர்களுக்குள் தீர்க்கதரிசனங்களும், தரிசனங்களும், சொப்பனங்களும் உருவாகும். இவைகளினாலே கர்த்தர் தம்முடையவர்களோடே பேசுகிறார் இவைகளினாலே பரிசுத்தாவியானவர் தேவனுடைய சித்தத்திற்குள் நடத்துகிறார், வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார் (யோவா 16 : 13).

வேதத்தைப் படித்து ஆராய்வதால் அறிவு பெருத்து, உலகத்தில வரப் போகிற காரியத்தை ஓரளவு அறியலாம். ஆனால் உன்னுடைய வாழ்வில் வரப்போகிற காரியத்தை எப்படி அறிவாய், சாத்தான் உன்னை விழத்தட்ட வழியிலே வைத்திருக்கிறதை எப்படி அறிந்து, ஆயத்தமாகி அதற்குத் தப்புவாய்? சுவிசேஷகர் பிலிப்பு வீட்டிலே அப்போஸ்தலர் பவுல் தங்கியிருக்கையில் தீர்க்க தரிசி அகபு, பவுலுடைய கச்சையை எடுத்து தன் கைகளையும், கால்களையும் கட்டிக் கொண்டு இந்தக் கச்சையுடையவனை எருசலேமிலுள்ள யூதர்கள் இவ்விதமாய் கட்டிப் புறஜாதியார், கைகளில் ஒப்புக் கொடுப்பார்கள் என்று பரிசுத்தஆவியானவர் சொல்லுகிறார் என்றான் (அப் 21:8-11). இவ்விதமாய் பவுலுக்கு வரப் போகிற காரியத்தை பரிசுத்தாவியானவர் முன்னறிவித்து அவர் அந்த சோதனையை ஏற்றுக் கொள்ள அவரை ஆயத்தப் படுத்தினார். நீங்கள் எல்லோரும் இப்படிப்பட்ட தீர்க்கதரிசனம் சொல்ல வேண்டுமென விரும்புகிறேன், என அப். பவுல் தன் சபையாரை வேண்டிக் கொண்டார் (1 கொரி 14 : 1).

வரப்போகிற காரியங்கள், நற்காரியங்கள், துர்க்காரியங்கள் இவைகளை கர்த்தர் வெளிப்படுத்தும் பொழுது அவைகளை புரிய முடியாமல், உணர முடியாமல் இருக்கும்

(லூக் 19 : 34). ஆனால் அந்தச் சம்பவம் நிகழும் போது, அது நற்காரியமானால் நாம் சந்தோஷப்பட்டு இறைவனுக்கு நன்றி செலுத்தவும், நம்முடைய விசுவாசம் வர்த்திக்கப்படவும் ஏதுவுண்டாகிறது. துர்க்காரியமானால், கர்த்தர் ஏற்கனவே வெளிப்படுத்தினதுதானே. அதுவும் தேவனுடைய சித்தமேயென்று ஆறுதல் அடையவும், விசுவாசத்தில் நிலை நிற்கவும் உதவியாய் இருக்கிறது.

ஒரு வேலைக்காக பல இடங்களில் விண்ணப்பித்த ஒரு விசுவாசிக்கு இரண்டு அல்லது மூன்று இடங்களிலிருந்து உத்தியோகத்து ஆர்டர் (appointment order) வருகிறதென்று வைத்துக் கொள்வோம். இவர் ஒன்றைத் தெரிந்தெடுக்க வேண்டும். எந்த வேத வாக்கின்படி இவர் தேவ சித்தத்தை தெரிந்துகொள்ள முடியும். மனித ஞானத்தின்படி ஆலோசனை பெற்றால் லோத்து, பசுமையைப் பார்த்து சோதோமுக்குள் போனது போலாகும். பரிசுத்தாவியானவர் தேவனுக்குச் சித்தமானதை வெளிப்படுத்தியே ஆக வேண்டும். பாருங்கள், அப்போஸ்தலர்கள் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை பிரசங்கிக்க கட்டளை பெற்றிருந்தனர். ஆனாலும் பவுலும் அவரைச் சேர்ந்தவர்களும் ஆசியாவிலே அந்தச் சமயத்தில் வசனத்தைச் சொல்லாதபடிக்கு பரிசுத்தாவியால் தடை பண்ணப்பட்டார்கள் (அப். 16 : 6). இந்த அனுபவம் ஒரு ஊழியருக்கு இல்லாவிட்டால், தரிசு நிலத்தில் போய் விதைத்து விட்டு, காற்றை அறுக்க நேரிடுமல்லவா. மேலும் அவர்கள் ஆவியானவரால் நடத்தப்பட்டு துரோவாவில் தங்கியிருக்கையில், பவுலுக்கு இராத்திரியிலே தரிசனம் உண்டாயிற்று. அதென்னவெனில், மக்கெதோனியா தேசத்தான் ஒருவன் வந்து நின்று, நீர் மக்கெதோனியாவுக்கு வந்து எங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று பவுலை வேண்டிக் கொண்டதாக இருந்தது. அந்தத் தரிசனத்தின் அடிப்படையில் மக்கெதோனியருக்கு சுவிசேஷத்தை அறிவிக்கும்படி கர்த்தர் தங்களை அழைக்கிறார் என்று நிச்சயித்துக் கொண்டு உடனே மக்கெதோனியாவுக்குப் போய் தேவசித்தம் செய்தார்கள் அப். 16 : 8-10).

இதுவல்லவா கர்த்தருடைய ஊழியம். நீ கர்த்தருக்கல்லவா வேலைக்காரன், அவர் சொல்லுகிறபடிதானே செய்ய வேண்டும். அவர் எதுவுமே உனக்குச் சொல்லாதிருக்கையில் நீ அவருடைய வாசற்படியில் தானே காத்துக் கிடக்கவேண்டும். நீயாக எங்காவது இஷ்டத்துக்கு ஓடிப்போனால், அதற்கு அவர் பொறுப்பல்லரே. ஒரு வாலிபன் ரோடு வழியாகப் போனான். ரோடெல்லாம் குண்டும், குழியுமாகக்கிடந்தது. ஐயோ ரோடு இப்படிக் கிடக்கிறதே என வீட்டில் போய் மண் வெட்டியும் கூடையும் கொண்டு வந்து மண்ணை வெட்டிச், சுமந்து குழிகளை நிரப்பினான். மிகவும் கஷ்டப்பட்டு உழைத்தான். உஷ்ணத்தைப் பார்க்கவில்லை. தான் பெரிய தியாகம் செய்வதாக நினைத்தான். மாலை வந்ததும் கார்பரேஷன் ஆபீஸுக்கு நடந்து சென்று நான் இப்படிச்செய்தேன். எனக்குக் கூலியைத் தாருங்கள் என்று கேட்டான் அங்குள்ள அதிகாரி கோபமடைந்து உன்னை யார் இதைச் செய்யச் சொன்னது? அதிகப் பிரசங்கி, ரோட்டையெல்லாம் மண்ணாக்கிப் போட்டாயே, நாங்கள் ரோடு போட வேண்டுமானால் அவைகளைச் சுத்தம் செய்ய வேண்டுமே எனக் கடிந்து கொண்டார். இப்படிப்பட்ட மூடர்களாக இந்நாட்களில் அநேகர் ஊழியம் செய்கிறார்கள் இவர்கள் கட்டளை பெறாமல் தாறுமாறானதை போதித்து, அநேகரை இடறப்பண்ணி மெய் சத்தியத்திற்குள்வரத் தடைபண்ணுகிறார்கள். கர்த்தர் ஒருவனை அழைப்பாரானால், அவனை அனுப்புவார். எங்கே போக வேண்டும் எனச் சொல்லி அனுப்புவார், என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்பதை எல்லாம் தெளிவாக காண்பிப்பார். இயேசுவே முன்மாதிரி, பிதா சொல்ல குமாரன் காண்கிறதெதுவோ, அதுவல்லாமல் தாமாக ஒன்றும் செய்ய மாட்டார்.

விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: வியாதியஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள். அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் (மாற் 16: 17, 18). நீ விசுவாசமுள்ளவன்தானே, ஆஸ்பத்திரிகளிலெல்லாம் எத்தனை ஆயிரங்கள் வியாதியால் அலறுகிறார்களே, போய் எல்லாரையும் எழுப்புவது தானே. இதை

உனக்குச் செய்ய முடியாவிட்டால் நீ விசுவாசமுள்ளவன் அல்ல என்று அர்த்தமா? இந்தக் காரியத்தை நடப்பிப்பது நீ அல்ல. பரிசுத்தாவியானவர் செய்ய வேண்டும். அவர் தனக்கு சித்தமானவனை சொஸ்தமாக்க உன்னை ஜெபிக்கும்படி ஏவ வேண்டும். அவர் ஏவுகிற சமயத்தில், அவர் எந்த வியாதியஸ்தன் மேல் கை வைக்கச் சொல்லுகிறாரோ அவன் நிச்சயமாகவே சொஸ்தமாவான்.

லிஸ்திராவிலே ஒருவன் பிறந்தது முதல் சப்பாணியாய் இருந்தான். அவன் பவுல் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அப். பவுல் அவனை உற்றுப் பார்த்து இரட்சிப்புக் கேற்ற விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டார். எப்படிக் கண்டார்? ஆவியானவர் நடத்தினார். நீ எழுந்து காலூன்றி நிமிர்ந்து நில் என்று உரத்த சத்தமாய்ச் சொன்னார் (அப் 14: 8-10).

நாங்களும் பரிசுத்தாவியைப் பெற்றிருக்கிறோமே. எங்களுக்கு இப்படிப்பட்ட அனுபவம் இல்லையே எனக் கேட்கிறீர்கள். உங்கள் மேல் கன நித்திரையின் ஆவி வந்திருக்கிறது. (ஏசா 29:10). வாயினால் கர்த்தரிடத்தில் சேருகிறீர்கள். உதடுகளினால் கனம் பண்ணுகிறீர்கள். உங்கள் இருதயமோ கர்த்தருக்குத் தூரமாய் இருக்கிறது. இருதயம் இறைவனால் நிரப்பப்படாமல், அசுத்தத்தினாலும், சிற்றின்பங்களாலும், பொருளாசையினாலும், பெருமையினாலும், பொறாமையினாலும் நிரப்பப்பட்டிருக்கிறது. ஆகையால் உங்களிடம் கர்த்தர் பேச முடியாது. (ஏசா 29: 13, 11, 12)

இருதயத்தில் சுத்தமுள்ளவன் பாக்கியவான். அவன் தேவனைத் தரிசிப்பான் (மத் 5: 8) கர்த்தர் அவனோடே பேசுகிறார்.

ஆகாப் ராஜா முன்னிலையில் 400 கள்ளத்தீர்க்கதரிசிகள், பொய்யின் ஆவி வந்ததால், ஆகாப் யுத்தத்திற்குப் போகும்படி தீர்க்கதரிசனம் சொன்னார்கள். இதை அயோக்கியன் ஆகாப் ஏற்றுக் கொண்டான் ஆனால் கர்த்தருக்குப் பயந்த யோசபாத் எளிதாக அதனை பெரும் தவறு எனக் கண்டு கொண்டான். ஆகையால் உண்மையான கர்த்தரின் தீர்க்கனை அழைக்க ஏற்பாடு பண்ணினான். அப்படியே மிகாயா வந்து கர்த்தரின் ஆவியால் பேசினார் (1 இராஜா 22 அதி).

இந்நாட்களிலும் திரளான கள்ளத் தீர்க்கர்களும், பிசாசினால் தீர்க்கதரிசனம் சொல்கிற ஸ்திரீகளும் எங்கும் சுற்றித்திரிகிறார்கள். அவர்களுடைய கனிகளினால் அவர்களை அறியலாம். அதே சமயம் மிகாயாவிடம் பேசிய கர்த்தரும் சுத்தர்களிடம் பேசுவார் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். பரிசுத்தாவியால் பேசுகிற ஒருவன் வேதவாக்கியத்திற்கு மாறாகப் பேச மாட்டான். வேதமே உரைகல். கர்த்தர் பேசுகிறார். இந்த அனுபவத்தைப் பெற ஆவியிலே வளருவோமாக. மெய்ச்சபையோடு ஐக்கியமாவோமாக.

---

வேதத்தையும், சாட்சி ஆகமத்தையும் கவனிக்க வேண்டும். இந்த வார்த்தையின்படியே சொல்லாவிட்டால் அவர்களுக்கு விடியற்காலத்து வெளிச்சமில்லை (ஏசா 8: 20).

---

# குடும்பம்

## மாதர் பகுதி

(தொடர்ச்சி)

தினந்தோறும் நல்லமுத்து சாரோனின் வீட்டிற்குவந்து அவளுக்கு உதவி செய்தும், நல்லாலோசனைகள் கொடுத்தும் வந்ததோடு குடும்ப ஜெபம் செய்யவேண்டும் என்று சொல்லி சாரோனையும் அவள்பிள்ளைகளையும் கூட்டி பாட்டுபாடி வேதம் வாசித்து ஜெபம் பண்ண உற்சாகப்படுத்தினாள். சாரோனின் காயம் ஆற அநேக நாள் ஆயிற்று. அவளுடைய காயம் ஆறி அவள் பெலப்பட்டாள், சாரோனின் பிள்ளைகளையும் நல்லமுத்து தன் வீட்டிற்கு அழைத்துப் போய் தங்கள் வீட்டு ஜெபத்தில் கலந்து கொள்ளப் பண்ணினாள்.

அங்கே ஞானசிகாமணி வாத்தியாரின் பிள்ளைகளான விக்டரும், வில்லியும் ஆகிய இருவரும் சுத்தமாய் உடுத்தி சந்தோஷமாயிருப்பதையும், அவர்கள் இயேசுவிடம்

ஜெபம்பண்ணுகிறதையும், பாட்டுகள் பாடி மகிழ்வதையும், சாரோனின் பிள்ளைகள் கண்டு தாங்களும் இறைவனிடம் ஜெபம் பண்ணினால் இவ்வாறு சந்தோஷமாயிருக்கலாம் என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.

அன்று காலையிலே சாரோன் படுக்கையிலிருந்து எழும்பி காலைக் கடமைகளை முடித்துக்கொண்டு காலை ஆகாரம் ஆயத்தம் பண்ணினாள். பின் பிள்ளைகளைக் குளிப்பாட்டி சுத்தமான வஸ்திரம் தரிப்பித்துவிட்டு தானும் வஸ்திரங்களைத் தோய்த்து, குளித்து சுத்தம் பண்ணிக் கொண்டு பிள்ளைகளுக்கு காலை ஆகாரம் பரிமாறி தன் கணவனுக்கும் ஒரு தட்டில் ஆகாரத்தை எடுத்து வைத்து பாய் போட்டு வைத்து பிள்ளைகளை உங்கள் அப்பாவைக் கூப்பிட்டு சாப்பிடச் சொல்லுங்கள் என்று சொல்லிவிட்டு தன் வேலைகளைக் கவனிக்கச் சென்றுவிட்டாள்.

சாப்பிட வந்த வேத மாணிக்கம் தன் மூத்த மகனிடம் இந்த ஆகாரத்தை வைத்தது யார் என்று கேட்பான். அதற்குப் பையன் அம்மாதான் நேற்று நல்லமுத்து மாமி அம்மாவிடம் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அதனால்தான் அம்மா இன்று காலையிலேயே எழும்பி சுறுசுறுப்பாய் இருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன் என்றான்.

வேதமாணிக்கம் சாப்பிட்டு விட்டு சரி இன்று மதியம் நமக்கு சுடுசோறு கிடைக்கும் என்று நினைத்து தன்பையில் கையை விட்டு 8 ரூபாயை எடுத்துக் கொடுத்து கறிக்கு ஏதாவது உன் அம்மாவை வாங்கிக் கொள்ளச் சொல். 2 ரூபாய் இருக்கிறது எனக்கு சினிமாவுக்கு வேணும் என்று சொல்லிவிட்டு தன் வேலைக்குப்போய் விட்டான். மத்தியானம் அவன் வீட்டிற்கு வந்தபோது வீடு பெருக்கி சுத்தமாயிருக்கிறதையும், பிள்ளைகளெல்லாரும் நன்றாய் சுத்தமாய உடுத்தி வீட்டில் இருக்கிறதையும் கண்டு மிகவும் சந்தோஷப்பட்டுக்கொண்டு கைகால்களை சுத்தம் பண்ணிக்கொண்டு வந்து உட்கார்ந்ததும் அவனுடைய வாய்க்கு ருசியான ஆகாரம் சுடச்சுடக் கிடைத்தது. சாப்பிட்டுவிட்டு வேலைக்குப் போய்விட்டு மாலையில் சினிமாவுக்குப் போய்விட்டான்.

தாமதமாய் அவன் வீட்டிற்கு வந்த போது அவன் மனைவி அவனுக்காய் வாசற்படியில் காத்து உட்கார்ந்திருக்கிறதைக் கண்டான். வீதியில் அலங்கோலமாய் கூச்சலிட்டு சண்டை போட்டுக்கொண்டிருக்கும் தன்பிள்ளைகள் வீட்டில் உட்கார்ந்து பாடப் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

அவனைப் பார்த்ததும் பிள்ளைகள் அப்பா என்று சொல்லி ஓடிவந்தன. அவனுக்கு இரவும் நல்ல ஆகாரம் கிடைத்தது. சாப்பிட்டுவிட்டு ஒன்றும் பேசாமல் தூங்கிவிட்டான். மறுநாள் அதிகாலையிலே அவன் விழித்து பார்க்கும்போது அவன் மனைவி சுறுசுறுப்பாய் வேலை செய்து கொண்டிருக்கிறதைக் கண்டான். வெகு நேரம் படுக்கையில் கரண்டு புரண்டு கொண்டிருக்கும் தன் மனைவியின் மாற்றம் அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. காலையுணவை முடித்துவிட்டு வேலைக்குச் சென்றுவிட்டு மதியம் அவன் வீட்டிற்கு வந்தபோது வீட்டில் அவன் ஒரு அதிசயத்தைக் கண்டான்.

(தொடரும்)

---

ஜெபம்இல்லாதவீடு, கூரையில்லாத வீடு.

---

## சிறுவர் பகுதி

# உத்தம குமாரன்

அன்புள்ளம் கொண்ட டாக்டர் ஒருவர் இருந்தார். அவர் மிகவும் நல்லவரும், எல்லோராலும் போற்றும் உத்தமராக விளங்கிவந்தார். ஏழைகள் மீது பரிவும்'

விசேஷமாக நோயாளிகள் மீதும் பரிவும் காட்டி வந்தார். அவரிடத்தில் வரும் எந்த நோயாளியும், நோய் குணப்படாமல் சென்றதே கிடையாது. இவரது அன்பு மக்களது நோயில் முக்கால் பாகத்தை நீக்கிவிடும். ¼ பாகம் மருந்தினுல் குணப் படும். இப்படியாக அவர் ஊருக்கு அருகில் எல்லாம் அவரது பெயர் பிரபலமாகியது.

டாக்டருக்கு வயதும் ஆகிவிட்டது. அவருக்கு ஒரே ஒரு மகன் இருந்தார். பிரியமான மகனுக வளர்த்து வந்தார். மகனும் தனது தகப்பனுரின் விருப்பப்படியே நடந்து வந்தார். தகப்பனுரின் எல்லா பிரமாணங்களேயும், வார்த்தைகளேயும் பின் பற்றி வந்தான். தகப்பனுர் தனது வயதான காலத்தில் மகனே அழைப்பித்து, மகனே எனக்கு வயதும் ஆகிவிட்டது எனது எல்லா செயல்களேயும், எனது குறைிபாடுகள் எல்லாவற்றையும் நீ அறிந்திருக்கின்ருய், நீ எனது விருப்பத்தை எல்லாம் நிறை வேற்றுவாய் என எண்ணுகிறேன் என்று சொல்லி, மேலும் அவர் மகனிடம் நீ டாக்டருக்காக படித்து தேர்ச்சி பெற வேண்டும், அதற்கு அருகில் உள்ள பட்டணத்திற்கு சென்று, நன்ருகப்படித்து தேர்ச்சி பெறவேண்டும்.

பட்டணத்தில் உள்ள சக மாணவர் களின் ஒழுங்கற்ற பழக்க வழக்கங்களுக்கு நீங்கலாகி இருந்து, தேர்ச்சி பெற்று நான் செய்து கொண்டிருக்கும் இம்மகத்தான பணியை பிழையற செய்ய வேண்டும்; அதோடு ஏழைகளுக்கு இரங்கி அவர் களுக்கு நம்மால் முடிந்த உதவிகளே மருத்துவம், பொருள் உதவிகளே செய்ய வேண்டும் என்ருர்.

மகனும் பட்டணம் சென்று தனது டாக்டர் படிப்பைத் தொடர்ந்தார். கல்லூரி மாணவர்களின் போக்குகளும், நடவடிக் கைகளும், அவனே மிகவும் வருத்தச் செய்தது. மகனே *சங்கீதக்காரரின் வார்த் தையின்படி*("துன்மார்க்கருடைய ஆலோசனே யில் நடவாமலும், பாவிகளுடைய வழி யில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்கா ரும் இடத்தில் உட்காராமலும், கர்த்தரு டைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும், பகலும் அவருடைய வேதத்தில் தியானமா யிருக்கிற மனுஷன் பாக்கியவான்" *சங் 1: 1, 2*) நடந்து தனது தகப்பனுரின் திட்டத் தையே மனதில் கொண்டு நடந்து வந்தான். கடைசியில் தனது படிப்பை முடித்து எல்லோரிலும் முதல்மாணவனுக தேர்ச்சியும் பெற்ருன்.

தனது ஊருக்கு வெற்றியுடன் திரும் பினுன். தனது தகப்பனுரிடத்தில் கடந்து வந்து அப்பா நான் உங்களது வார்த்தை யின்படியே நடந்து படித்து முடித்து வெற்றியும் பெற்றேன். இனிமேலும் உங் களது திட்டங்களேயும், எல்லா வழிகளே யும் நிறைவேற்றுவேன் எனக்கூறினுன். அப்பொழுது, தகப்பனுரின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லே.

மகனும் ஆனந்தக் களிப்புற்ருன். தகப்பனும் மகனும் மிகவும் சந்தோஷப் பட்டார்கள்.

பிள்ளேகளே நாமும் நமது பிதாவாகிய தேவனின் எல்லாபபிரமாணங்களேயும் கைக்கொண்டு நடந்து அவரது வார்த்தை களே நிறைவேற்றுவோம். அப்பொழுது நமது பிதாவாகிய தேவன நம்மைக்குறித்து சந்தோசப்படுவார். நாமும் நம்முடைய வாழ்க்கையில் ஆனந்தத்துடன் ஜீவித்து இன்னும் அதிகமான ஆசீர்வாதமும் பெற்றுக் கொள்ளலாம்.

---

எனக்குச் சித்தமானதை நான் தேடா மல், என்னே அனுப்பின பிதாவுக்கு சித்த மானதையே நான்தேடுகிறேன்.

யோ 5 : 30

---

## சாட்சி

கர்த்தராகிய தேவன் இப்பொல்லாத பிரபஞ்சத்திலிருந்து என்னே மீட்டு, தனக் குச் சொந்தமானவனுய தெரிந்தெடுத்தற் காய் தேவனுக்கு நன்றியையும், ஸ்தோத் திரங்களேயும் கூறி என்னுடைய சாட்சியை உங்கள் முன் வைக்கிறேன். கர்த்தருடைய பரிசுத்தமுள்ள நாமத்திற்கு ஸ்தோத்திரம்.

நான் ஒரு இந்து (புறஜாதி) குடும்பத்தில் பிறந்தவன். என் தகப்பனார் ஒரு விவசாயி. இவர் மனைவியின் ஒப்புதலின்றி மறுமணம் செய்துகொண்டார். மறுமனையாட்டியின் உபதேசத்தினால் நானும் என் தாயும் உண்ண உணவுக்கும் உடுக்க உடைக்கும் வழியின்றி வசைச் சொற்களாலும் மிகவும் நெருக்கப்பட்டோம். இத்தனை போராட்டங்களின் மத்தியிலும் ஜீவித்ததாள என்னையும் (வயது 9) ஏழு மாதக் கர்ப்பிணியான என் தாயையும் முடிவில் தள்ளிவிட்டார். வேறு வழியின்றி தாய் வீடு (பாட்டி) சென்று தங்கினோம். என்தாயாருடன் பிறந்தவர்கள் ஐவர் இருந்தும் அவளுக்கு(என்தாயாருக்கு) உதவி செய்வார் யாரும் இல்லை. இரண்டாவ தாய் ஆண்மகனையும் பெற்று கூலிவேலை செய்து, எங்கள் இருவரையும் வளர்த்து படிக்க வைத்தார்கள். நான் பள்ளி இறுதி (S. S. L. C) வகுப்பு படிக்கையில் டெட்டனஸ் என்ற வியாதியில் என் தாய் மரித்துப் போனார்கள். நானும் படிப்பில் தேறினவன் அல்ல. இந்நிலையில் எனக்கு ஏற்பட்ட கொடுமையான நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்த்தேன். அவைகள் என் மனதை மிகவும் நோவச் செய்தது. சில நேரங்களில் தனியில் உட்கார்ந்து வாய் விட்டு அழுவேன். அப்போதெல்லாம் என்னை ஒருவர் தேற்றினார். நீ உன் மனதை தளரவிடாது படிப்பை முடித்து விட்டு உழைக்கப் பிரயாசப்படு. அப்போது உன் தேவைகள் நிறைவேறும் அழுகையும், மனக்கவலையும் இராது என்று என்னை பலப்படுத்துவார். அவரே இன்றளவும் என்னை வழி நடத்துபவராகிய தேவனாகிய இயேசு கிறிஸ்து. "நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை. உன்னைக் கைவிடுவதுமில்லை." என்ற வசனத்தினால் தேற்றினார்.

நான் 5-ம் வகுப்பு வரை R. C. பள்ளியில் படித்ததால் கிறிஸ்துவைப் பற்றி அறிந்திருந்தேன். இன்று நம்மை வழி நடத்தக் கூடியவரும் நம் தேவைகளை கையளிக்க கூடியவரும் அவரே என்று விசுவாசித்தேன். நான் இந்த உலகம் அறியாத இளம் வயதினன். உம் சித்தப்படி என்னை வழி நடத்தும் என்று அவரிடம் சொல்லி விட்டு படித்தேன். S. S. L. C. தேர்ச்சி பெற்று அவருடைய கிருபையினால் I. T. I (தொழிற் கல்வி) இரண்டாண்டும் N. A. C. (அப்ரண்டிஸ்) ஓராண்டும் படித்து தேர்ச்சி பெற்றேன். இப்படியாய் தேவன் என் வாழ்க்கையில் படிப்படியாக முன்னேற்றினார். ஆனால் நானோ இந்த உலகப்பிரகாரமான சீர்கேட்டில் அதிவேகமாக பின்னுக்குத் தள்ளப்பட்டேன். பாவத்திற்கு காரணமான சீர்கேடு (தீய பழக்க வழக்கங்கள்) கள் யாவற்றிற்கும் நான் முற்றிலும் அடிமையானேன். இப்பிரபஞ்சத்தின் லோகாதிபதியாகிய சாத்தான் தன் சகல ஆயுதங்களை (கேட்டிற்கு காரணமானவை)யும் கொண்டு ஆட்டி வைத்தான். மொத்தத்தில் கேட்டின் மகனாகவே ஜீவித்தேன். திருமணம் செய்து கொண்டால் ஒரு கட்டுப்பாட்டில் நடப்போம் என்று எண்ணி 1952-யில் திருமணமும் இந்து முறைப்படி செய்து கொண்டேன். அதன் பிறகும் நான் தீமையை விட்டு விலகவில்லை. என்னுடைய அநீதியின் மொத்த உருவமாக தேவன் என்னை வியாதியின் மூலம் வாதித்தார். எப்படியெனில் கணுக்காலுக்கு மேல் முழங்காலுக்கு கீழ் இடையே இரண்டு கால்களிலும் உள்ள ஒவ்வொரு மயிர்க்கண்களி(வியர்வை துவாரம்)லும் சீழுடன் கூடிய பருக்கள் நிறைந்திருந்தது. இதன் நாற்றம் சகிக்க முடியாத ஒன்று. இதனால் சுமார் ஆறு ஆண்டுகளுக்கு மேலாக வாதிக்கப்பட்டேன். இதனை குணமாக்க என் சம்பாத்தியத்தில் சாப்பிட்டது போக மீதியை வைத்தியத்திற்கு செலவிட்டேன். ஆங்கில மருந்தும், சித்தவைத்தியம், ஆயுர்வேதி, மூலிகை வைத்தியம், கல்லான தெய்வங்களுக்குப் பொருத்தனை இப்படி எல்லாவற்றையும் சந்தித்தேன். இவைகளில் உப்பில்லாத சோறுதான் நான் கண்ட சுகம். சமுதாயத்தில் நான் யாவருக்கும் அருவருப்பானேன். அநேக நேரங்களை நான் தனிமையிலேயே கழித்து வந்தேன். இந்த வேளையில் எனக்கு வேலைக்கு இண்டர்வியூ வந்தது. அது குறித்து நான் சந்தோஷப்பட்டேன். அதில் மருத்துவ சோதனை உண்டு என்று கண்ட போது, என் ஆத்துமாவில் துக்கம் சூழ்ந்து கொண்டது. என் வியாதி மருத்துவரால் கண்டு பிடிக்கப்பட்டால் வேலையில் சேர

முடியாது. தள்ளப்பட்டு விடுவேனோ என்ற பயம் என்னைக் கவ்விக் கொண்டது. இன்னும் 5 தினங்களே உள்ளது. எப்படியாகிலும் வியாதியை குணமாக்க வேண்டும் என்று மருத்துவரை அணுகி களிம்பு போன்ற ஒரு மருந்தைக் காலில் உள்ள பருக்களின் மேல் பூசினேன். மறு நாளில் பார்க்கையில் அது முன்பிருந்ததைவிட இரண்டத்தனையாய் அதிகரித்து கால் வீக்கம் எடுத்தது. நான் மரித்தவன் போல என் பெலன் முழுவதையும் இழந்து விட்டேன். எனக்கு வழி ஒன்றும் தெரியவில்லை. மிகவும் சோர்ந்து போனேன். இரவில் தூக்கமும் என் கண்களுக்குத் தூரமாயிருந்தது நாட்கள் கழிந்தன. மறுநாள் 10 மணிக்கு இண்டர்வியூ. இரவு படுத்துக் கொண்டு சிந்தித்தேன். அன்று சிறுவயதில் நமக்கு ஏற்பட்ட நெருக்கத்தில் நம்மைத் தேற்றினவரை நினைவு கூர்ந்தேன். என் உடலில் உயிர் புகுந்தது போன்ற பெலன் வந்தது. ஆம் அவர் இன்றும் இருக்கிறார். அவர் நம்மை தேற்றுவார். அவர் ஒருவரால்தான் இந்தக் காரியத்தை வாய்க்க பண்ண முடியும் என்று எண்ணினேன்.

(தொடரும்)

---

## விவாகம்

சகோ. சோமணிக்கும், சகோதரி சுதாவுக்கும் 12-2-86 அன்று குளத்துக்கலை என்ற இடத்தில் பரிசுத்த விவாகம் நடைபெற்றது.

சகோ T. கிறிஸ்டோபருக்கும், சகோதரி D பொன்மணிபாய்க்கும் புத்தளத்தில் 10-4-86 அன்று பரிசுத்த விவாகம் நடைபெற்றது.

---

"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்..." லூக் 6:38

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. |
|---|---|---|
| 1. | 13 × 19 Printing Machine | 19000 |
| 2. | 32" Paper cutting Machine | 11000 |
| 3. | Proof Machine 13" × 22" | 800 |
| 4. | English Type | 10000 |
| 5. | Tamil Type & Cabinets | 11900 |

+ Tax 10%
without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

---

எக்காளசத்தம் 30, 31 ● ஜூன். ஜூலை 1986

---

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

#### இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து : தெபோரப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1 : 1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்—மத். 28 : 18; மாற்கு 16 : 15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத். 28 : 19 [இயேசு மாதிரி (Through action)செய்து காண்பித்தார்]

3. திருச்சபையைக் கட்டி (மத். 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா ~~20 : 15-17~~ 20:23
5. அவர்களை ~~அதை~~ மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் யோவா 21:15-17
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1 : 5-8
7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1 கொரி 11 : 23-26.

நான் : ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—நீதி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்— அப். 1 : 1 : 10 : 40-43.

CHIEF PASTOR N LAZAR

# ஆசிரியர் உரை

நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக. கடந்த மே மாதம் 10–ம் தேதி முதல் 21-ம் தேதி வரை கொடைக் கானலில் தேவனுடைய சபையாம் "புதிய எருசலேம் சபை"யின் ஊழியர் மாநாடு நடந்தது. பரலோகமும் பூலோகமும் ஒன்றாயிற்று, கிறிஸ்து பிரசன்னமானார். பரலோகத்திற்கு கடந்து சென்ற பரிசுத்தவான்கள் அப். பரி. பேதுரு, பரி. பவுல், பரி. யோவான், தீர்க்கதரிசியாகிய எலியா, தாவீது இராஜா, யோவான் ஸ்நாநகன் ஆகியோர் கடந்து வந்திருந்தனர். நாங்கள் நிறைவேற்றி முடிக்க முடியாமல் விட்டுச் சென்ற வேலை களை இரகசியங்களை அறிவித்தனர், கேள்விகளுக்கு பதிலளித்தனர். அப். யாக்கோபு ஜெபிக்கும் விதத்தை மாதிரியைக் காண்பித்தார். தேவ தூதர்கள் வரத்தும் போக்குமாயிருந்தார்கள், பாதுகாப்பளித்தனர். இன்றும் சில பரிசுத்தவான்களும் வந்திருந்தனர். தேவ நாமம் மகிமைப் பட்டது. சத்துரு முறியடிக்கப்பட்டான். ஊழியர் மாநாடு வெற்றிகரமாக நடந்தேறி முடிந்தது. அதைத் தொடர்ந்து ஊழியர்களாகிய நாங்கள் எல்லோரும் புதுப்பலன் பரத்திலிருந்து பெற்றுக் கொண்டோம். நாங்கள் உண்மைப்பொருளை தரிசிக்கிறவர்களாய், அவருடைய மகத்துவத்தைக் கண்ணாரக் கண்டவர்களாய், திருச்சபையாருக்கும் தேவனுடைய பிள்ளை களுக்கும் செய்தி அறிவிக்கிறோம். நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ள வர்களாகும்படி நாங்கள் கண்டும் கேட்டும் இருக்கிறதை உங்களுக்கு அறிவிக்கிறோம். எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும், அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவோடும் இருக்கிறது. நாங்கள் சரீரத்தி லிருந்தோமோ, சரீரத்தைவிட்டுப் புறம்பே இருந்தோமோ தேவன் அறிவார். நாங்கள் கண்டது,கேட்டது உண்மை. நீங்களும் இவ்வனுப வங்களைப் பெற்றுக்கொள்ள புதிய எருசலேமாய், சபையாய் அழைக் கிறோம்.

கிறிஸ்துவுக்குள்
Chief Pastor N. LAZAR

Editor : Chief Pastor N. Lazar அவர்கள் ஊழியர் மாநாட்டிற்காகவும், கன்வென்ஷனுக்காகவும் கொடைக் கானல் சென்று விட்டபடியால் ஜூன் மாதப் பத்திரிக்கை வெளியிடமுடியாமல் ஆகிவிட்டது. ஆனபடியால் ஜூன் & ஜூலை ஆகிய இரண்டு மாதங்களுக்கும் சேர்த்து இந்த இதழ் வெளியிடப்படுகிறது.

# தேவன் மனிதனை வழக்காட அழைக்கிறார்

மனிதன் செய்கிற ஒவ்வொரு குற்றங்களும், மீறுதல்களும் நம்முடைய பிதாவாகிய தேவனுக்கு விரோதமாகவே செய்யப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் இறைவனாகிய ஆண்டவருக்கு முன்பாக குற்றவாளியாகவே காணப்படுகிறான். மனுக்குலத்தை நேசிக்கும் ஆண்டவர் மனிதன் செய்து வருகிற தப்பிதங்களை, குற்றங்களை அவனுக்கு நினைப்பூட்டி அவனோடு வழக்காடி அவனுக்கு விடுதலை வாங்கிக்கொடுக்க வேண்டும் என்று தேவனாகிய கர்த்தர் விரும்புகிறார்.

"வழக்காடுவோம் வாருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். உங்கள் பாவங்கள் சிவேரென்றிருந்தாலும் உறைந்த மழையைப் போல் வெண்மையாகும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப் போலாகும் (ஏசா 1:18) என்று வேதம் கூறுகிறது. இன்னும் ஓசியாவைக் கொண்டு கர்த்தர் கூறும் பொழுதும், "இஸ்ரவேல் புத்திரரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்; தேசத்துக் குடிகளோடே கர்த்தருக்கு வழக்கு இருக்கிறது ............ (ஓசி 4:1) என்றும் கர்த்தர் கூறுகிறார்.

குற்றஞ்சாட்டப்படுகிறவரும், குற்றஞ்சாட்டப்பட்டவரும் வழக்காடுவதற்காக நீதிமன்றத்திற்கே செல்வார்கள். அப்படியே நம்முடைய தேவனாகிய கர்த்தரும் தம்மால் குற்றஞ்சாட்டப்பட்ட தமக்கு விரோதமான குற்றங்களைச் செய்து வருகிற மனித சமுதாயத்தோடு வழக்காடுவதற்காக அவர்களையும் ஒரு நீதி மன்றத்திற்கு அழைக்கிறார் என்று நாம் அறிய வேண்டும்.

"கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள்; நீ எழுந்து பர்வதங்களுக்கு முன் உன் வழக்கைச் சொல்; மலைகள் உன் சத்தத்தைக் கேட்கக் கடவது. பர்வதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே கர்த்தருடைய வழக்கைக் கேளுங்கள்; கர்த்தருக்கு அவர் ஜனத்தோடே வழக்கு இருக்கிறது; இஸ்ரவேலோடே அவர் வழக்காடுவார் (மீகா 6:1,2).

ஆம். இங்கே ஒரு நீதிமன்றத்தைக் கர்த்தர் காண்பிக்கிறார். குற்றஞ்சாட்டப்படுகிறவர் எந்த நீதி மன்றத்தில் தன்னுடைய வழக்கை விசாரிக்கும்படி ஒப்படைத்திருக்கிறாரோ, அங்கே போய்தான் குற்றஞ்சாட்டப்பட்டவர் தன்னுடைய காரியங்களைச் சொல்ல வேண்டும். குற்றவாளி தான் விரும்புகின்ற இடத்தில் போய் வழக்காடி நீதி பெறச் சட்டம் இடம் தருகிறதில்லை. அது போல கர்த்தராகிய ஆண்டவரும் தமக்கு விரோதமாய் பாவம் செய்த மனுக்குலத்தை நியாயம் விசாரிக்க, அவர்களோடு வழக்காட இந்த பூவுலகில் ஒரு நீதிமன்றத்தை நியமித்திருக்கிறார். மீகா தீர்க்கதரிசி அந்த நீதிமன்றத்தை மலை என்றும், பர்வதம் என்றும் கூறுகிறார் (மீகா 6:1,2).

இதே தீர்க்கதரிசி இந்த மலையைக் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் என்று கூறுகிறார். "கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு மேலாக உயர்த்தப்பட்டிருக்கும், எல்லா ஜாதிகளும் அதனிடத்திற்கு ஓடிவருவார்கள்" (மீகா 4:1,2; ஏசா 2:2,3) என்று கூறுகிறார்.

இப்பொழுது நாம் இந்த நீதிமன்றத்தை தேவனுடைய சபை என்று காணுகின்றோம். தேவன் மனுக்குலத்தை இரட்சிக்கத் தம்முடைய சபைக்கே அதிகாரம் தந்திருக்கிறார் என்று பார்க்கிறோம். "இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் அநுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார்" (அப் 2:47).

"சகல ஜனங்கள் மேலுள்ள முக்காட்டையும், சகல ஜாதிகள் மேலுள்ள மூடலையும் இந்த மலையிலே அகற்றிப் போடுவார் (ஏசா 25:7).

இப்பொழுது நாம் நீதிமன்றம் இன்னதென்று அறிந்து கொண்டோம். நீதிமன்றத்தில் வழக்கை விசாரித்து தீர்ப்புச் சொல்லக் கூடிய நீதிபதிகள், நியாயாதிபதிகள் தேவை.

தாவீது அரசன் கர்த்தருடைய பரிசுத்தமான ஆலயத்தைக் குறித்து தீர்க்கதரிசனமாய் சொன்னது: "எருசலேம் இசைவிணைப்பான நகரமாய் கட்டப்பட்டிருக்கிறது" (சங் 122:3) என்கிறார். அப்போஸ்தலனாகிய பரி. பவுல் "அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின் மேல் மாளிகை முழுவதும் இசைவாய் இணைக்கப்பட்டு கர்த்தருக்குள் பரிசுத்த ஆலயமாக எழும்புகிறது" (எபேசி 2:20, 21)என்றும் கூறுகிறார். பின்னும் தாவீது "அங்கே தாவீதின் வம்சத்தாருடைய சிங்காசனங்களாகிய நியாயாசனங்கள் வைக்கப்பட்டிருக்கிறது" (சங் 122:5) என்றும் கூறுகிறார். ஆகையால் தேவனுடைய சபையில் நியாயாசனங்கள் இருப்பதால் அங்கே நியாயம் விசாரிப்பவர்களும் உண்டு என்பதை நாம் அறிகிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் நம்முடைய அப்போஸ்தலர்களைப் பார்த்து: "நீங்கள் என் இராஜ்யத்திலே என் பந்தியில் போஜனபானம் பண்ணி, இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்களாய்ச் சிங்காசனங்களின் மேல் உட்காருவீர்கள் என்றார்" (லூக் 22:30) என்றும் எழுதப்பட்டுள்ளது.

இதிலிருந்து தேவனுடைய சரீரமாகிய திருச்சபை நீதிமன்றமென்றும் தேவனால் நியமிக்கப்பட்ட தேவனுடைய அப்போஸ்தலர், தீர்க்கர்கள் நீதிபதிகள் என்றும் நாம் பார்க்கிறோம். இன்னும் பரி. பவுல் கொரிந்து சபையாருக்கு நிருபம் எழுதும்போது பரிசுத்தவான்கள் உலகத்தை நியாயந்தீர்ப்பார்கள் என்று அறியீர்களா?..." (Iகொரி 6:2) என்றும், "தேவ தூதர்களையும் நியாயந்தீர்ப்போமென்றும் அறியீர்களா (Iகொரி 6:3) என்றும் கூறுகிறார். பின்னும் நாங்கள் கிறிஸ்துவுக்காக ஸ்தானாபதிகளாயிருந்து தேவனோடு ஒப்புரவாகுங்கள் என்று வேண்டிக் கொள்கிறோம் (IIகொரி5 : 20) என்றும் பவுல் கூறுகிறார்.

பிரியமானவர்களே, தேவனுடைய திட்டமும் தீர்மானமும் இப்படிப்பட்டதாய் இருக்கிறபடியால் நம்மை நாமே வஞ்சித்துக் கொள்ளக் கூடாது. தேவனுடைய சபை என்பது பரிசுத்தவான்களின் கூட்டம். பரிசுத்தவான்களோடு ஒரே நகரத்தாராக அவர்கள் தேவனுடைய வீடாக விளங்குகிறார்கள் (எபே 2:19).

சிலர், பாவிகளிடம் போய் ஒரு பாவி தன்னுடைய பாவத்தை சொல்வது எப்படி என்று எழுதுகிறார்கள், பிரசங்கிக்கிறார்கள். ஆனால் பாவிகளுடைய கூட்டத்தை வேதம் தேவனுடைய சபையென்று சொல்லவில்லை.

அப்படிப்பட்ட பாவிகளை இரட்சிக்கத்தான் இயேசு கிறிஸ்து தம்முடைய சரீரமாகிய சபையை உருவாக்கியுள்ளார் (அப் 2:47).

"அந்த சபை ஜீவனுள்ள தேவனுடைய சபையாய் சத்தியத்துக்கு தூணும், ஆதாரமுமாய் இருக்கிறது" (Iதீமோ 3:15). கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலையும் உண்டு (IIகொரி 3:15, 17).

சகோதரனே! சகோதரியே! கர்த்தர் உன்னை வழக்காட அழைக்கிறார். அவருடைய நீதிமன்றத்துக்கு (திருசபைக்கு) உன்னை அழைக்கிறார், இவ்விதமாய் கர்த்தர் உன்னுடன் வழக்காடி உன்னுடைய நியாயத்தை விசாரிக்கும் மட்டும் நீ அவருடைய கோபத்தை சுமப்பாய். "நான் கர்த்தருக்கு விரோதமாகப் பாவம் செய்தேன், அவர் எனக்காக வழக்காடி என் நியாயத்தை விசாரிக்கும்மட்டும் அவருடைய கோபத்தை சுமப்பேன்; அவர் என்னை வெளிச்சத்திலே கொண்டு வருவார், அவருடைய நீதியைப் பார்ப்பேன்" (மீகா 7:9).

ஆகையால் சகோதரனே! சகோதரியே! திருச்சபையினிடம் கடந்து வந்து தேவ ஊழியருக்கு முன் உன் பாவத்தை அறிக்கையிட்டு விட்டுவிடு. "உன் பாவம் சிவேரென்றிருந்தாலும் உறைந்த மழையைப் போல் வெண்மையாகும். அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப் போலாகும்" (ஏசா 1:18).

"நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது" (யாக் 5:16).

"அவன் பாவம் செய்தவனானால், அது அவனுக்கு மன்னிக்கப்படும் (யாக் 5:15).

"நான் ஆதாமைப் போல என் மீறுதல்களை மூடி என் அக்கிரமத்தை என் மடியிலே ஒழித்து வைத்தேனோ"—யோபு 31:36.

# இது எப்படியாகும்?

தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை (லூக் 1:37). தேவனால் எல்லாம் கூடும் (மாற் 10:27). இது நாம் அறிந்து அறிக்கை செய்கிற காரியம். இது எப்படியாகும் என்று பரி. மரியாள் கேட்டாள். தேவ தூதன் பிரதியுத்திரமாக தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை என்றான். தேவனாலே எந்தக் காரியத்தையும் கைகூடி வரச் செய்ய ஆகும். இதை நம்புகிற தேவனுடைய பிள்ளைகளும் காரியம் கைகூடி வராதபடியால் சோர்ந்து போய் விடுவது உண்டு. இளைப்படைந்து போகிறவர்களாகவும் இருக்கிறார்கள். தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை தான். ஆனால் அதற்குரிய வேளை வரவேண்டும். அது தேவனுக்குச் சித்தமானதாயிருக்க வேண்டும். அதை பெறுவோம் என்ற விசுவாசம் நமக்கும் வேண்டும்.

திருமண வீட்டிலே திராட்சரசம் இல்லாமல் போயிற்று. இயேசுவானவர், அங்கே இருந்தார். இவர் இன்னார் என்பது மரியாளுக்குத் தெரியும். ஒன்றுமில்லாமையிலிருந்து எல்லாவற்றையும் உண்டாக்க வல்லவர் என அந்த அம்மையார் அறிந்தபடியால், அவரிடம் குறைவைத் தெரியப்படுத்துகிறாள். இயேசுவானவரோ என் வேளை இன்னும் வரவில்லை என்றார் (யோவா 2அதி). பஸ்ஸுக்காக காத்திருக்க நேரிடும் போது, நாம் பதற்றமடைவது உண்டு. நமக்கு அவசரம். உடன் பஸ் வந்துவிட வேண்டும் என எதிர் பார்க்கிறோம். பஸ்காரன் நம்முடைய அவசரத்தின்படி வருவது கிடையாது. அவனுடைய வேளையில், குறிக்கப்பட்ட நேரத்தில் வருகிறான். இதை விட மேலாய் தேவனும் தம்முடைய காலத்தில் கிரியை செய்கிறார். ஆகவே தேவனுடைய பிள்ளைகள் வேளைக்காய் பொறுமையுடன் காத்திருக்க வேண்டும்.

நமக்கு நலமாக தோன்றுகிற அநேக காரியங்கள் தேவனுக் கேற்றவைகளாக இராது. அப். பவுல் தன்னுடைய சரீரத்திலுள்ள முள்ளை நீக்க வேண்டுமென அதிகம் விரும்பினார். அதை ஒரே நொடியில் நீக்கி விட தேவனால் முடியும். இது அவரால் கூடாததல்ல. ஆனால் அந்தக் குறைவை பவுலை விட்டு நீக்கி விட தேவனுக்குச் சித்தமில்லை. பவுல் அதற்காக விண்ணப்பம் பண்ணிய போதிலும் அது அங்கீகரிக்கப் படவில்லை.

குஷ்டரோகி ஒருவன் இயேசுவிடம் "ஆண்டவரே! உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலே ஆகும்" என்றான். இயேசுவும்' எனக்குச் சித்தமுண்டு சுத்தமாகு' என்றார். குஷ்டரோகி சொஸ்தமானான். முதலாவது நாம் விரும்புகிற இந்தக் காரியத்தை தேவனும் விரும்புகிறாரா என அறிய வேண்டும். அறிந்த பின் அவருக்குச் சித்தமானால்தான் காத்திருக்க வேண்டும். சித்தமில்லாக் காரியத்தை பிடித்துக்கொண்டு போராடி, மனமுடைந்து, நொந்து, தேவன் மீது கோபங் கொண்டு, ஜெபிக்காமல், வேதம் வாசிக்காமல், சபைக்குப் போகாமல் இருப்பது மடமை. உங்கள் குழந்தை கத்தியை விளையாடக் கேட்டால் கொடுப்பீர்களா? குழந்தைக்கு கத்தி விளையாட்டுப் பொருள். ஆகவே அது விரும்புகிறது. பெற்றுக் கொள்ளும்படி அடம் பிடிக்கிறது. அழுகிறது. அதைக்கொடுத்தால் தன்னைக் கீறிப் போடுமெனநீங்கள் அறிகிறபடியால், பிள்ளை என்னதான் அழுதாலும் கொடுக்கிறதில்லை.

நீங்கள் பிள்ளையை நேசிக்கிறீர்கள். உங்கள் பரமபிதா உங்களை நேசிக்கிறார். உங்கள் ஆத்துமா அழிவதை அவர் விரும்பவில்லை. ஆகவே அவருக்குச் சித்தமில்லா ஒன்றை என்ன உபவாசம் போட்டு, பொருத்தனை செலுத்தி, கெஞ்சினாலும், கூத்தாடினாலும், காரியம் பலிக்காது. குழந்தைகளாயிராதே யுங்கள்.

சில வாலிபர்கள், வாலிப சகோதரிகள், சாத்தானல், மாம்சத்தால் இழுக்கப்பட்டு பிறபாலரை நேசித்து, திருமணம் செய்ய விரும்பி, தங்களுடைய விருப்பம் நிறைவேற இறைவனிடம் மன்றாடுவதுண்டு. இதன் ஆரம்பமே அசுத்தம். இறைவன் இந்தக் காரியத்தை நிறைவேற்றப் போவதில்லை. ஏனெனில் அவர் இவர்களைப் போல அசுத்தரல்ல. அவர் பரிசுத்தர். அவர் களமுள்ள (பெரியவர்களால் நிச்சயக்கப் படுகிற) விவாகங்களை முன்னின்று நடத்தி வைக்கிறார். (உம்) ஈசாக்கு – ரெபக்காள் விவாகம்.

தனக்கு சாராள் மூலம் பிள்ளை கொடுப்பது தேவ சித்தமென ஆபிரகாம் அறிந்திருந்தார். அதற்காக காத்திருந்தார். இது தேவனாலே கூடும் என விசுவாசத்துடன் இருந்தார். சிறிது பெலவீனம் உண்டான போதிலும் தான்கொண்ட விசுவாசத்தில் தளர்ச்சியடையவே இல்லை. விசுவாசத்தோடே காத்திருந்து "தேவன் குறித்திருந்த காலத்தில்" (ஆதி 21:2) குமாரனைப் பெற்றுக் கொண்டார்.

ஆபிரகாம்: பெற்ற வாக்குத்தத்தம் 25 ஆண்டுகளுக்குப் பின் நிறைவேறியது (ஆதி 12.4,7; 21:5).

யோசேப்பு: கண்ட தரிசனங்கள் ஏறத்தாழ 20 ஆண்டுகளுக்குப் பின் நிறைவேறிற்று (ஆதி 37:2,41:46, 53).

எரேமியா: உரைத்த தீர்க்கதரிசனம் 70 ஆண்டுகளுக்குப் பின் நிறைவேறிற்று (தானி 9:2).

இயேசுகிறிஸ்து சொன்னது இரண்டாயிரம் (2000) ஆண்டுகளாகியும் இன்னும் நிறைவேற காத்திருக்கிறோம் (வெளி 22:12).

தேவன் வாக்குத்தத்தம் பண்ணியவை களை, வெளிப்படுத்தியவைகளை பெற்றுக் கொள்ளும்படி காத்திருந்தார்கள். விசுவாசத்துடன் காத்திருந்தார்கள். பெறுவோம் என்ற நம்பிக்கையில் நிலைத்திருந்தார்கள். விசுவாசித்து, தேவனுடைய மகிமையைக் கண்டார்கள். அவரால் ஆகாத காரியம் ஒன்றுண்டோ?

சிலர் கொஞ்ச நாள் காத்திருந்து விசுவாசத்தைவிட்டு விடுகிறார்கள். சில வாலிபர்களின் வயது கடந்து போவதைக் கண்ட வழியக்காரர் அவர்களின் திருமணத்திற்காய் ஜெபித்தார். அப்போது கர்த்தர் சொன்னார். "ஆமாம் காளைகள் முறுமுறுக்கிறவர்கள்" அவர்களுடைய முறுமுறுப்பினால் கோபம் கொண்ட தேவன் அவர்களுடைய காரியங்களில் தலையிட விரும்பாமல் இருப்பதை வெளிப்படுத்தினார். விசுவாசமில்லாமல் முறுமுறுக்கிறவர்கள் தேவன் கிரியை செய்வதை தடை செய்கிறார்கள். நீங்களும் முறுமுறுத்து வழியிலே அழிந்து போகாமல் கர்த்தரின் வேளைக்காய் காத்திருங்கள்! அவருக்கு சித்தமானவைகளுக்காய் மட்டும் காத்திருங்கள்!!

உங்கள் நம்பிக்கை வீண் போகாது. இது எப்படி ஆகும்? தேவனாலே எல்லாம் கூடும். ஆமென்.

---

இது கர்த்தராலே ஆயிற்று.

---

# வேத பாடம்

ஆதி 43 : 27-34. யோசேப்பு சகோதரர்களின் சுக செய்தியையும், தகப்பனரின் சுக செய்தியையும் விசாரித்தார். அவர் உயிரோடிருக்கிறதையும் தன் தாய் பெற்ற மகன் பென்யமீன் உடன் வந்திருக்கிறதையும் கண்டு யோசேப்பின் உள்ளம் பொங்கினபடியால் தனி அறைக்குச் சென்று அழுதுவிட்டு திரும்பி வந்து அவர்களை வரிசைக் கிரமமாய் வயது

வரம்புபடி உட்கார வைத்து அவர்களுக்கு ஆகாரம் பரிமாறும்படி செய்து தானும் சாப்பிட்டார். தாங்கள் வரிசைக்கிரமமாய் உட்கார வைக்கப்பட்டதை யோசேப்பின் சகோதரர் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

**ஆதி 44 : 1-17.** பின்பு யோசேப்பின் யோசனையின்படி யோசேப்பின் சகோதரர்களின் சாக்குகளில் தானியத்தை நிரப்பி பென்யமீனின் சாக்கில் யோசேப்பு சாப்பிடும் வெள்ளிப் பாத்திரத்தை வைத்து சாக்குகளைக் கட்டி அனுப்பி வைக்கப்பட்டார்கள். அவர்கள் கொஞ்ச தூரம் சென்றதும் யோசேப்பின் வீட்டுவிசாரணைக்காரன் அவர்களைப் பின் தொடர்ந்து போய் நீங்கள் நன்மைக்கு தீமை செய்ததென்ன, என் எஜமான் சாப்பிடும் பாத்திரத்தை ஏன் திருடிக் கொண்டு போகிறீர்கள் என்றான். அந்த வார்த்தையைக் கேட்டபோது அவர்கள் பதறி இப்படிப்பட்ட காரியம் எங்களில் யாரிடம் காணப்பட்டாலும் அவன் குற்றவாளி, நாங்கள் உமக்கு அடிமை என்றார்கள். அது தேடப்பட்டபோது பென்யமீன் சாக்கிலே பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டது. எல்லோரும் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக் கொண்டு பட்டணத்திற்கு யோசேப்பிடம் திரும்பி வந்து நாங்கள் எல்லாரும் உமக்கு அடிமை என்றார்கள். அதற்கு யோசேப்பு அப்படியல்ல பாத்திரம் எவனிடம் கண்டு பிடிக்கப்பட்டதோ அவனே எனக்கு அடிமை, நீங்கள் சமாதானத்தோடே போங்கள் என்றான். இப்படியாக யோசேப்பின் சகோதரர் சோதிக்கப்பட்டார்கள்.

**ஆதி 44 : 18-34.** அப்பொழுது யூதா கிட்டவந்து ஆண்டவனே, இளைஞனுக்காக நான் உத்தரவாதம் பண்ணுவதாக என் தகப்பனுக்கு வாக்கு கொடுத்திருக்கிறேன். இவன் போகாவிட்டால் தகப்பனார் இறந்து போவார். ஆகையால் இளையவனைப் போகவிட வேண்டும். அவனுக்குப் பதிலாக நான் அடிமையாக இருப்பேன். இளையவனைப் போகவிட வேண்டும். இளையவனை விட்டு எப்படி என் தகப்பனிடத்தில் போவேன் என்று கெஞ்சினான். ஒரு காலத்தில் தன்னை கொன்றுவிட எண்ணி பின்பு தன்னை இருபது வெள்ளிக் காசுக்கு விற்றுப்போட்டு தகப்பனிடம் போய் பொய் சொன்ன தன் சகோதரர்கள் மனம் வெகுவாக மாறியிருப்பதையும், பென்யமீனை தகப்பனிடம் கொண்டு போய் விட தங்களைத் தியாகம் செய்ய முன் வந்ததையும் யோசேப்பு கண்டு-

**ஆதி 45 : 1-15** யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை வெளிப்படுத்தல்: நீங்கள் விற்றுப் போட்ட யோசேப்பு நான்தான். என்னை விற்றுப்போட்டதற்காக நீங்கள் வருத்தப்பட வேண்டாம். ஜீவரட்சணை செய்யும்படி தேவனே இவ்விடத்திற்கு என்னை கொண்டு வந்திருக்கிறார். தகப்பனாரிடத்தில் போய் சொல்லி எல்லோரையும் அழைத்து வாருங்கள், உங்கள் எல்லோரையும் போஷிப்பேன் என்று சொல்லி சகோதரர்கள் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதார். அவர்களும் அழுதார்கள். பின்பு சகோதரர்கள் யோசேப்போடே சம்பாஷித்தார்கள்.

(தொடரும்)

> "தீயோர் நல்லோருக்கு முன்பாகவும், துன்மார்க்கர் நீதிமான்களுடைய வாசற்படிகளிலும், குனிவதுண்டு"
> —நீதி 14 : 19.

(மே மாத தொடர்ச்சி)

# குடும்பம்

மாதர் பகுதி

வீடு பெருக்கி ஜோடிக்கப்பட்டு சுத்தமாக இருந்தது. அவன் வீட்டிற்குள் பிரவேசித்த பொழுது பிள்ளைகள் ஒழுங்காக அமர்ந்து மதியச் சாப்பாட்டை சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். இவன் வழக்கமாய் உட்காருகிற இடத்தில் பாய் ஒன்று ஒழுங்

காக விரிக்கப்பட்டிருந்தது. அதோடு அடுத்த அறையில் ஒரு மூலையில் விரிக்கப்பட்ட பாய் ஒன்றின் மேல் சரோஜா முழங்கால் படியிட்டு ஜெபம் பண்ணுகிறதைக் கண்டான். அவனுக்கு விவாகம் முடிந்த பின் அவன் மனைவி ஜெபம் பண்ணுகிறதை முதல் முறையாகக் கண்டான். அவனுக்கு அது மிகுந்த ஆச்சரியத்தையும், மனதில் ஒரு பெரிய உணர்வையும் கொடுத்தது

அவன் வந்த அரவம் கேட்டு கொஞ்ச நேரத்தில் அவன் மனைவி ஜெபத்தை முடித்துவிட்டு எழுந்து வந்தாள். அவன் கை அலம்புவதற்கு ஒரு செம்பில் தண்ணீரும் வெறும் பாத்திரம் ஒன்றும் கொண்டு வந்து வைத்தாள். அவன் அமர்ந்து கை அலம்பிக் கொண்டான். உடனே அவனுக்கு முன்பு பளபளவென்று சுத்தமாக்கப்பட்ட பாத்திரம் ஒன்று கொண்டு வந்து வைக்கப்பட்டது. கடகட அவனுக்கு ஆகாரம் பரிமாறப்பட்டது. அவன் புசித்துக் குடித்துவிட்டு தன் வேலைக்குச் சென்றுவிட்டான்.

ஒரு நாள் வழக்கமாய் வேலை முடிந்து சினிமாவுக்குச் செல்வதை நிறுத்திவிட்டு நேரே வீட்டிற்கு வந்து சேர்ந்தான். வீதிகளிலே கூக்குரலிட்டுக் கத்திக் கொண்டு; பரட்டைத் தலையும் கிழிந்த அழுக்கு வஸ்திரமும் தரித்துக் கொண்டு வீதியில் விளையாடிக் கொண்டிருக்கும் தன் பிள்ளைகள் நன்றாக சுத்தமாய் உடுத்தினவர்களாய், அவரவர் பாடப் புஸ்தகங்களை எடுத்து வைத்துக் கொண்டு படித்துக்கொண்டும், எழுதிக் கொண்டும் இருக்கிறதைக் கண்டான் அதிலும் விசேஷமாய் வீடுகள் தோறும் போய் உட்கார்ந்து வீண் அலப்பல்காரியாக இருந்து கொண்டிருக்கும் தன் மனைவி சமையல் அறையில் அவசரமாய் வேலை செய்து கொண்டிருப்பதை அவன் கண்டான். தன் கைகால்களை அலம்பிக் கொண்டு தன் அறையில் போய் ஏதோ ஒன்றை சிப்பேர் செய்து கொண்டிருந்தான். அந்த வேளையில் ஞானசிகாமணி வாத்தியாரின் மனைவி நல்லமுத்து, கையில் ஒரு வேதாகமத்துடன் தன் வீட்டை நோக்கி வருவதைக் கவனித்தான்.

வேதமாணிக்கத்தின் மூத்த மகன் ஓடிப் போய் அந்த அம்மாளை வரவேற்று ஒரு பாயை எடுத்து திண்ணையில் போட்டு அந்த அம்மாளை அமர வைத்தான். பின் தன் தாயிடம் போய் வாத்தியார் மனைவி வந்திருப்பதாக அறிவித்தான். உடனே சரோஜா ஓடிவந்து அந்த அம்மாவுக்கு ஸ்தோத்திரம் சொல்லிவிட்டு, கொஞ்சம் இருங்கள் என்று சொல்லிவிட்டு சமையலறையை நோக்கி ஓடினாள். அவசர அவசரமாக வேலைகளை முடித்துவிட்டு நல்லமுத்து அம்மாவிடம் வந்து அமர்ந்தாள். அதோடு அந்த அம்மாவுக்கு நன்றி சொல்லி, அம்மாவுடைய ஆலோசனையின்படி நான் ஜெபம் பண்ணினேன், கடவுள் இவ்வளவு சீக்கிரமாக என் ஜெபத்திற்கு பதில் கொடுத்ததற்காக கடவுளுக்கு ஸ்தோத்திரம்.

நான் கொஞ்ச நாளாக ஒரு விசேஷித்த ஜெபத்தை செய்து கொண்டிருந்தேன். அதென்ன வென்றால் என் கணவன் சினிமாவுக்குச் செல்லாமல் நேரே வீட்டுக்கு வர வேண்டும் என்று சொல்லி ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தேன். இவ்வளவு சீக்கிரமாய் கடவுள் பதில் கொடுப்பார் என்று நான் நம்பவே இல்லை.

தேவனுடைய வல்லமை தான் என் கணவரை மனமாறுதல் செய்து என் கணவரை சினிமாவுக்குப் போகாமல் வீட்டுக்கு கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. ஏனென்றால் நான் எவ்வளவோ சினிமாவுக்குப் போகவேண்டாம் என்று கத்தி, கத்தி சொல்லியும், சண்டை போட்டும் என் கணவர் சினிமா பார்ப்பதை விடவில்லை. ஆனால் இன்றோ வேலையிலிருந்து நேரே வீட்டுக்கு வந்து அதோ உட்கார்ந்திருக்கிறார். அதற்காக கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இது ஜெபத்தினால் ஆயிற்றென்று திட்டவட்டமாய் எனக்குத் தெரிகிறது. எனவே இன்னும் அதிகமாக ஜெபம் பண்ண வேண்டும் என்று எனக்குத் தெரிகிறது. நீங்களும் எனது குடும்பத்தின் சமாதானத்திற்காகவும், ஆசீர்வாதத்திற்காகவும் இன்றைய தினத்தில் விசேஷமாக ஜெபம் ஏறெடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள்.

அந்தபடியே நல்லமுத்துவும், சரோனும் அவளுடைய பிள்ளைகளும் தேவனை நோக்கி ஒரு பாட்டு பாடி, பின் நல்லமுத்து ஒரு வேதப்பகுதியை வாசித்த பின்பு எல்லோரும் ஜெபம் பண்ணினார்கள். இதை வேத மாணிக்கம் தன் அறையில் இருந்து கவனித்துக் கொண்டிருந்தான். ஜெபம் முடிந்த பின்பு நல்லமுத்து தன்னுடைய வீட்டிற்கு வழியனுப்பிக் கொண்டு போய் விட்டாள். சரோன் அவசர அவசரமாக சமையலறைக்குச் சென்று தன் வேலையை செய்ய ஆரம்பித்தாள். சிறிது நேரத்தில் அறையை சுத்தம் செய்துவிட்டு பிள்ளைகளுக்கும், தன் கணவருக்கும் பாய் விரித்து பிள்ளைகளை அழைத்து சாப்பிட உட்கார வைத்தாள். இவை எல்லாவற்றையும் கவனித்த வேதமாணிக்கத்தினுடைய இருதயத்தில் பெரிய மாறுதல் உண்டாயிற்று.

தான் விவாகத்திற்கு முன்பாக இருந்த நிலையும் இப்பொழுது எவ்வளவு தூரம் தேவனைவிட்டு விலகிப்போய் இருக்கிறோம் என்று உணர ஆரம்பித்தான்.

நல்லமுத்து வாசித்த வேதபாகத்தில் "நாட்கள் பொல்லாதவைகளானதால் காலத்தைப் பிரயோசனப் படுத்திக் கொள்ளுங்கள்" என்று வாசித்த வேதவார்த்தையானது அவனது உள்ளத்தைக் குத்திற்று. அவன் இவ்வளவு காலமாய் தன்னுடைய நாட்களை வீணாக்கி போட்டது அவனுக்குத் தெரிய வந்தது. உடனே அவன் மனஸ்தாபப்பட்டு முழங்காற்படியிட்டு தேவனை நோக்கி ஜெபிக்க ஆரம்பித்தான்.

தேவனே பாவியாகிய என் மேல் கிருபையாயிரும். நான் என் நாட்களையும் வீணாகச் செலவழித்துப் போட்டேன். இனிமேல் நான் சினிமா பார்க்கமாட்டேன். உமக்குகந்தவனாக ஜீவிப்பேன். என்னை மன்னியும் என்று ஜெபம் பண்ணினான்.

அவன் ஜெபத்தை முடித்துவிட்டு அமர்ந்த கொஞ்ச நேரம் கழித்து அவன் மனைவியின் சத்தம் கேட்டது. சாப்பாடு வைத்துவிட்டேன் வந்து சாப்பிடுங்கள் என்று சொல்லிவிட்டு தன் வேலையை கவனிக்க போய் விட்டாள். அவன் எழும்பி கையலம்பிக் கொண்டு சாப்பாட்டின் முன்னால் போய் தலைகவிழ்ந்து கொஞ்ச நேரம் யோசித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான்.

பின்பு மெதுவாக சமையலறைக்குச் சென்று தன் மனைவியின் இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு விம்மி, விம்மி அழ ஆரம்பித்தான். அவளும் அழுதாள். அந்த அழுகை இருவரும் செய்து கொள்ளும் வாக்குறுதி போல் இருந்தது. அதுமுதற் கொண்டு இருவரும் ஒருபோதும் சண்டை போட்டுக் கொண்டதில்லை. வேதமாணிக்கம் தன் மனைவியை அதிகம் நேசித்தான். வேலை முடிந்ததும் நேராக வீட்டுக்கு வந்து விடுவான். தன் மனைவியையும், பிள்ளைகளையும் பார்க்க வேண்டும் என்ற ஆவலையும் அவனுக்கு வந்து விட்டது. அவளும் அவனை எதிர்பார்த்துக் காத்திருப்பாள். இருவரும் ஒருவரை ஒருவர் நேசிக்கவும், கிடைக்கும் நேரத்தில் இருவரும் சம்பாஷித்துக் கொண்டிருக்கவும், குடும்ப ஜெபத்தில் கலந்து கொண்டு தேவனை மகிமைப் படுத்தவும் செய்தார்கள்.

இதைப் பார்த்த பிள்ளைகளும் ஒருவரையொருவர் நேசிக்கவும், பெற்றோருக்குக் கீழ்ப்படிந்திருக்கவும் பாடங்களை ஒழுங்காக படிக்கவும், பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காக போகவும் ஆரம்பித்தார்கள். அந்த வீட்டில் சந்தோஷமும், சமாதானமும், மகிழ்ச்சியும் நிலவியது. அது பரலோக வீடுபோல் இருந்தது.

ஒவ்வொரு நல்ல மனைவியும் தன்னுடைய புருஷனுக்கு நன்மையும், சந்தோஷத்தையும் உண்டாக்கும் காரியத்தையே செய்வாள். சரோன் அநேக பெண்களுக்கு முன் மாதிரியானாள்.

(தொடரும்)

"புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டுகிறாள், புத்தியில்லாத ஸ்திரீயோ தன் கைகளினால் அதை இடித்து போடுகிறாள்."
நீதி 14 : 1

# பசும் பொன்னான அதிகாரங்கள்

பிரியமான பழமையான பரிசுத்த வேதாகமத்தை உண்மையாக வாசிக்க விரும்புவதும் ஆராய்ச்சி செய்வதும் மிகவும் முக்கியமான காரியமாகும். இந்த அநுபவத்திற்கு உங்களுக்கு உதவ விரும்புகிறோம். இது ஒரு பெரிய புத்தகமாக இருப்பதால், சிறிய சிறிய பகுதிகளாகவே உட்கொள்ள முடியும். அதுவே உட்கொள்ள சிறந்த வழியாகும். இப்பொழுது உன்னுடைய இருதயம் பசியாயிருந்தால் அப்ப அதிகாரத்தை (Bread Chapter) வாசி. அல்லது உன்னுடைய பாதங்கள் சறுக்குகிறதென்றால் கன்மலை அதிகாரத்தை வாசி. சிறிய குழப்பத்தில் (சண்டையில்) நீ இருப்பதாக நீயே உன்னைக் கண்டுபிடித்தால் அன்பின் அதிகாரத்தை வாசி. சாத்தானுடன் உள்ள போராட்டங்களில் நிறைய தோல்விகள் உனக்கிருந்தால் வெற்றியின் அதிகாரத்தை வாசி.

ஒரு இளம் விசுவாசியை அல்லது சில வாஞ்சையுள்ள ஆத்துமாவை வேதாகமத்தை வாசிக்கும்படியாக சொல்வது ஒரு நோயாளியிடம் எழுதிக் கொடுத்து அவன் தனக்குத் தானே உதவும்படியாக அவனை மருந்து சாலைக்கு (Drug Store) அனுப்புவதைப் போன்றே (இருக்கிறது) உள்ளது. அது மாத்திரம் போதாது. நன்றாக எழுதப்பட்ட (மருந்து, அது சாப்பிடவேண்டிய அளவு முதலியன குறிப்பிடப்பட்ட வைத்தியர் எழுதிக் கொடுக்கும் சீட்டு) டாக்டரின் குறிப்புகள் தேவைப்படுகிறது. நீங்கள் இங்கே கொஞ்சம் கண்டு பிடிக்கலாம். மீதமுள்ளவைகளை ஒரு சிறிய ஆராய்ச்சி மூலமாக பெற்றுக் கொள்ளலாம். அவைகள் உங்களுக்கு நன்மையானவைகளைச் செய்யும்.

இப்படிப்பட்டதான அதிகாரங்களில் ஒன்றை வாசித்த பின்பு, அந்த அதிகாரத்தின் தலைப்பிலே அதன் பெயரை எழுதிக் கொள்ளுங்கள்.

| | |
|---|---|
| ஆபிரகாமின் அதிகாரம் | ...ஆதி. 15 |
| விலத்திருத்தலின் அதிகாரம் | ...லேவி. 15 |
| கூட்டல் அதிகாரம் | ...II பேது. 1 |
| புத்திமதியின் அதிகாரம் | ...எபி. 13 |
| அகிரிப்பாவின் அதிகாரம் | ...அப். 26 |
| அபிஷேக அதிகாரம் | ...யாத். 30 |
| உடன்படிக்கைப் பெட்டியின் அதிகாரம் | ...I நாளா 15 |
| ஆசாவின் அதிகாரம் | ...II நாளா. 15 |
| பரமேறுதலின் அதிகாரம் | ......அப். 1 |
| பிராயசித்தத்தின் அதிகாரம் | ......எபி. 9 |
| பின்மாறியவனின் அதிகாரம் | ......எரே. 3 |
| ஞானஸ்நான அதிகாரம் | ......மத். 3 |
| இனிமையான அதிகாரம் | ......மத். 5 |
| மூல அதிகாரங்கள் | ......ஆதி. 1; யோவா. 1 |
| கண்காணி உதவிக்காரன் அதிகாரம் | I தீமோ 3 |
| ஆசீர்வாத அதிகாரம் | ......உபா. 28 |
| அதிக ஆழமுள்ள அதிகாரம் | ......எபே. 3 |
| அப்ப அதிகாரம் | ......யோவா. 6 |
| வியாபாரியின் அதிகாரம் | ......நீதி. 8 |
| ஒழுக்க அதிகாரம் | ......யோபு 29 |
| எதிரிடையான அதிகாரம் Contrast | ...லூக். 7 |
| அன்பின் அதிகாரம் | ......I கொரி. 13 |
| தூய்மைப்படுத்தும் அதிகாரம் | ......எபி. 12 |
| நிலைத்தவனின் சங்கீதம் | ......சங்கீதம் 15 |
| விருத்தசேதன அதிகாரம் | ......அப். 15 |
| கட்டளை அதிகாரம் | ......யாத். 20 |
| வருகையின் அதிகாரம் | ......ஏசா. 55 |
| வெற்றி வீரனின் அதிகாரம் | ......லூக். 4 |
| தத்தம் செய்தல் அதிகாரம் | ......ரோம. 12 |
| சீர்படுதலின் அதிகாரம் | ......ஏசா. 12 |
| கொரிந்தியர் அதிகாரம் | ......அப். 18 |
| கொர்நேலியு அதிகாரம் | ......அப். 10 |
| சிருஷ்டிப்பு அதிகாரம் | ......ஆதி. 1 |
| மனோதிடமான (துணிவான, தைரிய) அதிகாரம் | ......யோசு. 1 |

14 மோவாபிய ஸ்திரீ ரூத் .....ரூத்
15 சாமுவேல் பிள்ளையாண்டான் ... I சாமு. 1-3
16 யோனத்தானும் ஆயுததாரியும் ......I சாமு. 14
17 தாவீதும் அரக்கனும் ......I சாமு. 17
18 கீழ்ப்படியாத தீர்க்கதரிசியின் மரணம் I இரா. 13
19 எலியா தீர்க்கதரிசி ......I இரா. 17:19 - 21 & II இரா. 1,2
20 எலிசா தீர்க்கதரிசி ......I இரா. 19: 21; II இரா. 2—8
21 யூத கன்னிகை ......II இரா. 5
22 துன்மார்க்கமான தாய் ...I இரா. 2
23 எஸ்தர் இராஜாத்தி ...எஸ்தர்
24 ஒரு நன்னடக்கையான குழு ...எரே. 35
25 அதிகாரி தானியேல் ...தானி. 1-7
26 சிங்கக் குகை ...தானி. 6
27 இயேசுவின் பிறப்பு ...மத். 2; லூக். 2
28 இயேசுகிறிஸ்து சோதிக்கப்பட்டார் ...மத். 4
29 மேற்கூரையின் வழியாக ...மாற். 2
30 சிறுபெண் உயிரோடு எழுப்பப் பட்டாள் ...மாற் 5
31 இயேசு கடலின் மேல் நடத்தல் ...மத். 14
32 யோவான் ஸ்நானகன் சிரச்சேதம் பண்ணப்படல் ...மாற் 6
33 நல்ல சமாரியன் ...லூக். 10
34 குமாரன் ...லூக். 15
35 ஐசுவரியவானும் லாசருவும் ...லூக். 16
36 ஒரு கலியாணத்திலே இயேசு ...யோவா. 2
37 கிணற்றடியிலே ஒரு பெண் ...யோவா. 4
38 குருடன் பார்வையடைந்தான் ...யோவா. 9
39 மரித்தவன் உயிரோடு எழுப்பப் பட்டான் ...யோவா. 11
40 கிறிஸ்துவின் கடைசி நாட்கள் ...மத் 26, 27
41 இயேசுவின் உயிர்த்தெழுதல் ...யோவா.20
42 பொய்சொன்னதினால் மரணம் ...அப். 5
43 சவுலின் மாற்றம் ...அப். 9
44 கொர்நேலியுவின் மாற்றம் ...அப். 10
45 சிறைச்சாலையிலிருந்து விடுவிக்கப்படல் ...அப். 12
46 சிறைச்சாலைக்காரன் மனந் திரும்புதல் .. அப். 16
47 பவுலின் கப்பற்சேதம் ...அப். 27,28
48 பரலோகம் ...வெளி. 21,22.

## உங்களுடைய வேதாகமத்தை வாசியுங்கள்

ஏனென்றால் இது (வேதாகமம்) தேவனுடைய சிந்தனையையும், மனிதனுடைய நிலைமையையும், இரட்சிப்பினுடைய வழியையும், நீதிமானுடைய முடிவையும், அக்கிரமக்காரரின் முடிவையும் அடக்கியிருக்கிறது. இதனுடைய (வேதாகமத்தினுடைய) உபதேசங்கள் பரிசுத்தமுள்ளவைகள். இதனுடைய ஆளுகை அல்லது நடத்துதல் ஒப்பந்தத்தால் கட்டுப்படுத்தக் கூடியவைகளாயிருக்கிறது. இதனுடைய சரித்திரங்கள் உண்மையானவைகள். இதனுடைய தீர்ப்புகள் மாற்றமுடியாதவைகள். ஞானவானாகும்படி இதை வாசிக்க வேண்டும். நியாயமாயிருக்க இதை நம்ப வேண்டும். பரிசுத்தமாயிருக்க இதை நடைமுறைப்படுத்த வேண்டும் (வழக்கப்படுத்த வேண்டும்). உன்னை வழிநடத்தும்படியாக இதனுள் ஒளியும், உன்னைப் பலப்படுத்தும்படியாக உணவும், உன்னைத் தேற்றும்படியாக ஆறுதலும் அடங்கி இருக்கிறது. இது பிரயாணியினுடைய தேசப்படமாயும், யாத்திரை செய்கிறவனுடைய தடியாயும், விமானியினுடைய திசைகாட்டும் கருவியாயும், போர்வீரனுடைய பட்டயமாயும், கிறிஸ்தவனுடைய ஒழுக்கமாயும் இருக்கிறது. இங்கே பரதீசு பழைய நிலைக்குக் கொண்டு வரப்படுகிறது. பரலோகம் திறக்கப்படுகிறது. பாதாளத்தின் வாசல்கள் வெளிப்படுத்தப்படுகிறது. இதனுடைய தலையாய (மையப்) பொருள் கிறிஸ்துவே. இதனுடைய மாதிரி நமக்கு நல்லது. தேவனுடைய மகிமை இதனுடைய முடிவு. நம்முடைய ஞாபகத்தை இது நிரப்ப வேண்டும். இருதயத்தை ஆள வேண்டும். நம்முடைய பாதங்களை நடத்த வேண்டும். ஜெபத்தோடு அடிக்கடி மெதுவாக வாசிக்க வேண்டும்.

செல்வத்தினுடைய கரங்கமாயும், பராக்கிரமத்தினுடைய மகிமையாயும், சந்தோஷத்தினுடைய ஆறுயும், இருக்கிறது. இது உன்னுடைய வாழ்க்கையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. நியாயத் தீர்ப்பின் போது திறக்கப்படும். சதாகாலமும் நினைவு கூரப்படும். உயர்ந்த பொறுப்புக்காக இறைவனை நோக்கிப் பிரார்த்திக்கிறது. மகா உழைப்புக்கு பலனளிக்கப்படுகிறது. இதனுடைய பரிசுத்தப் பொருளடக்கத்தை அசட்டை செய்பவர்களை குற்றவாளியாகத் தீர்க்கிறது.

வேதத்தை நேசி!

அதைக் கவனமாய் படி!!

தியானி!!!

# சாட்சி

(தொடர்ச்சி)

என்னையும் அறியாமல் என் கால்கள் முடங்கியது. இயேசுவை நோக்கி கண்ணீரோடு ஜெபித்தேன். எனக்கு ஆறுதல் அளித்தார். அன்று இரவு நிம்மதியாக உறங்கினேன். மறுநாளும் காலையில் தேவனை (இயேசுகிறிஸ்து) துதித்துவிட்டு இண்டர்-வியூவுக்குப் போனேன். முறையாக பரிசோதனை செய்யும் மருத்துவர் 3 நாட்கள் லீவு போட தேவன் கிரியை செய்தார். அவருக்குப் பதிலாக வேறொருவர் பரிசோதனை செய்தார். மருத்துவ சோதனை என்றால் உங்களுக்கு தெரிந்திருக்கும் (முழு நிர்வாணமாக). அந்த நேரத்தில் "அதிசயம்" என்னும் நாமத்தைக் கொண்ட தேவன் மருத்துவரின் கண்களை மறைத்தார். அந்த வியாதியினின்று காக்கப்பட்டேன். மாறாக இடது கை பெரு விரலில் ஒரு காயத்தின் வடுவை கண்டுபிடித்து அது குறித்து 'அன்பிட்' பண்ணப்பட்டேன். 3 நாட்கள் கழித்து அதற்குரிய மருத்துவர் லீவு முடிந்து வந்தார். அவரிடம் அனுப்பப்பட்டேன். அப்போது பயம் என்னுள் புகுந்தது. இவரால் நம் வியாதி கண்டுபிடிக்கப்பட்டால் என்ன செய்வது என்று கலங்கினேன். கர்த்தர் எனக்குள் "நீ என்னால் தேற்றப்பட்டிருக்கிறாய். இனியும் தேற்றப்படுவாய்" என்று பேசினார். என் சோர்வு நீங்கியது. இரண்டாவது வந்த மருத்துவர் முந்திய மருத்துவர் எழுதியிருந்த ரிப்போர்ட்டான அந்த விரலை மட்டும் பரிசோதித்து விட்டு வேலையில் சேர தேவன் மகா பெரும் கிருபை செய்தார். அல்லேலூயா! அல்லேலூயா.

"நெருக்கத்தில் என்னை நோக்கி கூப்பிடு. நான் உன்னை விடுதலை செய்வேன். நீ என்னை மகிமைப்படுத்துவாய்" என்ற வசனம் என்னில் ஆழமாய் பதிந்தது. அன்றையிலிருந்து கிறிஸ்துவை விசுவாசித்தேன். ஏதாவது ஒரு கிறிஸ்துவ சபையில் சேர்ந்து ஞானஸ்நானம் பெறவேண்டும் என்று எண்ணினேன். ஆனால் உலகில் காணப்படும் பல்வேறு கிறிஸ்தவ சபைகளின் சீர்கேடுகளும் தேவ பயமில்லா ஜீவியமும், சத்தியத்துக்கு கீழ்ப்படியாத முரட்டாடங்களும் எல்லாவற்றுக்கும் மேலாக உபதேச குழப்பங்களையும் கண்டு சத்தியத்தின் உபதேச சட்டங்களை உடைய சபைக்காய் காத்திருந்து தனிமையாய் தேவனை (கிறிஸ்து) துதித்து வந்தேன். பல நாட்களுக்குப் பிறகு நான் வேலை செய்கின்ற (நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன்) இடத்தில் என்னுடன் பணி புரிந்து வந்த புதிய எருசலேம் சபை ஊழியர் P. தங்கவேல் இஸ்ரேல் அவர்களைச் சந்திக்க தேவன் கிருபை செய்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். அவர்கள் மூலமாய் புதிய எருசலேம் சபையைப் பற்றியும், சத்தியத்தைப் பற்றியும் என் சந்தேகங்கள் தீர கேட்டறிந்தேன். பின்னர் சபை மக்களோடு நானும், என் மனைவியும் மெய் தேவனை ஆராதித்து வருகிறோம். 1984-ல் சென்னையில் நடைபெற்ற புதிய எருசலேம் சபை கன்வென்ஷன் ஆராதனையின் போது இருவரும் கிறிஸ்துவுக்குள்ளாய் ஞானஸ்நானம் பெற்று யாக்கோபு, தெபோராள் என்று பெயர் சூட்டப்பட்டோம். இன்று கர்த்தராகிய தேவன் என்

கால் வியாதியை நீக்கி எங்களுக்கு தியாகராஜன் (3வயது), டைட்டஸ் (4 மாதம்) என்ற இரண்டு ஆண் குழந்தைகளை தந்திருக்கிறார். மிகுந்த சந்தோஷத்தோடும், சமாதானத்தோடும் வழி நடத்தி வருகிறார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

தியாகராஜனை தேவனுடைய சுவிசேஷ ஊழியத்திற்காய் அடியார்கள் ஒப்புக் கொடுத்திருக்கிறபடியால் அவனுக்காகவும், அடியானுடைய குடும்பத்துக்காயும் இரட்சிக்கப்படாதிருக்கிற சகோதரனுக்காயும் கனம் ஊழியர்களும், தேவ சபையாரும் ஜெபிக்கும்படி கிறிஸ்து இயேசுவின் நாமத்தில் விண்ணப்பித்துக் கேட்டுக் கொள்கிறேன்.

"கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளாத யாவரும் சபிக்கப்பட்டவர்கள்" என்ற தேவ வசனத்தை உங்கள் முன் வைத்து துதியும், கனமும், மகிமையும் அவருக்கே (கிறிஸ்து) உரியது என்று கூறி நம் மீட்பராயிருக்கிற இயேசுவின் நாமத்தில் அடியேனுடைய சாட்சியை முடிக்கிறேன். அல்லேலூயா!

Bro. Jacob,
Neyveli-2.

---

கர்த்தரை தேடுகிறவர்களுக்கோ ஒரு நன்மையும் குறைவுபடாது—சங் 34 : 10

---

## சாட்சி

## இயேசுகிறிஸ்துவின் மூலம் நான் பெற்ற ஆறுதலும் சமாதானமும்

திண்டுக்கல் அருகில் உள்ள M. அம்மாபட்டி என்ற சிறு கிராமத்தில் ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தவன் நான். எனக்கு என் பெற்றோர்கள் வைத்த பெயர் முருகேசன். எனது பெற்றோர்கள் மகா வைராக்கியமான இந்துக் மதக் கொள்கையுடையவர்கள். என்னையும் அதே வைதீக முறையில் வளர்த்து வந்தார்கள். நானும் இந்துமத நூல் பலவற்றைப் படித்து மிகுந்த பக்தி உள்ளவன்போல் வளர்ந்து வந்தேன். பக்தி உள்ளவன்போல் காணப்பட்டாலும், நான் பலவிதமான பாவங்களுக்கு அடிமையாகி இருந்தேன்.

நாட்கள் பல செல்லச் செல்ல என்னை அறியாமல் ஒரு இருள் என்னைச் சூழ்ந்திருப்பதை அறிந்தேன். (மற்றவர்கள் மத்தியில் நான் ஒரு நல்லவன்) இனம் தெரியாத ஒரு பயம் என்னை ஆட்கொண்டது. ஆறுதல் இல்லாமல் என்மனம் பல்வேறு விதங்களில் குழம்ப ஆரம்பித்தது.

பாவமும் இருளும் சூழ்ந்த நிலையிலிருந்து விடுபட தெய்வத்தை தேட ஆரம்பித்தேன். பல புண்ணிய ஸ்தலங்களுக்கு சென்றால் ஆறுதல் அடையலாம் என்று எண்ணி புண்ணிய ஸ்தலங்கள் என்று கூறும் பல இடங்களுக்குச் சென்று வந்தேன். எனக்கு கிடைத்தது வெறுமையும், விரக்தியும்தான். நாளுக்கு நாள் பாவம் பெருகி சமாதானமும், ஆறுதலும் முழுவதும் இல்லாமல் இருண்ட நிலையிலிருந்தேன்.

தனிமையை தேடி ஓடி புலம்பினேன். கொடைரோடு அருகில் உள்ள ஒரு குன்றின் மீது அமர்ந்து, இயற்கையைப் பார்த்தேன். இறைவன் படைத்தவைகளைப் பார்த்தேன். மலைகளே நீங்கள் எப்படி அமைதியாக இருக்கிறீர்கள். சூரியனே, சந்திரனே, மரங்களே, செடிகளே நீங்கள் எல்லோரும் அமைதியாக, சமாதானமாக இருக்கிறீர்களே! உங்கள் வாழ்வில் கலக்கமில்லாமல் வாழ்வை ஓட்டுகிறீர்களே! உங்களை யார் படைத்தது? உங்களையும் என்னையும் ஒரே இறைவன்தானே படைத்து இருக்கமுடியும்!

நான் பலவிதமான கடவுள்களை வணங்குகின்றேனே, அவைகள் எல்லாம் கடவுள் இல்லையா? அவைகள் கடவுள் என்றால் எனக்கும் ஆறுதலும், சமாதானமும் தரலாமல்லவா? உலகத்தில் ஏன் இத்தனை கடவுள்? இத்தனை மதம்? இயற்கையை படைத்து இயக்கும் இறைவன் எனக்கும் வேண்டும் என்று எனக்குள்ளே புலம்பி, ஆறுதலுக்கும், சமாதானத்திற்கும் உண்மை

யான இறைவனைத் தேட ஆரம்பித்தேன். மனிதனின் இருதயத்தின் உள்ளிந்திரியங்களை ஆராய்ந்து பார்க்கும் இறைவன் என்னை அன்று தேட ஆரம்பித்தார்.

அந்த உண்மையான இறைவன் எனக்கு ஒரு கிறிஸ்தவப் புனிதநூல் (புதிய ஏற்பாடு) ஒன்று கிடைக்கவும், அதை வாசிக்கவும் கிருபை கொடுத்தார். மேலும் அந்த இறைவனைப் பற்றி அறிய வேண்டும் என்ற உணர்வோடு கொடைரோட்டில் அன்று என்னோடு வேலைபார்த்த ஒரு கிறிஸ்தவ சகோதரரிடம் கேட்டேன். சகோதரனே! நான் இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிய விரும்புகிறேன். உன்னோடு ஆலயத்திற்கு வரட்டுமா? என்று. அவரும் சரி என்று என்னை அன்று C. S. I. ஆலயத்திற்கு அழைத்துப் போனார்.

கிறிஸ்துவின் நோக்கம் மனிதனை பாவத்திலிருந்து மீட்பது என்ற கருத்தைக் கண்டதும் முழுமையாகக் கிறிஸ்துவுக்குள் தீவிரப்பட ஆரம்பித்தேன். எனது ஆர்வத்தைக் கண்ட வேறு இரண்டு சகோதரர்கள், தம்பி உனக்கு C. S. I. சபை சரிவராது. புதிய எருசலேம் சபைக்குப் போ என்று என்னை புதிய எருசலேம் சபை விசுவாசி ஒருவரிடம் விட்டுவிட்டு அவர்கள் C. S. I. ஆலயத்துக்கே போய்விட்டார்கள்.

பின்பு நான் புதிய எருசலேம் சபை விசுவாசியுடன் புதிய எருசலேம் சபைக்குச் சென்றேன். அன்று தமிழ்நாடு அப்போஸ்தலர் ஐயா அவர்களும், தீர்க்கதரிசி ஐயா அவர்களும் எனக்காகவே அன்று அங்கு வந்ததுபோல் வந்து இருந்தார்கள். ஆராதனை முடிந்தபின் என்னிடம் இயேசுகிறிஸ்துவின் இரட்சிப்பைப் பற்றியும் பாவத்திலிருந்து விடுதலையைப் பற்றியும் எடுத்து விளக்கமாக கூறினார்கள்.

"தேவன் தம்முடைய ஒரே பேரான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்". (யோவா 3:16). இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும், பாவங்களை வெளிப்படுத்தி அறிக்கையிட வேண்டும் (மாற் 1:5, நீதி 28:13) மன்னிப்பு அடைய வேண்டும் (யோவா 20:23). ஞானஸ்நானம் பெற வேண்டும் (மத் 28:19). பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ள வேண்டும் (யோவா 20:22, ரோம 8:9) என்று விளக்கமாக எடுத்துக் கூறினார்கள்.

நான் எல்லாவற்றிற்கும் கீழ்ப்படிந்து, இருளிலிருந்து விடுபட்டு, ஜீவ ஒளியை அடைய வேண்டும், இரட்சிப்படைய வேண்டும், ஆறுதல் அடைய வேண்டும், தேவனுடைய பிள்ளையாக வாழவேண்டும் என்ற நோக்கத்தோடு என்னை முழுமையாக ஒப்புக்கொடுத்தேன். சரி சகோதரரே ஜெபம் செய்வோம் என்றதும் முழங்கால் படியிட்டேன். எனக்காக என் தலையில் கை வைத்து ஜெபித்தார்கள். என் தேவாதி தேவன் என்னை அப்பொழுதே பரிசுத்த ஆவியால் அபிஷேகம் பண்ணினார். கர்த்தருடைய பெரிய பரிசுத்த நாமத்திற்கு மகிமையுண்டாவதாக.

பின்பு என் வாழ்நாளில் நான் செய்த எல்லாப் பாவங்களையும் வெளியரங்கமாய் அறிக்கையிட, அறிக்கையிட என் தேவன் என்னை மன்னித்தார். பின்பு நான் முழுக்கு ஞானஸ்நானம் எடுத்து ஜான் ராபின்சன் என்று பெயர் சூட்டப் பட்டு, இப்பொழுது புதிய மனிதனாக, சமாதானத்தோடும் மிகுந்த ஆறுதலோடும், ஜீவ ஒளியில் கிறிஸ்துவுக்குள் மகிழ்ச்சியாக இருக்கிறேன். பாவ அறிக்கையின் மூலம் கிறிஸ்துவுக்குள் இரட்சிக்கப்பட்டு புதிய எருசலேம் சபையில் மனமகிழ்ச்சியோடு தேவனை ஆராதித்து வருகிறேன். இவ்வித மெய்யான விடுதலையும், மீட்பும், இரட்சிப்பும், இயேசு கிறிஸ்து மூலமாய் புதிய எருசலேம் சபை (இயேசு கிறிஸ்துவின் சொந்த சரீரமான சபை)யில் மட்டும் உண்டு என்று அறிந்து இதை உங்களுக்கும் அறிவிக்கிறேன்.

சகோ. V. ஜான்ராபின்சன்,
திண்டுக்கல்.

---

"என்னைப் பின்பற்றுகிறவன் இருளிலே நடவாமல் ஜீவ ஒளியை அடைந்திருப்பான் என்றார்"
யோவான் 8:12

---

# (தொடர்ச்சி) புதிய எருசலேம் நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே, மலேஷியாவில் கர்த்தர் செய்த சில மகத்துவமான காரியங்களை உங்களுடன் மீண்டும் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன் Mr. மாணிக்கம் அவர்களைக் கர்த்தர் தம்முடைய சேவைக்காக அழைத்தார். அவர் தன்னுடைய குடும்பத்திலுள்ள சில பிரச்சனைகளைக் கூறினார். இவைகளைத் தேவன் சரி செய்து தந்தால் நான் அவருடைய சேவையை செய்வேன் என்று ஒப்புக் கொடுத்தார். அவருடைய பிரச்சனைகள் மூன்று...

1. தன்னுடைய மூத்த மகள் திருமணமாகி மூன்று ஆண்டுகள் ஆகின்றது. அவள் கணவர் ஓர் டாக்டர். என் மகளுக்கு குழந்தை இல்லாதபடியால் அவர் என் மகளைத் தள்ளிவிட்டு வேறொரு பெண்ணை விவாகம் செய்ய விரும்புகிறார். ஆகையால் கர்த்தர் என் மீது இரக்கம் கொண்டு என் மகளுக்கு ஓர் குழந்தை தரவேண்டும்.

2. என்னுடைய இரண்டாவது மகள் படித்துக் கொண்டிருக்கும்பொழுது, ஓர் இந்து வாலிபனால் மனமாற்றம் செய்யப்பட்டு, மௌன நிலைமைக்குள்ளாகி அந்த வாலிபனையே எண்ணிக் கொண்டிருக்கிறது. இதனால் அவளை வேறொரு இடத்தில் வைத்திருக்கிறோம். அவளுக்கு நல்ல விடுதலைக் கிடைத்து அவளை விவாகம் செய்து கொடுக்க வேண்டும்.

3. என்னுடைய இளைய மகளுடைய இறுதி ஆண்டு படிப்பில் அவள் தோற்றுப் போனால் மலேஷியாவில் வேலை பார்க்க முடியாது. ஆகையால் அவளுடைய படிப்பில் அவளுக்கு வெற்றி கிடைக்க வேண்டும். இவைகள் நிறைவேறினால் என் தேவனுக்கே தொண்டு செய்வேன் என்று கூறினார்.

நம்முடைய தேவனாகிய கர்த்தரால் கூடாத காரியம் ஒன்றுமில்லையே. தேவனிடம் இந்தக் காரியங்களுக்காக இரவில் விண்ணப்பம் செய்தோம். கர்த்தர் பேசினார். மூன்று பிள்ளைகளின் தலையிலும் கைவைத்து மேற்படி காரியங்களுக்காக ஜெபியுங்கள் நான் கிரியை செய்வேன் என்பதாகக் கர்த்தர் கூறினார். மறுநாள் காலையில் Mr. மாணிக்கம் அவர்களிடம் கூறினோம். உங்கள் பிள்ளைகள் இருக்கும் இடத்திற்கு எங்களை அழைத்துப் போங்கள் கர்த்தர் உங்கள் பிள்ளைகளை ஆசிர்வதிப்பார் என்று கூறினோம்.

அவருடைய இரண்டாவது குழந்தை கெடா (kedah) மாநிலத்தில் சுங்கெய் பட்டாணி (sungei patani) என்ற ஊரில் இருந்தது. அங்குள்ள இவருடைய உறவினர் நெல்சன்தாஸ் என்பவர். இவர் காவல்துறையில் ஓர் அதிகாரி. இவருக்குப் போன் செய்து இவருடைய வீட்டில் ஓர் ஜெபக்கூட்டம் நடத்த ஏற்பாடு செய்து, இந்தியாவிலிருந்து இரு தேவதாசர்கள் வருகிறார்கள் என்று அறிவிப்புக் கொடுத்து தன்னுடைய மகளையும் அங்கே வருவதற்கு ஏற்பாடு செய்யச் சொல்லியிருந்தார். அப்படியே அந்த வீட்டார் ஏற்பாடுகளைச் செய்து அநேக குடும்பங்கள் அங்கே கூடிவர ஏற்பாடு செய்திருந்தார்கள். Mr. மாணிக்கம் அவர்களுடைய மகன் Dr. Lawrence (லாறன்ஸ்) தன்னுடைய காரில் எங்களை அழைத்துப் போனார்.

அங்கே தன்னுடைய தங்கையை அடையாளம் காண்பித்து தந்தார். கூட்டத்தை ஆரம்பித்து நடத்தினோம். முடிவில் வியாதியஸ்தர்களுக்காக ஜெபித்தோம். கடைசியாக இந்த சகோதரியும் தனக்கு ஜெபிக்க வேண்டுமென்று முழங்காலிட்டது. கர்த்தருடைய வார்த்தையின் படியே அந்த சகோதரியின் தலையில் கைவைத்து ஜெபித்தோம். அந்த சகோதரியை தாக்கியிருந்த ஒரு இருள் அந்த சகோதரியை விட்டு விலகிப் போவதை எங்களுடைய ஆத்மீகக் கண்களால் கண்டோம். உடனே பரிசுத்த ஆவியானவர் உள்ளே இருந்து பேசினார். இவளைத் தாக்கியிருந்த ஆவி வெளியேறிவிட்டது. சீக்கிரமாகத் தெளிவடைந்து பெற்றோர்களின் வீட்டுக்குச்

செல்லுவான்; உடனே இவளுக்குத் திருமணத்திற்கான ஏற்பாடுகளைப் பெற்றோர்களின் விருப்பப்படி செய்யட்டும் என்று கர்த்தர் கூறினார்.

கூட்டம் முடிந்து மறுநாள் Mr. மாணிக்கம் அவர்களிடம் வந்து விபரங்களைச் சொன்னோம். மகள் வீட்டிற்கு வந்ததும் ஆவன செய்கிறேன் என்பதாகக் கூறினார். இளைய மகளுடைய படிப்புக்காகவும் அதனுடைய தலையில் கை வைத்து ஜெபித்தோம். மூத்தமகள் வீட்டிற்குப் போவதற்கு இன்னும் சமயம் வாய்க்கவில்லை. காரணம் அந்த சகோதரியின் கணவர் நன்றாக மது அருந்துபவர். ஆகையால் நாங்கள் அவருடைய வீட்டில் வந்து ஜெபிப்பதை அவர் விரும்பவில்லை. அவருடைய உள்ளத்தில் தேவன் கிரியை செய்வதற்காக நாங்கள் ஜெபித்தோம். மூன்றாவது நாளில் மாமனாருக்கு ஊழியர்களை அழைத்து வாருங்கள் என்று போன் பண்ணினார். Mr. மாணிக்கம் ரொம்ப மகிழ்ச்சியடைந்து இரவு 8 மணியிருக்கும் எங்களை மகளுடைய வீட்டிற்கு அழைத்துப் போனார். எங்களைக் கண்டதும் அந்த சகோதரி மிகுந்த மகிழ்ச்சியடைந்தது. சில வினாடிக்குள் டெலிபோன் மணி அடித்தது. ஓடி வந்து ஆவலோடு செய்தியைக் கேட்ட சகோதரியின் முகம் வாடிவிட்டது. தகப்பனார் கலக்கத்தோடு என்னம்மா விஷயம் என்று கேட்டார். கணவர் ஜெபத்திற்கு வரமாட்டாராம். வந்தவர்களை ஜெபித்துவிட்டு போகச் சொல் என்று கூறிவிட்டார் என்று அழுகையோடு கூறினது.

Mr. மாணிக்கம் சோகம் நிறைந்தவராய் எங்களை நோக்கினார். நாங்கள் கர்த்தரை ஸ்துதித்துக் கொண்டேயிருந்தோம். சில வினாடிகளுக்குப் பின் Mr. மாணிக்கம் அவருடைய மருமகனுக்குப் போன் பண்ணி பாஸ்டர்கள் உங்களைப் பார்க்க வாஞ்சையாய் இருக்கிறார்கள். நீங்கள் வரும்வரையில் இருப்பார்கள் என்று கூறினார். சரி வருகிறேன் என்று பதில் கூறினார் சிறிது நேரத்திற்குள் காரில் வந்து சேர்ந்தார். இருவருக்கும் சில ஆலோசனை கூறி கர்த்தருடைய கட்டளையின்படி தலையில் கை வைத்து ஜெபித்தோம். ஒரு உற்பவ கால திட்டத்திற்குள் ஓர் குழந்தையைக் கட்டளையிடுவேன் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இதை அவர்களிடம் கூறிவிட்டு Mr. மாணிக்கம் வீட்டிற்கு இரவு வந்து சேர்ந்தோம்.

மறுநாள் காலையில் அங்கிருந்து கோலாலம் பூருக்குப்பிரயாணம் செய்தோம். அந்த நாள் ஒரு முக்கியமான நாள், உலக சரித்திரத்தில் பெரியதொரு மாறுதல் உண்டாகும் என்று மக்களெல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாள் (1972 மார்ச் மாதம்) அதாவது கோளங்களெல்லாம் ஒன்றோடொன்று மோதி உடைந்து விடும், பெரிய அழிவு ஏற்படும் என்று விஞ்ஞானிகளும் வானிலை ஆராய்ச்சியாளர்களும் அறிவித்திருந்த நாள். ஆனால் அந்தநாளிலே மனிதர்கள் எதிர்பார்த்திருந்தபடி அழிவுகள் ஏற்படாது போனாலும், பலத்த சேதங்கள் பல இடங்களில் நடந்துவிட்டது. அன்று காலை முதல் மாலை வரையிலும் சூரியனைக் காணவில்லை. ஆங்காங்கு பெருங்காற்றும் கல்மழையும் பெய்து கொண்டிருந்தது. நாங்கள் கர்த்தருடைய ஆலோசனைப்படிப் பிரயாணப்பட்டு விட்டோம்.

Mr. சந்தோசம் என்பவர் ரயில்வேயில் வேலை பார்க்கிறார். இவருக்கு தந்தி கொடுத்து விட்டு நாங்கள் பஸ்ஸிலே பிரயாணம் செய்தோம். அன்றைய காலநிலை சரியில்லாத படியால் எங்கள் பஸ் காலதாமதமாகவே கோலாலம்பூரைச் சேர்ந்தது. Mr. சந்தோஷம் இருக்கும் ரெயில்வே குடியிருப்பின் அருகே பலத்த புயல் வீசி ஏராளமான வீடுகள் அழிந்துவிட்டது. எங்கு பார்த்தாலும் வெள்ளக்காடு. Mr. சந்தோசத்தின் கார் தண்ணீரைத்தாண்டி வரமுடியாமையால் காரை வழியில் விட்டு விட்டு Mr. சந்தோஷமும், அவர் பையனும் எங்களைப் பார்க்க பஸ் நிலையத்திற்கு வந்தார்கள். நாங்கள் வந்த பஸ் வந்து விட்டு போய்விட்டது என்று அறிந்து மிகவும் துக்கத்தோடு இருவரும் வந்து கொண்டிருந்தார்கள். எங்களை இதற்கு முன்பு இவர்கள் பார்த்ததில்லை, ஆனாலும் எங்கள் உடையைக் கண்டு இவர்கள் அந்த தேவனுடைய ஊழியர்கள்தான் என எண்ணி எங்களைக் கண்டு கொண்டார்கள்.

மிகவும் மகிழ்ச்சியோடு தங்கள் வீட்டிற்கு அழைத்துப் போனார்கள். வழக்கமாக அவர்கள் வீட்டில் வாரத்தில் ஓர்நாள் அங்குள்ள விசுவாசிகள் கூடி ஜெபிப்பது வழக்கம். அப்படியே அன்றைய தினத்தில் அவர்கள் கூடி வந்திருக்கையில் நாங்களும் போய் சேர்ந்தோம். அது அங்குள்ள மக்களுக்கு ரொம்ப மகிழ்ச்சியாய் இருந்தது. எங்களுடைய அனுபவ சாட்சிகளை அங்கு கூடி வந்த மக்கள் மத்தியில் கூறினோம். கர்த்தர் மிகுந்த ஆசீர்வாதத்தைக் கட்டளையிட்டார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

நாங்கள் முதலாவது கோலாலம்பூரில் இறங்கினால் தெலுக் அன்சன் Mr. மாணிக்கம் வீட்டிற்குப் போனோம். இதை அறிந்த Mr. சந்தோஷமும் அவர் வீட்டாரும் நீங்கள் கோலாலம்பூரில் இறங்கினது எங்களுக்குத் தெரிந்திருந்தால் நாங்கள் இங்கே முதலாவது உங்களை அழைத்து வந்திருப்போமே என்று கூறினார்கள். பல இடங்களுக்கு எங்களை அழைத்துக் கொண்டு போய் கர்த்தருடைய வார்த்தைகளைக் கூறக் வைத்தார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

மலேஷியாவில் தமிழர்களில், மக்கள் பெரும்பகுதி லூத்தரன் சபையைச் சேர்ந்தவர்களே, சத்தியத்தை வாஞ்சிக்கும் மக்கள் ஏராளமாய் இருக்கிறார்கள். கர்த்தர் தம்முடைய இருதயத்துக் கேற்ற மேய்ப்பர்களைக் கொடுத்து இவர்களைத் தமது மந்தையாய்கூட்டிச் சேர்ப்பாராக.

இந்த நாட்டில் (மலேஷியாவில்) பூர்வீகத் தேவாலயங்கள் உடைக்கப்பட்டு, தேவாலயம் இருந்த இடத்தில் மசூதிகள் கட்டப்பட்டு வருகிறது. வெளியரங்கமாய் சுவிசேஷம் அறிவிக்கக் கூடாது. மலேஷிய மொழியில் வேதாகமம் அச்சடிக்கக்கூடாது. இது போன்ற சட்ட திட்டங்களைத் அரசு அறிவித்துள்ளது. இந்த நாட்டின் இரும்புத் திரை சட்டங்களைத் தேவன் உடைப்பாராக. சீக்கிரம் உடைத்து ஏராளமான மக்கள் கர்த்தராகிய இயேசுவைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ள தேவன் வாசலைத் திறப்பார்.

பூர்வீகத் தேவாலயங்கள் இடிக்கப்பட்டப் பல இடங்களுக்கு Mr. மாணிக்கம் எங்களை அழைத்துப் போய் காண்பித்தார். எங்கள் உள்ளம் கலங்கினது. தெலுக் அன்சன் என்னும் இடத்தில் ஒரு பெரிய தேவாலயம் இருக்கிறது. அதன் அருகே பள்ளிவாசல் கட்டப்பட்டு வருகிறது. மேற்படி ஆலயத்துக்கு நோட்டீஸ் கொடுத்து ஆராதனை நிறுத்தப்பட்டுவிட்டது. ஆனால் இன்னமும் அந்த ஆலயம் இடிக்கப்படவில்லை. நாங்கள் அதைப் பார்த்து வந்து இரவில் மிகவும் பாரத்தோடு ஆண்டவரிடம் வேண்டுதல் செய்தோம். அன்று நடு இராத்திரியில் கர்த்தர் பேசினார்.

"அந்த ஆலயம் இடிக்கப்படமாட்டாது. இந்த நாட்டில் எனக்குப் பிரியமான ஆட்சியை ஏற்படுத்தி என்னுடைய நாமத்தை மகிமைப் படுத்துவேன்" என்றார். மறுநாளில் Mr. மாணிக்கம் அவர்களிடம் விவரத்தைக் கூறினோம். அவர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம் அரசு ஆணையை யார் மாற்ற முடியும் என்று அவர் எண்ணினார். (ஆனால் 1955ல் இந்தியாவுக்கு வந்த Mr. மாணிக்கம் கூறினார்: நீங்கள் சொன்னபடி அந்த தேவாலயம் இன்னமும் உடைக்கப்படவில்லை என்று கர்த்தர் தம்முடைய வார்த்தைகளில் ஒன்றையும் தரையிலே விழுந்து போகவிடவில்லையே. அவருக்கே மகிமையுண்டவதாக.)

நாங்கள் கோலாலம்பூரில் கர்த்தருடைய வேலையை முடித்துவிட்டு 17. 3. 52ல் அங்கிருந்து சிங்கப்பூர் வழியாக விமானத்தில் இந்தியா வந்து சேர்ந்தோம். தேவன் அருளிய சொல்லிமுடியாத ஈவுகளுக்காகத் தேவனைத் ஸ்துதிக்கிறேன். நாங்கள் இந்தியா வந்து சேர்ந்ததும் Mr மாணிக்கம் அவர்களிடமிருந்து வந்த கடிதத்தில் தன்னுடைய இரண்டாவது மகள் மனந்திரும்பி வீட்டிற்கு வந்து விட்டாள். அவளுக்கு திருமணத்திற்காக ஒரு மாப்பிள்ளையைத் தேவன் ஆயத்தம் செய்து தரும்படி வேண்டிக் கொள்ளுங்கள் என்றுதாக எழுதியிருந்தார். அப்படியே கர்த்தர் அந்த சகோதரிக்கு திருமணம் நடக்க ஏற்பாடு செய்தார். குறித்த காலத்தில்

அவருடைய மூத்த மகளுக்கு ஓர் ஆண் மகவைத் தேவன் கட்டளையிட்டார். இளைய மகளும் பட்டப்படிப்பில் வெற்றி பெற்றுள்ளது. Mr. மாணிக்கம் அவர்களும் கர்த்தருடைய பணிக்காகத் தன்னை ஒப்புக் கொடுத்திருக்கிறார். அவரைக் கொண்டு கர்த்தர் தம்முடைய நாமத்தை மகிமைப் படுத்துவாராக.

(தொடரும்)

Pastor S. Sundarraj, Vallioor.

"தேவனாலே கூடாத காரியம் ஒன்று மில்லை" - லூக் 2 : 18

## ஊழியர் மாநாடு

மே மாதம் 10-ம் தேதி சனிக்கிழமை முதல் 21-ம் தேதி புதன்கிழமை முடிய புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் B. L. Shed ல் நடைபெற்றது. தேவனாகிய கர்த்தர் தம்முடைய வல்லமையையும், மகிமையையும் வெளிப்படுத்தினர். தேவ இரகசியங்கள் வெளிப்பட்டன. ஊழியர்கள் எல்லோரும் ஆவியிலும், ஆத்துமாவிலும், சரீரத்திலும் பலப்பட்டு பெலனடைந்தார்கள். புதிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. புதிய உத்வேகத்துடன் கர்த்தருடைய சித்தம் செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளது. மே 22-ந் தேதி 20 பேர் ஞானஸ் நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளாக்கப்பட்டார்கள். மே 23-ந் தேதி முதல் 25ம்-ம் தேதி முடிய கொடைக்கானலில் கொடைக்கானல் மக்களுக்காக புதிய எருசலேம் சபையின் கன்வென்ஷன், நற்செய்தி கூட்டங்கள் நடைபெற்றன. தேவனுடைய நற்செய்தி வல்லமையாய் பிரசங்கிக்கப்பட்டது. தேவன் மகிமைப்பட்டார். நம் முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினால் தேவன் ஊழியர் மாநாட் டையும், ஞானஸ்நான கூட்டத்தையும் கன்வென்ஷன் கூட்டங்களையும் ஆசீர் வாதமாய் நடத்தி நிறைவுபடுத்தித் தந்தார். இந்த ஊழியங்களுக்காக உற்சாக மாய் கொடுத்த எல்லா தேவ ஊழியர்களுக்காகவும், திருச்சபையோருக்காகவும் கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறோம். கர்த்தர் அதற்கான பலனை கட்டளை யிடுவாராக. ஊழியர் மாநாட்டிற்காய் ஜெபித்த, உழைத்த, தியாகம் செய்த எல்லா மக்களுக்காயும் கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறோம். விசேஷமாய், கொடைக்கானல் சபை ஊழியர்கள், விசுவாசிகளின் உழைப்பும், தியாகமும், பணிவிடையும் போற்றத்தக்கதாக இருந்தது. இப்படியே கர்த்தருடைய சித்தத்தை அவருடைய காரியத்தை நாம் எல்லோரும் உற்சாகமாய் செய்து முடிப்போமாக. கர்த்தர், சம்பந்தப்பட்ட எல்லாரையும் ஆசீர்வதிப்பாராக.

## மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கை செய்யாத எந்த ஆவியும் தேவனால் உண்டானதல்ல

இயேசு கிறிஸ்துவை அறிக்கைப் பண்ணுதல்.

1. அவர் தேவனுடைய குமாரன் என்று அறிக்கை செய்தல்.

2. அவர் தேவனுக்கு சமமான திரித்துவ தேவனில் ஒருவர் அல்லது தேவன் என ஒப்புக் கொள்ளுதல்.

3. அவரை விசுவாசித்து அவரை ஏற்றுக் கொண்டு சாட்சி கொடுத்தல் (ரோம 10 : 9-10).
4. இரத்தத்தினால் சாட்சி கொடுத்தல், பாவங்களை அறிக்கையிட்டு பாவ மன்னிப்பு பெறல்.
5. ஜலத்தினால் சாட்சி கொடுத்தல் : அவருடைய கட்டளையின்படி முழுகி ஞானஸ்நானம் எடுத்தல்.
6. ஆவியினால் சாட்சி கொடுத்தல்: பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்று ஆவியினால் ஆராதனை செய்தல் (பிலி 3 : 3).
7. வசனத்தினால் சாட்சி கொடுத்தல் : தேவவசனத்தின்படி கீழ்ப்படிந்து வசனத்தை தன் ஜீவியத்தில் நிறைவேற்றி கீழ்ப்படிதலுடன் ஜீவித்தல்.
8. அவருடைய வருகைவரை அவர் கட்டளையிட்ட அவர் மரண ஞாபகார்த்த பண்டிகையை நினைவு கூறல் (சபை ஐக்கியம்) I கொரி 11 : 24-26.
9. புறப்பட்டுபோய் ஆத்துமாதாயம் செய்தல்.
10. அதிகாரங்களுக்கு அடங்கி நடத்தல், விசேஷமாய மேய்ப்பனின் கீழ் அடங்கி நடத்தல் (எபி 13 : 1-7).
11. பூமியில் பொக்கிஷம் சேர்க்காமல் வருகையை நோக்கி அல்லது இலக்கை நோக்கித் தொடரல் (பிலிப் 3 : 14).

இவைகளில் எதில் குறைந்தாலும் அவன் மாம்சத்தில் வந்த இயேசு கிறிஸ்துவை தேவனுடைய வசனமான தேவ வார்த்தையைப் புறட்டுகிறவனும், மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கை பண்ணாதவனுமாயிருக்கிறான்.

> "அவர்கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று அறிக்கை பண்ணுகிறார்கள், கிரியைகளினாலோ அவரை மறுதலிக்கிறார்கள் .." தீத் 1 : 16

# எச்சரிக்கை

93 காட்சி :- ஒரு அழகான அறை. அந்த அறையின் ஒரு மூலையில் அழகான பூஞ்செடியொன்று தொட்டியொன்றில் பத்திரமாய் வளர்ந்து கொண்டிருக்கிறது. அறையின் இன்னொருபுறம் ஒருவர் நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். அப்பொழுது ஒரு கறுத்த உருவம் அந்த செடியைப் பிடுங்கிப்போட அதனிடம் நெருங்குகிறது. நாற்காலியில் இருக்கிறவர் உடனே அந்த உருவத்தை அடித்து விரட்டி விடுகிறார். சிறிதுநேரம் கழித்து சர்ப்பம் ஒன்று மெதுவாக வந்து தொட்டியிலிருக்கும் பூஞ்செடியினிடம் போகிறது. அது செடியைத் தீண்டி தொட்டியிலிருந்து பிடுங்கிப்போட முயற்சிக்கும்போது அறையிலிருக்கிறவர் அதையும் அடித்து கொன்று போடுகிறார். மூன்றாவதாக அறிமுகமான ஓர் ஆள் கையில் பூவாளியுடன் (செடிகளுக்கு தண்ணீர்ப் பாய்ச்சும் வாளி) உள்ளே வந்து செடிக்கு தண்ணீர் விடுவதுபோல் தண்ணீர் விட்டுக் கொண்டே அறையிலிருக்கிறவர் கவனியாத சமயம் பார்த்து செடியை வேரோடு பிடுங்கிப்போட முயற்சிக்கிறார். அதைக் கவனித்துவிட்ட நாற்காலியிலிருக்கிறவர் அந்த மனிதனையும் அடித்து நொறுக்கி விரட்டி விட்டார். பின் செடி வளர்ந்து மகிமையாய் விளங்கிற்று.

தேவ ஆவியானவர் கொடுத்த விளக்கம் :- அறை வீட்டிலிருக்கும் செடி சபையிலிருக்கும் விசுவாசி என்றும், சபையை விட்டு விசுவாசியைப் பிரிக்க சாத்தான் முதலாவதாக நேரடியாகப் போராடுவான்; அதுவே அந்த கரிய உருவம் என்றும் இரண்டாவது வந்த பாம்பு சபையைவிட்டு விசுவாசியைப் பிரிக்க பாவம் போராடுவதுதான் அந்த சர்ப்பம் என்றும்; இதற்கும் விசுவாசி தப்பிவிட்டால் செடிக்கு தண்ணீர் வார்க்க வந்த அறிமுகமான ஆள் (விசுவாசி அல்லது ஊழியர்) நல்லது செய்வதுபோல் வந்து சபையைக் குறித்தும் சபையின் ஊழியர்களைக் குறித்தும் குறை சொல்லி கொஞ்சம் கொஞ்சமாக விஷத்தை ஊற்றி சபையை விட்டு பிரிக்க முயலும் சத்துருவினுடைய கையாள் என்றும் தேவன் காண்பித்தார். அந்த செடி தொட்டியை விட்டு ஒருமுறை பிடுங்கப்பட்டு விட்டால் திரும்ப நாட்டினாலும் முதலிலிருந்த பிரகாரம் செழித்து வளருமா என்பது சந்தேகமே. இதுவே சாத்தானுடைய கடைசி முயற்சி என்று தேவன் கூறினார். இதற்கு விலகி உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்

கேரிதநிலிருந்த அறைதை ஆசிரமம் புதிய எருசலேம் ஆசிரமமாக ஜூன் 1980 முதல் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது என்பதை அறிவித்துக் கொள்ளுகிறோம். அதை ஆசிரமத்திற்கு உதவி செய்ய விரும்புகிறவர்கள் Chief Pastor N. Lazar "New Jerusalem Church" 7, Triloksing Chawl, Jerimeri Saki Naka P st Bombay-400 072. என்ற விலாசத்திற்கு; New Jerusalem ஆசிரமத்திற்காக என்று எழுதி அனுப்பவும் ஜெபிக்கவும்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 32 ★ AUGUST 1986

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.
விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா
ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய்ப் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

எக்காளசத்தம் 32 ● ஆகஸ்ட் 1986

# புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

### இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து : தேயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1 : 1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்— மத். 28 : 18; மாற்கு 16 : 15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத். 28 : 19 [இயேசு மாதிரி (Through action) செய்து காண்பித்தார்.]

3. திருச்சபையைக் கட்டி (மத். 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத். 28 : 20

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் யோவா 21 : 15-17

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1 : 5-8-
7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1 கொரி 11 : 23-26.

நான் : ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—நீதி 9 : 1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப். 1 : 1; 10 : 40-43.

CHIEF PASTOR N. LAZAR

# ஆசிரியர் உரை

கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற அனேகர் கிறிஸ்துவையும், வேதத்தையும் விட்டு வெகு தூரம் பின் வாங்கியிருக்கின்றனர். அவர்களுடைய ஜீவியம் கபட நாடகமாகவே இருக்கிறது. பொய்யும், புரட்டுமான வார்த்தையுடையவர்களாயும், இடத்துக்குத் தக்கபடி, ஆளுக்குத் தக்கபடி வேஷம் போடுகிறவர்களாய் இருக்கின்றனர். உள்ளொன்றும், புறம் ஒன்றுமாக இருக்கின்றனர். பொய் பேசி திரிகிறார்கள். மனிதன் முதலாவது மனிதனாக வேண்டும். மனிதன் தன்னைப் போல் பிற மனிதனையும் மனிதன் என்று மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்கு பின்பே அவன் கிறிஸதவனாகுகிற, தேவனுடைய பிள்ளையாகிற நிலை. அதற்குப் பின்பே அவன் தெய்வ நிலையை அடைய முடியும். மனிதன் முதலாவது உண்மை உள்ளவனாக ஜீவிக்கவும், பேசவும் கற்றுக் கொள்ளவேண்டும். கிறிஸ்தவர்களில் அநேகர் மிஞ்சின பரிசுத்தம் பேசுவார்கள், அவர்களுடைய ஜீவியத்தில் பரிசுத்தம் இருக்காது. தாழ்மையைப் பற்றிப் பேசுவார்கள், தாழ்மை கிஞ்சித்தேனும் அவர்கட்கு இருக்காது. சமத்துவத்தைப் பற்றிப் பேசுவார்கள். ஜாதி வெறி பிடித்தவர்களாக இருப்பார்கள். தேவனுக்குரிய மகிமை செலுத்துபவர்களாக அபிநயிப்பார்கள், பெரிய தேவ தூஷணைக்காரர்களும், தேவத் துரோகிகளும், தேவனை அசட்டை பண்ணுகிறவர்களுமாக இருப்பார்கள். இவர்கள் போதிப்பார்கள், போதனையின்படி நடக்க மாட்டார்கள். சமயத்தில் இப்படிச் சொல்லுவார்கள். போதகத்தைப் பார், போதகனைப் பாராதே என்று. போதகனே போதகத்தின்படி நடக்க முடியவில்லை, என்றால் எவர் அந்தப் போதகத்தின்படி நடப்பர். இதன் மூலமாக இவர்கள் கள்ள மார்க்கத்தார் என்று திட்டமாக அறிகிறோம். நடைமுறை கிறிஸ்தவ ஜீவியம் என்றால் என்ன? என்பதை போதிக்கிறோம். போதனையின்படி நடக்கப் பிரயாசப்படுகிறோம். ஒரு மனிதன் தன்னைச் சுத்திகரித்துக் கொண்டு தேவாவியினால் நிரம்பி ஜீவிப்பதே கிறிஸ்தவ ஜீவியம். அவ்வப்போது தேவாவியானவர் நம்மை நடத்துவார். அது திருவசனத்தின்படி இருக்கும். கர்த்தர் நாம செய்கிற எல்லாவற்றிற்கும் தேவ வசனம் ஆதாரம் காட்டுவார். தேவன் நியாயப்பிரமாணத்தை மறுபடியும் மேன்மைப்படுத்தப் போகிறார். உலகத்தில் தேவன் நீதி நியாயத்தை நிலை நாட்டப் போகிறார். இது கடைசிக் காலம். மாய்மாலக்காரர்களுடைய வேஷங்களெல்லாம் கலைக்கப்படும். களைகள் எல்லாம் சுட்டெரிக்கப்படுவதற்காக ஒன்றாகக் கூட்டப்படுகிறார்கள். வேதத்தை அசட்டை பண்ணுகிற துன்மார்க்கர் கூட்டமாய் கூடுவது கடைசி கால சம்பவமாய் இருக்கிறது. சுட்டெரிக்கப்படுவதே அவர்கள் முடிவு.

இப்படிக்கு,

Chief Pastor N. LAZAR.

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகை

(மே மாத தொடர்ச்சி)

### 10. சபை நிறைவடைதல் (I கொரி 13 : 10; எபேசி 5 : 26, 27)

சபை என்று சொல்லும்பொழுது தேவனுடைய சரீரமான சபையைக் குறிக்கிறது. அதை கிறிஸ்துவின் மணவாட்டி என்று வேதம் வர்ணிக்கின்றது. தம்முடைய மணவாட்டியை கிறிஸ்து சுத்திகரித்து, பரிசுத்தமாக்கி கறைதிரை முதலானவைகள் ஒன்றுமில்லாமல், பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக பூரணப்படுத்தும்படிக்கு அந்தச் சபைக்காகத் தம்மை ஒப்புக்கொடுத்தார் (எபே 5:26, 27).

பூரணமாக அலங்கரிக்கப்பட்ட, ஆயத்தமாக்கப்பட்ட ஒரு மணவாட்டியாய சபை காணப்படுவதை வெளி 21:2, 1[illegible] ஆகிய வசனங்களில் எழுதப்பட்டுள்ளது. இப்படியிருக்க இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தால் போதும், அல்லது மனந்திரும்பினால் போதும், இல்லையென்றால் ஞானஸ்நானம் எடுத்துக்கொண்டால் போதும், அல்லது பரிசுத்த ஆவி பெற்றுக் கொண்டால் போதும், யார் யார் எப்படி விசுவாசிக்கிறார்களோ அப்படி இருந்தால் போதும் மோட்சம் அடையலாம் என்று கிறிஸ்தவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். சிலர் ஒழுங்காக கோவிலுக்கு போகிறதினாலும், வேதம் வாசிக்கிறதினாலும், ஜெபம் பண்ணுகிறதினாலும் தாங்கள் இரட்சிக்கப்படுவோம் இயேசு கிறிஸ்துவினுடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

முதலாவது அவர்கள் இரட்சிக்கப்பட வேண்டும். இரட்சிப்போடு கூட இந்த அனுபவங்களும் இருப்பது அவசியம். இன்னும் சிலர் தாங்களே தாங்கள் ஊழியம் செய்கிறதினாலும், சமூகசேவை செய்கிறதினாலும், மற்றவர்களைக் காட்டிலும் தாங்கள் தலைவர்களாய் இருக்கிறதினாலும்; தாங்கள் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம் என்றும், தாங்களும் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். சுய இஷ்டமான ஆராதனையும், சுய ஆவியினால் தூண்டப்பட்டு செய்கிற ஊழியங்களும் கர்த்தரால் அங்கீகரிக்கப்பட மாட்டாது.

மனித மனமானது நயவஞ்சகமுள்ளது. மனிதன் இரட்சிக்கப்படுவதற்கு முன்பாக தன்னுடைய ஆத்துமாவின்படி ஜீவிக்கிறான். அதாவது தன்னுடைய மனம் தூண்டியபடி போக வேண்டிய இடத்திற்குப் போகிறான். வரவேண்டிய இடத்திற்கு வருகிறான், செய்ய வேண்டுமென்று நினைக்கிறதைச் செய்கிறான், விருப்பமில்லாததை விட்டு விடுகிறான். இரட்சிக்கப்பட்ட ஒருவனும் தான் விரும்புகிற இடத்திற்கு (கூட்டத்தில்) போய் ஆராதிக்கிறான். தன்னுடைய விருப்பத்தின்படி ஊழியம் செய்கிறான். தான் விரும்புகிறதைக் கைக்கொள்ளுகிறான். விருப்பமில்லாததை விட்டு விடுகிறான். இப்பொழுது இரட்சிக்கப்பட்டவனுக்கும் இரட்சிக்கப்படாதவனுக்குமுள்ள வித்தியாசம் என்ன? இருவரும் பாவிகளே.

இரட்சிக்கப்பட்ட ஒருவன் தன்னுடைய விருப்பத்தின்படியல்ல, தனக்கு ஒரு விருப்பம் உண்டாயிருந்தாலும்; தேவனிடத்தில் ஜெபித்துக் கேட்டு தேவனுடைய வசனத்தின் படியும் தேவனுடைய ஆலோசனையின் படியும்; ஜீவியத்திலும், ஆராதிப்பதிலும், ஊழியத்திலும் செயல்பட வேண்டும்.

தன்னைத்தான் நடத்துகிறவன் தகாதவனால் (சாத்தான்) நடத்தப்படுகிறான் என்றொரு பொன்மொழி உண்டு. நடத்திப்புக்காரன் தேவை. மெய்யான சபைக்குத் தேவன் அப்போஸ்தலர்களையும், தீர்க்கதரிசிகளையும் மேய்ப்பர்களையும், போதகர்களையும் சுவிசேஷகர்களையும் கொடுக்கிறார். நாம் அனைவரும் தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டவர்களாகி, கிறிஸ்துவினுடைய நிறைவான வளர்ச்சியின் அளவுக்குத் தக்க

பூரண புருஷராகும் வரைக்கும் பரிசுத்தவான்கள் சீர்பொருந்தும் பொருட்டு சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்காகவும் கிறிஸ்துவின் சரீரமாகிய சபையானது பக்தி விருத்தி அடைவதற்காகவும், அவர் சிலரை அப்போஸ்தலராகவும், சிலரை தீர்க்கதரிசிகளாகவும், சிலரை சுவிசேஷகராகவும் சிலரை மேய்ப்பராகவும் போதகராகவும் ஏற்படுத்தினர் (எபே 4:11-13).

மெய்யான சபைக்குத் தேவன் நடத்திப்புக்காரர்களைக் கொடுக்கிறார். உங்களை நடத்துகிறவர்கள் உங்கள் ஆத்துமாக்களுக்காக உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்திருக்கிறவர்களானபடியால் என்றும், உங்களை நடத்தினவர்கள், உங்களை நடத்துகிறவர்கள் என்றும் (எபி : 17, 7, 24) வேதத்தில் வாசிக்கிறோம்.

கர்த்தாவே மனுஷனுடைய வழி அவனாலே ஆகிறதல்லவென்றும் தன் நடைகளை நடத்துவது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும் அறிவேன். (எரே 10:23) என்றும் வேதம் சொல்லுகிறது மனிதனை கர்த்தர் நடத்த வேண்டும். கர்த்தர் தாம் நியமித்த தம்முடைய ஊழியர்களைக் கொண்டு அப்போஸ்தலர்களைக் கொண்டு தம்முடைய பிள்ளைகளை பூரணத்துவத்துக்கு நேராக நடத்துகிறார். அப்போஸ்தலன்தான் திருச்சபையை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்துவுக்கு முன்பாக நிறுத்த முடியும். நான் உங்களை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியால் உங்களுக்காக தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டிருக்கிறேன் (II கொரி 11:2) என்று அப்போஸ்தலர் சொல்லுகிறார்.

இந்நாட்களில் கிறிஸ்துவுக்கு முன்பாக சபையை பரிசுத்தப்படுத்தி ஒப்புக்கொடுக்கப் போகிறோம் என்று சிலர் சொல்லுகிறார்கள், இது இவர்களால் ஆகிறதல்ல. அது அப்போஸ்தலனால் மாத்திரமே முடியும். இன்னும் சிலர் இவ்விதமாக எண்ணியிருக்கிறார்கள் போல தெரிகிறது. ஒருவர் இவ்விதமாக கேள்வி எழுப்பினர். என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு என்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே ஆனபடியால் அவரவர் இருக்கிற நிலைக்குத்தக்க பிரகாரம் அதாவது C.S.I. காரர்களுக்கு ஒரு இடம், மெதடிஸ்ட்காரர்களுக்கு ஒரு இடம், பெந்தேகோஸ்தே காரர்களுக்கு ஒரு இடம், பிரதரன் மிஷன் (Brothren Mission) காரர்களுக்கு ஒரு இடம், ரோமன் கத்தோலிக்ககாரர்களுக்கு ஒரு இடம், பெந்தெகோஸ்தேகாரர்களின் வெவ்வேறு மாறுபட்ட கொள்கைக்காரர்களுக்கு வெவ்வேறு இடம், அந்தந்த ஜாதிக் கிறிஸ்தவர்களுக்கு அந்தந்த ஜாதிக்கென்று தனி இடம் கிடைக்கும் என்று நம்புகிறோம் என்றார்.

அருமையான விசுவாசிகளே! ஏமாந்து போகாதிருங்கள். நாம் எல்லாரும் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டிருக்கிறோம் (எபே 4:4). என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு. ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம் பண்ணப் போகிறேன். நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம் பண்ணின பின்பு (ஸ்தலங்களை அல்ல) நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்வேன் (யோவா 14:2, 4) என்றே இயேசு கிறிஸ்து சொல்லியிருக்கிறார். ஒரு ஸ்தலம்தான். அநேக ஸ்தலங்கள் அல்ல. ஒரே இடத்திற்குத்தான் அழைப்பு. இங்கே ஒன்றாய் இருக்க முடியாதவர்கள் அங்கே எங்கே ஒன்றாய் ஒரே இடத்தில் இருக்க முடியும்?

ஆனபடியினாலே சபையானது கிறிஸ்துவுக்குள் பூரணமடைய வேண்டும். கிறிஸ்துவுக்குள்ளாக எல்லா உபதேசத்திலும், எல்லாக் கிருபையிலும், எல்லா அறிவிலும் நிறைந்தராய் யாதொரு வரத்திலும் குறைவில்லாதராய் இருந்தால் மாத்திரமே கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்பட முடியும். எந்தச் சபையாய் இருந்தாலும் இந்த வசனத்தின்படி நிறைவடைந்தால் மாத்திரமே கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படும் என்று வேதம் சொல்லுகிறது. நீங்கள் இயேசு கிறிஸ்துவுக்குள்ளாய் எல்லா உபதேசத்திலும் எல்லா அறிவிலும் சம்பூரணமுள்ளவர்களாய் யாதொரு வரத்

திலும் குறைவில்லாதவர்களாய் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வெளிப்படுவதற்குக் காத்திருக்கிறீர்கள்) I கொரி 1: 5-7) என்று ஆதி சபையைக் குறித்தும் எழுதப்பட்டிருக்கிறது. இந்தப் பிரகாரம் உன்னுடைய சபையும் இருந்தால் நீ எடுத்துக் கொள்ளப்படுவாய் அல்லது கைவிடப்படுவாய்.

எந்த மனுஷனையும் கிறிஸ்து இயேசுவுக்குள் தேறினவனாக நிறுத்தும்படிக்கு அவரையே நாங்கள் அறிவித்து, எந்த மனுஷனுக்கும் புத்தி சொல்லி, எந்த மனுஷனுக்கும் எல்லா ஞானத்தோடும் உபதேசம் பண்ணுகிறோம் (கொலோ 1:28). இழிவான ஆதாயத்திற்காகவோ, பேருக்காகவோ, புகழுக்காகவோ, பதவிக்காகவோ, பிறரை பிரியப்படுத்தவோ, ஊழியம் செய்கிறவர்கள் கர்த்தருடைய வருகைக்கு மக்களை ஆயத்தப்படுத்த முடியாது. அதற்காக அனுப்பப்பட்டவர்கள் அந்த வேலையை செய்து முடிப்பார்கள். சபை எல்லா விதத்திலும், எல்லாக் காரியத்திலும் ஒன்று போல் நிறைவடைய வேண்டும்.

தசமபாகம் கொடுக்கிறார்கள் என்றால் எல்லாரும் கொடுக்க வேண்டும், உபவாசிக்கிறார்கள் என்றால் எல்லாரும் உபவாசிக்க வேண்டும், ஜெபிக்கிறார்கள் என்றால் எல்லாரும் ஜெப வாழ்க்கை நடத்த வேண்டும். பரிசுத்தமாகுதல் என்றால் எல்லாரும் பரிசுத்தமாக வேண்டும் எல்லாரும் ஒரே மனமும் ஒரே சிந்தையுமுடையவர்களாக வேண்டும். எல்லாக்காரியத்திலும் எல்லாரும் ஒன்றாக வேண்டும். ஒன்றாக வேண்டுமென்ற எண்ணம் வேண்டும் (அப் 4:32). அப்பொழுது சபை நிறைவடையும், எல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்படுவார்கள், எல்லாரும் ஒருமனப்படுவார்கள். தேவனுடைய வல்லமை வெளிப்படும். கர்த்தருடையசபை நிறைவடையும் உயிர் மீட்சி உண்டாகும்.

உயிர்மீட்சி என்றால் சிலர் எண்ணுகிறது போல ஆவியில் நிரம்பி குதித்தல் அல்ல. ஆதி சபையின் விசுவாசத்தை சபை திரும்பவும் பெற்றுக் கொள்ளுதலே உயிர் மீட்சியாகும். இப்படி சிலர் எழுதிக்கொண்டிருந்தார்கள்:- உயிர்மீட்சி White Field கன்னியாகுமரியில் இருந்து உண்டாகப் போகிறதென்று. அது பொய்த்துப் போய்விட்டது. வேறுசிலர் முழு இரவு ஜெபக்கூட்டங்களிலிருந்து உண்டாகப் போகிறதென்று சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். அது எத்தனையோ பிரிவாய் போய்விட்டது. இன்னும் சிலர் தங்கள் இயக்கத்திலிருந்து உண்டாகப் போகிறதென்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதுவும் ஆகப் போகிறதில்லை.

உயிர்மீட்சி திருச்சபையிலிருந்து உண்டாகிறது. இதோ உயிர்மீட்சி துவங்கி பரவிக் கொண்டிருக்கிறது. அது தேவனுடைய வீடும் சபையுமாக இருக்கிறது. அதுவே சத்தியத்திற்குத் தூணும் ஆதாரமுமாய் இருக்கிறது. அந்தச் சபையே சத்தியத்தை நிலைநாட்ட முடியும். மற்றவர்கள், ஜனங்களுக்குப் பிரியமாகப் போதித்து உபதேசங்களை, சத்தியத்தை மாற்றிக் கொண்டிருப்பார்கள். எல்லாவற்றையும் விட்டுவிட்டோம் என்று சொல்லுகிறவர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டோம் என்று சொல்வது போல் உபதேசத்தையும் விட்டுவிட்டார்கள்.

நாமோ ஜீவனுள்ள தேவனுடைய சபையாய், சத்தியத்திற்குத் தூணும் ஆதாரமுமாய் இருக்கிற தேவனுடைய வீட்டிலே (I தீமோ 3 : 15) நிலைத்திருந்து கர்த்தருடைய வருகைக்காய் பூரணப்படுவோமாக. ஆயத்தப்படுவோம்!

(தொடரும்)

---

"நான் உங்களை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டிருக்கிறேன்"

II கொரி 11 : 2, 3.

# நீங்கள் சொஸ்தமடையும்படி உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிடுங்கள்

இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின் நாற்பது நாட்களளவும் அப்போஸ்தலருக்கு தரிசனமாகி தேவனுடைய இராஜ்யத்திற்குரிய அநேக காரியங்களை அவர்களுக்கு உபதேசித்தார் (அப் 1 : 1-3). அவர் மரணமடைவதற்கு . முன் பரலோக இராஜ்யம் வரப்போகிறது என்றார். மரித்து உயிர்த்த பின் அந்த இராஜ்யத்திற்குரியவைகளை கட்டளையிட்டார். அதன் மாதிரிகளை காண்பித்தார். உபதேசித்தார். இங்கே இராஜ்யம் என்பது தேவனுடைய சபையே. சபைக்குரிய கட்டளைகளை இயேசு உயிர்த்தெழுந்த பின்பே கொடுத்தார். அவைகளில் பாவ அறிக்கை பாவ மன்னிப்புக் காரியமும் உட்படும். இயேசு தாம் உயிர்த்தெழுந்த அன்று மாலையிலே சீஷர்கள் அடைக்கப்பட்ட வீட்டினுள் இருக்கும் போது அவர்கள் நடுவில் தோன்றி உங்களுக்கு சமாதானம், பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன், என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள். எவர்களுடைய பாவங்களை நீங்கள் மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை நீங்கள் மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார் (யோவா 20 : 21-23). இதுவே இயேசு சீஷர்களுக்கு கொடுத்த முதலாம் கட்டளையும், அதிகாரமுமாகும். இங்கே யார் தங்களுடைய பாவங்களில் எவைகளை சீஷர்களுக்கு முன் அறிக்கையிடுகிறார்களோ அவர்களுக்கு அவர்கள் அறிக்கை செய்த பாவத்தை மன்னிக்க சீஷர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்படுகிறது. அறிக்கை செய்யாத பாவங்கள் மன்னிக்கப்படாமலே இருக்கும் என்று கர்த்தர் அறிவித்துள்ளார். இதற்கு யாக்கோபின் புஸ்தகம் ஒத்து வருகிறது. உங்களில் ஒருவன் சந்தோஷமாயிருந்தால் சங்கீதம் பாடக்கடவன். துன்பப்பட்டால் ஜெபம் பண்ணக்கடவன். உங்களில் ஒருவன் வியாதிப்பட்டால் சபையின் ஊழியர்களை வரவழைப்பானாக. அவர்கள் கர்த்தருடைய நாமத்தினாலே அவனுக்கு எண்ணெய் பூசி அவனுக்காக ஜெபம் பண்ணக்கடவர்கள். அப்பொழுது விசுவாசமுள்ள ஜெபம் பிணியாளியை இரட்சிக்கும், கர்த்தர் அவனை எழுப்புவார். அவன் பாவம் செய்தவனானால் அது அவனுக்கு மன்னிக்கப்படும். நீங்கள் சொஸ்தமடையும் படிக்கு உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு ஒருவருக்காக ஒருவர் ஜெபம் பண்ணக் கடவர்கள். நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது (யாக் 5:13-16) என்று எழுதப்பட்டிருக்கிறது. புதிய ஏற்பாட்டின் நிருபங்கள் விசுவாசிகளுக்கு எழுதப்பட்டுள்ளது. விசுவாசி வியாதிப்பட்டால் கண்டிப்பாய் கர்த்தரிடம் தன்னைத் தாழ்த்தி ஜெபித்திருப்பார். தன்னுடைய பாவங்களையும் சொல்லி ஜெபித்திருப்பார் ஆனால் வேதம் சபையின் மூப்பர்களை வரவழைக்கும்படி சொல்லுகிறது.

விசுவாசி வியாதிப்பட்டால் ஊழியக்காரர்தான் வந்து ஜெபிக்க வேண்டும் அது அவர்களுடைய கடமை என்றிருந்துவிடாமல், இவர்கள் ஆள் அனுப்பி ஊழியர்களை அழைப்பிக்க வேண்டும். சொஸ்தமடையும்படி தன் பாவத்தை ஊழியரிடம் அறிக்கையிட வேண்டும். அப்பொழுது ஊழியர்கள் அவனுக்கு கர்த்தருடைய நாமத்தில் எண்ணெய் பூசி ஜெபிக்க வேண்டும். கர்த்தர் அவனை சுகப்படுத்துவார். அவனுடைய பாவம் மன்னிக்கப்படும் என்று அப். யாக்கோபு கூறுகிறார். சொஸ்தமடையும்படிக்கு உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிடுங்கள் என்பது விசுவாசிகள் தாங்கள் ஒருவருக்கொருவர் அறிக்கையிடுதலல்ல. விசுவாசி ஊழியனிடம் பாவ அறிக்கை செய்ய வேண்டும். அடுத்த வசனத்தில் ஒரு ஊழியனுடைய பெயரை தேவ ஆவியானவர் எழுதி

வைத்திருக்கிறார். "எலியா என்பவன் நம்மைப் போலப் பாடுள்ள மனிதனாயிருந்தும், மழை பெய்யாதபடிக்கு கருத்தாய் ஜெபம் பண்ணினான். அப்பொழுது மூன்று வருஷமும் ஆறு மாதமும் பூமியின் மேல் மழை பெய்யவில்லை. மறுபடியும் ஜெபம் பண்ணினான். அப்பொழுது வானம் மழையைப் பொழிந்தது. பூமி தன் பலனைத் தந்தது" (யாக் 5 : 17,18). "நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது" (யாக் 5 : 16). பாவி ஒரு பாவியினிடம் அறிக்கை செய்வதல்ல. ஒரு விசுவாசி ஒரு விசுவாசியிடம் அறிக்கை செய்வதல்ல. பாவிகளுக்குத் தேவன் செவி கொடுப்பதில்லையே. ஒருவன் தேவ பக்தியுள்ளவனாயிருந்து தேவனுக்குச் சித்தமானவைகளைச் செய்தால் தேவன் அவனுக்குச் செவி கொடுப்பார் (யோவா 9:31).

ஓ! எந்த மனிதனும் நீதிமானல்ல. எல்லோரும் பாவிகள். பாவிகள், பாவிகளிடம் (மனிதனிடம்) அறிக்கை செய்யக் கூடாது என்கிறீரோ. இலவசமாய் அவருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக் கொண்டு நீதிமான்களாக்கப்பட்டோம் (ரோம 3:24). இவ்விதமாக நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப் பட்டிருக்கிறோம் (ரோம 5:1). "அவர் நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்டும் நாம் நீதிமான்களாவதற்காக எழுப்பப்பட்டும் இருக்கிறார்!" (ரோம 4:25) தேவன் விசுவாசத்தினாலே புறஜாதிகளை நீதிமான்களாக்குகிறார் (கலா 3:8) என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. இப்படி நீதிமான்களானவர்கள் குற்றம் செய்து வியாதிப்படும் போது சொஸ்தப்படும்படிக்கு தன்னுடைய பாவங்களை தேவ ஊழியரிடம் அறிக்கை செய்யும் போது தேவன் அவனுடைய பாவங்களை குற்றங்களை மன்னிக்கிறார். சொஸ்தப்படுத்துகிறார். இது தான் திருச்சபையின் ஒழுங்கு. மனோவியலின் பிரகாரமும் ஒரு மனிதன் தன்னுடைய பாரங்களையும், கவலைகளையும், தவறுகளையும் இன்னொரு மனிதனிடம் திறந்து சொல்லும் போது அவனுக்கு மன இறுக்கங்கள் நீங்கி மனசாந்தியும், ஆறுதலும் கிடைக்கிறது கண்கூடு. அப்படி இருக்க தெய்வீக சுகம் பெற சரீர ஆத்மீக சுகம் பெற நீங்கள் உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அதாவது நீதிமானாகிய தேவ ஊழியனிடம் அறிக்கை செய்யுங்கள். ஒப்புரவாக வேண்டியவர்களிடம் ஒப்புரவாகுங்கள். சரி செய்ய வேண்டியவைகளைச் சரி செய்யுங்கள். கர்த்தர் உங்களை எழுப்புவார். உங்கள் பாவம் மன்னிக்கப்படும், என்று வேதம் சொல்லுகிறது. சொஸ்தமடைய விரும்புகிறவர்கள் இப்படிச் செய்வார்களாக.

"அவன் மனுஷரை நோக்கி பாவம் செய்தேன் என்று சொல்வானாக"-யோபு 33-26,27.

# ஒரே ஞானஸ்நானம்

ஞானஸ்நானமா? அது பெந்தகோஸ்தேகாரர்களின் உபதேசம். ஞானஸ்நானமா நான் சிறு பிள்ளையாயிருக்கையிலேயே எனக்கு தெரியாமலேயே பெற்றுவிட்டேன். ஞானஸ்நானமா? அந்த பேச்சே பேசக் கூடாது. வேறு எதையாகிலும் பேசுங்கள். நாங்கள் பரிசுத்தாவியின் அபிஷேகமே பெற்றுவிட்டோம். ஞானஸ்நானம் என்னத்திற்கு? ஞானஸ்நானமா? அது வெறும் சடங்காச்சாரம். இப்படி பலவாறு பேசி ஞானஸ்நானத்தை தள்ளிப் போடுகிறவர்களுண்டு.

இன்னும் சிலர் 'இரட்சிக்கப்பட்டவர்களுக்குத் தான் ஞானஸ்நானம் கொடுத்து சபையோடு ஐக்கியப்படுத்த வேண்டுமென்பர்.' இன்னும் வெளியரங்கமான சாட்சிக்காக ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்பாருமுண்டு. சகோதரா நீ ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இல்லாவிட்டால் மோட்சம் போகமாட்டாய். ஏன் ஐயா இப்படிச் சொல்கிறீர்கள்? அதெல்லாம் எனக்குத் தெரியாது, நீ பெற்றே ஆக வேண்டும். ஞானஸ்நானம் முழுக்கி

கொடுக்க வேண்டுமா, தெளித்துக் கொடுக்க வேண்டுமா? யார் கொடுக்க வேண்டும், எப்படிக் கொடுக்க வேண்டும்? எந்த நாமத்தில் கொடுக்க வேண்டும்?

இப்படி ஞானஸ்நானத்தைக் குறித்து பெரும் சர்ச்சைகளும், குழப்பங்களும் தெளிவில்லாத தன்மைகளும் எங்கும் மலிந்து கிடக்கின்றன.

ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின்படியே போதிக்க வேண்டும் (1 பேதுரு 4:11). ஒரு வாக்கியத்தை விளக்கினால், இன்னொரு வாக்கியம் அதற்கு முரண்பட்டால் கொடுத்த விளக்கம் தவறு. (உ-ம்) எபே 1:13 க்கு ஒருவன் விசுவாசியாகும் போதே பரிசுத்தாவியை பெற்றுக் கொள்கிறான். ஆகையால் ஒரு விசுவாசி மேற்கொண்டு பரிசுத்தாவி பெற வேண்டுவதில்லை என்று விளக்கம் கொடுப்பாருண்டு. ஆனால் அப் 8:12-17ல் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக் கொண்ட ஒருவர் கூட பரிசுத்தாவியைப் பெறாமலிருந்தார்கள் என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே அப் 8:12-17, எபே 1:13 க்கு கொடுத்த விளக்கத்தை தவறென நிரூபித்து விடுகிறது.

அப்படியே ஞானஸ்நானத்தைக் குறித்து கொடுக்கப்படுகிற விளக்கத்தை அது சம்பந்தப்பட்ட எல்லா வசனங்களும் ஒத்துக்கொள்ளுமானால் அந்த விளக்கமே சரி. ஒரே ஆவியானவர் ஒரே மாதிரியைத்தான் காண்பிப்பாரேயொழிய பலருக்கும் பலவாறு போதித்து குழப்பமுண்டாக்கமாட்டார். அவர் சமாதானத்தின் தேவன்.

பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் :-

பாவமன்னிப்பு பெறுவதே இரட்சிப்பாகும் (லூக் 1:77) ஸ்நானகன் யோவான் இதைத் தெரியப்படுத்த, அனுப்பப்பட்டு (லூக் 1:77) பாவமன்னிப்புக்கென்று மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக் குறித்து பிரசங்கம் பண்ணினான். அதைக் கேட்டவர்கள் அவனிடத்திற்குப் போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள் மாற் 1:4,5).

தங்கள் அக்கிரமங்களினிமித்தம் இயேசு சிலுவையில் அறையப்பட்டார் என்பதை கேள்விப்பட்ட யூதர்கள், இருதயத்தில் குத்தப்பட்டவர்களாகி, நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்கிறார்கள். அவர்களுக்கு பேதுரு பிரதியுத்தரமாக நீங்கள் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று (For the remission of sin) ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள் என்றார் (அப். 2:37, 38). இவர்களைப் போல ஆவியையுடைய அனனியா என்ற சீஷனும், சவுலுடைய பாவங்களை அறிந்து நீ தாமதிக்கிறதென்ன, எழுந்து கர்த்தருடைய நாமத்தை தொழுதுகொண்டு ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப் படு என்றார் (அப் 22:16)

இயேசு சொன்னார் :

விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் (மாற் 16:16) என்று. ஆகவே ஞானஸ்நானம் பெறுகிறவன் பாவமன்னிப்பை (இரட்சிப்பை) பெறுகிறான் என அறிகிறோம்.

திருமணம் ஒரு சடங்காச்சாரமல்ல. அது ஒரு விழா (Function) வாக காணப்பட்ட போதிலும், அதில் நடப்பது என்ன? திருமண மண்டபத்திற்குள் நுழையும் பெண் கன்னிகையாக உள்ளே போகிறாள். வெளியே வரும்போது இன்னொருவனுடைய மனைவியாக வெளியே வருகிறாள். அவர்கள் கணவனும், மனைவியுமாய் குடும்பம் நடத்த ஆரம்பிக்கிறார்கள். பழையநிலை முற்றிலும் ஒழிந்து புதிய வாழ்வுக்குள் பிரவேசிக்கிறார்கள். தகப்பன் பெயரை நீக்கிவிட்டு புருஷன் பெயரைத் தரித்துக் கொள்கிறாள். திருமண சாலைக்குள் குருவுக்கு முன்பாக உடன்படிக்கை பண்ணுகிறாள். இந்த உடன்படிக்கையே அவளை புருஷனோடே இணைக்கிறது.

ஞானஸ்நானமும் தேவனைப் பற்றும் நல் மனசாட்சியின் உடன்படிக்கையாக இருந்து நம்மை இரட்சிக்கிறது (1 பேது 3:21). பாவந்தானே நம்மை தேவனை விட்டு பிரித்து வைத்தது. அந்தப் பாவம் நீங்கி நாம் தேவனிடம் சேருகிறோம், இரட்

சிக்கப்படுகிறோம். ஏனெனில் கிறிஸ்துவுக்குள்ளாய் ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் கிறிஸ்து இயேசுவை தரித்துக் கொண்டீர்களே (கலா 3 : 27). ஞானஸ்நானத்தினால் பழைய பாவ மனுஷன் (பாவ அறிக்கை செய்வதால் இயேசுவோடு சிலுவையில் அறைந்து கொலை செய்யப்பட்டவன்) இயேசுவோடு அடக்கம் பண்ணப் படுகிறான் (ரோம 6 : 4). இந்த ஞானஸ்நானத்திலிருந்தே புதிய வாழ்க்கை ஆரம்பமாகிறது (ரோம 6 : 4). இயேசுவின் உயிர்த்தெழுதலின் சாயலில் இணைக்கப்படுகிறோம் (ரோம 6 : 5).

ஓ! ஒருவன் சிறுவயதிலிருந்தே பாவம் செய்யாதிருக்கிறான் அவன் ஞானஸ்நானம் பெறவேண்டுமா? என்றொரு கேள்வி. ஒரு வாலிபன் தனக்கு மனைவியாய் வரவேண்டியவள் வேலை செய்யக் கூடாது என அறிவிக்கிறான். தற்சமயம் வேலை செய்து கொண்டிருக்கிறப் பெண், வேலையை விட்டு விட்டு அவனை மணமுடிக்கிறாள். வேலையே இல்லாதிருக்கிறவள், ஏற்கனவே தகுதியாய் இருக்கிறாள், ஆகையால் மணமுடிக்கிறாள். அப்படியே பாவம் செய்தவன், பாவத்தை விட்டு மனந்திரும்பி, தேவனோடு உடன்படிக்கை செய்கிறான். பாவம் செய்யாதவனும், இனிமேலும் உமக்கு அடிமையாயிருந்து உம் சித்தம் செய்வேன் என்று உடன்படிக்கை செய்கிறான். ஞானஸ்நானமானது தேவனைப்பற்றும் நல்மன சாட்சியின் உடன்படிக்கைதானே (1 பேது 3:21).

ஆ! ஞானஸ்நானம் பெற்றவன் பாவம் செய்கிறதில்லையா? என்கிறாயா! பாவம் செய்துதான் ஆக வேண்டும் என யார் சொன்னது. பாவம் செய்கிறவன் உடன்படிக்கையை மீறுகிறான். ஜீவகாலமெல்லாம் புருஷனுக்கு கீழ்ப்படிவேன் என்று வாக்குக் கொடுத்த பெண் அடுத்த நாளே கீழ்ப்படியாமல் போகிறாள். ஆகையால் மற்றவர்களுக்கு திருமணம் அவசியமில்லையா? மீறுதல் செய்தவள் மன்னிப்பு பெற்று ஒப்புரவாகிறாள். வேசித்தனம் பண்ணினால் தள்ளப்படுவாள். புருஷனோடுள்ள ஐக்கியம் இவளுடைய நடபடிகளை பொறுத்துள்ளது. அப்படியே ஞானஸ்நானம் பெற்றவன் நிலையும்.

ஞானஸ்நானம் நல்மன சாட்சியின் உடன்படிக்கை (1 பேது 3:21). நன்மை தீமை இன்னதென்று பகுத்தறிந்து தீமையை விட்டு நல்லதைப் பற்றும் மனதோடு செய்யப்படும் உடன்படிக்கை. மேலும் இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று விசுவாசிக்கிறவன்தான் ஞானஸ்நானம் பெறவேண்டும் (அப் 8:36, 37). பவுலும், சீலாவும் சிறைச்சாலைக்காரன் வீட்டிலிருந்தயாவருக்கும் (வீட்டாருக்கும்) "இயேசு கிறிஸ்துவை விசுவாசி" என்று போதித்தார்கள் அதைக் கேட்டு விசுவாசித்தவர்கள். அன்று ராத்திரியிலேயே ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப் 16:31-33). விசுவாசம் கேள்வியினால் (by hearing) வரும் (ரோம 10:17). விசுவாசம் வராவிட்டால் ஞானஸ்நானம் கொடுக்கக் கூடாதே (அப் 8:36). சின்ன பிள்ளை கேட்குமா? விசுவாசிக்குமா? சிறு பிள்ளையிலேயே ஞானஸ்நானம் பெற்று விட்டேனே என்கிறீர்களா நீங்கள் பெறவில்லை. அவர்கள் கொடுத்தார்கள். இப்போது நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள்.

**ஞானஸ்நானம் முழுகித்தான் கொடுக்க வேண்டுமா?**

ஸ்நானம் (Baptism) என்றாலே முழுகுதல் என்றர்த்தம் (லூக் 12 : 50). நோவாவின் நாட்களில் பூமி முழுவதும் தண்ணீரில் மூழ்கிற்று. அதற்கு ஒப்பனையான ஞானஸ்நானம், தண்ணீரில் போய் வந்ததால் மாம்ச அழுக்கை நீக்குகிறதாயில்லாமல்... (1 பேது 4 : 20, 21). பாவத்துக்குச் செத்த மனுஷன் ஞானஸ்நானத்தினால் அடக்கம் பண்ணப்படுகிறான். இயேசு மரித்தார் அடக்கம் பண்ணப்பட்டார். நீர் என்னுடைய குமாரன் இன்று உம்மை நான் ஜெனிப்பித்தேன் என்றபடி உயிரோடே எழுந்தார். அப்படியே ஞானஸ்நானம் பெற்றவன், புதிய ஜீவன் பெறுகிறான் (ரோம 6 : 4) இதையே மறு ஜென்ம முழுக்கு என்று தீத்து 3 : 5ல் சொல்லப்பட்டுள்ளது.

சிறைச்சாலைக் காரனுடைய வீட்டில் தெளிக்க ஒரு கப் தண்ணீர் கூடவா இல்லை, பின்னே ஏன் ஞானஸ்நானம் பெற இரவிலே வெளியே சென்று மீண்டும் வீடு வர வேண்டும் (அப் 16 : 32 - 34). மரித்தவர்களை எப்படி அடக்கம் பண்ணுகிறார்கள்;

இப்படி ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும் என்று கர்த்தர் எங்களுக்கு தரிசனமாகி மாதிரி (Through action) செய்து காண்பித்திருக்கிறார்.

காலத்திற்கேற்ற பிரச்சினைகள்:

யோவான் ஸ்நானகன் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கும்படி தேவனால் அனுப்பப்பட்டவர் (யோவா 1 : 33) ஆகையால் அவர் ஞானஸ்நானம் கொடுத்தார். அவரிடம் ஞானஸ்நானம் பெற்று அவரைப் பின்பற்றினவர்கள் யோவானுடைய சீஷர்கள் என்றழைக்கப்படுகின்றார்கள் (யோவா 3 :26). இயேசுவை பின்பற்றினவர்கள் அவருடைய சீஷர்கள் எனப்பட்டனர் (யோ 4 : 3). அப்பொல்லோ என்பவன் யோவான் கொடுத்த ஞானஸ்நானத்தை மாத்திரம் அறிந்தவனாய், எபேசு பட்டணத்துக்கு வந்து பிரசங்கம் பண்ணினான். அவனுடைய பிரசங்கத்தைக் கேட்டு சிலர் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டனர். அவர்கள் தாங்கள் பெற்றது யோவான் கொடுத்த ஞானஸ்நானம் என்றார்கள் (அப் 18 : 25;19:3). யோவான் இவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கவில்லை. அவன் பெயரில் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. ஏனெனில் அவன் ஞானஸ்நானம், கொடுக்கும்படி தேவனால் அனுப்பப்பட்டவன் (யோவா 1 : 33).

கொரிந்தியர் சபையில் சிலர் நான் பவுலைச்சேர்ந்தவன் என்றும், சிலர் அப்பொல்லோவை சேர்ந்தவன் என்றும், வேறுசிலர் கேபாவைச் சேர்ந்தவன் என்றும் சொல்வதை அறிந்து பவுல் அவர்களை கடிந்து கொள்கிறார். என்னைக் கர்த்தர் ஞானஸ்நானம் கொடுக்கும்படி (யோவான் ஸ்நானனைப்போல்) அனுப்பவில்லை. என் பெயரில் (நாமத்தில்) நீங்கள் ஞானஸ்நானம் பெறவில்லை. (யோவானுடைய சீஷர்கள் எனப்பட்டதுபோல்) நீங்கள் என்னுடைய சீஷர்கள் (என்னைச் சேர்ந்தவர்கள்) என்று சொல்லக்கூடாது. நீங்கள் கிறிஸ்துவினுடைய சீஷர்கள் என்கிறார். அப்-பவுல், பேதுரும் அவர் நல்ல வேலையப்பா! சிலர் தவிர உங்களுக்கு என் கையால் ஞானஸ்நானம் கொடுக்கவில்லை. இப்படி இருக்கும் போதே பவுலைச்சேர்ந்தவர்கள் என்கிறீர்களே (1கொரி 1 : 12 - 17) என்றெழுதினார்.

தாவீது பத்து வாலிபரை அழைத்து, நீங்கள் நாபாலிடம் சென்று என் பேரைச் சொல்லி அவன் சுகசெய்தியை விசாரித்து அவனை நோக்கி நீர் வாழ்க... என்று வாழ்த்தி "இப்பொழுது ஆடுகளை மயிர்க்கத்தரிக்கிறவர்கள் உம்மிடத்தில் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன் (பட்டேன் என்றல்ல)... உம்முடைய கைக்கு உதவுவதை உம்முடைய குமாரனாகிய தாவீதுக்கும் கொடுக்கும்படி வேண்டுகிறேன்" (இவைகள் தாவீதின் வார்த்தைகள்) என்று சொல்லுங்கள் என்றான். தாவீதின் வாலிபர் போய் இந்த தாவீதின் வார்த்தைகளை எல்லாம் தாவீதின் நாமத்தில் நாபாலிடத்தில் சொன்னார்கள் (1சாமு 25 ; 5 - 9).

தாவீது இப்படியாக நாபாலிடம் கேட்டான். தாவீது கேட்கவில்லை. தாவீதின் ஊழியக்காரர் தாவீது கட்டளையிட்டபடி சொல்லி தாவீதின் நாமத்தில் கேட்டார்கள்.

இயேசு (அவர்) ஞானஸ் நானம் கொடுக்கிறார், எல்லாரும் அவரிடத்தில் போகிறார்கள் என்கிறார்கள் (யோ 3:26). இயேசு தாமே ஞானஸ்நானம் கொடுக்கவில்லை. அவருடைய சீஷர்கள் கொடுத்தார்கள் (யோவா 4;3).

இயேசுவானவர் கட்டளையிட்டபிரகாரம் "பிதா, குமாரன் பரிசுத்தாவி நாமத்திலே" (மத் 28:29) அவருக்கு பதிலாக அவருடைய நாமத்தினால் [இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் (அப் 2:37) அல்லது கர்த்தருடைய நாமத்தினால் (அப் 10:48) அல்லது கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினால் (அப் 19 : 5)] அவருடைய ஊழியக்காரர்கள் கொடுத்தார்கள்.

விசுவாசமுள்ளவனாகி, பிதாகுமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில், இயேசுவிடம் கட்டளை பெற்றவர்கள் மூலம், முழுகி பாவமன்னிப்புக்கென்று பெறும் பூரண ஞானஸ்நானத்தையே கர்த்தர் ஏற்படுத்தியுள்ளார்,

இப்படிப்பட்ட ஞானஸ்நானத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். தேவனுடைய ஆலோசனையைத் தள்ளிப்போட்டு கெட்டுப் போகாதீர்கள். "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்" மாற் 16 : 16.

ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும் - எபே 4 : 5

# வேத பாடம்

**ஆதி 45 : 16-20** யோசேப்பின் சகோதரர்கள் வந்தார்கள் என்ற செய்தி எகிப்தின் அரசனை பார்வோனுக்கு எட்டிற்று. பார்வோன் யோசேப்பிடம் யோசேப்பின் தகப்பனையும் குடும்பம் முழுவதையும் எகிப்துக்கு அழைத்து வர ஏற்பாடு செய் என்று கட்டளையிட்டான்.

**ஆதி 45 : 21-28** யோசேப்பு பார்வோனுடைய கட்டளையின்படி வண்டிகளையும் வழிக்கு போகவர ஆகாரங்களும் எகிப்தின் உச்சிதமான பொருட்களையும் சகோதரர்களிடம் கொடுத்து தகப்பனையும் நம் குடும்பம் முழுவதையும் அழைத்து வாருங்கள். நீங்கள் சகோதரர்கள் வழியிலே சண்டை பண்ணிக் கொள்ளாதிருங்கள் என்று சொல்லியனுப்; பினன். கிறிஸ்தவ ஜீவிய பிரயாணத்தில் விசுவாசிகள் சண்டை செய்து கொள்வதும் பொறாமைப்படுவதும் எவ்விதத்திலும் தவறானதே. யோசேப்பு உயிரோடிருக்கிறான் என்றும் கேள்விப்பட்டதுமல்லாமல் தன்னை அழைத்துப் போக யோசேப்பினிடமிருந்து எகிப்து தேசத்திலிருந்து வந்த வண்டிகளையும் உச்சிதமான பொருட்களையும் கண்ட போது ஆச்சரியங்கொண்டு யாக்கோபின் ஆவி உயிர்த்தது. நான் போய்ப் பார்ப்பேன். யோசேப்பைப் பார்ப்பேன். அது ஒன்றே போதும் என்றார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிரோடிருக்கிறார். நமக்கு முந்தி பரலோகம் போயிருக்கிறார். அவர் அங்கே இருந்து அனுப்புகிற உச்சிதமான ஆசீர்வாதங்களும், ஆலோசனைகளும், வல்லமைகளும், கிருபைகளும், அவர் அங்கே இருக்கிறார் என்றும், நம்மை தம்மண்டை அழைக்கும்படி துன்பம், துக்கங்கள், பாடுகள், நோய்களாகிய வண்டிகளையும், ஆறுதல் தேறுதல்களாகிய ஆசீர்வாதங்களையும் அனுப்பிவிடுக்கிறார், என்றும் சந்தோஷப்படுவோமாக. அந்திய காலத்தில் வியாதிகளும், துன்பங்களும், பெலவீனங்களும் உண்டாகும் பொழுது தேவன் தம்மிடத்தில் நம்மை அழைத்துக்கொள்ள அனுப்பியிருக்கிற இரதங்கள் என்று அறிந்து சந்தோஷப்படுவோமாக. நாம் போய் பரலோகத்தில் அவரைப் பார்ப்போம் என்ற சந்தோஷம் நம்முடைய ஆத்துமாவை நிரப்புவதாக.

**ஆதி 46 . 1-7** யாக்கோபு தன் குடும்பத்தோடு பெயர் செபாவுக்குப் போய் தன் தகப்பனாகிய ஈசாக்குடைய தேவனுக்குப் பலியிட்டார். தேவன் யாக்கோபுக்கு தரிசனத்திலே வாக்கருளி எகிப்துக்குப் போக வாக்கருளி நான் உன்னோடே எகிப்துக்கு வருவேன் என்றார். நம்முடைய எல்லா பிரயாணங்களிலும் நம்முடைய தேவனாகிய கர்த்தர் நம்மோடு கூட வருகிறார். யாக்கோபு தன் குமாரர்களையும், தன்னுடைய குமாரத்திகளையும், தன் சந்ததியார் அனைவரையும், தன்னுடைய பொருட்கள் எல்லாவற்றையும், தன்னுடைய மிருக ஜீவன்களையும் சேர்த்துக்கொண்டு எகிப்துக்குப் போனார்.

**ஆதி 46 : 8-27** எகிப்துக்குப் போன யாக்கோபின் கர்ப்பப் பிறப்பானவர்கள் 70 பேர்கள்.

**ஆதி 46 : 28-34** கோசே நாட்டிலே யோசேப்பு எதிர்கொண்டுபோய் தன்னுடைய தகப்பனை சந்தித்து சந்தோஷமாய் வரவேற்றான். யாக்கோபும், யாக்கோபுடைய குடும்பத்தாருடைய தொழில் ஆடு, மாடு மேய்ப்பதாகும். மேய்ப்பர்கள் எல்லாரும் எகிப்தியருக்கு அருவருப்

பானவர்கள். அப்படியிருந்தும் யோசேப்பு தன் சகோதரரைப் பார்த்து பார்வோன் கேட்டால் உங்களுடைய தொழில் மேய்ப்பனின் தொழில் என்று சொல்லுங்கள் என்று சொல்லிக் கொடுத்தார்.

(தொடரும்)

"அவரை நான் காண்பேன், அந்நிய கண்களல்ல, என் சொந்தக் கண்களே அவரைக் காணும்"-யோபு 19 : 26, 27.

# மோட்ச வழி

## குரு - சிஷ்யன் உரையாடல்

(ஏப்ரல் மாத தொடர்ச்சி)

**சிஷ்யன் :** ஐயா! பாவத்திலிருந்து விடுதலையாக நான் என்ன செய்ய வேண்டும்?

**குரு :** இயேசுகிறிஸ்துவோடு ஐக்கியமாக வேண்டும். எந்த அளவுக்கு இயேசுகிறிஸ்துவோடு ஐக்கியமாகிறாயோ அந்த அளவுக்கு உனக்கு வெற்றியுண்டாகும்.

**சிஷ்யன் :** அப்படி என்றால் கொஞ்சம் விளக்கமாக சொல்லும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

**குரு :** அதாவது ஒரு மனிதன் சுவிசேஷத்தைக் கேட்டு மனந்திரும்பி விசுவாசித்து பாவங்களை அறிக்கையிட்டு முழுகி ஞானஸ்நானம் பெறும்போது முதலாவது பாவ மன்னிப்பு அடைகிறான். அந்த ஞானஸ்நானத்திலே கிறிஸ்துவினுடைய மரணம் அடக்கம் பண்ணுதல், உயிர்த்தெழுதலுடன் இணைக்கப்படுகிறான் (கொலோ 2:12, ரோம 6:3,4,5). இப்பொழுது பாவம் வரும்போது பாவத்துக்கு மரித்தவனாகவும், நீதிக்கென்று பிழைத்திருக்கிறவனாகவும், தான் பாவத்துக்கு மரித்தவனாக எண்ணிக்கொள்ள வேண்டும். எந்த அளவுக்கு அவன் எண்ணிக் கொள்கிறானோ அந்த அளவுக்கு இயேசுவின் மரணம் அவனில் கிரியை செய்யும். அவன் பாவம் செய்ய மாட்டான். மரித்தவன் பாவத்துக்கு நீங்கி விடுதலையாக்கப்பட்டிருக்கிறானே (ரோம 6:7). அடுத்தபடியாக அவன் ஜெபிக்க வேண்டும். நீங்கள் கிருபைக்கு கீழ்ப்பட்டிருக்கிறபடியால் பாவம் உங்களை மேற்கொள்ள மாட்டாது (ரோம 6:14). மூன்றாவதாக ஆவிக்கேற்றபடி நடந்து கொள்ளுங்கள். மாம்ச இச்சையை நிறைவேற்றாதிருப்பீர்கள் (கலா 5:16). ஆவிக்குரியவைகளை, நல்லவைகளை சிந்தியுங்கள், எண்ணுங்கள் (ரோம 8:5,6 ; பிலி 4:8). மீறுதல் ஏற்பட்டால் பாவ அறிக்கை செய்து சுத்திகரித்துக் கொள்ளுங்கள் (Iயோவா 1:10,9 ; 3:3). உபதேச சட்டத்துக்கு கீழ்ப்படியுங்கள். பரிசுத்த மாறுதல் உண்டாகும் (ரோம 6:16-22). நான்காவதாக ஒழுங்காக தேவ ஆராதனையில் பங்கு பெற்று சாக்ரமெந்தை (திருவிருந்து) ஆசரியுங்கள், இவைகளையும் மீறி பாவம் நிகழுமானால், ஐந்தாவது : குருவிடம் கலந்துரையாடி ஆலோசனை பெற்றுக் கொண்டு குருவின் ஆலோசனைப்படி செய்யுங்கள். நிச்சயம் விடுதலையுண்டாகும். பரிசுத்தவான்களின் ஜெபத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**சிஷ்யன் :** பாவத்திலிருந்து முற்றும் விடுதலையாக முடியுமா?

**குரு :** முடியும். கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலையுமுண்டு (II கொரி 3:17). குமாரன் விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள் (யோவா 8:36)

சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் (யோவா 8:32). ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம், மரணம் என்பவைகளின் வல்லமையிலிருந்தே விடுதலையாக்கிற்றே (ரோம 8:2) ஆவியினாலே மாம்சத்தின் கிரியைகளை அழியுங்கள் (ரோம 8:13). எல்லாவற்றிலும் நமக்கு ஜெயம் கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம் (I கொரி 15:5).

(தொடரும்)

"தேவனால் பிறந்த எவனும் பாவம் செய்யானென்று அறிந்திருக்கிறோம்" — I யோவா 5:18.

# இதோ நீங்கள் அறியாதிருக்கிற இயேசுகிறிஸ்து

(1) தான் பிதாவாகிய தேவனுக்கு பிரியமானவைகளை எப்பொழுதும் செய்கிறபடியால், பிதா எப்போதும் என்னோடிருக்கிறார் என இயேசுவானவர் சொல்லியிருக்க (யோவா 8:29) அவரை பிசாசு பிடித்தவன் (யோவா 8:48) என்கின்றனர் பிசாசின் பிள்ளைகள் (யோவ 8:44).

(2) அவர் தேவனுடைய ஆவியினால் பிசாசுகளை துரத்தியிருக்க (கிரியைநடப்பித்திருக்க) (மத் 12:28) பிசாசுகளின் தலைவனாலே பிசாசுகளை துரத்துகிறான் என்கின்றனர் (மத் 12:24) விரியன் பாம்பு குட்டிகள் (மத் 12:34).

(3) என்னிடத்தில் பாவம் உண்டென்று உங்களில் யார் என்னைக் குற்றப்படுத்தக் கூடும்? என்று அவர் சவால் விட்டிருக்க (யோவா 8:46) அவரைப் பாவி என்கின்றனர் (யோவா 9:24) படுபாவிகள் (யோவா 8:33).

(4) தன்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்து அவருடைய கிரியையை முடிப்பதே என்னுடைய போஜனமாயிருக்கிறது என அவர் சொல்லியிருக்க (யோவா 4:34), போஜனப் பிரியனும் மதுபானப் பிரியனுமான மனுஷன் என்கின்றனர் (மத் 11:19) எதைச் செய்தாலும் குறை சொல்லுகிற கூட்டத்தார் (மத் 11:17).

(5) பாவிகளையே மனந்திரும்புவதற்கு அழைக்க வந்தேன் என்று அவர் சொல்லியிருக்க (மத் 9:13), ஆயக்காரருக்கும், பாவிகளுக்கும் சிநேகிதன் என்கின்றனர் (மத் 11:19). தாங்கள் தான் நீதிமான்கள் என்று எண்ணி ஏமாந்து போகப் போகிறவர்கள் (லூக் 18:9-12, 14).

(6) அவர் தன்னை வேதத்தில் எழுதியிருக்கிற மேசியா தான்தான் என்று சொல்லியிருக்க (லூக் 4:18-21), இவன் தச்சனுடைய குமாரனல்லவா என்கின்றனர் (மத் 13:55) மேன்மையானவைகளை நோக்க மனமில்லா தாழ்குறைவான அவிசுவாசிகள் (மத் 13:58).

(7) பிதாவை எங்கும் (எவர்களும்)தொழுது கொள்ளும் காலம் வந்திருக்கிறது என அவர் சொல்லியிருக்க (யோ 4:21) அவரை சமாரியன் என்கின்றனர் (யோ 8:48) ஜாதி வெறி பிடித்த பாவிகள் (யோ 8:33).

(8) நானே நல்ல மேய்ப்பன் என்று அவர் சொல்லியிருக்க (யோ 10:11) அவரை வஞ்சிக்கிறவன் என்கின்றனர் (யோவா 7:12) தேவ சித்தம் செய்ய மனமில்லாதவர்கள் (யோவா 7:17).

(9) தன் ஜீவனைக் கொடுக்கவும், அதை எடுக்கவும் தனக்கு அதிகாரமிருக்கிறது என்று தனது அதிகாரத்தை சொன்னதினால் (யோவா 10:18) அவரை பைத்தியக்காரன் என்கின்றனர் கண் சொருகிப் போன குருடர்கள் (யோவா 9:40,41).

(10) வேதவாக்கியம் நிறைவேற வேண்டுமே என்ற அக்கறையினால் பட்டயத்தை எடுக்க அவர் சொல்லியிருக்க (லூக் 22:37, 36), அக்கிரமக்காரன் (லூக் 22:37) என்கின்றனர் அநியாயக்காரர்கள் (I கொரி 6:9,10).

(11) நான் என் பிதாவைக் கனம் பண்ணுகிறேன் என்று அவர் சொல்லியிருக்க (யோவா 8:49), தேவ தூஷணக்காரன் என்கின்றனர் (மத் 26:65), தங்களுக்குத் தெரியாதவைகளை தூஷிக்கிறவர்கள் (யூதா 10)

(12) இந்த ஆலயத்தை இடித்துப் போடுங்கள், அதை மூன்று நாளில் எழுப்புவேன் என்று தம்முடைய சரீரத்தைக் குறித்து சொல்லியிருக்க (யோவா 2:20,21), ஆலயத்தை (கட்டடத்தை) இடித்துப் போடச் சொன்னவன் என்கின்றனர் (மத் 26:61), மெய் நிலையை அறியாமல் வார்த்தையை புரட்டுகிற பொய்சாட்சிகள் (மத் 26:60).

(13) இராயனுடையதை இராயனுக்கு செலுத்து என்று அவர் சொல்லியிருக்க (மத் 22:21), இராயனுக்கு வரி கொடுக்க வேண்டுவதில்லை என்கிற கலகக்காரன் என்கின்றனர் (லூக் 23:2) குற்றம் சுமத்தும் பொருட்டு குற்றம் சாட்டுகிற முழுப் பொய்யர்கள் (வெளி 12:10).

(14) அவர் கொலையுண்டு மூன்றும் நாளில் எழுந்திருக்கப் போகும், இதுவரை ஒருவரும் கண்டிராத இரகசியத்தை சீஷர்களுக்கு வெளிப்படுத்தினதை (மத் 16:21) எப்படியோ அறிந்து கொண்டதினால் அவரை எத்தன் (மத் 27:62) என்கின்றனர் மகத்துவத்தை மறுதலிக்கிற ஏமாற்றுக்காரர்கள் (மத் 28:11-15).

தேவனுடைய பிள்ளைகளே! நீங்கள் இயேசுகிறிஸ்துவின் சீஷர்களா? கிறிஸ்துவை உடைய கிறிஸ்தவர்களா? பச்சை மரத்திற்கே இந்தக் கதியானால் பட்டமரமாகிய உங்கள் கதி என்ன? வீட்டெஜமானையே இப்படிச் சொன்னார்களானால், உங்களை விட்டா வைப்பார்கள். இப்படியெல்லாம் உங்களையும் சொல்கிறார்கள் அல்லவா? உண்மையிலேயே நீங்கள் அவரை பின்பற்றுகிறீர்கள். அவர் மகிமை அடைந்தது போல் நீங்களும் மகிமை அடைவீர்கள். சந்தேகமே இல்லை. ஆகையால் சந்தோஷப்பட்டு களிகூருங்கள். பரலோகத்தில் உங்களுக்கு மிகுதியான பலனுண்டு.

ஆனால் இப்படிச் சொல்லுகிற பிசாசின் பிள்ளைகளையும், விரியன் பாம்பின் குட்டிகளையும், படுபாவிகளையும், குறை சொல்லுகிற கூட்டத்தாரையும், தங்களையே நீதிமான்களென்று எண்ணுகிறவர்களையும், அவிசுவாசிகளையும், பாரம்பரியப் பிரியர்களையும், கபடசித்தம் செய்கிறவர்களையும், குருடர்களையும், அநியாயக்காரர்களையும், தூஷிக்கிறவர்களையும், பொய்யர்களையும், ஏமாற்றுக்காரர்களையும் தேவன் நியாயந்தீர்ப்பார். இவர்களுக்கு ஐயோ. பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள். (வெளி 21:8)

---

"...அறிந்தார்களானால் மகிமையின் கர்த்தரை, சிலுவையில் அறைய மாட்டார்களே"—I கொரி 2:8.

---

மாதர்பகுதி

# குடும்பம்

நல்ல மனைவி எப்போதும் நல்ல பழக்கமுடையவளாயிருப்பாள்:- ஸ்திரீகள் விவாக வயதாகி விவாகம் செய்து கொண்டபின் அதற்கு முன் இருந்ததுபோல கவலையற்ற ஸ்திரீகளாக அல்ல கவலையோடு குடித்தனம் நடத்தும் மனைவிகளாகிறார்கள். உலகத்தில் எத்தனையோ பேர் எப்படியோ விவாகம் செய்து கொண்டு தாய்மார்களாகி விடுகிறார்கள். அப்படிப்போல நாமும் மனைவிகளாகிவிடலாம் என்று நினைப்பது பிசகான காரியம்.

யுத்தம் வரப்போகிறதென்றால் ஒரு இராஜ்யத்தார் எப்படி ஆயத்தம் செய்து கொள்ளுகிறார்களோ அப்படிப்போல ஒரு ஸ்திரீ தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ள

வேண்டும். அப்படியானால்தான் சகித்து கரையேற முடியும். விவாகம் செய்து கொள்ள விரும்பும் பெண்ணும் தன்னை ஆயத்தம் செய்ய வேண்டும். தனக்கு சந்தோஷமும், மகிழ்ச்சியும் இனிமேல்தான் வரப்போகிறது என்று எண்ணுவது போலவே துன்பமும் வருத்தமும் இனி மேல்தான் தொடங்கப்போகிறது என்று அறிந்து அதற்கென்று யுத்தத்துக்கு ஆயத்தப்படுகிற இராஜ்யத்தைப் போல் தன்னை ஆயத்தப் படுத்திக் கொள்ளவேண்டும். அப்பொழுது வெற்றி பெறுவாள். குடித்தன முறைக்குச் சரியான பயிற்சியும், இல் வாழ்க்கைக்கு அவசியமான குணங்களையும் அடைந்து கொண்டு வாழ்க்கைப்படும் பெண்ணானவள் இனித் தனக்குண்டாயிருக்கும் வருத்தங்கள் துன்பங்களெல்லாம் நீங்கி சந்தோஷக் கரையேறலாம்.

ஒவ்வொரு மனைவியும் கவனிக்க வேண்டிய மூன்று விசேஷங்களுண்டு. அவையாவன:-

1. அந்தந்த நேரத்தில் அந்தந்த கடமையைச் செய்ய வேண்டும்.

2. எந்தந்தப் பொருள் எதெதற்கு உபயோகப் படுமோ அததற்கு அதை உபயோகிக்க வேண்டும்.

3. அந்தந்தப் பண்டத்தை அததற்கு குறித்துவைத்த இடத்திலே வைக்க வேண்டும்.

ஆகையால் அததற்கோர் நேரமும், அததற்கோர் பிரயோஜனமும், அததற்கோர் இடமும் இருக்க வேண்டியது குடும்பத்தில் முக்கியமான விஷயமாகும்.

அடுத்த படியாக தினமும் தப்பாமல் ஒவ்வொரு ஸ்திரீயும், ஒவ்வொரு புருஷனும் அவரவர் செய்ய வேண்டிய கடமையுண்டு இந்தக் கடமைகளை யார் யார் ஜாக்கிரதையும் கவலையாயும் நிறைவேற்றாமலிருக்கிறார்களோ அவரவரைத் தொந்தரவும் துன்பமும் தொடர்ந்து பிடிக்குமென்பது நிச்சயம்.

மனைவி தன் சொந்த புருஷனுக்கு உத்தம சிநேகிதியாயிருந்தாலுமிருக்கலாம்; பிராணசத்துருவாயிருந்தாலும் இருக்கலாம். மனைவியே நீ எதை தெரிந்து கொள்ளுகிறாய்? உன் சொந்த புருஷனை நேசிப்பதையா? அல்லது பகைப்பதையா? நீ உன் புருஷனைப் பகைப்பாயானால் இவ்வுலகம் உனக்குத் துன்பமும், வருத்தமும், கசப்பும் நிறைந்த உலகமாயிருக்குமென்பதற்கு சந்தேகமில்லை. நீ இவ்வுலகத்திலுள்ள துன்பத்தை தைரியத்தோடு எதிர்த்து வெற்றி சிறக்க விரும்புவாயானால் உன் சொந்தப் புருஷனை உன் உத்தம சிநேகிதனாக்கிக் கொள்.

"அந்தப்படி மனைவிகளே உங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; அப்பொழுது அவர்களில் யாராவது திருவசனத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்தால், பயபக்தியோடு கூடிய உங்கள் கற்புள்ள நடக்கையை அவர்கள் பார்த்து போதனையின்றி, மனைவிகளின் நடக்கையினாலேயே ஆதாயப்படுத்திக் கொள்ளப்படுவார்கள். "மயிரைப் பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து, உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக் கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அலங்காரமாயிராமல், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும் அமைதலுமுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே உங்களுக்கு அலங்காரமாயிருக்கக்கடவது; அதுவே தேவனுடைய பார்வையில் விலையேறப்பெற்றது" (I பேதுரு 3 : 1 - 4).

"குணசாலியான ஸ்திரீ தன்புருஷனுக்குக் கிரீடமாயிருக்கிறாள்; இலச்சை உண்டு பண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கியாயிருக்கிறாள்" (நீதி 12 : 4).

"விவாகம் பண்ணிக் கொண்டவர்களுக்கு நானல்ல, கர்த்தரே கட்டளையிடுகிறதாவது; மனைவியானவள் தன் புருஷனை விட்டுப் பிரிந்து போகக்கூடாது" (I கொரி 7 : 10)

---

"குணசாலியான ஸ்திரீயை கண்டு பிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்களைப் பார்க்கிலும் விலையேறப் பெற்றது"-நீதி 31 : 10

---

# நான்

நாவானது சிறிய அவயவமாயிருந்தும் பெருமையானவைகளைப் பேசும் (யாக்3:5) இருதயம் பெருமையினால் நிரப்பப்படும் போது அந்த நிறைவினால் வாய் பேச ஆரம்பிக்கிறது. பொதுவாக இரண்டு பேரோ அதற்கு மேற்பட்டவர்களோ பேசிக் கொண்டிருக்கும் பொழுது, யாராவது ஒருவர், மற்றவர்கள் தன்னை மேன்மையாக எண்ண வேண்டும், தான் இன்னார் என கண்டு தனக்கு மதிப்பு செலுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடே பேச முற்படும்போது அந்தப் பேச்சு மற்றவர்களுக்கு அருவருப்பாகவும், ஏளனமாகவும், விரும்பப் படத்தகாததாகவும் இருக்கும். நீதிமானுடைய நாவு இன்பமாயிருக்கும். அவனுடைய வாயின் வார்த்தைகள் கேட்கிறவர்களுக்கு ஆரோக்கியத்தை உண்டாக்கும்.

நியாய சாஸ்திரி ஒருவன் இயேசுவை சோதிக்கும்படி அவரிடம் கேள்வி கேட்க ஆரம்பித்தான். அவரும் பதில் சொன்னார். பலருக்கும் முன்பாக அவன் தன்னை நீதிமான் என்று காண்பிக்க விரும்பினான் (லூக் 10:25—29) இது ஒரு அற்பத்தனமான புத்தி. மற்றவர்கள் தங்களை பக்திமான், நீதிமான், ஞானி என கண்டு கொள்ள வேண்டும் என்ற நோக்கோடு பேச்சு வெளிப்படுமானால் அது விரும்பத்தக்க காரியமல்ல. நீதியுள்ளவன் இன்னும் நீதி செய்யட்டும், பரிசுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும் என்று இயேசு சொன்னார் (வெளி 22:11). நம்முடைய நீதி இன்னும், இன்னும் பெருக வேண்டியதிருக்க, குறை குடம் போல் தளும்பக் கூடாது.

பிரசங்கிக்கிறவரோ, சாட்சி சொல்லுகிற ஒருவரோ தேவ ஆவியின் பெலத்தினால் செய்ய வேண்டும். பரிசுத்த ஆவியோடு இணைந்து அவர் செயல்படும் வரைக்கும், அது கேட்கிறவர்களுக்கு பிரயோஜனமாயிருக்கும். அந்த வேளையில் அவர் தன்னை முக்கியப்படுத்த, மேன்மைபடுத்த முற்படுவாரானால் அவர் மாத்திரம் முன்னுக்குப் போய் விடுவார். ஆவியானவர் இருந்த இடத்திலே இருந்து விடுவார். இப்போது அவரது பேச்சு பிரயோஜனமற்ற தாய் இருக்கும். பரிசுத்தாவி பெற்றவர்கள் உள்ளிருந்து ஆவியானவர் அந்த பேச்சை அருவருக்கிறதை உணரலாம். ஏனெனில் சுயமாய் பேசுகிறவன் சுயமகிமையைத் தேடுகிறான் (யோவா 7:18).

திடீர் பணக்காரர் ஒருவர் பொது இடமொன்றில் உட்கார்ந்து நண்பர்களோடு பேசிக் கொண்டிருந்தார். அவருடைய மனைவி அங்கே வந்து நின்று, தன்னுடைய தலையை பலமுறை குலுக்கி இங்கே வாங்க என்று அழைத்தாள். அவள் தலை குலுக்கினதின் நோக்கம், புதிதாக தான் அணிந்து கொண்டுள்ள காதணி மினுங்கி மற்றவர்களுக்கு தெரியட்டும் என்று. அவரும் தன்னுடைய கையை விரித்து, ஆட்டி போ வருகிறேன், போ வருகிறேன் என்றாராம். அவர் கையை ஆட்டினதின் நோக்கம், தான் போட்டுள்ள புதிய மோதிரம் மற்றவர்களுக்கு தெரிய வேண்டுமென்று.

பாருங்கள்! இந்த காட்சியை பார்க்கிறவர்கள், இவர்களை எவ்வளவு அற்பமாக எண்ணுவார்கள். ஆவிக்குரியவர்கள் தங்களின் ஆவிக்குரிய உலகப்பிரகார மேன்மைகளை மற்றவர்கள் காண வேண்டுமென தங்களின் பேச்சுகளில் மேட்டிமையைக் கலந்து விடாதபடி எச்சரிக்கையாயிருங்கள். இல்லாவிட்டால் அதை இழந்து போவீர்கள்.

எசேக்கியா ராஜா தனது பொக்கிஷத்தை பாபிலோன் பிரதானிகளுக்கு காண்பித்து இழந்து போனது நினைவிலிருப்பது நல்லது. அதிக பேச்சில் பாவமில்லாமல் போகாது.

கிறிஸ்தவ மண்டலத்தில் பலர் பெரும் பொய்யர்களாயிருப்பது வருத்தத்தக்கது. தாங்கள் காணாத காட்சியை கண்டதாகவும், பெறாத அனுபவத்தைப் பெற்றதாகவும், கேட்காத சத்தத்தைக் கேட்டதாகவும்

மிகைப்படுத்தி பேசி தங்களை பெரும் பக்தர்களாக மற்றவர்கள் மதிக்க வேண்டுமென புழுகுகிறார்கள்.

பரி. பவுல் சொன்னார், "என்னிடத்தில் காண்கிறதற்கும் என்னாலே கேட்கிறதற்கும் மேலாக யாரும் என்னைக் குறித்து பெரிதாக எண்ணிவிடாதபடி என்னைக் குறித்து மேன்மை பாராட்டி புத்தியீனனாகாதிருப்பேன்". உன்னிடத்தில் 1000 ரூபாய் இருக்கையில், அதை டாம்பீகமாய் செலவு பண்ணி, மற்றவர்கள் உன்னிடத்தில் பல ஆயிரம் இருக்கும் என எண்ணும் படி செய்து விட்டதால், உனக்கு லாபமா? அல்லது இருந்த பணமும் போய் விட்ட நஷ்டமா?

இப்படிப்பட்ட ஆவிக்குரிய வீண்டாம்பீகமே, அநேகர் ஆவிக்குரிய வளர்ச்சியில்லாமல் பின்தங்கி போவதற்கு காரணமாகும்.

தன்னைக்குறித்து மேன்மை பாராட்டி பேசக்கூடாது என தியானித்தோம். ஆனால் பரிசுத்த பவுல் தன்னைக் குறித்து பல இடங்களில் மேன்மையாக பேசுகிறார். ஆனால், அவர் பேசியதின் நோக்கம் தன்னை மேன்மை படுத்துவதற்கல்ல. பவுல் யாரென்றால், "தேவனுடைய சித்தத்தை அறியவும், நீதிபரரை தரிசித்து அவரிடம் கட்டளை பெறவும் (அப் 22:14) இருளிலிருக்கிறவர்கள் வெளிச்சத்திற்கு வரவும், சாத்தானுடைய அதிகாரத்தை விட்டு தேவனிடத்திற்கு திரும்பும்படிக்கு, அவர்களுடைய கண்களை திறக்கும் பொருட்டும் (அப். 26:18) ஒரு கூட்ட ஜனத்தை கர்த்தரின் வருகைக்கு ஆயத்தமாக்கும் படிக்கும் (II கொரி 11:2) தேவனால் அனுப்பட்ட ஒரு அப்போஸ்தலன் (I கொரி 9:1).

இவர் தான் யாரென்று திட்டமாய் அறிந்திருந்தார். ஜனங்களும் தன்னை இன்னார் என்று இனங்கண்டு, தேவ நோக்கம் ஒவ்வொருவரிடத்திலும் நிறைவேற வேண்டும் என்ற நோக்கத்துடன் தன்னைப்பற்றி பேசினார். தன்னை ஜனங்கள் அற்பமாய் எண்ணி தங்களுடைய அழைப்பை இழந்து போய் விடக்கூடாதே என்ற நோக்கோடு தன்னுடைய மேன்மையை பேசினார். மேலும் வஞ்சகர்கள் புறப்பட்டு விசுவாசிகளிடம், இவரைப்பற்றி தாறுமாறானவைகளைப் பேசியும், வேற்றுமையான உபதேசத்தை போதித்தும் சபையைக் கெடுக்க முற்படுகையில் இவர் தன்னைப் பற்றியும் தான் பெற்ற உபதேசத்தைப் பற்றியும் மேன்மையாக பேசினார். பெருமை பிடித்தல்ல, புத்தியீனனாகி தாழ்மைப்பட்டு தன்னைப்பற்றி உள்ள மேன்மையை வெளிப்படுத்தி ஜனங்களை காக்க முற்பட்டார் (I கொரி 9 அதி; II கொரி 11, 12 அதிகாரங்கள், கலா 1, 2 அதிகாரங்கள்). இது அவசியமே. உன்னைப் பற்றி நீயல்ல பிறர் புகழட்டும். கர்த்தர் புகழட்டும்.

---

"அவர் பெருகவும் நான் சிறுகவும் வேண்டும்"— யோவான் 3:30

---

29-6-86 அன்று துரைசாமியாபுரம் சபையில் 21 பேர் கர்த்தருக்குள் ஞானஸ்நானம் பண்ணப்பட்டு சபையோடு சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 33 ★ SEPTEMBER 1986



"புதிய எருசலேம் சபை"

...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து: தேவோபிறுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1:1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்
மத் 28:18; மாற்கு 16:15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத 28:19. [இயேசு மாதிரி (Through action) காண்பித்தார்.]

3. திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28:20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் —யோவா 20:23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21:15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1:5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1கொரி 11:23-26.

நான்: ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—நீதி 9:1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப் 1 1; 10:40-43

CHIEF PASTOR N. LAZAR

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும். அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்: சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிகை வெளியிடப்படுகிறது. (எபே 4:11-16)

செப்டம்பர் 1986

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

தேவனுடைய பிள்ளைகளே, இது கடைசி காலமாயிருக்கிறது. கிறிஸ்து அங்கே இருக்கிறார் என்றும் இங்கே இருக்கிறார் என்றும் மக்கள் சொல்லிக் கொள்ளுகிற காலமாயிருக்கிறது. சத்தியத்தைத் தேடி மக்கள் இங்குமங்குமாக அலைந்து கொண்டிருக்கிறார்கள்.

கடைசி காலத்தில் ஒருவர் வருகிறார் என்று எல்லா மக்களுடைய இதயத்திலும் ஒரு எதிர்பார்ப்பு இருக்கிறது. கிறிஸ்தவர்களில் மாத்திரமல்ல புறஜாதிகளிலும் அவ்விதமான ஒரு எதிர்பார்ப்பு உண்டு. ஞானிகளும் யோகிகளும் இவைகளைக் குறித்துப் பேசியிருக்கிறார்கள், எழுதியிருக்கிறார்கள். எலியா வரப்போகிறார் என்று கிறிஸ்தவர்களுள் ஒரு கூட்டத்தார் நம்புகிறார்கள். வந்தாயிற்றென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இதையறிந்த சாத்தான் அநேக போலிகளை எழுப்பி விட்டிருக்கிறான். உண்மை வருகிறதற்கு முன்பாக போலிகள் எழும்புகிறதினுடைய நோக்கம், உண்மை வரும் பொழுது மக்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல் இடறல் அடையும்படிக்கே.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து முதல்முறை உலகத்தில் வரும் முன்பு பல போலி மேசியாக்கள் எழும்பினார்கள் தெயுதாஸ், கலிலேயனாகிய யூதாஸ் என்பவர்கள் அப்படிப்பட்டவர்கள். அவர்களைப் பின்பற்றி சில மக்களும் சென்றார்கள். அவர்கள் மடிந்தார்கள். அவர்களை நம்பியிருந்தவர்களும் ஏமாந்து போனார்கள், சிதறடிக்கப்பட்டார்கள். கடைசியில் இயேசுகிறிஸ்து வெளிப்பட்டார். அவரைக் குறித்து இடறல் அடைந்தார்கள். அவரைப் பின்பற்றினது ஒரு சிறிய கூட்டமே (அப் 5 : 34-39). அப்படிப் போல போலிகளுக்குப் பின் தேவனால் அனுப்பப்படுகிற உண்மையான தேவனுடைய முன் தூதர் ஒருவர் தோன்றுகிறது நிச்சயம். தேவனே அந்த சத்தியத்தை உலகமெங்கும் மின்னல் கிழக்கிலே தோன்றி மேற்கு வரைக்கும் பிரகாசிக்கிறதுபோல பிரகாசிக்கச் செய்வார். யூத ஜனங்கள் தங்களுக்குள்ளே ஒரு தீர்மானம் செய்து கொண்டு மேசியா இப்படி இருப்பார் என்று நினைத்து தேடினபடியால் இயேசு கிறிஸ்துவை இனம் கண்டு கொள்ள முடியவில்லை. அப்படிப்போல வருகிற முன் தூதனையும் கண்டு கொள்ள முடியாமல் கிறிஸ்தவர்களில் பெரும் பகுதியினர் இடறலடைவார்கள்.

தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களோ அவரை கண்டு கொள்வார்கள். அவர் மூலமாகவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகைக்கு தேவ ஜனங்கள் ஆயத்தப படுவார்கள். "இதோ நான் என் தூதனை அனுப்புகிறேன் அவன் எனக்கு முன்பாக போய் வழியை ஆயத்தம் பண்ணுவான். அப்பொழுது நீங்கள் தேடுகிற ஆண்டவரும், நீங்கள் விரும்புகிற உடன்படிக்கையின் தூதனுமானவர் தம்முடைய ஆலயத்துக்குத் தீவிரமாய் வருவார். இதோ வருகிறார் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்" (மல் 3 : 1). "இதோ கர்த்தருடைய பெரிதும் பயங்கரமுமான நாள் வருகிறதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன்" (மல் 5 : 5) என்று கர்த்தர் சொல்லுகிறார்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR.

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

## 31. சபை ஆயத்தப்படுதல்—எபி 9 : 28

ஆயத்தம் என்னும் வார்த்தை மிகவும் முக்கியமான நோக்கமுள்ளது. ஒரு ஊருக்கு நாம் பிரயாணப் படுகிறோமென்றால் அதற்குரிய ஆயத்தங்களை நாம் செய்கிறோம். டிக்கட்டுக்கான ஏற்பாடு செய்தல், துணிமணிகளை ஆயத்தம் பண்ணுதல், பிரயாணச் செலவுக்கான சகல ஏற்பாடுகள் செய்தல், இங்கேயும் உள்ளவைகளை ஒழுங்கு படுத்துதல் செய்கிறோம். ஒரு கல்யாணம் என்றால் அதற்கான ஆயத்தங்களைச் செய்கிறோம். இப்படியாக சரியான ஆயத்தம் செய்திருந்தால்தான் அந்தக் காரியம் செவ்வனே நடைபெறும். சந்தோஷமாக முடியும். ஆயத்தத்தில் குறைவு ஏற்பட்டால் காரியம் குழப்பமாகும். நஷ்டமாக முடிந்து விடும்.

இப்பொழுது சபையானது ஆயத்தப்பட்டு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை எதிர் கொண்டு சந்திக்க வேண்டும். அதற்குச் சபைக்கு ஒரு செய்தி வேண்டும். அந்தச் செய்தியே சபையை ஆயத்தப் படுத்தும். "இதோ மணவாளன் வருகிறார். அவருக்கு எதிர் கொண்டு போகப் புறப்படுங்கள் என்கிற சத்தம் உண்டாயிற்று" (மத் 25:6). இதோ வருகிறார் என்கிற அறிவிப்பு கொடுப்பது கட்டியக்காரனுடைய வேலையாகும் (கட்டியக்காரன் என்றால் இராஜாவுக்கு முன் தூதன்).

யானை வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே என்கிற பழமொழிபோல் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய முதலாம் வருகைக்கு முன்னே முன் தூதனாக யோவான் ஸ்நானகன் இப்பூலோகத்திற்கு அனுப்பப்பட்டு வந்தார். இதோ ஒருவர் வருகிறார். அவர் என்னிலும் பெரியவர். அவரை சந்திக்க ஆயத்தப்படுங்கள் என்று அறிவித்து பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானங்கொடுத்து ஒரு உத்தமமான ஜனத்தை அவருக்கென்று ஆயத்தப்படுத்தினார் (மாற் 1:2-5; லூக் 1:16.17). அவர் இந்த உலகத்தில் வந்த பொழுது அவரை ஏற்றுக் கொண்டவர்கள் யோவான்ஸ்நானகனால் ஆயத்தமாக்கப் பட்டவர்களேயாகும். அப்படியே அவருடைய இரண்டாம் வருகைக்கு முன் ஒரு முன் தூதன் அனுப்பப்படுகிறார். இதற்கான செய்தி இராஜாவினிடத்தில் இருந்து அவரால் நியமிக்கப்பட்ட அபிஷேகம் பெற்ற ஆசாரியனுக்கு (தூதன்) வரும்.

இப்பொழுது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வருகையின் நாளையோ, நாழிகையோ ஒருவரும் அறியார். ஆனால் அவர் வரும் பொழுது அவருடையவர்களுக்குச் செய்தி வரும். 'கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்கு தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தையும் செய்யார்" (ஆமோ 3:7).

தாவீது இராஜா தம்முடைய குமாரனாகிய அப்சலோமால் துரத்தப்பட்டு வனாந்தரத்திற்கு ஓடிப்போனார். துரோகியான அப்சலோம் ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டான். இங்கே இராஜாவின் வீட்டில் நடக்கிறவைகளை அறிந்து செய்தி அனுப்பும்படி தாவீது ராஜா சாதோக், அபியத்தார் என்னும் ஆசாரியர்களை தேசத்தில் விட்டுச் சென்றிருந்தார். தாவீது இராஜாவின் படைகளுக்கும், அப்சலோமின் வீரர்களுக்கும் வனாந்தரத்திலே யுத்தமுண்டாயிற்று. யுத்தத்திலே அப்சலோமின் படை தோல்வியடைந்தது. அப்சலோமும் செத்துப் போனான். அப்பொழுது தேசத்தில் உள்ள ஜனங்கள் தாவீது இராஜாவை திரும்ப அழைத்து வர வேண்டும் என்று சொல்லிக் கொண்டார்கள். இப்படி இஸ்ரவேலரெல்லாரும் பேசிக் கொண்டிருக்கிறது இராஜா இருக்கிற வீட்டிலே அவனுக்கு கேள்வியானபடியினால் தாவீது இராஜா சாதோக், அபியத்தார் என்னும் ஆசாரியர்களுக்கு ஆள் அனுப்பி நீங்கள் யூதாவின் மூப்பரோடே பேசி இராஜாவை தம்முடைய வீட்டுக்குத் திரும்ப

அழைத்துவர நீங்கள் மற்றவர்களுக்குப் பிந்தி போவானேன், நீங்கள் என் சகோதரர், நீங்கள் என் எலும்பும் என் மாம்சமுமானவர்கள். இராஜாவை திரும்ப அழைத்துவர நீங்கள் பிந்தினவர்களாயிருப்பானேன் என்று சொல்லுங்கள் என்று சொல்லச் சொன்னான். இப்படியே யூதாவின் சகல மனுஷருடைய இருதயத்தையும் ஒரு மனுஷனுடைய இருதயத்தைப் போல் இணங்கப் பண்ணினதினால் அவர்கள் இராஜாவுக்கு நீர் உம்முடைய எல்லா ஊழியக்காரரோடும் திரும்பி வாரும் என்று சொல்லி அனுப்பினார்கள்.

இராஜா திரும்ப வருகிறதற்கு யோர்தான் மட்டும் வந்த போது யூதா கோத்திரத்தார் இராஜாவுக்கு எதிர் கொண்டு போய் இராஜாவை சந்தித்து இக்கரைப் படுத்தினார்கள் (II சாமு 19:11-15). இராஜாவினிடத்தில் இருந்து செய்தி வந்தது. இராஜாவினால் நியமிக்கப்பட்ட ஆசாரியர்களுக்கு, ஆசாரியர்கள் திருச்சபையின் மூப்பர்களுக்கு அறிவித்தார்கள். அந்த அறிவிப்பினால் யூதாவின் சகல மனுஷருடைய இருதயமும் ஒரே மனிதனுடைய இருதயம் போல் ஆயத்தமானார்கள். யூதா ஜனங்கள் முன் சென்று இராஜாவைச் சந்தித்தார்கள். இஸ்ரவேலின் கோத்திரங்களில் யூதா கோத்திரம் ஒன்று. இந்த யூதா கோத்திரம் இராஜாவினுடைய கோத்திரமாகும். இதுவே திருச்சபை, மணவாட்டி. எல்லாக் கோத்திரங்களும் திருச்சபையல்ல. எல்லா சபைகளும்கர்த்தருடைய சரீரமான மணவாட்டியல்ல. புறம்பாக யூதனானவன் யூதனல்ல. உள்ளத்திலே யூதனானவனே யூதன். புறம்பாக மாம்சத்தில் செய்யப்படும் விருத்த சேதனமும் விருத்த சேதனமல்ல. எழுத்தின்படி உண்டாகாமல் ஆவியின்படி இருதயத்தில் உண்டாகும் விருத்த சேதனமே விருத்த சேதனம் (ரோம 2 : 28, 29).

இன்று கிறிஸ்தவ சபைகள் ஏராளமாக இருக்கின்றன. நமக்கு முன்னே இயேசு கிறிஸ்துவுடைய இரண்டாம் வருகையைப் பற்றிப் போதித்து, பிரசங்கித்து கொண்டிருக்கிறவர்களுடைய கூட்டம் மிகுதி. இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை 1972-ல் வருகிறது. 1973-ல் வருகிறது, 1977-ல் உலகம் அழியப் போகிறது என்று தமிழ்நாடு திருநெல்வேலி ஜில்லா மூக்கூடலிலிருந்து தன்னைக் கர்த்தர் என்று சொல்லிக் கொள்ளுகிற ஒரு கருத்தவர் பிரகடனப் படுத்தினார். ஆ! என்று எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அதை நம்பினோர் அநேகர். ஆனால் இஸ்ரவேலிலே ஒரு தீர்க்கதரிசி உண்டென்று எல்லாரும் அறிந்து கொள்ளட்டும் என்று நாம் "புதிய எருசலேம் சபை" அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தோம். சகோதரனே, நீர் சொல்லுகிற நாளில் இயேசு கிறிஸ்து திரும்ப வரப் போகிறதில்லை. 1977-ல் உலகம் அழியப் போகிறதில்லை. அப்படியே வந்தாலும் நீரும், உம்முடையவர்களும் வில்லியம் பிரன்காமின் உபதேசத்துக்காரரும் எடுத்துக் கொள்ளப்படப் போவதில்லை என்று வெளிப்படையாய் லெட்டர் மூலம் எச்சரித்தோம். செய்தி வெளியிட்டோம். எங்களுடைய வார்த்தையின்படியே ஆயிற்று. 1982-ல் இயேசு கிறிஸ்து வரப் போகிறார் என்று தூதன் ஆசிரியர் எழுதினார். மேற்படி ஆசிரியர் 1985-ம் வருஷம் பம்பாய் வந்திருக்கும் பொழுது தன் மகள் ஒரு சொப்பனம் கண்டதாகவும், ஓர் ஆண்டு கர்த்தருடைய வருகைக்காக கூட்டப்பட்டதாகவும் அறிவித்தார். அதாவது 1986-வது ஆண்டில் இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகை இருக்கும் என்ற கருத்தில் மேடையில் பிரசங்கித்தார். இப்படிப் பேய்க்கனவு கண்டு பேசுகிறவர்கள் அநேகர் உண்டு. இது பேய்க் கனவு. இவர்கள் கள்ளத் தீர்க்கதரிசிகள். இவர்கள் சொல்லுகிறபடி ஆகப் போகிறதில்லை.

சிலர் தங்களை ஒரு பொருட்டாக எண்ணியிருக்கிறது போல் தெரிகிறது. வரப்போகிற எலியா தான்தான் என்றும், தாங்கள் தான் சபையை ஆயத்தப்படுத்தப் போகிறவர்கள் என்றும், தாங்கள் தான் இயேசு கிறிஸ்துவுக்கு முன்னோடிகள் என்றும் எண்ணி பீதற்றிக் கொண்டு மக்களை வஞ்சித்துக் கொண்டிருக்கின்றனர்.

தேவனுடைய இரகசியம் எங்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. திருச்சபை உலகமெங்கும் கட்டப்படும். ஒரே மனுஷனுடைய இருதயத்தைப் போல் புதிய

எருசலேம் ஆயத்தப்படும். இன்றைக்கு புதிய எருசலேம் தவிர மற்றச் சபைகளுள் உபதேசப் பிரிவினை உண்டு. கொள்கை பிரிவினை உண்டு. போதிப்பில் தவறு உண்டு. ஜனங்களில் வேறுபாடு உண்டு. இவர்களில் ஒரு மனமோ, ஒரு முகமோ உண்டாகாது. கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தமாக்க ஒரு மனிதனுடைய இருதயத்தைப் போல் இணங்கப்பண்ண அவர்களுடைய ஊழியர்களாலேயே முடியாது. தாங்கள் பெரிய சபை என்றும், இராஜா வீட்டத்தில் எங்களுக்கு 10 பங்கு இருக்கிறதென்றும் எங்கள் இராஜாவை திரும்ப அழைத்து வர வேண்டுமென்று முந்தி சொன்னவர்கள் நாங்களல்லவா என்றும் அவர்கள் சொல்லலாம். ஆனாலும் அவர்களுடைய பேச்சு எடுபடாது (II சாமு 19 அதிகாரம்). இதற்குக் காரணம் இராஜாவே. இராஜா தம்முடைய சரீரமான சபைக்கே செய்தி அனுப்புவார். இந்த இரகசியம் பெரியது. நான் கிறிஸ்துவைப் பற்றியும் சபையைப் பற்றியும் சொல்லுகிறேன். நாம் அவருடைய சரீரத்தின் அவயங்களாயும் அவருடைய மாம்சத்திற்கும் அவருடைய எலும்புகளுக்கும் உரியவர்களாயிருக்கிறோம் (எபே 5 : 32, 30).

இராஜா தம்முடைய திருச்சபைக்கே இரகசியமாய் செய்தி அனுப்புவார். அவர் வரும் நாளையும், நாழிகையும் ஒருவனும் இப்பொழுது அறியான். அவரால் நியமிக்கப்பட்ட, அனுப்பப்பட்ட ஆசாரியனுக்கு அவர் செய்தி அனுப்புவார். அவர் தம்முடைய ஜனங்களுக்கு (ஊழியர்கள் அறிவிப்பார். அவர்கள் சபைக்கு அறிவிப்பார்கள். சபை ஆயத்தப்படும். கர்த்தருடைய வருகைக்கு மக்களை ஆயத்தப்படுத்தும் ஊழியமும் உபதேசமும் எங்களுக்கு கையளிக்கப்பட்டிருக்கிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய சரீரமான சபையைக் கட்டும்படி என்னை அனுப்பியிருக்கிறார். அபிஷேகித்திருக்கிறார். கர்த்தருடைய வருகைக்காய் அவருடைய ஜனங்களைக் கூட்டிச் சேர்த்து ஆயத்தப்படுத்தும் படிக்கு தேவன் புதிய எருசலேம் சபையை எழுப்பியிருக்கிறார். அதற்காக என்னை அனுப்பியிருக்கிறார்.

புதிய எருசலேம் சபை உலகமெங்கும் பரவும். கர்த்தருடைய வருகைக்காய் முன் குறிக்கப்பட்ட மக்கள் சபையில் புதிய எருசலேமாய் கூட்டிச் சேர்க்கப்படுவார்கள். நிலை நிறுத்தப்படுவார்கள். மற்றவர்கள் வந்தாலும் பின்மாறிப் போய் விடுவார்கள். "ஓரேபிலே இஸ்ரவேல் எல்லாருக்காகவும் என தாசனாகிய மோசேக்கு நான் கற்பித்த நியாயப்பிரமாணமான கட்டளைகளையும், நியாயங்களையும் நினையுங்கள்" (மல் 4 : 4). இஸ்ரவேல் எல்லாருக்காகவும் மோசே என்னும் ஒரே மனிதன் மூலமாய் தேவன் கற்பித்தது போல இந்தக் கடைசி காலத்திலும் கிறிஸ்தவர்கள் எல்லாருக்காகவும் தேவன் ஒரே ஆள் மூலமாக பேசுகிறார். எப்படியும் II சாமு 19-ம் அதிகாரத்தின் செய்தியை எங்களுக்கு வெளிப்படுத்தி கர்த்தருடைய இரண்டாம் வருகையின் செய்தியை அனுப்புவேன் என்று தேவன் திட்டமாய் வெளிப்படுத்தி வசன ஆதாரம் காண்பித்து உறுதிப்படுத்தியுள்ளார். ஆனபடியால் புதிய எருசலேம் சபை திட்டமாகக் கர்த்தருடைய வருகைக்காய் ஆயத்தப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆயத்தப்படும். நீயும் வந்து சேர்ந்து கொள். இயேசு உன்னை அழைக்கிறார். இப்படியே சபை ஆயத்தப்படும்.

"...இதோ வருகிறார் என்று சேனைகளின் கர்த்தர் சொல்கிறார்" — மல் 3 : 1

(தொடரும்...)

## நட்சத்திரம்

உலகில் அனுதினமும் அநேகமாயிரம் குழந்தைகள் பிறக்கின்றன. இதில் அநேகம் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் எந்த நட்சத்திரத்தின் ஆளுகைக்குள் பிறந்திருக்கின்றன என்று கண்டு ஜாதகம் கணிக்கின்றனர். இதன் மூலம் மூன்று காலங்களையும் அறிந்து கொள்ளலாம் என நம்புகின்றனர்.

நட்சத்திரங்களை கிரகங்கள் ஆளுகை செய்வதாகவும், கிரகங்கள் தெய்வங்களின் ஆளுகைக்குட்பட்டது என்றும் ஜோதிடம் கூறுகின்றது. இதனால் கடந்த வாழ்க்கை, நிகழ் வாழ்க்கை, வரும் வாழ்க்கை என்ற வாழ்க்கையின் தன்மைகளை அறிந்து கொள்ளலாம் என நம்பி நட்சத்திரங்களைக் குறித்து ஜாதகம் கணிக்கின்றனர். வானத்தில் கணக்கிலடங்கா நட்சத்திரங்கள் இறைவனால் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. ஆனால் ஜோதிடத்தில் இருபத்தேழு (27) நட்சத்திரங்கள்தான் இடம் பெற்றுள்ளது. இவைகள் மனிதனை ஆளுகை செய்வதாக கூறுகின்றனர். இவைகளை நாள்காட்டியில் காணலாம். அசுபதி நட்சத்திரம் எனத் தொடங்கி ரேவதி நட்சத்திரம் என்று முடியும். இவைகளை வருட நாள்காட்டியில் பதிமூன்று (13) முறை காணலாம். இவர்களுடைய கணக்கின்படி மற்ற நட்சத்திரங்கள் மூலமாக பிரயோஜனம் இல்லையா? வானத்தில் காணப்படுகின்ற எண்ணிலடங்கா நட்சத்திரங்களில் இந்த இருபத்தேழு நட்சத்திரங்கள் தவிர மற்ற நட்சத்திரங்கள் அவர்களுடைய கண்களுக்கு மறைக்கப்பட்டு விட்டதா?

இறைவன் நட்சத்திரங்களை சிருஷ்டித்த நோக்கமாவது இரவு நேரம் இளைப்பாறுதலின் காலமாயிருக்கின்றது. பகல் முழுவதும் வேலை செய்து களைத்துப்போன மனிதன் இராக்காலத்தில் நித்திரை செய்து இளைப்பாறுகிறான். பகலில் உள்ள வெளிச்சத்தைப் போல் இரவிலும் வெளிச்சம் இருந்தால், சரியாக நித்திரை செய்து ஒரு நல்ல இளைப்பாறுதலைப் பெற முடியாது. ஆகையால் இறைவன் இராக்காலத்தில் சிறிய சுடரையும் (சந்திரன்), மின்னிக் கொண்டிருக்கின்ற குறைந்த ஒளி உள்ள நட்சத்திரங்களையும் சிருஷ்டித்தார். இந்த சிறிதளவு வெளிச்சம் குளிர்ச்சியாகவும், நன்றாக நித்திரை செய்து இளைப்பாறுதலைப் பெற்றுக் கொள்ள மனிதனுக்கு இதமாகவும் அமைந்திருக்கிறது. இது மனிதனுக்கு இறைவனால் உண்டாகும் அனுதாபமாகும். இராக்கால வெளிச்சத்தின் மூலமாக எங்கே நித்திரை செய்கின்றோம், எங்கே இருக்கின்றோம், எங்கே நடக்கின்றோம் என்ற உணர்வை மனிதன் அடைகின்றான். இராக்கால வெளிச்சம் திருச்சபை மூலமாக உண்டாயிருக்கின்றது. பகலில் தூங்குகிறவர்கள் வியாதியஸ்தராய், சோம்பேறிகளுமாயிருக்கின்றார்கள்.

நட்சத்திரங்கள் கிரகங்களின் ஆளுகைக்கு உட்பட்டதாக ஜோதிடம் கூறுகின்றது. அந்தக் கிரகங்கள் மனிதனை ஆட்கொண்டு வழி நடத்துகின்றதாம். அந்தக் கிரகங்கள் ஒன்பது என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

1. சூரியன் (ஞாயிறு) 2. சந்திரன் (திங்கள்) 3. செவ்வாய் 4. புதன் 5. குரு (வியாழன்) 6. சுக்கிரன் (வெள்ளி) 7. சனி. 8. ராகு, 9. கேது. இதில் ராகும், கேதும் சூரியன் சந்திரனுடைய நிழல் கிரகங்களாகும். இவைகள் மனிதனை ஆண்டு நடத்துகின்றன என்று ஜோதிடர்கள் அறிவிக்கின்றனர்.

''மனிதன் சரீரமானவனாயிருக்கும் காலம் நூற்றிருபது வருஷம்'' என்று பரிசுத்த வேதம் சொல்லுகின்றது (ஆதி 6:3). இந்த வார்த்தையைப் பரிசுத்த வேதத்திலிருந்து எடுத்து இந்த ஒன்பது (9) கிரகங்களுக்கும் பங்கு வைத்து விட்டார்கள். அதாவது இந்த ஒன்பது கிரகங்களும் மனிதனை நூற்றிருபது வருடம் ஆளுகின்றதாம். அவை கேது 7, சுக்கிரன் (வெள்ளி) 20, சூரியன் (ஞாயிறு) 6, சந்திரன் (திங்கள்) 10, செவ்வாய் 7, ராகு 18, குரு (வியாழன்) 16, சனி 19, புதன் 17 ஆக 120 வருடத்தை இவ்வாறு பிரித்துள்ளார்கள்.

இவ்வாறு வரிசைக்கிரமமாக ஆளுகின்றதாம். முதலாவது சந்திரன் என்றால் இரண்டாவது செவ்வாய். முதலாவது சனி என்றால் இரண்டாவது புதன். இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாக வருவதாக எழுதியுள்ளார்கள். ஒரு கிரகம் ஆளுகை செய்யும் பொழுது மற்றக் கிரகங்கள் அதற்கு உட்பட்டு மனிதனை வழிநடத்துமாம். இதில் ஒரு பழமொழி கூறுகிறார்கள். 'பிருகு சனி பாம்பிரண்டு பிற்பலனைத் தரும்' என்று அதாவது இந்தக் கிரகங்கள் மனிதனை ஆளுகை செய்யும் பொழுதோ அவனுக்கு முதலாவது தீமை செய்யுமாம். பிருகு என்றால் சுக்கிரன், அடுத்து சனி, பாம்பிரண்டு என்றால் ராகு, கேது இதற்கு பாம்பின் குணம் உண்டு என்று பாம்பு இரண்டு என்று இதற்கு பெயரிட்டு விட்டார்கள்.

இவைகளுடைய குணம் விபச்சாரம் வேசித்தனம், களவு, கொலை, சூதாட்டம் பொய், தீராத நோய்கள், வாதை என்று அறிவிக்கிறார்கள். இந்தக் கிரகங்கள் ஆளும் போதோ, நடத்தும் போதோ இக்காரியங்கள் அந்த மனிதனிடத்தில் நடக்குமாம். இப்பொழுது இந்த மனிதனை பாவச் சாதகக் காரன் (பாவ மனுஷன்) என்று கூறுகிறார்கள். இவர்கள் மனிதனை பாவம் செய்யாதே என்று சொல்வதில்லை. கிரகக்காரன் பாவஞ் செய்ய வைக்கிறான். ஆகையால் அவன் பாவஞ் செய்கிறான் என்று சொல்லி பாவஞ் செய்கின்ற மனிதனை இன்னும் அதிகமான பாவம் செய்யும்படிக்கு அவன் கைகளைத் திடப்படுத்துகின்றார்கள். பரிசுத்த வேதத்தில், "துன்மார்க்கன் தன் பொல்லாத வழியை விட்டுத் திரும்பவும் நான் அவனை உயிரோடு காக்கவும் கூடாதபடிக்கு நீங்கள் அவனுடைய கைகளைத் திடப்படுத்தினபடியாலும் (எசேக் 14 : 22) என்று இறைவனுடைய வார்த்தை சொல்கின்றது.

மனிதன் பாவத்தில் நிலைத்திருக்கும்படிக்கும் அவன் பாவத்திலிருந்து விடுதலை பெறக் கூடாதபடிக்கும் சோதிடம் என்ற வலையில் அகப்படுத்தி அவனை வஞ்சிக்கின்றனர். பொதுவான கருத்தை ஆராய்வோம். கிரகங்களுக்கு ஜீவன் உண்டா? அவைகளுக்கு அழியாத ஆத்மா உண்டா? அவைகள் பேசுமா? அவைகளுக்கு நன்மை தீமை அறியத்தக்க பகுத்தறிவு உண்டா? இல்லை, ஆனால் இவைகள் அனைத்தும் மனிதனுக்கு உண்டு. கிரகங்கள் ஒரு ஜடப்பொருள், அவைகள் இறைவனுடைய சித்தப்படி இயங்குகின்றன.

இவ்வளவு விசேஷித்த மனிதனை கிரகங்கள் எப்படி ஆளுகை செய்யமுடியும்? சிந்திப்பீர்களாக. மனிதனைக்குறித்து பரிசுத்த வேதத்தில் "தேவன் மனிதனை தம்முடைய சாயலாக சிருஷ்டித்தார். அவனைத் தேவசாயலாகவே சிருஷ்டித்தார் (ஆதி 1 : 27) என்று ஜீவவார்த்தை சொல்கின்றது. இறைவன் தம்முடைய சகல சிருஷ்டிப்புகளிலும் விசேஷமாக அதிக மேன்மையாக சிருஷ்டித்தார். தமது சாயலாகவும், தமது ரூபத்தின் சாயலாகவும் அவனை சிருஷ்டித்தார். எல்லா சிருஷ்டிப்புக்கும் மேலாக உயர்த்தி அவனை னார்.

இந்த மேன்மையை ஔவை அறிந்திருந்தபடியால், "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்று பாடினாள். அவள், "அரிது அரிது கிரகங்கள் மனிதனை ஆளுவது அரிது" என்று பாடவில்லை. கிரகங்கள் மனிதனை ஆளுவது உண்மையானால் அவள் நிச்சயம் இப்படி பாடியிருப்பாள். ஆனால் அவள் மனிதப் பிறப்பின் மேன்மையை உணர்ந்தபடியால மானிடராய் பிறத்தல் அரிது என்று பாடினாள். நட்சத்திரங்கள், கிரகங்கள் இறைவனால் சிருஷ்டிக்கப்பட்ட நோக்கத்தை பரிசுத்த வேதத்தில், "பின்பு தேவன்: பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசம் உண்டாக்கத்தக்கதாக வானம் என்கிற ஆகாய விரிவிலே சுடர்கள் உண்டாகக் கடவது. அவைகள் அடையாளங்களுக்காகவும், காலங்களையும் நாட்களையும், வருஷங்களையும் குறிக்கிறதற்காகவும் இருக்கக்கடவது என்றார் (ஆதி 1 : 4) என்று திருவசனம் உரைக்கின்றது.

சூரிய வெளிச்சத்தின் மூலமாக பகலும், சந்திர நட்சத்திர வெளிச்சத்தின் மூலமாக இரவும் உண்டாகின்றது. இவைகள் பகலுக்கும், இரவுக்கும் அடையாளங்களாக உள்ளன. கிரகங்கள் யாவும் சூரியனை மையமாக வைத்து சூரியனை சுற்றி வருகின்றன. பூமியும் சேர்ந்து சூரியனை சுற்றி வருகின்றது. இவ்வாறு சுற்றுவதால், பூமியில் கோடைகாலம், குளிர்காலம், முன்பனிக் காலம் பின்பனிக் காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம் என்ற காலங்கள் உண்டாகின்றன. பூமி தன்னைத் தானே சுற்றி வருகிறது. இப்படி பூமி தன்னைத் தானே ஒரு முறை சுற்ற இருப்பத்துநான்கு மணிநேரம் ஆகின்றது. பூமி தன்னைத்தானே சுற்றும் பொழுது இரவும் பகலும் உண்டாகிறது.

ஒருபகலும், ஒருஇரவும் சேர்ந்து ஒருநாள் ஆகின்றது. பதினைந்து தினங்களாக தேய்பிறை(தேயும் சந்திரன்)தேய்ந்து அமாவாசை உண்டாகின்றது. பன்னிரண்டு பௌர்ணமியும், பன்னிரண்டு அமாவாசையும் சேர்ந்து ஒரு வருஷம் ஆகின்றது. அல்லது பூமி சூரியனை ஒரு முறை சுற்றிவர ஒரு வருஷம்

உண்டாகின்றது. இந்த காரியங்கள் நிகழ்வதற்காகவே கிரகங்களும், நட்சத்திரங்களும் சிருஷ்டிக்கப்பட்ட நோக்கமாகும். மனிதனை ஆளுவதற்கல்ல.

கிரகங்கள் தெய்வங்களின் ஆளுகைக்கு உட்பட்டதாக கூறுகின்றனர். ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் உண்டு என்று அறிவிக்கின்றனர். "ஒன்றே குலம் ஒருவனே தெய்வம்" என்று சொல்லுகின்றார்கள். அதை ஒத்துக் கொள்ளுகின்றனர். இப்படியிருக்க இங்கே பல தெய்வங்களை காண்பிக்கின்றனர். அவை வருமாறு:

சூரியனுக்கு சிவன், சந்திரனுக்கு பார்வதி, செவ்வாய்க்கு அங்காரகன், புதனுக்கு விஷ்ணு, குருவிற்கு தெஷ்ணாமூர்த்தி, சுக்கிரனுக்கு லெட்சுமி, சனிக்கு சாஸ்தா, கேதுவிற்கு விநாயகன், ராகுவிற்கு துர்க்கை என்று எழுதியுள்ளார்கள். கிரகங்கள் மனித விட்டத்தில் கிரியை செய்யும் பொழுது அவை பாவம் செய்து பாவத்தை சுமக்கின்றன என்று சொல்லி, பாவத்தை நீக்குவதற்கு கிரகங்களை ஆட்கொண்டிருக்கின்ற தெய்வங்களை சாந்தப்படுத்த வேண்டும் என்று ஆலோசனை கூறுகின்றனர்.

எந்தக் கிரகம் கிரியை செய்து பாவஞ் செய்கின்றதோ, அல்லது வேதனைபடுகின்றதோ அந்தக் கிரகத்திற்குரிய தெய்வத்தை சாந்தப்படுத்த வேண்டும். பொதுவாக எல்லாக் கிரகங்களும் மனிதனுக்குத் தீமை செய்கின்றது என்று அறிவித்து விட்டார்கள். ஆதலால் எல்லாக் கிரகங்களின் தெய்வங்களையும் சாந்தப்படுத்த யோசனை கூறுகின்றார்கள்.

சாந்தப் படுத்தும் முறையாக தெய்வங்களுக்கு உயர்ந்த நகைகளை அணிவிக்கவும், அந்த தெய்வங்களின் நிறத்தின்படி உயர்ந்த பட்டாடைகளை அணிவிக்கவும், தெய்வங்களின் நிறத்தின்படி தானம் செய்யவும் சொல்லுகின்றனர். தானமாக, சிவனுக்கு சிவப்பு வஸ்திரம், கோதுமை, பார்வதிக்கு சங்கு, அரிசி, முருகனுக்கு துவரை, விஷ்ணுவிற்கு சுவர்ணம், பாசிப்பயிறு, தெஷ்ணாமூர்த்திக்கு மஞ்சள் வஸ்திரம், கடலை, லட்சுமிக்கு வெள்ளி, வெள்ளைக் குதிரை, சாஸ்தாவுக்கு கருப்பு பசு, எள், துர்க்கைக்கு கத்தி, இரும்பு, உளுந்து, விநாயகனுக்கு காணம். இவைகளைக் கொடுக்கும்படி எழுதப்பட்டுள்ளது. இவைகளை செய்து முடித்த மனிதன் பாவம் நிவர்த்தி ஆகவில்லை என்று அறிவிக்கின்றான். இவர்கள் புண்ணிய நதிக்கும், புண்ணிய ஸ்தலங்களுக்கும் போனால் பாவம் நிவிர்த்தி ஆகும் என்று சொல்லுகின்றனர். அவன் ராமேஸ்வரம் செல்கின்றான், பாவநாசம் செல்கின்றான், இறுதியாக காசிக்குப் போகின்றான்.' ஆனால் பாவம் நிவிர்த்தியாகவில்லை. பாவப்பாரச் சுமையினால், "காசிக்குப் போனாலும் கர்மம் தொலையவில்லை என்று மனக்கவலையோடு வேதனைப்படுகின்றான்." அப்படியானால் வேதனை நீங்க, மனக்கவலை மாற என்ன வழி?

தனக்குவமை இல்லாதான் தாழ் சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை மாற்றல் அரிது என்று குறள் கூறுகின்றது. தமக்கு நிகரான தேவன் அவரே, அவருக்கு நிகரான தேவன் ஒருவரும் இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட தேவனைச் சேர்ந்தவர்களுக்கே மனக்கவலை மாறும், தீரும். இவர்களுடைய சோதிடக் கணக்கின்படி பிரதான தெய்வம் என்று சொல்லக் கூடிய செவ்வாயின் அதிபதி கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்ததாக விழாக்கள் கொண்டாடுகின்றார்கள். அப்படியானால் எல்லாக் கிரகங்களும் இந்தத் தெய்வத்திற்கு தீமை செய்யுமே. மனிதர்கள் படக்கூடிய வேதனையையே இந்தத் தெய்வம் அனுபவிக்கும். சனி எல்லா தெய்வத்தையும் (கேது தவிர) வேதனை படுத்தியதாக புராணங்களில் கூறுகின்றார்கள். இப்படியிருக்க இந்தத் தெய்வங்களால் மனிதர்களுடைய பாவபாரச் சுமையை, மனக்கவலையை எப்படி நீக்க முடியும். சிந்தித்துப் பாருங்கள்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு என்று குறள்

கூறுகின்றது. இந்தக் குறளில் ஆதி பகவன் என்று எழுதப்பட்டுள்ளது. ஆதிமூலத்திற்குப்பின், ஆதி பகவானுக்குப்பின் அநேக பகவான்கள் தோன்றிவிட்டார்கள். ஆதலால் குறளில் ஆதி பகவன் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. அப்படியல்லவென்றால் ஆதி

என்று குறிப்பிடவேண்டிய அவசியம் இருந்திருக்காது. அப்படியானல் இடையில் தோன்றிய பகவான்கள் யார்?

மாளும் மனிதன் மலரேறும் தான்
மனிதன்
ஆலமுண்ட கண்டனும் அவன் மனிதன்
சீலமுடன் கற்ருர் பெரியார் கல்லா
தொழுகின்றீர் கர்த்தா ஒருவரல்லோ
தொழுதல் அடுக்கும்

என்று, இடையில் தோன்றிய பகவானகள் மனிதர்கள் என ஔவை மூதாட்டி பாடல் மூலம் வெளிப்படுத்துகின்ருள். இவர்கள் மனிதர்களானல் அதிமூலம் ஆதி பகவான் யார்?

வணங்குவாய் ஜெகஜோதி குருவனை
மாநிலத்தை ஒரு நொடியில் படைத்தே
குவலயத்தில் தான் உதித்து குருவாய்
ஞானமான சம்சார மொன்றில்லாமல்
சந்நியாசி போலிருந்து தவத்தைக்
காட்டி
அன்பான சித்தர்களை இருத்தி போட்டு
அகண்ட தலஞ் சென்றவனை அண்டு
வாயே - என்று அகஸ்தியர் பாடுகின்ருர்

ஆதிமூலத்தை ஆதிபகவானை இந்தப் பாடல் வெளிப்படுத்துகின்றது. இதில் குறிப்பிட்டுள்ளவைகள் அனைத்தும் இயேசு கிறிஸ்துவுக்கே பொருந்தும். அவரையே வணங்கும்படியும் அண்டும்படியும் சொல்லப்பட்டுள்ளது.

இவரைக் (இயேசு) குறித்து வேதத்தில், "நான் உலகத்திற்கு ஒளியாய் இருக்கிறேன்," (யோவா 8:12) என்றும், "சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை" (யோவா 1:3) என்று திருவசனம் கூறுகின்றது. இவர் தீர்க்கதரிசனவார்த்தை நிறைவேறும் படியாக பாலகனக அவதரித்தார்.

அவர் பிறப்பை அறிவிக்கும்படியாக ஒரு விஷேசித்த நட்ஷத்திரம் வானத்தில் தோன்றியது. அவரைக் கண்டு பணிந்து கொள்ள விரும்பியவர்களை அழைத்துச் செல்லும்படியாக அவர்களுக்கு வழிகாட்டியாக முன்சென்றது. அவர் அவதரித்திருந்த இடத்தைக் காண்பித்தது. அதைக் குறித்து அவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்தார்கள் (மத் 2:2, 9, 10). சகலமும் இவர் மூலமாய் உண்டாயிற்று என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டாகும். வேறு எந்த ஒரு மனிதனின் பிறப்பிலும் விஷேசித்த நட்சத்திரம் தோன்றியதில்லை. இவருடைய அவதாரத்தின் மூலமாக பூமியில் சமாதானமும், மனுஷர் மேல் பிரியமும் உண்டாயிற்று.

இவருடைய பிறப்பின் மூலமாக உலக சரித்திரமே இரண்டாகப் பிரிக்கப்பட்டது. கிறிஸ்துவுக்குமுன் (கி.மு) கிறிஸ்துவுக்குபின் (கி.பி) என்று பெயர் சூட்டப்பட்டது. வேறு எந்தத் தெய்வத்தின் அவதாரமும் உலக சரித்திரத்தை பிரித்ததில்லை. இவரே (இயேசு) நாக்குவாம இல்லாத தேவன். இவர் மூலமாகவே மனிதனின் பாவப் பாரச்சுமை அகன்று அவனுடைய மனக்கவலை நீங்குகின்றது. எப்படியெனில் பரிசுத்தவேதம் சொல்லுகிறது. அவள் ஒரு குமாரனைப் பெறுவாள். அவருக்கு இயேசு என்று பெயரிடுவாயாக. ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிப்பார் என்ருன் (மத் 1:21) ஆம்! இயேசுகிறிஸ்து மனுமக்களுடைய பாவங்களுக்காய் இந்த உலகத்தில் வந்து வேதவாக்கியங்களின் படி கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றும் நாள் உயிரோடு எழுந்தார். அவருடைய இரத்தத்தினலே பாவமன்னிப்பு உண்டாகிறது.

இயேசு என்பதற்கு பாவங்களில் இருந்து மீட்டு இரட்சிக்கிறவர் என்று அர்த்தம் யாருடைய பாவங்களை மீட்டு (மன்னித்து) இரட்சிக்கிருர் என்ருல், அவர் தமது ஜனங்களின் பாவத்தை மீட்டு இரட்சிக்கிருர் என்று திருவசனம் சொல்லுகின்றது. அவரைத் தெய்வமாக ஏற்றுக் கொண்டவர்களின் பாவப் பாரச் சுமையை நீக்கி அவர்களின் இருதயத்தில் சந்தோஷத்தையும் சமாதானத்தையும் அருளுகின்ருர்.

"நீங்கள் எவைகளினின்று விடுதலையாகி நீதிமான்களாக்கப்படக் கூடாதிருந்ததோ, விசுவாசிக்கிறவன் எவனும் அவைகளினின்று இவராலே விடுதலையாகி நீதிமானாக்கப்படுகிறான் (அப் 13:39).

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி!

சோதிடத்தை நம்பாதே!

"அநேகரை நீதிக்குட்படுத்துகிறவர்கள் நட்சத்திரங்களைப் போல் பிரகாசிப்பார்கள்" தானி 12:3.




**ஆதி 47 : 1, 2** யோசேப்பு பார்வோனிடத்தில்போய் என் தகப்பனும், என் சகோதரர்களும் வந்திருக்கிறார்கள் என்று சொல்லி தன் சகோதரரில் ஐந்து பேரை பார்வோனுக்கு முன்பாகக் கொண்டு போய் நிறுத்தினான். யோசேப்பு தான் உயர்ந்த பதவியில் தேசத்தில் இருந்த போதிலும் மேய்ப்பர்கள் எல்லாரும் எகிப்தியர்களுக்கு அருவருப்பாய் இருந்த போதிலும் தன் சகோதரரை இராஜாவுக்கு முன்பாகக்கொண்டு போய் நிறுத்தி இவர்கள் என் சகோதரர்கள் என்று சொல்ல யோசேப்பு வெட்கப்படவில்லை. இந்நாட்களிலே உயர்ந்த பதவியிலுள்ள சிலர் தங்கள் பெற்றோர்களையும், சகோதரர்களையும், இவர்கள் தங்களுடைய பெற்றோர்கள், சகோதரர்கள் என்று சொல்ல வெட்கப்படுகின்றனர். தங்களுடைய இனத்தார் என்று சொல்ல வெட்கப்படுகின்றார்கள். சகோதரனே! நீ உன்னுடைய தாழ்வான நிலைமையைக் குறித்து, ஏழ்மையான நிலையைக் குறித்து வெட்கப்படாதே. கவலைப்படாதே. பரலோகத்தின் தேவனாகிய நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உன்னை ஒரு நாள் பிதாவினுடைய சந்நிதானத்தில் கொண்டு போய் நிறுத்தி, இவன் என்னுடைய சகோதரன், இவள் என்னுடைய சகோதரி என்று சொல்லுவார்.

இதினிமித்தம் அவர்களை சகோதரர்கள் என்று சொல்ல அவர் வெட்கப்படவில்லை என்று வேதத்தில் எழுதியிருக்கிறது (எபி 2 : 11). ஒவ்வொரு கிறிஸ்தவனும் தன்னைப் போல் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற எந்தச் சகோதரனையும், சகோதரியையும், என்னுடைய சகோதரர்கள், சகோதரிகள் என்று சொல்ல வெட்கப்படான்.

**ஆதி 47 : 3 10** யோசேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபை பார்வோனுக்கு முன்பாகக் கொண்டு போய் நிறுத்தினார். யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்தார். பார்வோன் யாக்கோபினிடத்தில் உமது வயது என்ன என்று கேட்ட பொழுது அதற்கு யாக்கோபு நான் பரதேசியாய் சஞ்சரித்த நாட்கள் 130 (நூற்று முப்பது) வருஷம் என்றார். நாம் இந்த உலகத்தில் பரதேசிகளாக மோட்சப் பிரயாணிகளாக இருக்கிறோம். நாம் போய்ச் சேர வேண்டிய ஊர் பரலோகமாகும். சுதேசிகளாக நம்மை எண்ணி இங்கேயே எல்லா வசதியையும் தேடாதிருங்கள்.

**ஆதி 47 : 11 20** யோசேப்பு தன்னுடைய குடும்பத்தாருக்கு ஆகாரம் கொடுத்து ஆதரித்து வந்தார். தேசத்தில் பஞ்சம் மிகவும் கொடியதாய் இருந்தது. தேசம் மெலிந்து போயிற்று. ஜனங்கள் மத்தியில் இருந்த பணமும் செலவழிந்து போயிற்று. ஆடு, மாடுகளை யோசேப்பினிடத்தில் கொடுத்து ஆகாரம் வாங்கிச் சாப்பிட்டார்கள். கடைசியில் ஜனங்கள் தங்களையும், தங்கள் நிலங்களையும் வாங்கிக் கொண்டு ஆகாரம் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார்கள், நிலங்களை விற்றார்கள். யோசேப்பு எகிப்தில் நிலங்கள் யாவையும் பார்வோனுக்காக கொண்டார். ஜனங்கள் நாங்களும், நிலங்களும் பார்வோனுக்கு ஆதீனமாயிருப்போம், நாங்கள் சாகாமல் உயிரோடிருக்கவும், நிலங்கள் பாழாய்ப் போகாமல்

இருக்கவும் எங்களுக்கு விதைத் தானியத்தைத் தாரும் என்றார்கள். இன்றைக்கு மனிதனுடைய இருதயமாகிய நிலங்கள், பாழாய்ப் போய்க் கொண்டிருக்கின்றது. அநேக கிறிஸ்தவர்கள் ஆவிக்குரிய ஜீவனை இழந்து செத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய இருதயம் பாழடைந்து கொண்டிருக்கிறது. போட்டியும் பொறாமையும், வன் கண்ணும், தூஷணமும், விபச்சாரமும், வேசித்தனமும், பொய்யும், புரட்டுமான காரியங்களை நடப்பித்து பாழாகிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தேவனுடைய வசனமாகிய நல்ல விதைத் தானியம் விற்கும் இடத்தில் வந்து வாங்கிக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அழிவது நிச்சயம்.

**ஆதி 47 : 21 - 31** யாக்கோபின் அந்திய காலம் வந்தது, தன்னுடைய பிதாக்கள் அடக்கம் பண்ணப்பட்ட இடத்தில் தன்னை அடக்கம் பண்ணும்படி யோசேப்பினிடத்தில் ஆணையிடுவித்துக் கொண்டார். இஸ்ரவேல் கட்டிலின் தலை மாட்டிலே சாய்ந்து தொழுது கொண்டார். யாக்கோபு தான் தள்ளாடிய காலத்திலும் தன்னால் முடிந்த மட்டும் தேவனைத் தொழுது கொண்டார். நாமும் எவ்வளவு பெலவீனமான நோயாயிருந்தாலும், பெலவீனமாயிருந்தாலும் நோய்பட்டு அந்தியகாலமாய் இருந்தாலும், நம்மால் முடிந்த மட்டும் தேவனைத் தொழுது கொள்ள வேண்டும்.

(தொடரும்)

> "எகிப்திலே தானியம் உண்டென்று கேள்விப் படுகிறேன். நாம் சாகாமல் உயிரோடிருக்கும்படி நீங்கள் அவ்விடத்திற்குப் போய் நமக்காக தானியம் கொள்ளுங்கள் என்றான்." —ஆதி 42 : 2.

## மோட்ச வழி

### குரு - சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன் :** ஐயா ஜெபம் பண்ணுவது எப்படி என்று எனக்குப் போதிக்கவும்.

**குரு :** முதலாவது வேதத்தை வாசித்து தியானம் பண்ண வேண்டும். அப்படி தியானிக்கையில் நமக்கு ஜெப ஆவி ஊற்றப்படும். நாம் ஜெபிக்கலாம்.

**சிஷ்யன் :** சில வேளையில் ஜெபம் பண்ண முடியவில்லை. அதற்கு என்ன செய்வது?

**குரு :** பாவங்கள் உண்டாயிருந்தால் அவைகளை அறிக்கை செய்து விட்டு விட வேண்டும். பாவ மன்னிப்பு பெற்றுக் கொள்ள வேண்டும். சரி செய்ய வேண்டியவைகளை சரி செய்ய வேண்டும். ஒப்புரவு ஆக வேண்டியவைகளை ஒப்புரவாக வேண்டும். கடமைகளை நிறைவேற்ற வேண்டும். இப்படிச் செய்துவிட்டு குற்ற மற்ற மனச் சாட்சியோடு நாம் ஜெபிக்கக் கடந்து செல்வோமென்றால் ஜெபம் தாராளமாக வரும்.

**சிஷ்யன் :** சில வேளைகளில் ஜெபிக்கும் பொழுது மனம் ஒருமனப்படுகிறதில்லை. அதற்கு என்ன செய்ய வேண்டும்?

**குரு :** ஜீவிய நாட்களிலே பகல் முழுவதும் கண்டவைகளைச் சிந்திக்கிறதும், மனமொப்பி பாவம் செய்கிறவர்களாயிருப்போமானால் நாம் ஜெபிக்கப் போகும் பொழுது மனம்

எவ்வாறு ஒருமனப்படும்? ஒருமனப்படாது. பகற்காலங்களில் நாம் எந்த வேலையில் ஈடுபட்டிருந்தாலும் இறைவனைத் தியானிக்க வேண்டும். தெய்வீகக் காரியங்களைப் பற்றி தியானிக்க வேண்டும். நம்முடைய மனம் வழுவிப் போய் அடிக்கடி ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்கு தாவுகிற குரங்குகளைப் போல தாவி கொண்டிருக்கும். அதை நாம் கட்டுப் படுத்த வேண்டும். கட்டுப்படுத்தி அடிக்கடி தேவனைப் பற்றியும், தெய்வீக காரியங்களைப் பற்றியும், பரிசுத்தவான்களைப் பற்றியும் எண்ண வேண்டும். இப்படி நாம் வழுவிப் போகிற நம்முடைய மனதை கட்டுப் பாட்டிற்குள் கொண்டு வரவேண்டும். அப்படி இல்லையென்றால், நாம் ஜெபிக்க முழங்கால் படியிட்டவுடன் பகலில் நம்முடைய மனம் எங்கெங்கெல்லாம் அலைந்து திரிந்ததோ அங்கெல்லாம் ஓடிக் கொண்டேயிருக்கும். மனம் ஒருமனப்படாது. ஆனபடியால் நம்முடைய மனதை கட்டுப் பாட்டிற்குள் வைத்திருக்க வேண்டும். அப்படிச் செய்து நாம் ஜெபம் பண்ண பிரயாசப்பட்டால் திரும்பவும் திரும்பவும் முயற்சி செய்தால் ஜெபம் க[illegible]ப்பாக வரும். ஜெபம் நன்றாய் வருகிறதற்கு ஒரே வழி ஜெபம் பண்ணுவதுதான்.

**சிஷ்யன் :** ஜெபிக்கும் முறை எப்படி?

**குரு :** முதலாவது தேவனாகிய பிதாவை ஸ்தோத்தரித்து மகிமை படுத்தவேண்டும். அவர் நமக்குச் செய்த, செய்கிற எல்லா நன்மைகளுக்காகவும் அவருக்கு ஸ்தோத்திரம் செலுத்த வேண்டும். பின்பு தெய்வீக காரியங்களுக்காய் பாவிகளான ஆத்தும இரட்சிப்பிற்காய், பரிசுத்தவான்களுக்காய் ஜெபிக்க வேண்டும். அதற்குப் பின்பு நம்முடைய காரியங்களுக்காய் ஜெபிக்கலாம். பின்பு தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்தி சிறிது நேரம் அமைதியாக இருந்து விட்டு பின்பு எழுந்திருந்து நம்முடைய கடமைகளைச் செய்யலாம். ஜெபத்தில் பல படிகள் உண்டு. அவரவர்கள் வளர்ச்சிக்குத்தக்க பிரகாரம் அது வெவ்வேறு விதமாக அமையும். சிறிய சிறிய ஜெபங்களும் ஏறெடுக்க வேண்டும். சமயம் கிடைக்கும் பொழுது நீண்ட ஜெபம் செய்ய வேண்டும். அவசியமானால் உபவாசித்து ஜெபிக்கலாம். நித்திரையை ஒதுக்கி விழித்திருந்து இராமுழுவதும் ஜெபிக்கலாம். தனி ஜெபம் செய்யலாம். கூடியும் ஜெபம் செய்யலாம். அதே சமயத்தில் சபையின் ஆராதனைகள், ஜெபக் கூட்டங்களில் ஒழுங்காக கலந்து கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் ஜெப வாழ்க்கையில் பெரிய வெற்றி அடையலாம்.

(தொடரும்)

அந்நாட்களில் அவர் ஜெபம் பண்ணும்படி ஒரு மலையின் மேல் ஏறி இரா முழுவதும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தார். (லூக் 6 : 12.)

சுவிசேஷம்

## மரண பயம்

மரணம் என்றாலே மனிதர்களுக்கு திக்கென்று பயம் பிடிக்கிறது. யாருடைய மரணத்தின் செய்தியை யார் கேட்டாலும் அவர்களுடைய முகபாவம் உடனே மாற்றமடைந்து துக்கத்தை முகத்தில் காட்டுவார்கள். மரணம் மகா கொடியது. எவ்வளவு வயது முதிர்ந்த கிழவனாக இருந்தாலும், சாவின் வேளை நெருங்குமானால், பயந்துதான் இன்னும் உயிரோடிருக்க யாராவது உதவி செய்யமாட்டார்களா, டாக்டரிடம் அழைத்துச் செல்லமாட்டார்களா என ஏங்குகிறான். எப்படியும் ஒரு நாள் சாகத்தானே போகிறோம், இப்பொழுது செத்தால்தான் என்ன என்று யாரும் சும்மா இருப்பது கிடையாது.

எப்படியாவது சாவைத் தடுக்க முடியுமா என தங்களாலான முயற்சிகளை எல்லாம் செய்கிறார்கள். ஒரு சில நாளாவது மரணத்தை தடுக்க முடியுமா என பல லட்சக்கணக்கில் பணம் செலவு பண்ணவும் மனிதர்கள் தயாராக இருக்கிறார்கள். மரணமென்றாலே கசப்பான காரியமாயிருக்கிறது.

செத்துப் போனான் அல்லது மரித்துப் போனான் என்று வாயினால் சொல்வதற்கு கூட விருப்பமில்லாமல், தவறிப் போனார், நித்திரையடைந்தார், இறைபாதம் சேர்ந்தார் என்று சொல்வதுண்டு. அவ்வளவு பயங்கரமானது மரணம்.

கடவுள் இல்லை என்று சொல்லுகிற நாத்திகனும் மரண வேளை நெருங்குமானால் நடுங்குகிறான், பலரை கொலை செய்த கொலை பாதகனும் மரணத்தைக் கண்டு கலங்குகிறான்.

எவ்வளவு பெரிய பலசாலியாய் இருந்தாலும் சற்றுச் சுகவீனம் வருமானால், பலவீனம் அதிகரிக்குமானால் பயம் அவனைக் கவ்வ ஆரம்பித்து விடுகிறது. வாழ்நாளெல்லாம் மரணத்தைக் குறித்து கவலைப்படாமல் பொருள் சம்பாதிக்கவேதான் இருக்கிறோம் என்று எண்ணுகிற பொருளாசைக்காரனும் மரணம் தன்னை சந்திக்க வருகிறது என்றால் பதற ஆரம்பிக்கிறான்.

மனிதர்களால் விரும்பாத ஒன்றுண்டென்றால் அது மரணமே. ஏன் இப்படி கலங்குகிறார்கள், பயப்படுகிறார்கள். இதற்கு காரணந்தான் என்ன?

மனிதன் உயிர் வாழவேண்டுமானால் சாப்பிட்டுத்தானே ஆக வேண்டும். அது போல் மனிதனாய் பிறந்த எவனும் மரித்துத் தானே ஆகவேண்டும். இதை எல்லோரும் அறிந்து இருந்தாலும், மரணத்திற்கு பயப்படுகிறார்கள். ஏனென்றால் மரித்த மனிதனுடைய ஆத்துமா நித்திய நரகத்தில் போய் சதாகாலமும், இரவும் பகலும் ஓயாது வாதிக்கப்படப்போவதை முன்னறிகிற ஆத்துமா பயத்தினால் நடுங்குகிறது.

இப்படி ஜீவ காலமெல்லாம் மரண பயத்திற்கு அடிமைகளாய் இருக்கிறவர்கள் யாவரையும் விடுதலை பண்ணும் படிக்கு இறைவனாகிய இயேசு இந்தச் சாவுக்கேதுவான சரீரத்தில் நம்மைப் போல் பிறந்தார் என்று சத்திய வேதம் அறிவிக்கிறது (எபி 2:15). தேவனாகிய கர்த்தரால் மரணத்திற்கு நீங்கலாகும் வழிகளுண்டு என்கிற இரகசியத்தை வேதம் அறிவிக்கிறது (சங் 68:20).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து 'என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான் மரியாமலும் இருப்பான்' என்கிறார் (யோவா 11: 25,26).

மரணம் ஏன் மனிதனை ஆட்கொள்கிறது? பாவத்தினால்தான். ஏனெனில் வேலை செய்தவன் கூலி பெறுகிறான். பாவம் செய்தவன் பாவத்தின் சம்பளமாகிய மரணத்தை அடைகிறான். பாவத்தோட மரிக்கிற மனிதன், பிசாசுக்கும் அவன் தூதர்களுக்கும் ஆயத்தமாக்கப்பட்டுள்ள நித்திய நரக அக்கினியில் தள்ளப்படுவான். அங்கே அவன் சதாகாலமும் வாதிக்கப்படுவான் (வெளி 20:10). அங்கே, அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும், அந்த அக்கினி அவியாது. அவனுடைய புழு சாகாமலிருக்கும் என்று எவ்வளவேனும் பொய்யுரையாத இயேசு கிறிஸ்து சொல்கிறார்.

இதன் சாயலை இந்த உலகிலே காணலாம். சின்ன தகராறில் கோபங்கொண்டு தன் மனைவியின் கையை அரிவாளால் வெட்டி விடுகிறான். பின்பு ஐய்யய்யோ என தவிக்கிறான் மனிதன். ஜீவ காலமெல்லாம், கையில்லாமல் தன் ஆசை மனைவி வாழ்வதைக் கண்டு அவசரத்தில் செய்து விட்டேனே என துக்கிக்கிறான். அந்தத் துக்கத்திற்கு ஒரு முடிவே இல்லை. அது சரி செய்ய முடியாத நிலையில் உள்ளது. (It is beyond repair). அப்படியே அநியாயம், அக்கிரமம் செய்த மனிதனும் சதாகாலமும் வேதனை அடைவான். அவ்வளவு கொடிதானது நகரம்.

ஓ ஆண்டவர் அன்புள்ளவர் அவர் நகரத்தில் போட மாட்டார் என்று நீ எண்ணுவாயானால், நீ எழுதப்பட்ட வேத வாக்கியத்தை பொய் என்று சொல்லுகிறாய், அதுவும் பாவமே. "பயப்படுகிறவர்களும் (குற்ற மனச் சாட்சி உள்ளவர்கள்), அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும்,

கொலைபாதகரும், விபச்சாரக்காரரும், (பில்லி) சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள்" (வெளி 21 : 8) என்று சத்திய வேதம் சொல்கிறது. மனிதனே நீ பொய் சொல்வாய். அது வேதம், அது பொய் சொல்லாது.

நீ சொன்னபடி ஆண்டவர் அன்புள்ளவரே, எப்படியெனில், "தம்முடைய ஒரே பேறான குமாரனை (இயேசுவை) விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும்படி அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்" (யோவா 3 : 16).

உன்னைத் தப்புவிக்கும்படி அனுப்பப்பட்ட இந்த இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, அவருடைய வார்த்தைகளை விசுவாசித்து, அதைக் கைக் கொண்டு நடந்தால் நரகத்திற்குத் தப்பிக் கொள்ளலாம். ஏனெனில் நாம் அடைய வேண்டிய ஆக்கினையை அவர் ஏற்றுக் கொண்டுள்ளார். ஆம், அவர் அன்புள்ளவர். உன்னைத் தப்புவிக்க தன்னையே தியாக பலியாக கோரச் சிலுவையில் ஒப்புக் கொடுத்தார். இரத்தம் சிந்தி மரித்தார்.

நான் இயேசுவை விசுவாசிக்கிறேன் ஆகையால் மீட்கப்பட்டேன் .இன்னும் பாவம் செய்வேன், மன்னிப்புக் கேட்பேன் என்று சொல்லிக் கொண்டு இயேசுக் கிறிஸ்துவின் கோர மரணத்தை தண்டனை இல்லாமல் பாவம் செய்யக் கொடுக்கப்பட்ட லைசென்ஸாக கருதுகிறவர்களை வேதம் இப்படி எச்சரிக்கிறது. "தேவனுடைய குமாரனைக் காலின் கீழ் மிதித்து, சத்தியத்தை அறிகிற அறிவை அடைந்த பின்பும் மனப்பூர்வமாய் பாவம் செய்தால் பாவ நிவர்த்தி செய்ய வேறொரு பலி, இல்லாமல், நியாயத்தீர்க்கப்பட்டு கொடிதான ஆக்கினை அடைவான் (எபி 10 : 26-29). ஆகையால் பாவத்தை அறிக்கை செய்து விட்டு விடுங்கள் (மீண்டும் செய்யாதிருங்கள்). இரக்கம் பெறுவீர்கள் (நீதி 28 : 13).

ஓ நரகத்தைக் கண்டவன் யார்? அதெல்லாம் ஒன்றும் கிடையாதென்பர் சிலர். நான் கண்டேன் என்று ஒருவர் சொன்னால் நீர் நம்புவீரா? நீர் செத்தால் நிச்சயமாய்க் காண்பீர். நீர் செத்து, நான் பார்த்தேன் நரகம் என்று ஒன்றும் இல்லை என்று சொல்லப் போகிறீரா? இறைவன் இயேசு சொல்கிறார்: நரகம் உண்டு என்று. அதற்குத் தப்பும்படி இன்று உம்மை அழைக்கிறார். இயேசுவின் பின் செல்வோர் நரகத்துக்குத் தப்புவர். அதனால் மரண பயம் நீங்கி நம்பிக்கையோடு சமாதானமாய் இருக்கலாம். இயேசு கிறிஸ்வை விசுவாசியுங்கள். ஜலத்தினாலும் ஆவியினாலும் இன்னொரு (மறு) பிறப்படையுங்கள்.

ஒரு தரம் பிறந்தவனுக்கு இரண்டு மரணம் (1. சரீர மரணம், 2. நித்திய நரகம்). இரண்டு தரம் பிறந்தவனுக்கு (1. தாயிடம் பிறப்பு, 2. ஜலத்தினாலும், ஆவியினாலும் அடையும் பிறப்பு) ஒரு தரம் மரணம்- இயற்கை சரீர மரணம்.

நரகத்திற்குத் தப்பலாம். அதனால் மரண பயத்திற்கு நீங்கலாகி மகிழ்ச்சியுடனும் நம்பிக்கையுடனும் இவ்வுலகில் ஜீவிக்க கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து அவரால் உண்டாகும் பாவ மன்னிப்பை பெற்றுக் கொள்ளுங்கள்.

---

"அவராலேயன்றி (இயேசு கிறிஸ்து) வேறொருவராலும் இரட்சிப்பு (விடுதலை) இல்லை (அப். 4 : 12).

---

**மாதர் பகுதி**

# குடும்பம்

## புருஷனும் மனைவியும்

நாங்கள் வாழ்விலும், தாழ்விலும், சுகத்திலும், துக்கத்திலும் மரணம் பிரிக்கு மட்டும் ஒருவரையொருவர் ஆதரித்துக், களப்படுத்தி, நேசித்து, வருவோமென்று புருஷனும், மனைவியும் வாக்கு கொடுத்தீர்கள். உங்கள் வாக்கை ஒரே நாளில் நிறை

வேற்றி விடலாமென்று எண்ணி விடாதீர்கள். உங்கள் ஜீவிய நாள் முழுவதிலும் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு நிமிஷத்திலும் நீங்கள் உங்கள் வாக்கை நிறைவேற்றக் கடமைப் பட்டிருக்கிறீர்கள். நீங்கள் நிறைவேற்றுவோம் என்று வாக்கு கொடுத்த கடமைகள் ஒரு சில வல்ல ஏராளம். அந்தக் கடமைகளை அந்தப் பிரகாரம் நிறைவேற்றி விட்டால் பற்பல விதமான தொந்தரவுகள் ஏற்படும். சொல்லப்படப் போகிற காரியங்கள் ஸ்திரீ, புருஷர்களுக்கு தனித்தனியேயும கூட்டாகவும் சொல்லப் படப் படுகிற வைகளை சிரத்தையாய் அனுசரிப்பீர்களாக.

1. ஒவ்வொரு விஷயமும் உன் விருப்பப்படியே நடக்கும் என்று எதிர்பார்க்காதே. விவாகம் செய்து கொள்ளும் நங்கையும் புருஷனும் தாங்கள் அநேகவித சந்தோஷங்களை அநுபவிக்கலாமென்று எதிர்பார்ப்பது இயல்பான காரியம். ஆனால் நீ எதிர் பார்க்கும் இன்பங்களை அநுபவிக்க முடியாதெப்போவென்றால் புருஷன் மனைவியினுடைய துன்பங்களை காணுமிடத்தில் அவளைக் கவனித்து, அவள் சோர்ந்து துவளா வண்ணம் தாங்கி ஆற்றித் தேற்றுவதினாலும், மனைவி புருஷனுக்குண்டாகும் கஷ்ட நஷ்டங்களில் அவனை மனஞ் சோரவிடாமல் ஆறுதல் படுத்தி தைரியப் படுத்துவதினாலும் அன்பு பாராட்டுவதினாலுமே நீங்கள் இருவரும் சந்தோஷமாக குடும்ப வாழ்க்கை வாழ முடியும். கடைசி காலத்தில் என் கணவருக்கு நான் செய்ய வேண்டிய கடமையைச் சரியாய்ச் செய்தேனென்றும், கணவனும் என் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமையை நன்றாய்ச் செய்தேனென்றும் சொல்லி மனச்சாட்சி நிறைவினால் நீ நிரப்பப்பட முடியும். அவரவர் தேவ சமுகத்தில் கொடுத்த வாக்கை நிறைவேற்ற ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கணவன் மனைவி பரஸ்பரம் வெளியிடுகிற தகுந்த விருப்பத்திற்கு மற்றவர் இணங்கிப் போவதினால் அநேக நன்மைகளுண்டாகும்.

2. இருவரும் ஒருமனப்பட்டிருக்க வேண்டும். குடும்பத்தில் நடக்க வேண்டிய ஒவ்வொரு விஷயத்திலும் இருவரும் ஒருமனப்பட்டிருக்க வேண்டும். சில குடும்பத்தில் தகப்பன் பிள்ளையை அடிக்கும் போது தாய் தடுப்பதையும், தாய் பிள்ளையை அடிக்கும் போது தகப்பன் தடுக்கிறதையும் பார்க்கிறோம். இவ்விதமாய் வளர்க்கப்படும் பிள்ளை தாய்க்கும் கீழ்ப்படியாது தகப்பனுக்கும் கீழ்ப்படியாது இடையில் பிசாசின் பிள்ளையாக வளர்க்கப்படும். ஒரு வீட்டில் தகப்பனுக்கு கோபம் வந்தால் பிள்ளையை அடிதண்டமாய் அடித்து வதை செய்வது வழக்கம்.* ஆனால் நியாயமான காரியத்துக்காக் தாய் பிள்ளைகளை கண்டித்து அடிக்கும்போது தகப்பன் பிள்ளைகள் மேல் அதிக கரிசனையுள்ளவன் போல் மனைவியின் மேல் சீறிப்பாய்ந்து அவளை அடித்து ஏசுவான். அதினால் அந்தப் பிள்ளைகள் தாய் தகப்பனை நேசித்துமதிக்காமல் பரம துஷ்டர்களாகிப் போனார்கள். ஒருவர் தண்டிக்கும் போது மற்றவர் பரிந்து வந்து தடுப்பதினால் அந்தத் தண்டனை பிரயோஜனமற்று போவதுமன்றி குடும்பத்தில் சமாதானக் குறைவுண்டாகு மென்பது நிச்சயம். பெற்றோரிலொருவர் நியாயமாய்ச் செய்யும் தண்டனையில் மற்றவர் இணங்கிப் போக வேண்டும். அன்பினால் செய்யும் காரியத்தில் உற்சாகப்படுத்த வேண்டும். பலவீனத்தினால் தவறிச் செய்யும் காரியத்தை இனிமேல் அப்படிச் செய்யாமல் இப்படிச் செய்ய வேண்டுமென்று சரியாய் நடக்க உதவி செய்ய வேண்டும். இது புருஷர், மனைவிகளுக்குரிய கடமை

(தொடரும்)

---

"புருஷன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்ய வேண்டும். அப்படியே மனைவியும் தன் புருஷனுக்குச் செய்ய கடவள். —கொரி 7:3.

---




## கடவுள் அன்பே
## அந்த கடவுளின் அன்புதான் இயேசுகிறிஸ்து

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு மகிமை உண்டாவதாக. எனது ஊர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நான்கு நேரி. எனது பழைய பெயர் முருகன்.

கிறிஸ்தவ பெயர் மார்ட்டின். என்னுடைய வாழ்க்கையில் கூட சமாதானம், சந்தோஷம் இழந்து சில நியாயமான ஆசைகள் கூட நிராசைகளாய் போனபடியாலே கடவுள் நம்பிக்கை அற்று காணப்பட்டேன். என்னை கூட கர்த்தராகிய இயேசு கிறிஸ்து முன் குறித்தபடியினாலே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்னையும் நேசித்தபடியினாலே, தன்னுடைய பாசக்கரம் நீட்டி புதிய எருசலேம் சபையிலே, தேவனுடைய மெய்யான சபையிலே கொண்டு வந்து சேர்த்தமைக்காக என் தேவனை நன்றியோடு துதிக்கிறேன்.

கடந்த 1984-ம் ஆண்டு ஜூன் மாதம் நடைபெற்ற சென்னை (Madras) கன்வென் ஷனிலே கலந்து கொண்டு மனந்திரும்பி கர்த்தரோடு உடன்படிக்கை செய்து பாவ மன்னிப்புக்கென்று முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும்படியாகவும், இன்று கர்த்தருக்கு சாட்சியாக இதை எழுதும்படி கிருபை செய்த தேவனுடைய பேரன்புக் காக என் தேவனை துதிக்கிறேன்.

நான் ஒரு இந்து குடும்பத்திலே பிறந்தும், இந்து மார்க்கத்தின் மீது மிக பக்தி நிறைந்த பெற்றோர்களால் வளர்க்கப் பட்டிருந்தாலும்கூட, நான் என் பள்ளிப் பருவத்திலிருந்தே கடவுள் நம்பிக்கை அற்றவனாகவே காணப்பட்டேன். என் கல்லூரி நாட்களில்கூட விடுதி மாணவர் களோடு, நண்பர்களோடு கடவுள் இல்லை என்று வாதாடுவதுண்டு. தீச்சட்டியை தூக்கிக் கொண்டு சாமியாரே, உன்னால் மின்சாரத்தைத் தொட முடியுமா? சர்வ வல்லமை படைத்த கடவுளுக்கு பூட்டும், காவலும் ஏன்? என்ற திராவிட கழக கேள்விகளைக் கேட்பதுண்டு.

அவ்வப்போது பெற்றோர்களின் கட்டாயத்தின் பேரிலே அவர்களுடைய திருப்திக்காக நான் இந்து ஆலயங்களுக்கு செல்வதுண்டு. கடவுளை ஆராதிப்பதற்காக அல்ல. அந்த ஆலயங்களிலே காணப் படுகின்ற ஆசாரங்கள், உபசாரங்களைப் பார்ப்பதுண்டு. அங்கே நிலவுகின்ற ஒற்றுமை வேற்றுமைகள், உயர்வு தாழ்வு களைக் காண்பதுண்டு. அங்கே தெய்வத்தை வழிபட வந்து போகின்ற மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு களைப் பார்ப்பதுண்டு. இன்னும் பல்வேறு செயல்களை நான் காண்பதுண்டு. இறுதி யாக சிந்திப்பதுண்டு.

கடவுள் கட+உள். அதாவது மனித உள்ளங்களையெல்லாம் கடந்து நிற்கின்ற ஒரு சக்திக்கு இங்கு ஆராதனை நடப்பதாகத் தெரியவில்லையே! God is Love. அன்பே கடவுள் என்று எல்லா மதத்தவரும் எல்லா இனத்தவரும், எல்லா சமூகத்தவரும், எல்லா நாட்டினரும் எல்லா மொழியினரும் ஏற்றுக் கொண்டிருந்தாலும் கூட அந்த அன்பையோ அந்த அன்பின் அடிப்படைச் செயல்களையோ இங்கு காண முடிய வில்லையே என்று நான் வருத்தத்தோடு கூட திரும்புவதுண்டு.

இப்படியாக நான் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு ஊர் வந்த நேரத்திலே ஏற்கனவே புதிய எருசலேம் சபையில் சேர்ந்திருந்த எனது உடன் பிறந்த சகோ தரர் எபனேசர் சில சமயங்களில் கர்த்தரைப் பற்றி கொஞ்சம் எடுத்து சொல்லுவார். அப்பொழுதெல்லாம் எனக்கு மிக கோபம் வரும். கர்த்தரை நிந்தித்தேன். பரிசுத்த வான்களையும், தேவனின் ஊழியர்களையும் தூசித் தேன். "பரிசுத்த ஆவியை பரியாசம் பண்ணினேன். அந்நிய பாஷையை அசிங்க மாகப் பேசினேன். அவ்வப்போது எனது சகோதரரைப் பார்க்க வரும் நான்கு நேரியைச் சார்ந்த அருமைச் சகோதரர், இன்று என் இனிய நண்பர் பவுல் என் னிடமும் மிக அன்பாக அமைதியோடு இப்படிக் கூறுவார். சகோதரர் கோவி லுக்கு வாருங்களேன். ஆத்துமா என்று ஒன்று இருக்கிறதல்லவா என்பார். நான் அப்போது அவரை அலட்சியப்படுத்திய துண்டு. அசட்டை பண்ணியதுண்டு. யாரையா இவர்! சரியான பைத்தியக் காரராய் இருக்கிறாரே! ஆத்துமாவாவது மண்ணாங்கட்டியாவது. இவருக்கு வேறு வேலையில்லையா? சமுதாயத்தில் உருப்படி யாக வேறு ஏதாவது செய்யக் கூடாதா? என்று கிண்டலாக எண்ணுவேன்.

இப்படி எந்தக் கர்த்தராகிய இயேசு
கிறிஸ்துவை நித்தித்தேனோ, எந்த பரிசுத்தம்
வான்களையும், தேவரின்களையும் தூஷித்
தேனோ அவர்களோடுகூட எனக்கு ஐக்கியம்
ஏற்படும்படியாகவும், மனிதனுக்கு ஆத்துமா
என்று ஒன்று இருக்கிறது அது கண்டிப்பாக
காக்கப்படவேண்டும் என்று புரிந்து கொள்
ளும்படியாகவும் எனக்கு ஒரு சந்தர்ப்பம்
கொடுத்தார். தேவன் புதிய எருசலேம்
சபையில் காணப்படுகின்ற அன்பின் செயல்
களையும், சகோதர மனப்பாங்குகளையும்,
கர்த்தர் என்னுடைய வாழ்க்கையிலே நடப்
பித்திருக்கின்ற அதிசயங்களையும், அற்புதங்
களையும், தன்மைகளையும், ஏன்! கர்த்தரின்
பாதையை விட்டு விலகும் போது சிட்சை
களையும், கர்த்தரின் கற்பனைகளையும், பிர
மாணங்களையும் கைக்கொள்ளும் பொருட்டு
உபத்திரவங்களையும் நடப்பித்திருக்கின்ற
தைப் பார்க்கின்ற பொழுது.

இயேசு கிறிஸ்து உண்மையிலேயே
ஜீவிக்கிறார்! இயேசு கிறிஸ்து நேற்றும்
இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்!
அவரே மெய்யான தேவன். அவர் ஒருவரால்
மட்டுமே பரலோக இராஜ்ஜியத்தை அடைய
முடியும்! அவர் கஷ்டப்பட்டுப் பாரம் சுமக்
கிறவர்களுக்கு இளைப்பாறுதல் கொடுக்க
வல்லவராயிருக்கிறார். அவர் நம்முடைய
வாழ்க்கையிலே சமாதானத்தையும்
சந்தோஷத்தையும் கட்டளையிடுவார்.

கடவுள் அன்பே அந்த அன்புதான்
இயேசு கிறிஸ்து. அந்த அன்பான இயேசு
கிறிஸ்து வாசம் செய்கிற இடம் புதிய
எருசலேம் சபை என்பதை நான் உணர
முடிந்தது. ஆம். கர்த்தர் நல்லவர் என்பதை
ருசித்துப் பார்க்க முடிந்தது.

என்னுடைய சுமார் இரண்டு ஆண்டு
கிறிஸ்தவ ஜீவியத்திலே ஒன்றை நான்
நன்றாக புரிந்து கொள்ள முடிந்தது யாரொரு
வர் அவர் யாராக இருந்தாலும் சரி. பணக்
காரராக இருக்கலாம், ஏழையாக இருக்கலாம்;
படித்தவராக இருக்கலாம்; படிக்காதவராக
இருக்கலாம்; பேதையாக இருக்கலாம்,
கோழையாக இருக்கலாம், யாராக இருந்
தாலும் சரி, யாரொருவர் தன் சொல்லொன்று
இருக்க செயலொன்று வேறில்லாமல் தன்
சொல்லிலும், செயலிலும், எண்ணத்திலும்,
எழுத்திலும், பேச்சிலும், மூச்சிலும்; கர்த்த
ருக்குப் பிரியமாக, கர்த்தருக்கு விருப்பமான
செயல்களை மட்டும் செய்கிறாரோ அவர்
இந்த சமுதாயத்திலே ஒரு நல்ல நிலையை, ஒரு
மேன்மையான நிலையை. பலர் பாராட்டத்
தக்க நிலையை இன்னும் சிலர் கண்டு
ஆச்சரியப்படத்தக்க விதத்திலே, உயர்
நிலையை அடைகிறார்கள். அடைந்திருக்கிறார்
கள், அடைவார்கள் என்பதை ஆணித்தர
மாக கூறிக்கொள்கிறேன்.

ஏதோ பக்கத்து வீட்டுக்காரர் கொடுத்
தார் அல்லது ஏதோ ஒரு நண்பர் இந்த
பத்திரிக்கையை படித்துப் பார்க்கும்படிக்
கொடுத்தார். மறுக்க முடியவில்லை என்ற
எண்ணத்தோடும், இயேசு கிறிஸ்து
உண்மையிலேயே ஜீவிக்கிறாரா? இயேசு
கிறிஸ்து உண்மை தெய்வம்தானா? அல்லது
சாதாரண மனிதரா? அவர் ஒருவரால்மட்டும்
தான் பரலோக ராஜ்யத்தை அடைய
முடியுமா? பல இந்து தெய்வங்கள் கூடத்
தான் அதிசயங்கள், அற்புதங்கள் செய்வ
தாக கேள்விப்படுகிறோமே அப்படியிருக்க நாம்
ஏன் இயேசு கிறிஸ்துவைத்தான் தெய்வமாக
ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்த உலகத்
திலே, இந்த நாட்டினிலே பலதரப்பட்ட
மக்கள் வாழ்கிறார்கள். தங்களுக்குப் பிடித்த
மான வேறுபட்ட உடைகளை அணிகிறார்
கள். தங்களுக்குப் பிடித்தமான வேறுபட்ட
உணவுகளை உண்ணுகிறார்கள். வேறுபட்ட
மொழிகளைப் பேசுகிறார்கள், வேறுபட்ட
தெய்வங்களை வழிபடுகிறார்கள். அப்படி
யிருக்க நாமும் நமக்குப் பிடித்த ஏதாவது
ஒரு தெய்வத்தை வழிபட்டு கடந்து
செல்வதுதானே. ஏன் இயேசு கிறிஸ்துவை
தெய்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்?
என்ற குழப்பத்தோடும், சந்தேகத்தோடும்
இந்த பத்திரிக்கையை படித்துக் கொண்டி
ருக்கின்ற அருமையான சகோதர சகோதரி
களே இயேசு கிறிஸ்து ஒருவராலன்றி
வேறொருவராலும் இரட்சிப்பில்லை. இது
உங்கள் சந்தேகத்திற்கும், குழப்பத்
திற்கும் என்னுடைய இந்த சாட்சி ஒரளவா
வது தெளிவைக் கொடுத்திருக்கும் என
நம்புகிறேன். மேலும் தெளிவான விபரங்
களுக்கு சபை போதகர்களை அணுகவும்.

---

"நான்சாகாமல் பிழைத்திருந்துகர்த்தருடைய
செய்கைகளை விவரிப்பேன்".சங் 118 : 71.

---

சகோ. P. மார்டின். B. Sc., முதுகுளத்தூர்.

**பாலர் பகுதி**

# ஏறின பின் ஏணியை உதைத்த சிறுவன்.

அன்றைய இரவு வேளையில் தூக்கம் வராதிருந்த மேரி அப்பாவிடம், அப்பா எனக்குத் தூக்கம் வரவில்லை, ஒரு கதைச் சொல்லுங்கள் என்றாள் அப்பொழுது மேரிக்கு அவளது அப்பா ஒரு கதை சொன்னார்கள்.

ஒரு ஊரில் ஒரு பையன் இருந்தான். அவன் பெயர் சேகர். அவர்களது வீட்டில் உள்ள மாடிக்குப் போக வேண்டும் என வாஞ்சையுடன் இருந்தான். ஆனால் மாடியில் ஏறுவதற்கு ஏணி இல்லாதிருந்தது. அவனது பெற்றோர்கள் ஏணியை வேறு ஒரு இடத்தில் கீழே இறக்கி வைத்திருந்தனர். அவனது பெற்றோர் வீட்டில் இல்லாத நேரத்தில் அவன் அந்த ஏணியை எடுத்து வந்து நிறுத்தி வைத்து ஏணி வழியாக ஏறி மாடிக்குப் போனான். மாடியில் இருந்து வெளி உலகை பார்த்த மாத்திரத்தில் கோபமாக இனி இந்த ஏணி எதற்கு என எண்ணி ஏணியை உதைத்துத் தள்ளி விட்டான். அப்பொழுது மேரி ஐயோ, அப்பா அந்தப் பையன் எப்படி கீழே இறங்குவான் எனக் கேட்டாள். அதற்கு அப்பா அவனது புத்தியீனத்தினால் அப்படிச் செய்தான். மேலே மாடிக்குப் போனவனுக்கு கீழே இறங்க ஏணி தேவை என்பதை மறந்து உதைத்து கீழே தள்ளிய படியால், அவன் மேலே இருந்து தண்ணீர் இன்றி, ஆகாரமின்றி மரிக்க வேண்டியது தான். பிறர் வந்து (பெற்றோர்கள் வந்து) உதவி செய்தால்தான் பிழைப்பான் என்றார்கள்.

இப்படியாக இந்நாட்களில் அநேகர் தங்கள் வாழ்க்கையில் முன்னேறிச் செல்வதற்கு, பாவமன்னிப்பிற்கென்று, கிறிஸ்து ஏசுவை தேடி அவரண்டை, வருகின்றனர். பாவமன்னிப்பையும் சகலவித நன்மைகளையும் பெற்று, வாழ்க்கையில் முன்னேறிச் சென்ற பின்னர், ஏணியாக உபயோகித்த கிறிஸ்துவை அந்த மதியீனன் செய்தது போல மிதித்துத் தள்ளி விடுகின்றனர். அந்த மதியீனர்களுக்குத் தெரியாது கிறிஸ்து என்றும், மாறாதவர் எனவும், கிறிஸ்து எப்பொழுதும் தேவை என்பதனையும் மறந்து கண் சொருகிப் போன குருடர்களாக காணப்படுகின்றனர். இப்படியாகப் பட்டவர்கள் அந்தப் பையனைப் போன்றே, மேலே இருந்து தண்ணீர் இன்றி ஆகாரமின்றி மரிக்க வேண்டியதுதான் என்றார்கள்.

அதற்கு மேரி, அப்பா! நான் அந்த சேகரைப் போல் இருக்கமாட்டேன் எனக் கூறி தூங்கி விட்டாள்.

சிறு பிள்ளைகளே, நாமும் அந்த மதி கெட்ட பையனைப் போல் இல்லாது நன்றி யுள்ளவர்களாக நடந்து கொள்வோம்.

"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்..." லூக் 6:38

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு, புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. |
|---|---|---|
| 1. | 13×19 Printing Machine | 19000 |
| 2. | 32" Paper cutting Machine | 11000 |
| 3. | English Type | 10000 |
| 4. | Tamil Type & Cabinets | 11900 |

+ Tax 10%

without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 34 ★ OCTOBER 1986



"புதிய எருசலேம் சபை"

...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள்.

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துதல் கூறுகிறேன். இது கடைசிக் காலமாயிருக்கிறது. தேவனுடைய சத்தியங்கள் எல்லாம் வெளிப்பட்டு தேவனுடைய வாக்குத்தத்தங்கள் எல்லாம் நிறைவேறும் காலமாயிருக்கிறது. கடைசிக்கால செய்திகள் வெளியாகும் போது அது சிலருக்கு பைத்தியமாகத் தோன்றும். நோவாவின் காலத்தில் நடந்தது போலவும், லோத்தின் காலத்தில் நடந்தது போலவும் நடக்கும். நோவா பெரிய பேழையைக் கட்டி ஆயத்தப்படுத்தின போதிலும் இது என்ன கட்டுகிறீர், ஏன் கட்டுகிறீர் என்று மக்கள் ஒருவரும் கேட்டு விசாரிக்கவில்லை. நோவா பேழையை கட்டி முடிக்கும்வரை நீதியைப் பிரசங்கித்தார். ஆனால் ஜனங்களோ புசித்தும், குடித்தும், பெண் கொண்டும், பெண் கொடுத்தும், ஆடிப்பாடிக்கொண்டிருந்தார்கள். ஜலப்பிரளயம் வந்து தங்களை வாரிக் கொள்ளுமட்டும் அதை உணராதிருந்தார்கள். ஒரு சிலர் மாத்திரம் பேழைக்குள் பிரவேசித்து ஜலத்தினின்று காக்கப்பட்டார்கள். அப்படிப் போல இந்தக் கடைசிக் காலத்திலும் நடக்கும். தேவனிடத்தில் கேட்டுப் பெற்றுக் கொள்கிறவன் எவனோ அவன் திருச்சபையினிடமாய் வந்து சேருவான். வரப்போகின்ற ஆபத்தினின்று மீட்கப் படுவான். அப்படியே இந்த கடைசிக் காலத்தில் திருச்சபையை கட்ட ஒரு மனிதனுக்குத்தான் கர்த்தர் தன்னுடைய கட்டளையை கொடுத்துள்ளார். அவரோடுகூட சேர்ந்து மற்றவர்களும் இந்த பேழையை கட்டலாம். பேழைக்குட்படுகிற எல்லாரும் மீட்கப்படுவார்கள். தேவன் எல்லாரிடத்திலும் திருச்சபை கட்டும் மாதிரியைக் கொடுக்கவில்லை. "நோவா காலத்தில் எப்படி நடந்ததோ, அப்படியே மனுஷகுமாரன் வரும் காலத்திலும் நடக்கும்" (மத் 24 : 37) என்று கர்த்தர் சொல்லுகிறார்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகை

32. சபை எடுத்துக் கொள்ளப்படுதல், முதலாம் உயிர்த்தெழுதல் (I தெச 4 : 17; I கொரி 15 : 51, 52).

"ஏனெனில், கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கி வருவார். அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர் கொண்டு போக மேகங்கள் மேல் அவர்களோடே கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு, இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம்" (I தெச 4 : 16, 17).

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வருவார். முதலாவது மரித்த பரிசுத்தவான்கள் உயிரோடு எழும்புவார்கள். பின்பு உயிரோடிருக்கிற பரிசுத்தவான்கள் மறுரூபமாகி எழும்பிச் செல்வார்கள். கர்த்தர் அவர்களை எடுத்துக் கொள்வார். இதைக் குறித்து "இதோ ஒரு இரகசியத்தை உங்களுக்கு அறிவிக்கிறேன். நாமெல்லாரும் நித்திரையடைவதில்லை. ஆகிலும் கடைசி எக்காளம் தொனிக்கும் போது, ஒரு நிமிஷத்திலே, ஒரு இமைப் பொழுதிலே, நாமெல்லாரும் மறுரூபமாக்கப்படுவோம். எக்காளம் தொனிக்கும். அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எழுந்திருப்பார்கள். நாமும் மறுரூபமாக்கப்படுவோம்" (I கொரி 15 : 51, 52).

எக்காளம் தொனிக்கும். மரித்தோர் அழிவில்லாதவர்களாய் முதலாவது எழுந்திருப்பார்கள் என்று எழுதப்பட்டிருக்கிறது. இஸ்ரவேலின் நம்பிக்கை உயிர்த்தெழுதலேயாகும். அப்படி மரித்தோர் உயிர்த்தெழும்புவார்கள் என்பதற்கு இயேசு கிறிஸ்து முதற்பலனாய் இருக்கிறார். மரித்தோரிலிருந்து முதலாவது மகிமையான உயிர்த்தெழுதலையடைந்தவர் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவேயாகும் (அப் 26 : 23, Iகொரி 5 : 20).

கிறிஸ்துவோ மரித்தோரிலிருந்து எழுந்து நித்திரையடைந்தவர்களில் முதற்பலனானார் என்று எழுதப்பட்டிருக்கிறபடியானால், உயிர்த்தெழுதல் நடைபெறப்போகிறதென்பதற்கு இது நிச்சயமான ஆதாரமாயிருக்கிறது. கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் அவர் வருகையில் உயிர்த்தெழுப்பப்படுவார்கள். இயேசு கிறிஸ்துவினுடைய கல்வாரி சிலுவையின் மரணம் இயேசு கிறிஸ்துவுக்கு முன் உள்ள நீதிமான்களுக்காகவும், அவருடைய சிலுவை மரணத்திற்குப் பின் உள்ள தேவனுடைய பிள்ளைகளுக்காகவும் அடைந்த மரணமாகும். அந்தந்தக் காலத்தில் தேவன் வெளிப்படுத்திய சத்தியங்களை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு, அதைக் கைக் கொண்டவர்கள் அந்தந்த காலத்து நீதிமான்களாக பரிசுத்தவான்களாக முடி சூட்டப்படுள்ளார்கள். கல்வாரி சிலுவைக்குப் பின் அவருடைய பலியை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு இரட்சிப்பைப் பெற்றுக் கொண்டவர்களுக்காகவும் மரித்த மரணமாகும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கல்வாரி சிலுவை மரணத்தை விசுவாசித்து, ஏற்றுக் கொள்ளுகிற நமக்கு அவருடைய சிலுவை மரணம் எவ்விதமாக பலிதமாகிறதோ அவ்வாறே சிலுவைக்கு முன்னுள்ளோ பரிசுத்தவான்களும் தங்கள் காலத்தில் வெளிப்பட்ட சத்தியத்தை ஏற்றுக் கொண்டு அதன்படி நடந்து தேவனை ஆராதித்து அவரை மகிமைபடுத்தியவர்கள் கல்வாரி பலியின் மேல் நம்பிக்கை வைத்தவர்களாகும். அவர்களுக்கும் கல்வாரிப் பலியின் பலனில் பங்குண்டு.

"தேவன் பொறுமையாயிருந்த முற்காலத்தில் நடந்த பாவங்களைத் தாம் பொறுத்துக் கொண்டதைக் குறித்துக் தம்முடைய நீதியைக் காண்பிக்கும் பொருட்டாகவும், தாம் நீதியுள்ளவரும் இயேசுவினிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனை நீதி

மானுக்குகிறவருமாய் விளங்கும்படி, இக் காலத்திலே தமது நீதியைக் காண்பிக்கும் பொருட்டாகவும், கிறிஸ்து இயேசுவினுடைய இரத்தத்தைப் பற்றும் விசுவாசத்தினாலே பலிக்கும் கிருபாதார பலியாக அவரையே ஏற்படுத்தினார்" (ரோம 3 : 25, 26).

மனச்சாட்சியின் காலமாயிருக்கட்டும், நியாயப்பிரமாண காலமாயிருக்கட்டும், கிருபையின் காலமாயிருக்கட்டும், அந்தந்த காலத்தில் உண்டான தெய்வீக வெளிப்படுத்தலை, சத்தியத்தை ஏற்றுக் கொண்டு கைக் கொண்டவர்கள் அந்தந்த காலத்துப் பரிசுத்தவான்களாகும். இந்தக் கடைசிக் காலத்தில், கடைசிக் காலத்தில் வெளிப்படும் பூரணமான சத்தியத்தை ஏற்றுக்கொண்டு கீழ்ப்படிந்து அதைக் கைக் கொள்ளுகிறவர்கள் இந்தக் காலத்துப் பரிசுத்தவான்களாகும்.

நாம் கடைசிக் காலத்தின், கடைசி நாட்களின் கடைசி மணி நேரத்தில் இருக்கிறோம். அப். பவுல் கர்த்தருடைய வருகையைப் பற்றி குறிப்பிடும்போது, பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர்கொண்டு போக மேகங்கள் மேல் அவர்களோடு கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு, இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம் என்று சொல்கிறார். உயிரோடிருக்கிற நாமும் மறுரூபம் அடைந்து எடுத்துக் கொள்ளப்படுவோம் என்று சொல்லியிருக்கிறார், (1 தெச 4 : 13, 17; 1 கொரி 15 : 51, 52, பிலி 3 : 20, 21). அப். பவுல் இப்பொழுது சரீரத்தில் உயிரோடு இல்லை. உயிரோடிருக்கிற நாமும் மறுரூபம் ஆக்கப்படுவோம், என்று சொல்லியிருக்கிறார். அப். பவுலோ உயிர்த்தெழுகிற பரிசுத்தவான்களில்தான் காணப்பட முடியும். நாம் எல்லாரும் நித்திரையடைவதில்லை. ஆகிலும் கடைசி எக்காளம் தொனிக்கும் போது ஒரு நிமிஷத்திலே, ஒரு இமைப் பொழுதிலே நாமெல்லாரும் மறுரூபமாக்கப்படுவோம் என்று உயிரோடிருக்கிற பரிசுத்தவான்கள் தான் சொல்ல முடியும். கடைசிக் கால பரிசுத்தவான்கள் மரணத்தை காணாமல் மறுரூபமாக்கப்படப் போகிறபடியினால் இவர்கள் உன்னதமான பரிசுத்தவான்களாகும். புடமிடப்பட்டு, தூய்மையும், வெண்மையும் உடையவர்களாய் காணப்படுவார்கள்.

தானியேலின் காலத்தில் தேவன் தானியேலுக்கு தானியேலின் காலமுதல் நடைபெறப் போகிற சரித்திர சம்பவங்களை காண்பித்தார். மேசியா சங்கரிக்கப்படப் போவதையும் அதற்குப் பின்பு நடைபெறப் போகிற சம்பவங்களையும், கடைசிக்காலத்தில் நடைபெறும் சம்பவங்களையும், உயிர்த்தெழுதல்களையும் காண்பித்தார். கடைசிக் காலத்தின் இரகசியத்தை தானியேல் அறிந்து கொள்ள விரும்பிய போது தானியேலே போகலாம், இந்த வார்த்தை முடிவு காலமட்டும் புதை பொருளாக வைக்கப்பட்டும் முத்திரிக்கப்பட்டும் இருக்கும். அநேகர் சுத்தமும், வெண்மையுமாக்கப்பட்டு, புடமிடப்பட்டவர்களாய் விளங்குவார்கள். துன்மார்க்கரில் ஒருவரும் உணரான். ஞானவான்களோ உணர்ந்து கொள்வார்கள். நீயோ வென்றால் முடிவு வருமட்டும் போயிரு. நீ இளைப்பாறிக் கொண்டிருந்து நாட்களின் முடிவிலே உன் சுதந்தர வீதத்துக்கு எழுந்திருப்பாய் என்று சொல்லப்பட்டிருக்கிறது (தானி 12 : 5, 10, 13).

தானியேலைக் குறித்து நாம் வேதத்தில் இவ்விதமாய் வாசிக்கிறோம். தேவன் அவருக்கு அநேக இரகசியங்களை வெளிப்படுத்திய போதும் கடைசிக் கால செய்தியை மறைத்து வைத்தார். தானியேலுக்கு வெளிப்படாத தேவ இரகசியங்கள் உண்டு. அவைகளை நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய அப்போஸ்தலர்களுக்கு வெளிப்படுத்தினார். ஜனங்களோடு உவமைகளாய் பேசினார். அப்பொழுது சீஷர்கள் அவரிடத்தில் வந்து, ஏன் அவர்களோடு உவமைகளாய் பேசுகிறீர் என்று கேட்டார்கள். அவர்களுக்கு அவர் பிரதியுத்திரமாக பரலோக ராஜ்யத்தின் இரகசியங்களை அறியும்படி உங்களுக்கு அருளப்பட்டது, அவர்களுக்கோ அருளப்படவில்லை. உங்கள் கண் காண்கிறதினாலும், உங்கள் காதுகள் கேட்கிறதினாலும் அவைகள் பாக்கிய முள்ளவைகள். அநேக தீர்க்கதரிசிகளும், நீதி

மான்களும் நீங்கள் காண்கிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்கிறவைகளை கேட்கவும் விரும்பியும் காணாமலும் கேளாமலும் போனார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார் (மத் 13: 10, 11, 16, 17). ஆனால் கிறிஸ்து சரீரத்தில் இருந்தபொழுது எல்லாவற்றையும் அப்போஸ்தலர்களுக்கு சொல்லி விடவில்லை. தமக்குப் பின் என் நாமத்தினாலே பிதா அனுப்பப் போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனாகிய சத்திய ஆவியாகிய அவர் வரும்பொழுது உங்களுக்கு எல்லாவற்றையும் போதிப்பார் என்றார்.

இன்னும் அநேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதாய் இருக்கிறது. அவைகளை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள். சத்திய ஆவியாகிய அவர் வரும்போது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார். அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல் தாம் கேள்விப்பட்டவைகள் யாவையும் சொல்லி வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார் என்றார் (யோவா 14: 26; 16: 12, 13).

ஆதி அப்போஸ்தலர்களுக்கு மறைக்கப்பட்ட இரகசியங்களுண்டு. அவைகள் அப்போஸ்தலனாகிய பவுலுக்கு வெளிப்படுத்தப்பட்டது. இந்த இரகசியத்தை அவர் எனக்கு வெளிப்படுத்தி அறிவித்தார். முற்காலங்களில் மனுபுத்திரருக்கு அறிவிக்கப்படவில்லை என்று அப். பவுல் சொல்லுகிறார் (எபே 3:3-6). அப். பரிசுத்த பவுலுக்கும் வெளிப்படாத இரகசியங்கள் உண்டாயிருந்தது. அதை தேவன் அப். யோவானுக்கு வெளிப்படுத்தினார். அப். யோவான் வெளிப்படுத்தின விசேஷத்தில் அவைகளை எழுதியுள்ளார். அப். யோவான் தன்னுடைய புஸ்தகத்தை எழுதுகிறதற்கு முன்பு அப்போஸ்தலர்கள் எல்லாரும் மரித்து விட்டார்கள். வெளிப்படுத்தின விசேஷத்தை அவர்கள் பார்க்கவில்லை.

அப்படியே இந்தக் கடைசி காலத்திற்குரிய செய்தியை தேவன் இக்கடைசி நாட்களில் வெளிப்படுத்தியுள்ளார். தானியேல் தீர்க்கதரிசிக்கு மறைக்கப்பட்ட முடிவுகால செய்தியாகும். இக்கடைசி காலச்செய்தி: பாவ அறிக்கை, பாவ மன்னிப்பின் உபதேசம், சுத்திகரண உபதேசமாகும். இது கடைசிக் காலத்தில் உடைக்கப்பட்டிருக்கிற நாலாவது முத்திரையாகும். இத நாம் இப்பொழுது தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம், இனி எவ்விதமாய் இருப்போம் என்று இன்னும் வெளிப்படவில்லை. ஆகிலும் அவர் வெளிப்படும்பொழுது அவர் இருக்கிற வண்ணமாகவே நாம் அவரைத் தரிசிப்பதினால் அவருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிந்திருக்கிறோம். அவர் மேல் இப்படிப்பட்ட நம்பிக்கை வைத்திருக்கிறவனெவனும் அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல தன்னையும் சுத்திகரித்துக் கொள்கிறான் (I யோவா 3: 2,3).

கர்த்தருடைய வருகைக்காய் ஒரு உத்தமமான ஜனத்தை ஆயத்தமாக்கும்படி கர்த்தர் தம்முடைய தூதனை அனுப்பி இந்தக் கிரியை செய்கிறார் (மல் 3:1-4). இந்தச் சுத்திகரணம் ஊழியர்களுக்குத் தனியாகவும், விசுவாசிகளுக்குத் தனியாகவும் நடைபெறும். இதற்கு முன்னால் மனுபுத்திரருக்கு இது சரியாய் வெளிப்படவில்லை. இதை தேவன் நமக்கு வெளிப்படுத்திக் காண்பித்தார். இந்த சுத்திகரண உபதேசத்தின் மூலமாகவே பூர்வ நாட்களிலும், முந்தின வருஷங்களிலும் இருந்தது போல யூதாவின் காணிக்கையும், எருசலேமின் காணிக்கையும் கர்த்தருக்குப் பிரியமாய் இருக்கும் (மல் 3:4).

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வருவார். கிறிஸ்துவுக்குள் மரித்த பரிசுத்தவான்கள் முதலாவது உயிரோடு எழும்புவார்கள். பின்பு உயிரோடிருக்கிற நாமும் மேகங்கள் மேல் அவர்களோடு கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்று கடைசிக்காலத்தில் உயிரோடிருக்கிற அப்போஸ்தலனே கூறமுடியும் (1 தெச 4:17).

ஆம்! நம் கர்த்தர் வருவார். ஆபேல் முதல் பூரணராக்கப்பட்ட பரிசுத்தவான்கள் உயிரோடு எழும்புவார்கள். உயிரோடிருக்கிற நாம் இக்காலத்திற்குரிய செய்தியை ஏற்றுக் கொண்டு பூரணராக்கப்பட்டவர்களாக இருப்போமென்றால் உயிரோடே மரணத்தைக் காணாமல் எடுத்துக் கொள்ளப்படுவோம்.

சிலர் இயேசுகிறிஸ்து வருவார். கிறிஸ்துவுக்குப்பின் மரித்த பரிசுத்தவான்கள் மாத்திரமே உயிர்த்தெழுவார்கள், என்று நம்புகிறார்கள். ஆனால் வேதத்தை நாம் கவனித்துப் பார்த்தோமென்றால் அவர்கள் உயிர்த்துக் கிறிஸ்துவுடனே கூட 1000 வருஷம் அரசாண்டார்கள். மரணமடைந்த மற்றவர்கள் அந்த 1000 வருஷம் (ஆயிரம்) முடியுமளவும் உயிரடையவில்லை. இதுவே முதலாம் உயிர்த்தெழுதல் என்று பார்க்கிறோம்.

இந்த 1000 (ஆயிரம்) வருஷ அரசாட்சியின் ஆளுகையில் எல்லா பரிசுத்தவான்களுக்கும் பங்குண்டாயிருக்குமென்றும் அவர்களுக்காக கர்த்தர் ஒரு நகரத்தை ஆயத்தம் பண்ணி இருக்கிறார் என்றும் வேதத்தில் வாசிக்கிறோம் (வெளி 20:4,5; எபி *11:13-16*). பரிசுத்தவான்கள் மகிமையோடே களிகூர்ந்து தங்கள் படுக்கைகளின் மேல் கெம்பீரிப்பார்கள். ஜாதிகளிடத்தில் பழிவாங்கவும், ஜனங்களைத் தண்டிக்கவும் அவருடைய இராஜாக்களை சங்கிலிகளாலும் அவருடைய மேன் மக்களை இருப்பு விலங்குகளாலும் கட்டவும், எழுதப்பட்ட நியாயத்தீர்ப்பை அவர்கள் பேரில் செலுத்தவும், அவர்கள் வாயில் கர்த்தரை உயர்த்தும் துதியும், அவர்கள் கையில் இருபுறமும் கருக்குள்ள பட்டயமும் இருக்கும். இந்தக் கனம் அவருடைய பரிசுத்தவான்கள் யாவருக்கும் உண்டாகும். அல்லேலூயா! (சங் 149:5-9).

நோவா தன் காலத்தில் நீதிமானாயிருந்தார். அப்படியே அந்தந்த காலத்தில் வெளிப்படும் சத்தியத்தை ஏற்றுக் கொண்டு கீழ்ப்படிந்தவர்கள், அந்தந்த காலத்துப் பரிசுத்தவான்களாகும். ஒரேபிலே இஸ்ரவேலர் எல்லாருக்காகவும் என்தாசனாகிய மோசேக்கு நான் கற்பித்த நியாயப்பிரமாணமாகிய கட்டளைகளும், நியாயங்களையும் நினையுங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார் (மல் 4:4). இஸ்ரவேலர் எல்லாருக்காகவும் மோசே என்னும் ஒரே மனிதன் மூலமாக தேவன் பேசினார். அப்படிப்போல இந்தக் கடைசி காலத்திலே தேவன் எல்லார் மூலமாகவும் பேசப் போகிறதில்லை. கிறிஸ்தவர்கள் எல்லாருக்காகவும், இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற எல்லாருக்காகவும் ஒரே மனிதன் மூலமாகவே பேசுகிறார். தேவன் சத்தியங்களை மறைத்து வைத்து அந்தந்த காலத்தில் தாம் தெரிந்து கொண்ட மனிதர்களுக்கு வெளிப்படுத்துகிறார். அப்படியே இந்தக் கடைசிக் காலத்தில் "புதிய எருசலேம் சபை"யின் மூலமாக பேசுகிறார். இதை ஏற்றுக் கொள்ளுகிறவர்கள் இந்தக் கடைசிக்காலத்தின் பரிசுத்தவான்களாக முடிசூட்டப்படுவார்கள். கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள். புதிய எருசலேம் சபையின் மூலமாய் வெளிப்படும் சத்தியங்களை ஏற்றுக் கொள்ளுகிறவர்கள் வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள். ஆபிரகாமின் குமாரனுக்கு பெண் தேட ஆபிரகாமின் வேலைக்காரன் போய் ஒரு பெண்ணை ஆயத்தப்படுத்தி அழைத்து வந்ததுபோல் தேவனுடைய குமாரனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு பரிசுத்த ஆவியானவர் ஒரு மணவாட்டியை பூமியில் ஆயத்தப்படுத்திக் கொண்டிருக்கிறார். தேவ ஆவியானவருக்கு செவிகொடுக்கிறவர்கள் புதிய எருசலேமாய், மணவாட்டியாய் அலங்கரிக்கப்பட்டு தேவ மகிமை அடைவார்கள். கர்த்தருடைய வருகைக்கு தேவனுடைய பிள்ளைகளைக் கூட்டிச் சேர்த்து ஆயத்தப்படுத்தும்படி புதிய எருசலேம் சபை பூமியில் எழுப்பப்பட்டிருக்கிறது என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆமென்!

"கர்த்தர் வருகிறார்" - I கொரி 16:22

**சுவிஷேசம்**

# இறைவனை அறியுங்கள்

சகல வித நாட்டு மிருகங்களையும், காட்டு மிருகங்களையும், நீர் வாழ் ஜந்துக்களையும், ஊரும் பிராணிகளையும், ஆகாயத்து பறவைகளையும் கவனித்து பார்த்தால் அவைகள் செய்யும் காரியங்கள் இரண்டு மட்டுமே.

1. அவைகள் இன விருத்தி செய்யும்.
2. இரை தேடும்.

அவைகள் செய்யும் காரியங்களெல்லாம் இவைகளுக்கடுத்ததாகவே காணப்படும். இளங்கன்றானது பால் குடித்த உடன் துள்ளி விளையாடும். அதன் நோக்கம் குடித்தது ஜீரணிக்கும்படிக்கே. மேலும் பசு தன் கன்றானது வளரும் வரைக்கும், அதற்கு பாது காவல் கொடுக்கிறது பின்பு அதனை மறந்து விடுகிறது.

இவைகளை எல்லாம் கவனித்து நோக்குகையில் அவைகள் எல்லாம் இயக்கிவிடப்பட்ட இயந்திரங்களைப் போல் செயல்படுகின்றன. இன்றைக்கு ஒரு பிராணியின் பழக்க வழக்கம் எப்படி இருக்கிறதோ அப்படியே முன்பும் இருந்தது. இனி மேலும் இருக்கும், அதில் எந்த மாற்றமுமே கிடையாது. இதை யாவரும் ஒத்துக் கொள்ள முடியும். இதிலிருந்து ஒன்றை அறியலாம்; அவைகள் சிந்தித்து செயல்படும்படியாக உருவாக்கப்பட்டவைகள் அல்லவென்று. மனிதனோ முற்றிலும் மாறுபட்டவன். அனுதினமும் புதிது புதிதாக செயல்படுகிறான். நேற்று ஒருவிதமாய் வீடு கட்டினான். இன்றைக்கு ஒருவிதமாய்க் கட்டுகிறான். நாளைய தினம் இன்னொரு விதமாய்க் கட்டுவான். இதன் மூலம் மனிதன் சிந்தித்து நன்மை தீமை இன்னதென்று பகுத்தறிந்து நடக்கும் ஆற்றல் பெற்றவன் என நாம் அறியலாம். ஆதியிலே இப்படிப்பட்ட மனிதனுக்கு முன்பாக, அப்படிப்பட்ட ஜீவன்களை இறைவன் கடந்து போகும்படி செய்தார். ஆனால் அவனுக்கு ஏற்ற துணையாக அவைகளில் ஒன்றும் அமையவில்லை. ஆகையால் இறைவன் அவனைப் போல் சிந்தித்து செயல்படக் கூடிய தன்மையிலே ஏவாளை, அவனுடைய விலா எலும்பினின்று உருவாக்கி அவனிடம் ஒப்படைத்தார். அவள் அவனுக்கு ஏற்ற துணையாக காணப்பட்டாள். பாருங்கள் நாம் ஒரு நண்பனை நம்மோட துணி எடுக்க கடைக்கு அழைத்துச் செல்கிறோம். அவனும், நாமும் சேர்ந்து அதை எடுக்கலாம், இதை எடுக்கலாம் என இருவரும் ஒருமனப்பட்டு நல்ல துணி ஒன்றை வாங்குகிறோம். இந்த நண்பன் நம்மைப் போல் வளர்ச்சி அடைந்தவனும், நமக்கிணையான சுபாவமும் உடையவனாய் இருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறோம்.

ஒரு நண்பன் உண்டு. அவனை வா என்றால் வருகிறான். பஸ் ஸ்டாப்பில் நில் என்றால் நிற்கிறான். பஸ் வந்துவிட்டது ஏறு என்றால் ஏறுகிறான். அதோ சீட் இருக்கிறது உட்கார் என்றால் உட்காருகிறான். பேசு என்றால் பேசுகிறான். எழுந்திரு என்றால் எழுந்திருக்கிறான். இறங்கு என்றால் இறங்குகிறான். அவனாக ஒன்றுமே சுயமாய் செய்யக் கூடாதவனாய் இருக்கிறான். இப்படிப்பட்ட நண்பனை நாம் அழைத்துச் சென்றால் அவன் நல்ல துணையாவானா? அவனை அழைத்துச் செல்வதும் ஒன்றுதான், ஒரு கல்லை தூக்கு கொண்டு செல்வதும் ஒன்றுதான்.

இறைவனும் இப்படிப்பட்ட நண்பனைப் போல் நம்மை உருவாக்க வில்லை. அப்படி உருவாக்கி இருப்பாரானால் மனிதன் பாவம் செய்ய முடியாத இயந்திரம் போல் இருந்திருப்பான். ஆனால் அவனோடே அவர் கலந்துறவாட முடியாது. ஆகையால் மனிதனை இறைவன் பாவம் செய்யாதவனாகவே படைத்திருக்கலாமே என்று அவருக்கு ஆலோசனை சொல்லும் அறிவீனத்தை விட்டு விடு. மனிதனும் இறைவனுக்கு ஏற்ற நண்பனாய் துணையாய் இருக்கும்படியாக தமது சாயலின்படியும், தமது ரூபத்தின்படியும், தமது குணாதிசயங்களை உடையவனாக சிருஷ்டித்தார். மனிதனே, எல்லா சிருஷ்டிகளைக் காட்டிலும் நீ விசேஷித்தவன் ஒரு சிறு பையன் ஒரு பெரிய யானையை ஆளுகை செய்ய முடியும். ஆனால் எந்த ஒரு பெரிய மிருகமும் ஒரு குழந்தையைக் கூட ஆளுகை செய்யும் ஆற்றலற்றவை.

இறைவனுடைய சாயலாக சிருஷ்டிக்கப்பட்ட மனிதன் நன்மை எது அதாவது தன்னை சிருஷ்டித்தவர் விரும்புகிறது என்ன என்றும் தீமை எது அதாவது சிருஷ்டி கர்த்தா வெறுக்கிறது என்ன என்றும் நன்கு அறியும் அறிவை உடையவனாய் சுயமாய் சிந்தித்து செயல்படும் ஆற்றலுடையவனாய் இருந்தான். உதாரணமாக ஒரு வீட்டுமாடியில் நிற்கிற மனிதனுக்கு கீழே இறங்க ஏணிப்படி இருக்கிறது. அவனுக்குத் தெரியும். மாடியிலிருந்து கீழே குதித்தாலும் தரையை அடையலாம். ஆனால் அப்படிக் குதித்தால் எலும்பு உடையும் என்று தெரியும்

இப்போது இந்த மனிதன் விரும்பினால் படி வழியாக கீழே இறங்கலாம் அல்லது மாடியிலிருந்து கீழே குதிக்க விரும்பினால் அப்படியும் செய்யலாம்.

இந்த மனிதன் கீழே குதித்து காலை ஒடித்துக் கொண்டால், அவன் யாரைக் குறை சொல்ல முடியும். அப்படித்தானே ஆதிமனிதனும் தீமையானதை தெரிந்து கொண்டு, இறைவனுக்கு பிரியமில்லாததைச் செய்து, சாபத்தை அடைந்தான். மனிதனே, நீ இறைவனைக் குற்றப்படுத்த முடியுமா?

மனிதன் இப்படி மீறிப் பாவம் செய்வான் என்று கடவுளுக்குத்தான் தெரியுமே, பின்பு ஏன் சாத்தானைப் படைத்தார் என்பது அநேகருடைய கேள்வி. வானத்திற்கும் பூமிக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமுண்டு, நம்முடைய அறிவுக்கும் இறைவனுடைய அறிவுக்கும். அவர் அறிவை யாரால் உணர முடியும்.

ரோட்டிலே போகும் போது மின்சாரக் கருவிகள் பக்கம் ஒரு சிவப்பு போர்டு இருக்கும். அதில் 11KV, அபாயம் என்று எழுதி ஒரு மண்டை ஓடும், 'X' வடிவில் இரண்டு எலும்பும் இருக்கும். அதன் அர்த்தம் இதைத் தொடாதே, இதைத் தொட்டால் இப்படி ஆவாய் என்பதாம். இந்த எச்சரிப்பை மீறி ஒருவன் தொட்டு செத்துப் போனான். அவன் நண்பன் வந்து, வேதனையுள்ள கோபத்துடன் ஒரு கேள்வி கேட்டான்: இப்படிச் சாவான் என்றுதான் தெரியுமே, பின்னே ஏன் இதையெல்லாம் (மின்சாரக் கருவிகள்) செய்து வைத்தார்கள் அறிவில்லாதவர்கள். இந்தக் கேள்விக்கும், சாத்தானை ஏன் உருவாக்கினார் என்ற கேள்விக்கும் யாதொரு வித்தியாசமும் கிடையாது.

இறைவன் ஏன் சாத்தானை உருவாக்கினார்? என்று அறிய வேண்டுமானால், முதலாவது இறைவனை அறிய வேண்டும். அவரை அறிந்தால் அவருடைய காரியங்களை அறியலாம். தேவன் சாத்தானை உண்டாக்கவில்லை. தேவ தூதனையே உண்டாக்கினார். அவன் தன்னைக் கெடுத்து சாத்தானாகி விட்டான். தேவனை அறியும் அறிவடையும் வரையில் அவர் ஏன் இப்படிச் செய்தார் என்று விவரித்துச் சொன்னாலும் விளங்காது. தன்னை சிருஷ்டித்தவருடைய சாயலுக் கொப்பாக இருக்கிறவனே பூரண அறிவுடையவன் என்று வேதம் சொல்லுகிறது(கொலோ3:10). மனிதன் பாவம் செய்து தேவ சாயலை இழந்து தேவனை அறிகிற அறிவை இழந்து போய் விட்டான். ஆகையால் எதுவுமே விளங்கவில்லை. விளங்க ஒரு வழியுண்டு. இயேசுவானவர் சொல்கிறார் 'அவர் தவிர பிதாவை (பரம்பொருளை) ஒருவனும் அறியவில்லை. அவர் எவனுக்கு அவரை வெளிப்படுத்துகிறாரோ அவன் அறிவான் (மத் 11:27).

"உண்மையிலேயே பிதாவை அறிய முடியவில்லையே என வருத்தப்பட்டு பாரம் சுமக்கிறவர்களே, என்னிடத்தில் வாருங்கள், உங்கள் பாரம் நீங்கி இளைப்பாறுதல் அடைவீர்கள். பாரமாயிராத எளிதாகக் கைக் கொள்ளக் கூடிய என்னுடைய கற்பனைகளைக் கற்றுக் கைக் கொள்ளுங்கள். அப்பொழுது இறைவனை அறிந்து இளைப்பாறுதல் அடைவீர்கள்" என்று இயேசு அழைக்கிறார் (மத் 11:28–30).

உங்களையே நீங்கள் ஞானிகளென்று எண்ணி பல கேள்விகளினாலே மூளையை குழப்புவதைக் காட்டிலும், இறைவனை அறிய முற்படுங்கள். அதற்காய் இயேசுவண்டை வாருங்கள். அவரை அவருடைய ஊழியக்காரராகிய நாங்கள் அறிவிக்கிறோம்.

---

"அப்பொழுது நாம் அறிவடைந்து, கர்த்தரை அறியும்படி தொடர்ந்து போவோம்" (ஓசியா 6:3).

---



# விசுவாசியே, விபச்சாரம் செய்து விடாதே...

ஆதி மனிதனாகிய ஆதாம் தேவ கற்பனையை மீறினதினால் பாவியானான். பாவத்தின் பலனாக மரணம் அவனுக்கு சாபமாக கூறப்பட்டது. ஆதாம் தொடங்கி மனித சமுதாயத்தை மரணம் ஆண்டு கொண்டது. ஒரே மனிதனுடைய கீழ்ப்படியாமையால் அநேகர் பாவிகளானார்கள். அதே போல் பிந்தின ஆதாமாகிய இயேசு என்னும் ஒரே மனிதனுடைய கீழ்ப்படிதலினாலே அநேகர் நீதிமான்களாக்கப்படுகிறார்கள்.

ஆதாமின் சந்ததிகளாகிய நாம் எப்படி ஆதாம் பெற்ற சாபத்தினால் மரணத்தை சுதந்தரித்துக் கொண்டோமோ, அப்படியே இயேசு கிறிஸ்துவின் சந்ததிகளாகும் போது, சாவாமையை சுதந்தரித்துக் கொள்ள முடியும் என்ற ஒரு பெரும் இரகசியத்தை அப். பவுலுக்கு வெளிப்படுத்தினார். அதென்னவெனில் கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் அழிவில்லாதவர்களாய் எழுந்திருப்பார்கள். கிறிஸ்து வரும் பொழுது உயிரோடிருக்கிற நாமும் ஒரு இமைப் பொழுதிலே மறுரூபமாக்கப்படுவோம். இப்படியாக நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே மரணத்தின் மீது ஜெயம் நமக்கு உண்டாகி, நம்முடைய சரீரமும் அழிவினின்று மீட்கப்படுகிறது (1 கொரி 15:51-57, 1 தெச 4:15-17). இத்தகைய சரீர மீட்பாகிய புத்திர சுவிகாரம் வருகிறதற்குக் காத்திருந்து நமக்குள்ளே தவிக்கிறோம் என்று பரி. பவுல் கூறுகிறார் (ரோம 8:23). இப்படி இதை அடைந்து விட வேண்டுமே என்று நாம் தவிக்கக் கூடிய அளவுக்கு அது மேன்மை உள்ளது, என்பதை ஒவ்வொருவரும் அறிய வேண்டும்.

ஒரு வேளை பசியை தீர்க்க மேன்மையான சேஷ்ட புத்திர பாகத்தை விற்றுப் போட்ட ஏசாவை சீர் கெட்டவன் என்று வேதம் சொல்கிறது. ஒரு முறை இழந்தது இழந்ததே. மறுபடியும் அடைய விரும்பியும், கண்ணீர் விட்டு அழுதும் பிரயோஜனமில்லாமல் போய் விட்டது. அப்படியே விபச்சாரம் செய்து விட்டவனும் மேன்மையான சரீர மீட்பாகிய புத்திர சுவிகாரத்தை, இழந்து போவது நிச்சயம் என்பதை அறிய வேண்டும் (எபி 12:16:17).

கொரிந்தியர் சபையில் விபச்சாரம் செய்து கொண்டிருந்த ஒருவனை கண்டு பிடித்த பரி. பவுல் அந்தப் பொல்லாதவனை உங்களை விட்டு தள்ளிப் போடுங்கள் என்று சபையாருக்குக் கட்டளையிட்டு அவனை சபைக்கு புறம்பாக்குகிறார். மேலும் அப்படிப்பட்டவனுடைய ஆவி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாளில் இரட்சிக்கப்படும்படி, மாம்சத்தின் அழிவுக்காக அவனை சாத்தானுடைய கரத்தில் அப்போஸ்தலன் ஒப்புக் கொடுக்கிறார் (1 கொரி 5 அதி). இந்த வாசகத்திலிருந்து ஒன்றை அறிய முடிகிறது. இப்படி விபச்சாரம் செய்து சீர் கெட்டு போனவன் சபையிலிருந்து தள்ளப்பட்டு, சாத்தானால் சரீரம் தாக்கப்பட்டு, ஒருவேளை மனஸ்தாபப்பட்டு, பாவத்தை விட்டு மனந்திரும்பினாலும் அவனுடைய ஆவி இரட்சிக்கப்படுமேயொழிய சரீர மீட்பு கிடைக்காது (1 கொரி 5:5; 1 பேது 3:19,20).

**"ஒருவன் தேவனுடைய ஆலயமாகிய சரீரம் கெட்டுப் போகும்படி விபச்சாரம் செய்து விட்டானானால், அவன் மனந்திரும்பி பாவ அறிக்கை செய்தாலும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும் போது அவனுடைய சரீரம் மறுரூபப் படாது."**

இப்படி பரிசுத்த ஆவியானவர் எங்களுக்கு வெளிப்படுத்தியிருக்கிறார். சரீர மீட்பாகிய இந்த பாக்கியத்தை நீங்கள் அறியாமல் கூட இழந்து போகாதிருக்கும்படி இதை உங்களுக்கு அறிவிக்கிறோம்.

சத்தியத்தை அறிந்த பின் பாவம் செய்வோமானால், பாவங்களுக்காய் செலுத்தத்தக்க வேறே பலி இனி இராமல் நியாயத் தீர்ப்பு வரும் என்ற பயத்தோடே காத்திருக்க வேண்டியதுதான் (எபி 10:26,27) என்றபடி விபச்சாரம் செய்தவன் அந்தப் பாவத்திற்கு

பரிகாரம் இல்லாமல் சரீர மீட்பை இழந்து போவதே தண்டனையாக வரும். தவறியும் விபச்சாரம் வேசித்தனம், தகாபுணர்ச்சி செய்து விடாதே.

---

"பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலை பாதகரும், விபச்சாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும் பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள்".

—வெளி 21:8

---

# அருவருப்பான ஜெபம்

ஒரு நல்ல தகப்பனார், அவருடைய மகனுக்கென்று ஒரு ஸ்கூட்டர் (Scooter) வாங்கி வந்து, மகனிடம் சாவியைக் கொடுத்து, இந்த ஸ்கூட்டரை உனக்கு வைத்துக்கொள் என்று சொன்னார். பையனுடைய சந்தோஷத்திற்கு அளவே இல்லை.

உடனே ஓடிப்போய் அதை ஸ்டார்ட் பண்ணும்படி உதைக்க ஆரம்பித்தான். உதை, உதை என்று வெகு நேரம் உதைத்துப் பார்த்தான். ஸ்டார்ட் ஆகவே இல்லை. மிகவும் வெறுப்படைந்தவனாய், தகப்பனிடம் வந்து, போயும், போயும் இந்த ஓட்டை ஸ்கூட்டரையா வாங்கி வந்தீர்கள். பார்க்கத்தான் அழகாய் இருக்கிறது. ஆனால் பிரயோஜனமற்றது என்று தகப்பனாரை மிகவும் கசந்து கொண்டான். தகப்பனார் ஸ்கூட்டர் பக்கமாய் பையனை அழைத்துக் கொண்டு போய், சாவியைக் கொடு என்று பையனிடம் கேட்டார். அப்போதுதான் பையனுக்கு தன்னுடைய மதியீனம் விளங்கிற்று. சாவியை பாக்கெட்டில் வைத்து கொண்டே அவன் இவ்வளவு நேரமும் உதைத்திருக்கிறான். வண்டி எப்படி ஸ்டார்ட் ஆகும்.

இப்படிப்போலவே அநேக தேவனுடைய பிள்ளைகள் தேவனுடைய ஆசீர்வாதமான வாக்குத்தத்தங்களை மட்டும் பிடித்துக் கொண்டு ஜெபிக்கிறார்கள், சத்தமிட்டு கூப்பிட்டு ஜெபிக்கிறார்கள், அழுது ஜெபிக்கிறார்கள், உபவாசம் போட்டு ஜெபிக்கிறார்கள், போகிற வருகிற ஊழியர்களிடம், தேவ பிள்ளைகளிடம் ஜெபிக்கும்படி வேண்டிக் கொள்கிறார்கள் பலனில்லாமையால் தேவனிடம் முறுமுறுக்கிறார்கள், நம்பிக்கை இழக்கிறார்கள், சிலர் விசுவாசத்தை விட்டு பின் மாறியும் போய் விடுகிறார்கள்.

எந்த ஒரு தேவனுடைய வாக்குத்தத்தமும் நிபந்தனை இல்லாமல் கிடையாது என்பதை அறிய வேண்டும். அந்த நிபந்தனையை கவனித்து, அதன்படி நடந்தால் வாக்குத்தத்தம் தானாக நிறைவேறும். அந்த நிபந்தனையை, அதற்குரிய ஆசீர்வாதத்தைத் தரக்கூடிய சாவி (key), அதைவிட்டுவிட்டு வாக்குத்தத்தத்திற்காய் மட்டும் ஜெபித்தால் அந்த ஜெபத்தை தேவன் அருவருப்பார்.

*சில உதாரணங்கள் :*

ஒருவன் வியாதியாயிருக்கையில் அந்த வியாதி நீங்கும்படி அவன் என்ன செய்ய வேண்டும் என்று பரிசுத்த ஆவியானவர் அப். யாக்கோபின் மூலம் நமக்கு ஆலோசனை கொடுத்துள்ளார். ஒருவன் வியாதிப்பட்டால் சபையின் மூப்பனை வரவழைத்து, தேவ ஊழியனாகிய எலியா போன்ற அந்த நீதிமான் கருத்தாய் ஜெபிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவர் ஜெபம் பண்ணி அந்த வியாதி பாவத்தினாலுண்டானது என கண்டறிந்தாலோ அல்லது தற்பரிசோதனையின் மூலம் பாவம் உணர்த்தப்பட்டாலோ, உடனே வியாதிப் பட்டவன் தன்னுடைய குற்றத்தை ஊழியனிடம் அறிக்கை செய்ய வேண்டும். இப்படி செய்தால் சுகமுண்டாகும் (யாக் 5:14-16).

இப்படிப்பட்ட தேவ ஆலோசனையை ஏற்க மறுத்து ஆண்டவரே, நான் நீதிமான், எனக்கு விசுவாசமிருக்கிறது நீர் பெரியவர், நீர் வல்லவர், நீர் இந்த வியாதியை குணமாக்க வல்லவர், ஆகையால் எனக்கு சுகம் வேண்டும் என்று தேவனுடைய ஆலோசனையைத் தள்ளிப்போட்டு ஏறெடுக்கும் ஜெபத்தை கர்த்தர் அருவருப்பார்.

ஒரு சகோதரி என்னுடைய புருஷன் தாறுமாறாய் நடக்கிறாரே, குடிக்கிறாரே, அவர் குணப்பட்டு இரட்சிக்கப்படவேண்டும் என்று ஜெபம் பண்ணுகிறாள். இந்த மனிதன் இரட்சிக்கப்பட இவள் என்ன செய்ய வேண்டும் என்று ஆவியானவர் அப். பேதுருவைக் கொண்டு ஆலோசனை சொல்கிறார்: உன் சொந்த புருஷனுக்கு கீழ்ப்படிந்திரு. பயபக்தியாய் கற்புள்ளவளாய் நடந்து கொள். மயிரைப் பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக்கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பில்லாமல், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும், அமைதலுமுள்ள ஆவியையுடைய குணசாலிகளாய் இருந்து, கணவனை சாராளைப் போல் எஜமானாக எண்ணி கீழ்ப்படிந்திரு. அப்போது உன் கணவன் தானாக இரட்சிக்கப்படுவான். நீ அவனுடைய ஆத்துமாவை ஆதாயம் செய்தவளாயிருப்பாய் (1 பேது 3:1–6) என்று. இந்த ஆலோசனைக்கு நீ கீழ்ப்படிய மனமில்லாமல், அதெப்படி மற்றவர்கள் என்னை தப்பாக எண்ணுவார்களே, என்று சாக்கு போக்கு சொல்லிக்கொண்டு, தன் கணவன் இரட்சிக்கப்பட தேவன் கொடுக்கும் ஆலோசனையை தள்ளிப்போடுகிற ஸ்திரீ, தன் கணவனின் இரட்சிப்புக்காக பண்ணும் ஜெபம் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கும்.

ஒரு நபருண்டு. அவர் ஆவிக்குரிய வளர்ச்சி அடையாமல் இருக்க அவர் சொல்லும் காரணம்: "வருமானம் குறைவாயிருக்கிறது. கடன் தொல்லைகள் அதிகம், தேவைகளை பெற்றுக்கொள்ள பணம் குறைவாயுள்ளது. இவைகளை சமாளிக்கவே காலம் சரியாய் போய் விடுகிறது. நானும் ஆண்டவரே என் கடனைத் தீரும், என்னுடைய தேவைகளை சந்தியும் என்று அனுதினமும் ஜெபம் பண்ணிப்பார்க்கிறேன், ஒரு பலனுமில்லையே" என்று.

இவருடைய ஜெபம் கேட்கப்படாமல், அதை ஆண்டவர் அருவருக்கிறதற்கு காரணம், இவர் ஒரு வஞ்சகன். எப்படியென்றால் கர்த்தர் சொன்னார்: என் ஆலயத்தில் (சபையில்) ஆகாரம் உண்டாயிருக்கும்படி தசமபாகங்களை எல்லாம் பண்டகசாலையிலே கொண்டு வாருங்கள், அப்போது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து இடங்கொள்ளாமல் போகுமட்டும் ஆசிர்வதிப்பேன் என்று (மல்கி 3:8,9).

அப்படியல்ல ஆண்டவரே, எனக்கு நிறைய வந்து பெருகட்டும், அப்புறம் அதையெல்லாம் பார்க்கலாம் என்று இவர் ஆண்டவருக்கு ஆலோசனை சொல்லிவிட்டு, ஆண்டவரே என்னை ஆசீர்வதியும் என்று ஜெபம் பண்ணுகிறார். ஐயோ பாவம். "வேதத்தை கேளாதபடி தன் செவியை விலக்குகிறவனுடைய ஜெபம் அருவருப்பானது" (நீதி 28:9) என்று ஞானி சொல்லியிருப்பது அவருக்குத் தெரியாது போலும்.

ஜெபித்து, உபவாசித்து, மனங்கசந்து சலித்துப்போகாமல் உன் வழியை முதலாவது செவ்வைபடுத்து, அதன்பின் ஜெபம் பண்ணு. பலனுண்டாகும். ஏனெனில் செம்மையானவர்களின் ஜெபம் அவருக்குப் பிரியம் (நீதி 15:5).

நீங்கள் இப்படிச் செய்யுங்கள்.

---

"வேதத்தைக் கேளாதபடி தன் செவியை விலக்கிறவனுடைய ஜெபமும் அருவருப்பானது" —நீதி 28:9.

---




(தொடர்ச்சி)

**ஆதி 48 அதி:** யாக்கோபு தான் மரணமடையப் போகிற நாள் சமீபித்தது என்றறிந்து யோசேப்பை வரவழைத்து யோசேப்பின் குமாரராகிய எப்பிராயீமையும், மனாசேயையும் அழைத்து தன்னுடைய பிள்ளைகளாக ஏற்றுக் கொண்டு ஆசீர்வதிக்கிறார். யோசேப்பையும் ஆசீர்வதிக்கிறார். ஆசீர்வதித்து விசேஷித்த சுதந்தரத்தைக் கொடுக்கிறார்.

**ஆதி 49 அதி :** யாக்கோபு தன் குமாரர்களையெல்லாம் கூடிவரச் செய்து, அவர்கள் ஒவ்வொருவருடைய பெயர்களையும் அறிவித்து, அவர்களுக்கு நேரிடும் காரியங்களை அறிவித்து ஆசீர்வதிக்கிறார். ஆசீர்வதித்து முடித்து தன் கால்களை கட்டிலின் மேல் மடக்கிக் கொண்டு ஜீவித்துப் போகிறார். அவருடைய மரணம் மிகவும் ஒரு அருமையான முடிவுள்ளதாய் இருக்கிறது.

**ஆதி 50:1-3:** யாக்கோபுக்காக யாக்கோபின் புத்திரரும், எகிப்தியர்களும் துக்கம் கொண்டாடுகிறார்கள். யாக்கோபின் விருப்பத்தின்படி கானான் தேசத்தில் சொந்தக் கல்லறையில் யாக்கோபை அடக்கம் பண்ணினார்கள்.

**ஆதி 50:14-21** யாக்கோபின் புத்திரர் தங்கள் தகப்பன் மரித்து விட்டபடியினால் தாங்கள் செய்த பொல்லாப்புக்கு யோசேப்பு தண்டனை கொடுப்பார் என்று பயந்து அவரிடத்திலே ஆள் அனுப்பி கெஞ்சுகிறார்கள். தாங்கள்செய்த துரோகத்தை மன்னிக்க வேண்டும் என்று அவருக்குச் சொல்லச் சொன்னார்கள். மேலும் அவர்கள் போய் யோசேப்புக்கு முன்பாக தாழ விழுந்து தாங்கள் உமக்கு அடிமை என்றார்கள். யோசேப்பு மிகவும் அழுதார். பின்பு அவர்களை நோக்கி பயப்படாதிருங்கள். நான் தேவனா நீங்கள் எனக்குத் தீமை செய்ய நினைத்தீர்கள். தேவனோ இப்பொழுது நடந்து வருகிறபடியே, வெகு ஜனங்களை உயிரோடே காக்கும் படிக்கு அதை நன்மையாக முடியப் பண்ணினார். ஆதலால் பயப்படாதிருங்கள். நான் உங்களையும், உங்கள் குழந்தைகளையும் பராமரிப்பேன் என்று அவர்களுக்கு ஆறுதல் சொல்லி, அவர்களோட பட்சமாய் பேசினார். ஆம்! மனிதர்களாய் இருக்கட்டும், சாத்தானாய் இருக்கட்டும், கள்ளச் சகோதரர்களாய் இருக்கட்டும், நமக்குத் தீங்கு இழைத்து நம்மை தாழ்த்து ஒன்றும் செய்து விட முடியாது. சர்வ வல்லமையுள்ள தேவன் சாத்தான் நமக்குச் செய்கிற தீமையையும் நன்மையாக மாற்றிப் போட வல்லவராய் இருக்கிறார். தேவனுடைய மனுஷனாகிய தாவீதை பேலியாளின் மகனாகிய சீமேயி என்பவன் கொடிய தூஷணையாய் தூஷித்தபோது அரசனின் அபிமானிகளில் ஒருவனாகிய அபிசாய் இராஜாவினிடத்தில் அந்த செத்த நாய் ராஜாவாகிய என் ஆண்டவனை தூஷிப்பானேன். நான் போய் அவன் தலையை வாங்கிப் போட்டுமே என்றான். அதற்கு ராஜா அவன் என்னைத் தூஷிக்கட்டும். தாவீதை தூஷிக்க வேண்டும் என்று கர்த்தர் அவனுக்குச் சொன்னார் என்றார் (II சாமு 16: 5-14). நமக்கு நிந்தனையும் அவமானமும் தூஷணமும், துன்பமும், துக்கமும், இடையூறும், ஆபத்துக்களும் மனுஷன் மூலமாகவோ, சாத்தான் மூலமாகவோ வந்த போதிலும் தேவன் அதை அனுப்பியிருக்கிறார் என்றும், தேவனுடைய கரத்தில் இருந்து வருவதாகவும் நாம் எண்ணுவோமானால் நமக்கு பெரிய அமைதி உண்டாயிருக்கும். ஆத்திரம் வராது. இந்த நாளில் அவன் நிந்தித்த நிந்தனைக்கும் பதிலாக எனக்கு நன்மையை தேவன் சரிகட்டுவார் என்று தாவீது சொன்னார். ஆம் தேவன் தாவீதை ஆசீர்வதித்தார். சீமேயியோ வாளால் வெட்டப்பட்டு மரித்தான்.

அப்படியே மனிதன் நமக்கு என்ன செய்துவிடமுடியும். நம்மை உயர்த்துகிறவரும், தாழ்த்துகிறவரும் தேவனே. நாம் தேவனுடைய கரத்தில் சரியாய் இருப்போமென்றால் தேவன் நம்மை உயர்த்தாமல் விடார்.

**ஆதி 50:22-26 :** யோசேப்பு 110 வருஷம் எகிப்திலே உயிரோடிருந்தார். யோசேப்புதான் மரிக்கப் போகிற வேளை வந்த போது தன் சகோதரரை நோக்கி நான் மரணமடையப் போகிறேன், ஆனாலும் தேவன் உங்களை நிச்சயமாய்ச் சந்தித்து நீங்கள் இந்த தேசத்தை விட்டு,தாம் ஆபிரகாமுக்கும்,ஈசாக்குக்கும்,யாக்கோபுக்கும் ஆணையிட்டுக் கொடுத்திருக்கிற தேசத்துக்குப் போகப்பண்ணுவார் என்று சொன்னதுமன்றி, தேவன் உங்களைச் சந்திக்கும் போது, என் எலும்புகளை இவ்விடத்திலிருந்து கொண்டு போவீர்களாக என்றும் சொல்லி, யோசேப்பு இஸ்ரவேல் புத்திரரிடத்தில் ஆணையிடுவித்துக் கொண்டார். யோசேப்பு நூற்றுப்பத்து வயதுள்ளவனாய் மரித்தார். அவருக்கு சுகந்த வர்க்கமிட்டு, எகிப்து தேசத்தில் அவரை ஒரு பெட்டியிலே வைத்து வைத்தார்கள். என்ன அருமையான முடிவு,

நம்பிக்கையோடு மரித்தார். ஆதியாகமம் எல்லாவற்றிற்கும் ஆதியாக இருக்கிறது. ஆதியிலே
தேவன் சிருஷ்டித்த சிருஷ்டிப்பை காண்பிக்கிறது. ஆதி மனிதனின் சிருஷ்டிப்பை காண்பிக்
கிக்கிறது. ஆதியில் நிகழ்ந்த பாவத்தைக் காண்பிக்கிறது. ஆதியில் உண்டான ஜலப்
பிரளயத்தைக் காண்பிக்கிறது. (முதல் அழிவு). ஆதிமுற்பிதாக்களைப் பற்றிச் சொல்லு
கிறது. எல்லாவற்றிற்கும் ஆதியாகம் ஆதியாயிருக்கிறது. இந்தப் புஸ்தகத்திற்காய் நாம்
தேவனை ஸ்தோத்தரிப்போமாக. இது விசுவாசத்தின் அடிப்படை புஸ்தகமாகும். ஆதி
தேவன் நம்மையும் ஆசீர்வதிப்பாராக.

(தொடரும்......)

"அன்றியும் அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய்த் தேவனிடத்தில் அன்பு கூறுகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்" —ரோம 8:28.

## மோட்ச வழி

### [குரு—சிஷ்ய உரையாடல்]

**சிஷ்யன் :** உபவாசிப்பது எப்படி என்று எனக்கு சொல்லித் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**குரு :** உபவாசம் பலவிதம் உண்டு. தங்களுக்கு உரிமையாய் கொடுக்கப்பட்டிருக்கிற சிலாக்கியத்தை ஒரு நாளோ, இரண்டு நாளோ, சில வாரங்களோ ஒதுக்கி வைத்து தேவனை நோக்கி ஜெபிப்பதே உபவாச ஜெபமாகும்.

**சிஷ்யன் :** உபவாசிக்கும் பொழுது ஆகாரம் சாப்பிடுவதோ, தண்ணீர் குடிப்பதோ கூடாது என்று சிலர் சொல்லுகிறார்களே.

**குரு :** உபவாசிப்பதின் முக்கிய நோக்கம் பசித்திருப்பதாகும். எவ்விதமான ஆகாரம் சாப்பிடுவதும் தவறு. தண்ணீர் குடிப்பது தவறல்ல. நிறைய தண்ணீர் குடிக்கலாம்.

**சிஷ்யன் :** சிலர் நீண்ட உபவாசம் செய்கிறார்களே அது எப்படி?

**குரு :** தேவ கிருபையில்லாமல் யாரும் எதையும் செய்ய முடியாது. சிலர் மிகுந்த பக்தி வைராக்கியம் என்று எண்ணி கடுமையான உபவாசம் செய்து தங்களுடைய சரீரத்தை பலவீனப்படுத்திக் கொண்டு உபவாசத்தையே கைவிட்டு விட்டவர்கள் உண்டு. வாரத்தில் ஒன்றோ, இரண்டோ தடவை உபவாசிக்கலாம். இடையில் விசேஷித்த காரியங்களுக்காக ஒரு நாள் முழுவதும் உபவாசித்து ஜெபிக்கலாம். இரவில் உபவாசித்து விழித்திருந்து ஜெபிக்கலாம், நியமிக்கப்பட்ட நாட்களில் உபவாசித்து ஜெபிக்கலாம். பாவ சோதனை வேளைகளிலும், துன்ப துக்கநேரங்களிலும் உபவாசித்து ஜெபிக்கலாம். வியாதியஸ்தர்களுக்காகவும், பிசாசின்பிடியிலிருக்கிறவர்கள் விடுதலையாவதற்கும் உபவாசித்து ஜெபிக்கலாம். ஒரு ஆத்தும மனந்திரும்புதலுக்காகவும் உபவாசித்து ஜெபிக்கலாம். விசேஷமாய் தற்பரிசோதனை செய்வதற்காயும் உபவாசித்துச் ஜெபிக்கலாம். எப்படியும் நாம் உபவாசித்து ஜெபிப்பது தேவனுக்குப் பிரியம்.

**சிஷ்யன் :** உபவாசிக்கும் பொழுது நாம் கையாள வேண்டிய முறை என்ன?

**குரு :** விசேஷமாய் உபவாசிக்கும் பொழுது வேதம் வாசிப்பதிலும், ஜெபிப்பதிலும் நேரம் கழிக்க வேண்டும். அதிகம் பேசக் கூடாது. உலகப்பிரகாரமான வேலைகளைச் செய்யக் கூடாது. தூங்கக் கூடாது. இப்படி நாம் செய்வோமென்றால் ஆத்தும விழிப்படைந்து தெய்வீக சக்தி பெற்று தேவனோடு உறவு கொள்ளும். உபவாசத்தில் கையாளவேண்டிய முறை இதுவே.

**சிஷ்யன் :** சிலர் உபவாசம் புதிய ஏற்பாட்டின் உபதேசம் அல்ல என்று சொல்லுகிறார்களே?

**குரு :** இந்த புதிய ஏற்பாட்டின் காலத்தில் உபவாசிக்காத கிறிஸ்தவன் கிறிஸ்தவனல்ல. நம்முடைய நீதி பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய நீதியிலும் அதிகமாயிராவிட்டால் நீங்கள் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டீர்கள் என்று இயேசு கிறிஸ்து தாமே சொல்லியிருக்கிறார் (மத் 5 : 20). பரிசேயனுடைய நீதி என்னவென்று லூக் 18 : 11, 12-ல் எழுதியிருக்கிறது. அங்கே பரிசேயன் வாரத்தில் 2 (இரண்டு) தரம் உபவாசிக்கிறேன் என்று சொல்லுகிறான். என் சம்பளத்தில் எல்லாம் தசமபாகம் செலுத்தி வருகிறேன் என்று சொல்லுகிறான். மேலும் நியாயப் பிரமாணத்திலுள்ள நீதியான கற்பனைகளையெல்லாம் கைக்கொண்டிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறான். நாம் குறைந்த பட்சமாவது இப்படிச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம் அல்லவா!

**சிஷ்யன் :** ஆம் கண்டிப்பாக உபவாசிக்க வேண்டும். உபவாசித்து ஜெபிக்காத கிறிஸ்தவன் கிறிஸ்தவனல்ல என்று ஒப்புக் கொள்கிறேன்.

(தொடரும்)

> "..... நான்தானே ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு என் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்"
> —I கொரி 9 : 27.

மாதர் பகுதி

# குடும்பம்

## புருஷனும், மனைவியும்

3. குடும்ப வாழ்க்கையில் அவ்வப் பொழுது மனஸ்தாபங்கள் உண்டாகிறது சகஜம். இந்தச் சமயங்களில் கணவனும் மனைவியும் ஒருவர் மேலொருவர் ஒரு போதும் கசந்து கொள்ளக்கூடாது. விடு வார்த்தை சொல்லி பேசக் கூடாது. மனைவி யிடத்தில் புருஷன் பல தவறுகளைக் காண லாம். அதைச் சகித்துக் கொள்ள வேண்டும். அப்படியே புருஷனிடத்தில் மனைவிக்கும் பிடிக்காத காரியங்கள் இருக்கலாம். அதை மனைவி சகித்துக் கொள்ள வேண்டும். ஒருவரை யொருவர் நேசித்து, ஒருவரையொருவர் கனப்படுத்தி, ஆதரவு செய்வோமென்று தேவ சந்நிதானத்தில் வாக்குக் கொடுத்ததை நினைவு கூர்ந்து அதை நிறை வேற்ற வேண்டும். மனைவியைப் பற்றி புருஷன் இன்னொரு பெண்ணிடத்தில் குறை சொல்லவோ, புருஷனைப் பற்றி மனைவி வேறொரு ஆணிடத்தில் குறை சொல்லவோ கூடாது. அப்படிச் செய்தால் கேட்கிற ஆள் சொல்லுகிற ஆளுக்காக பரிதாபப்பட்டு ஆறுதல் சொல்வார். அவ்வித மான வழக்கம் தவறான முடிவுகளில் கொண்டு போய் விடும். நீ இப்படிச் செய்தால் புருஷனை நேசித்து, கனப்படுத்தி, ஆறுதல் செய்வேன் என்று தேவசந்நிதானத்தில் தேவனுக்கு நீ கொடுத்த வாக்கை மீறுகிறாய். அப்படியே புருஷனும் மனைவியை

நேசித்து, கனப்படுத்தி, ஆறுதல் செய்வேன் என்று தேவ சந்நிதானத்தில் நீ கொடுத்த வாக்கை மீறுகிறாய். முள்ளில் உதைப்பது உனக்குக் கடினமாம். முள்ளில் உதைப்பது முள்ளுக்கல்லச் சேதம். காலுக்குத் தான் சேதம். புருஷன் வெளியே போய் சம்பாத்தியம் பண்ணுகிறவனாய் இருக்கிற படியால், மனைவி தனக்கு கீழ்ப்பட்டவள் என்று எண்ணி சில புருஷர்கள் அதிகாரம் செலுத்தி மனைவியை ஒரு அடிமையைப் போல் நடத்துகிறார்கள். இது தவறு. மனைவிக்குக் கொடுக்கவேண்டிய கனத்தைக் கொடுக்கவேண்டும். சில மனைவிமார்கள் புருஷன், தான் சொல்லுகிற படியெல்லாம் நடக்கவேண்டும் என்று எண்ணி, புருஷனுக்கு துன்பத்தைக் கொடுக்கிறார்கள். இது மகா தவறு. மனைவியே! நீ உன புருஷனைக் கோபப்படுத்தாதே. நீ உயிருள்ள மட்டும் உன்னால் உன் புருஷனுக்கு ஒரு துன்பமும் வராதபடி பார்த்துக் கொள். உன் ஸ்தானத்தை விட்டு, விட்டு அதிகாரம் செலுத்த எண்ணி அவதியில் மாட்டிக் கொள்ளாதே.

1. குடும்ப வாழ்க்கையில் ஒரு போதும் பிரிவினைக்கு இடங் கொடுக்கக் கூடாது. தேவன் இணைத்ததை மனிதன் பிரிக்கதிருக்கக் கடவன். தேவன் இணைக்காததை மனிதன் பிரிக்கக் கடவன் (மனிதன் பிரித்து விட முடியும்). விவாக ஒப்பந்தமானது பின்பு பிரிந்து போவது தென்பதற்கே வேதத்தில் இடமில்லை. சிலருடைய அசட்டு துணிச்சலினாலும், துராலோசனையினாலும் சில கோள்காரருடைய கோள் சொல்லுதலினாலும் சில குடும்பங்கள் சிதறிப் போகின்றன. இதற்கு காரணம் சாத்தானே. குடும்ப பிரிவினைக்கான துர்போதனை கொடுப்பவர்களுக்கு கணவனோ, மனைவியோ செவி கொடுக்கக் கூடாது. ஒரு கிராமத்தில் ஒரு குடியானவருடைய குடும்பம் இருந்தது. அவன் விவசாயியாயிருந்த போதிலும், அவனுக்கு நல்ல நில புலங்களும், ஆஸ்திகளும் இருந்தன. அவனுக்கு பதிவிரதையான ஒரு நல்ல மனைவி இருந்தாள். அவர்களுக்கு ஒன்பது வயதான ஒரு ஆண்பிள்ளையும், நான்கு வயதான ஆண் பிள்ளையுமான இரண்டு ஆண் குழந்தைகள் இருந்தன. ஆனால் அந்த மனிதனுடைய நடத்தையோ மகா பயங்கரமாய் இருந்தது. அந்த மனிதனுடைய பெயர் நல்ல தம்பி. அந்த மனைவியினுடைய பெயர் எஸ்தர். இந்த மனிதன் ஒரு கெட்ட பெண் பிள்ளையோடு சகவாசமாய் இருந்தான். இவன் தன் சோரநாயகியின் தூண்டுதலின் பேரில் தன் மனைவியை வெறுவாய் ஏசிப் பேசி துன்பப் படுத்தி வந்தான். எஸ்தரோ மிகவும் பொறுமையாய் சகித்து தன் கணவனுக்காய் ஜெபித்து வந்தாள்.

இப்படியிருக்க நல்ல தம்பியினுடைய சோரநாயகி நல்ல தம்பியினுடைய மனைவியை வீட்டை விட்டே துரத்தி விட திட்டமிட்டாள். எஸ்தருக்கும், இன்னொரு மனிதருக்கும் தொடர்பு இருக்குமாப் போல் பாவனை செய்து ஒரு கடிதம் எழுதினாள். நல்ல தம்பியினுடைய வேலைக்காரி கண்ணம்மாளை வசப்படுத்தி அந்தக் கடிதத்தைக் கொடுத்து, நல்ல தம்பியின் வீட்டின் படுக்கையறையின் ஒரு மூலையில் பீரோவுக்கு பின்னால் போடச் செய்தாள். அந்தச் சாயங்காலத்தில் நல்ல தம்பி வழக்கப்படி சோரநாயகியின் வீட்டுக்குப் போனான். அந்தத் தூர்த்தை நல்ல தம்பியிடம் அவனுடைய மனைவியைப்பற்றி இல்லாததும் பொல்லாததுமான காரியங்களைச் சொன்னாள். அதற்கு நல்ல தம்பி மாறுத்தரமாக தன்னுடைய மனைவியினிடத்தில் எந்த வித தவறான நடத்தையும் இது வரை தான் கண்டதில்லை என்று சொன்னான். அதற்கு அந்தக் கெட்ட பெண் பிள்ளை, உங்களுக்குத் தெரியாது நீங்கள் தான் உங்கள் மனைவியை மெச்சிக் கொள்ளவேண்டும். அவள் ஒரு ஆளோடு வெகு நாட்களாக தொடர்பாக இருக்கிறாள். அது எனக்கு தெரியும். அதனால் தான் நீங்கள் ஏசினாலும், பேசினாலும் அவள் மழுப்பிக் கொண்டு அமைதியாயிருக்கிறாள். அவர்கள் இருவரும் கொல்லைப் புரத்தில் இரவு 10 மணிக்குச் சந்தித்துக்கொள்கிறார்கள். இன்று கூட ஏதோ ஒரு லெட்டர் உங்கள் மனைவிக்கு வந்தது போலத் தெரிந்தது. அவள் உண்மையுள்ளவளாயிருந்திருந்தாளானால் உங்களிடம் சொல்லியிருப்பாளே. அந்த லெட்டர் வீட்டிலே எங்கேயாவது இருக்கும். அதைத்தேடிப் பார்த்தால் உங்

களுக்கு விஷயம் தெரிய வரும் என்றான். இதைக் கேட்டதும் தல்லை தம்பிக்குச் சந்தேகம் வலுத்தது. அவன் வெகு நேரம் கழித்து வீடு திரும்பியதும் ஒன்றும் பேசாமல் தன் மனைவியை ஒரே அடியாக வெட்டிக் கொன்று போட வேண்டும் என்று எண்ணினான். ஆனால் தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, தன்னுடைய மனைவியையும், அவளுடைய சோரநாயகனையும் ஒரே சமயத்தில் கொன்று போட வேண்டுமென்று தீர்மானித்து தன்னை அடக்கிக் கொண்டான். ஒருவரிடமும் ஒன்றும் பேசாமல் அன்றிரவு படுத்துக் கொண்டான். மறுநாள் தன்னுடைய மனைவி அதிகாலையில் ஆற்றுக்குக் குளிக்கச் சென்றதைப் பார்த்திருந்து, வீட்டில் தன்னுடைய மனைவியின் பெட்டி, சட்டி, மூலை முடுக்கெல்லாம் தேட ஆரம்பித்தான். கடைசியில் படுக்கையறையில் பீரோவுக்குப் பின்னால் அவனுக்கு ஒரு லெட்டர் கிடைத்தது. அதைப் பத்திரப் படுத்தி எடுத்துக் கொண்டு வெளியே வயலுக்குச் சென்று விட்டான். அங்கே அந்த லெட்டரைப் படித்துப் பார்த்ததும், அந்தச் சோரநாயகன் அன்றிரவு பத்து மணிக்கு கொல்லைப்புற பக்கமாய் வருவதாகவும், எஸ்தர் தன்னை அங்கே அந்த இடத்தில் சந்திக்கும் படியாகவும் எழுதியிருந்தது.

(தொடரும்)

"அன்பு திரளான பாவங்களை மூடும்"
—Iபேது 4:8.

## சாட்சி

எனது சொந்த ஊர் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள கைலாசப்புரம் என்னும் கிராமம். என் பெயர் ஞானசேகர். எனது பெற்றோர் லூத்தரன் சபையை சார்ந்தவர்களாயிருந்ததால் நானும் சிறு வயது முதல் கிறிஸ்தவ பக்தியில் வளர்க்கப்பட்டேன். தினந்தோறும் வேத வாசிப்பு, ஆராதனைகளுக்கு ஒழுங்காகச் செல்வது, ஆலயத்தைச் சார்ந்த ஞாயிறு பள்ளிகள், விடுமுறை வேதாகமப் பள்ளிகள் நடத்துதல், வாலிபர் மாநாடுகளில் பங்கெடுத்தல் போன்ற காரியங்களில் தவறாமல் கலந்து கொண்டேன். ஆனால் இவையெல்லாம் எனக்கு பரிசுத்த வாழ்க்கையைத் தர இயலவில்லை. என் பள்ளிப் படிப்பு முடிந்ததும், நாகர்கோவிலுள்ள ஸ்காட் கிறிஸ்தவ கல்லூரியில் B.Sc. படிப்பதற்காகச் சேர்ந்து விடுதியில் தங்கினேன். அப்பொழுது நான் படிப்பதை விட அரசியலில் முக்கியமாக பங்கு பெற்று வந்தேன். நான் சார்ந்திருந்த கட்சி கூட்டங்களில் பேசுவதும் மாநாடுகள் பலவற்றில் பல மைல் தூரம், பல மாணவர்களுடன் கூட்டுடன் ஓடிவந்து, கட்சி தலைவர்களிடம் கொடுத்து பெற்ற சிற்றின்பங்களில் என்னை நானே திருப்திபடுத்திக் கொண்டு வந்தேன். அதே சமயம் ஞாயிற்றுக் கிழமைகளில் ஆலயத்திலும் சில முக்கியப் பணிகளைச் செய்து வந்தேன். பல ஆவிக்குரிய கூட்டங்களில் கலந்து கொண்டும் இருந்தேன். இதனால் என் படிப்பை சரிவர செய்ய முடியாத நிலையில் இருந்தேன். எனக்கு பேச்சாற்றல் ஓரளவு இருந்ததால் அரசியல் அல்லது லூத்தரன் மிஷனில் ஒரு தலைவராகி விடவேண்டும் என்று நினைத்துக் கொண்டு இருந்தேன்.

இந்நிலையில் எனது பட்டப் படிப்பு தேர்வுகளை எழுதி முடித்து விட்டு, நெய்வேலிக்கு என் சகோதரி வீட்டுக்கு வந்தேன். சகோதரி வீட்டில் அப்பொழுது அனைவரும் "புதிய எருசலேம் சபை" என்ற சபையில் விசுவாசிகளாய் மாறி இருந்தனர். காலையிலும் மாலையிலும் வீட்டில் ஜெபம். எப்பொழுதும் பைபிள் சம்பந்தமாக பேசிக் கொண்டே இருந்தனர். அதோடு பல வருடங்களாக கோவிலுக்கு வராத என் சகோதரியின் கணவர் திரு. தங்கவேல் இஸ்ரவேல் அவர்கள் இரட்சிக்கப்பட்டு

புதிய எருசலேம் சபை ஊழியராக மாறி, தேவ ஊழியத்தைச் செய்துவருவதைப் பார்த்தேன். எனக்கும் அவர்கள் இரட்சிப்பைப் பற்றி கூறினார்கள். ஒன்றும் பேசாமல் அரைமனதுடன் கேட்டுக் கொண்டு வந்தேன். அப்பொழுது எனக்கு நெய்வேலியில் ஆசிரியர் வேலை கிடைத்து விட்டது. எனவே தொடர்ந்து அங்கேயே தங்கி இருக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. தினந்தோறும் காலை மாலை ஜெபம், வேதவாசிப்பு வேதங்களைப் பற்றிய ஆராய்ச்சி, போன்றவைகள் என்னிடம் பரிசுத்தம் இல்லாத படியால் மனதிற்கு பிடிக்காமல் இருந்து வந்தது. அப்பொழுது ஒரு நாள் தமிழ்நாடு பாஸ்டர், திரு. சுந்தர்ராஜ் ஐயாவும், தீர்க்கதரிசி ஐயாவும் நெய்வேலிக்கு வந்தார்கள். அவர்களும் என்னிடம் தேவ காரியங்களை குறித்துப் பேசினார்கள். இரவு ஜெபத்தில் என்னை நான் தேவனிடம் ஒப்புக் கொடுத்தேன். பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்றுக் கொண்டேன். அவர்கள் தேவ ஆலோசனையாக என்னிடம் 'நெய்வேலியில் நான் வேலை பார்க்க வேண்டும்' என்று கூறி விட்டுச் சென்று விட்டார்கள்.

நான புதிய எருசலேம் சபையின் ஐக்கியத்திற்குள் வந்துவிட்ட செய்தி ஊரில் இருந்த என் பெற்றோர்களுக்கு தெரிந்து விட்டது. எப்படியாவது என்னை சபையிலிருந்து பிரித்து விட வேண்டும் என்ற முடிவில், என்னை ஊருக்கு வரச் சொல்லிக் கடிதம் எழுதினார்கள். நானும் லீவு போட்டு விட்டு சொந்த ஊருக்கு போனேன். எனது இன்னொரு சகோதரி பம்பாயில் இருந்தாள். அவளது கணவர் ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறார். அங்கு அவர்கள் மூலம் எனக்கு ஒரு நல்ல வேலை ரெடியாக இருக்கிறது என்றும் உடனடியாக பம்பாய் போக வேண்டும் என்றும் கூறினார்கள். எப்படியாவது எனக்கும் நெய்வேலியிலிருந்து போய் விட வேண்டும் என்ற எண்ணமும் இருந்தது. எனவே ஊரிலிருந்து கடிதம் மூலமாக எனது பள்ளி வேலையை ராஜினாமா செய்து விட்டு பம்பாய் போய்ச் சேர்ந்து விட்டேன். இப்பொழுது சபை ஐக்கியத்தை விட்டதால், மீண்டும் பாவத்திற்குள் விழுந்து சமாதானமற்ற நிலையில் பம்பாயில் இருந்து வந்தேன். எதிர்பார்த்த வேலையும் கிடைக்கவில்லை.

ஒரு நாள் தமிழ்நாடு பாஸ்டர் திரு. சுந்தர்ராஜ் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதில் நான் தேவ ஆலோசனையை மீறி விட்டேன். தற்பொழுது சமாதானம் இல்லாமல் இருக்கிறேன். எனக்காக ஜெபியுங்கள், என்று எழுதி இருந்தேன். நாட்கள் பல கடந்து விட்டது. திடீரென்று 10-4-78 அன்று தமிழ்நாடு பாஸ்டர் ஐயாவும், தீர்க்கதரிசி ஐயாவும், இன்னும் ஒரு சகோதரரும் நான் பம்பாயில் தங்கி இருந்த வீட்டுக்கு வந்தனர். அப்பொழுது என்னிடம், தேவன் எங்களை உங்களிடம் வரச் சொன்னார். அதோடு உங்களுக்கு ஒரு தேவச் செய்தியும் உள்ளது என்று கூறி ஆதி 19:17ம் வசனம் "உன் ஜீவன் தப்ப ஓடிப்போ, பின்னிட்டு பாராதே" என்று எச்சரிப்பின் செய்தியை கொடுத்தார்கள். நான் தங்கி இருக்கும் பகுதிகளில் சாத்தான் அதிகம் கிரியை செய்வதாகவும் உடனே நெய்வேலி புறப்பட்டுச் சென்று விட வேண்டும் என்றும் கூறினார்கள். அப்படிச் செய்யாத பட்சத்தில் சாத்தான் உயிர் நஷ்டத்தை ஏற்படுத்த முயலுவான் என்றும் கூறி சென்று விட்டார்கள். எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. திடீரென்று புறப்பட்டால் சகோதரி வீட்டில் அனைவரும் கோபித்துக் கொள்வார்கள் என்ற எண்ணம் ஒருபுறம் இருந்தது. அதே சமயம் புதிய எருசலேம் ஊழியர்களுடன் தேவன் பேசுகிறார் என்றும், பலர் அவர்களுடைய செய்திக்கு கீழ்ப்படியாமையால் பலவித நஷ்டங்களை அடைந்துள்ளார்கள் என்பதையும் நான் முன்பே பலர் மூலமாக அறிந்திருந்தேன். அந்த பயம் என் மனதில் இருந்து வந்தது. கடைசியில் எப்படியோ அவர்கள் வந்த 2வது நாளில் நான் பம்பாயைவிட்டு மீண்டும் நெய்வேலி வந்து சேர்ந்து விட்டேன்.

குடும்பத்தில் பெரிய சிக்கலான சூழ்நிலை ஏற்பட்டு இருந்தது. இருந்தாலும் நெய்வேலியில் அனைவரும் தேவனிடம் ஜெபித்து வந்தோம். நெய்வேலியில் நான் விட்டுப் போன வேலை மீண்டும் கிடைக்க தேவன்

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 35 ★ NOVEMBER 1986

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

**இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்.**

**இயேசுகிறிஸ்து: தேவோப்பிறுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7. (அப் 1:1—3).**

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள் — மத் 28:18; மாற்கு 16:15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத் 28:19. [இயேசு மாதிரி (Through action) காண்பித்தார்.]

3. திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28:20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் —யோவா 20:23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21:15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1:5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1கொரி 11:23-26.

நான்: ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்; வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—எபி 9:1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப் 1:1; 10:40-43.

**CHIEF PASTOR N. LAZAR**

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே 4:11-16)

நவம்பர் 1986

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே, நாம ஒரு முடிவு காலத்திற்குள்ளாக வந்திருக்கிறோம். எல்லாம் நிறைவு பெறும் கடைசி காலமாகும் இது. பாவம் பூரணமாகி நியாயத்தீர்ப்புக்கு உலகம் ஆயத்தப்படுகிறது. அது போல பரிசுத்தம் பூரணமாகி நிறைவு பெறும் காலமாகவும் இருக்கிறது. பரிசுத்தாவியின் நிறைவும், உபதேச நிறைவுமே தேவனுடைய மக்கள் பூரணமடைய அவசியமாம். கிறிஸ்தவர்கள் வெவ்வேறு குழுக்களாக பிரிந்து ஒவ்வொரு கூட்டத்தாரும் ஒரு சில உபதேசங்களைக் கைக்கொண்டு அதனால் உண்டாகும் சிற்சில நன்மைகளையும், பரிசுத்தாவியால் உண்டாகும் சிற்சில அனுபவங்களையும், ஆசீர்வாதங்களையும் பெற்றனுபவிக்கிறதினால் அவர்கள் திருப்தி அடைந்து நாம் சரி என்று தங்களைத் தாங்களே தேற்றிக் கொள்ளுகிறார்கள்.

தேவன் தம்முடைய சுவிசேஷத்தினிமித்தம் அருளுகிற தெய்வீக சுகத்தையும் அற்புத அடையாளங்களையும் கண்டனுபவித்து தாங்கள் சரி, தங்கள் உபதேசங்கள் சரி, தங்களோடு தேவன் இல்லாவிட்டால் இவ்விதமாய் நடக்குமா என்று தங்களைத் தாங்களே ஒவ்வொருவரும் தேற்றிக் கொண்டு கர்த்தருடைய சத்தத்திற்கு பரிசுத்தாவியின் உணர்த்துதலுக்கு பூரண சத்தியத்திற்கு கீழ்ப்படியாமல் போகிறார்கள். ஆனபடியால் தேவனுடைய பிள்ளைகள் பாவத்திலிருந்தும் மாய்மாலத்திலிருந்தும், வஞ்சகத்திலிருந்தும் பூரண விடுதலையில்லாமலும், பரிசுத்தமடையாமலும், பூரணமடையாமலும், பூரணப்பட முடியாமலும் இருக்கின்றனர். எல்லாக் கிறிஸ்தவர்கள் மத்தியிலேயும் சில நல்ல அனுபவங்களும் உண்டு சிற்சில பாரம்பரியங்கள் உண்டு. இவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து உண்மையுள்ளவைகளெவைகளோ அவைகளை ஏற்றுக்கொண்டு தவறானவைகளை, மனித அபிப்பிராயங்களை தள்ளிப்போட்டு பரிசுத்தாவியால் உண்டாகும் பற்பல அனுபவங்களையும் ஆசீர்வாதங்களையும், ஆலோசனைகளையும் ஏற்றுக் கொண்டு நாம் பூரணப்பட வேண்டும். அது அந்த சபையினுடைய உபதேசம், இது இந்த சபையினுடைய உபதேசம் என்று தள்ளிவிடாமல் தெய்வீக சிந்தையோடு பூரணப்பட பிரயாசப்படுவோமாக. தவறானவைகளை ஒதுக்கிப் போட ஒரு நிமிஷமேனும் தயங்கக்கூடாது. பரிசுத்தாவியானவருடைய உதவியோடும், வேத வசன வெளிச்சத்திலும் உண்மையை நாம் கண்டு கொள்ளலாம். இஸ்ரவேலின் ஆறுதல் வர மெய்யாய்க் காத்திருந்தவர்களுக்கு கிறிஸ்து வெளிப்படுத்தப்பட்டது போல கர்த்தருடைய வருகைக்கு உண்மையாய் காத்திருக்கிறவர்கள் ஒன்றாய்க் கூட்டப்பட்டு கர்த்தரை அவருடைய இரண்டாம் வருகையில் சந்திப்பார்கள். பூரணமான சபையின்றேல் பூரண இரட்சிப்பும் இல்லை. ஒன்றாய்க் கூடுவோம். அவருடைய வருகையில் அவரைச் சந்திப்போம்.

கிறிஸ்துவுக்குள்

Chief Pastor N. LAZAR

# தசமபாகம் காணிக்கைகள்

"மனுஷன் தேவனை வஞ்சிக்கலாமா? நீங்களோ என்னை வஞ்சிக்கிறீர்கள். எதிலே உம்மை வஞ்சித்தோம் என்கிறீர்கள்? தசம பாகத்திலும் காணிக்கைகளிலுந்தானே" (மல் 3:8)

தேவனுடையதை தேவனுக்கும் ராயனுடையதை ராயனுக்கும் செலுத்துங்கள் என்று இறைவன் இயேசு சொன்னார் (மத் 22:21). ஆனால் இக்காலத்திலே தேவனுக்காக என்னுடைய எல்லாம் என்று சொல்லுகிற விசுவாசிகளிலே, ஊழியர் களிலே, தசமபாகம் செலுத்தாத விசுவாசிகள் ஊழியர்கள் உண்டு. காணிக்கை ஒழுங்காக செலுத்தாதவர்கள் உண்டு. பொருத்தனைகளை மீறி சாபத்தை வாங்கிக் கொள்ளுகிறவர்கள் உண்டு. மனிதன் தேவனை வஞ்சிக்கிறான்.

**தசமபாகம் என்றால் என்ன?**

தசமபாகம் என்றால் பத்தில் ஒன்று 1/10 என்றர்த்தம். நிலத்தின் வித்திலோ மரத்தின் கனியிலோ ஆடுமாடுகளாகிய மிருகஜீவன்களிலோ தசமபாகமெல்லாம் கர்த்தருடையது. அது கர்த்தருக்கே உரியது. அதை கர்த்தருக்கு செலுத்த வேண்டும் (லேவி 27:30–32). இந்த தசமபாக வழக்கம் பாபிலோனியர் போன்ற புறஜாதிகளிலும் இருந்தது. புறஜாதிகள் தங்கள் தேவதைகளுக்கு அவைகளைச் செலுத்தி வந்ததாகத் தெரிகிறது. அப்படியே முற்பிதாக்கள் தேவனுக்கு தசமபாகம் செலுத்தி வந்தார்கள் (ஆதி 14:20; 28:30). மோசேயின் காலத்தில் இது பிரமாணமாக தேவனால் அறிவிக்கப்பட்டது. ஆனால் இஸ்ரவேலர்கள் இதை சரியாய் கடைபிடிக்கவில்லை என்று அறிகிறோம். அதினால்தான் தேவன் மல்கியாவைக் கொண்டு பேசும் போது என்னிடத்தில் திரும்புங்கள் என்றார் (மல்கி 3:7). ஜனங்கள் கேட்டார்கள் எந்த விஷயத்தில் திரும்ப வேண்டும் என்றார்கள். அப்பொழுது தேவன் நீங்கள் தசமபாகத்திலும் காணிக்கைகளிலும் என்னை வஞ்சித்தீர்கள். என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படி தசம பாகங்களையெல்லாம் பண்டகசாலையில் கொண்டுவாருங்கள் என்றார் (மல்கியா 3:7-9).

எபிரேயர்களும், புறஜாதிகளும் தசமபாகம் செலுத்தி வந்ததற்குக் காரணம்:-

1) தேசம் கர்த்தருடையது. நிலங்களெல்லாம் கர்த்தருடையது. ஆனபடியால் நிலத்தின் விளைச்சல்களிலேயும், கனிகளிலேயும் தசமபாகம் செலுத்தி வந்தார்கள்.

2) கடவுள் தங்களை ஆசீர்வதிக்கிற தினிமித்தம் நன்றி ஏறெடுத்தலாக தசமபாகம் செலுத்தினார்கள் (ஆதி28:22).

3) யுத்தங்களிலே ஜெயம் கிடைத்ததற்காக கொள்ளைப் பொருள்களிலேயும் தசமபாகம் செலுத்தி வந்தார்கள் (ஆதி14:17-20).

இஸ்ரவேலர்களுக்குள்ளே தேவனுக்கு ஊழியம் செய்கிற லேவியர்களுக்கும், ஆசாரியர்களுக்கும் தேசத்தில் சுதந்தரம் இல்லை. ஆகையால் இஸ்ரவேலர்களுடைய தசமபாகம் காணிக்கைகளை லேவியர் ஆசாரியர்களுக்கு தேவன் சுதந்தரமாகக் கொடுத்தார். லேவியர்கள் தசமபாகம் வாங்கும் பொழுது அதில் ஒரு பங்காகிய தசமபாகத்தை பிரதான ஆசாரியனாகிய ஆரோனுக்கு செலுத்த வேண்டும் என்று தேவன் கட்டளையிட்டிருந்தார் (எண் 18:20:32). அப்படியே இஸ்ரவேலர்களுடைய முதற்பலன்களும், கர்த்தருடைய காணிக்கைகளில் சில பிரதானமானவைகளும் பிரதான ஆசாரியனைச் சேரும் (எண் 18:8 19; யாத் 23:19; உபா 26:1–11).

கர்த்தருக்கு நன்றி ஏறெடுக்கும்படி செலுத்தப்படுகிற இந்தத் தசமபாகங்களிலே இஸ்ரவேலர்கள் மாறுபாடு செய்தார்கள். இதினிமித்தம் தேவ ஊழியம் தடைபட்டது. தேவாராதனை நிறுத்தப்பட்டது. ஊழியர்கள் தங்களுடைய சொந்த ஊர்களுக்குப் ஓடிப் போனார்கள் (நெகே 13:10–11). இந்தக் காரியத்தில் இஸ்ரவேலர்கள் துரோகம் செய்தபடியினால் அவர்களுக்கு ஆசீர்வாதக்

குறைவு உண்டாயிற்று. தேசத்திலே வறட்சி உண்டாயிற்று (ஆமோஸ் 4:9).

தேவனுடைய ஆசீர்வாத வாக்குத்தத்தங்களெல்லாம் நிபந்தனையோடு கூடியவைகளாகும். தேவனுடைய பிரமாணங்களைக் கைக்கொள்ளுகிறதினால் மாத்திரம் இஸ்ரவேல் ஆசீர்வதிக்கப்படும், உயர்த்தப்படும் (உபா 28:1-14). தசமபாகக் கட்டளையானது ஜீவபிரமாணங்களில் ஒன்று என்று தேவன் சொல்லுகிறார்.

புதிய ஏற்பாடு தசமபாகத்தைக் குறித்து என்ன சொல்லுகிறதென்பதை கர்த்தருடைய வசன வெளிச்சத்திலே பார்ப்போம். புதிய ஏற்பாட்டிலே விசுவாசி என்பவன் கர்த்தருடைய இரத்தத்தினால் மீட்கப்பட்ட கர்த்தருடைய அடிமையாயிருக்கிறான். புதிய ஏற்பாட்டு விசுவாசி புதிய இஸ்ரவேலனாகும். "கிரயத்துக்குக் கொள்ளப் பட்டீர்களே; ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்துங்கள்" (1 கொரி 6:20). நமக்காக செலுத்தப்பட்ட கிரயம்கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய திரு இரத்தமே. "உங்கள் முன்னோர்களால் பாரம்பரியமாய் நீங்கள் அனுசரித்து வந்த வீணான நடத்தையினின்று அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும், பொன்னினாலும் மீட்கப்படாமல் குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக்குட்டியாகிய கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தினாலே மீட்கப்பட்டீர்கள்" (1 பேது 1:18,19). இவ்விதமாய் மீட்கப்பட்ட நாம் கர்த்தருடைய அடிமைகளாயிருக்கிறோம் (1 பேது 2:16). ஆனபடியினால் ஒரு விசுவாசியினுடைய ஆவி, ஆத்துமா, சரீரம் அவனுடைய சொத்து, சுதந்தரம் எல்லாம் கர்த்தருடையதாயிருக்கிறது. இவைகளை கர்த்தருக்கென்றே அவன் பிரயோகிக்க வேண்டும். கர்த்தருடைய சித்தப்படியே உபயோகிக்க வேண்டும். ஒரு இராஜாவுக்கு இன்னொரு ராஜா தன்னை ஒப்புக்கொடுத்தான். அந்த ஒப்புக் கொடுத்தல் அப்படிப் பட்டதாய் இருந்தது. உன்னுடைய வெள்ளியும் பொன்னும் என்னுடையது. உன்னுடைய ஸ்திரீகளும் உன்னுடைய குமாரருக்குள் சமர்த்தராயிருக்கிறவர்களும் என்னுடையவர்களென்று பெனாதாத் சொல்லுகிறான் என்று அவனுக்குச் சொல்லச் சொன்னான்.

இஸ்ரவேலின் ராஜா அதற்குப் பிரதியுத்தரமாக ராஜாவாகிய என் ஆண்டவனே, உம்முடைய வார்த்தையின்படியே நானும் எனக்குண்டான யாவும் உம்முடையவைகள்தான் என்றான் (1 இரா 20:3,4). அப்படியிருக்க புதிய ஏற்பாட்டின் விசுவாசி இது என்னுடையது என்னுடைய இஷ்டப்படி செய்வேன் என்று சொல்லுகிறதற்கு ஒன்றுமில்லை. தசமபாகம் மாத்திரமல்ல, அதிகப்படியாய் நாம் எவ்வளவு கொடுக்கிறோம் என்பதே முக்கியம். அப்படியிருக்க தசமபாகம்கூட செலுத்தாத விசுவாசி ஒரு விசுவாசியேயல்ல.

இன்று சிலர் தசமபாகம் பழைய ஏற்பாட்டின் உபதேசம், அது புதிய ஏற்பாட்டு விசுவாசிக்கல்ல என்று நினைக்கிறார்கள். உங்களுடைய நீதி வேதபாரகர், பரிசேயர் என்பவர்களுடைய நீதியிலும் அதிகமாயிராவிட்டால் பரலோக இராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள், என்று இயேசு சொன்னார் (மத் 5:20). வேதபாரகர் பரிசேயருடைய நீதியென்றும் என்ன? (லூக் 18:9-12, மத் 23:23). அவர்கள் எல்லாவற்றிலேயும் தசமபாகம் செலுத்தினார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. அப்படியானால் நாம் என்ன செய்யவேண்டும்? அவர்களைக் காட்டிலும் அதிகமாய் கொடுக்க வேண்டும் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

ஒருவன் கர்த்தர்மேல் எவ்வளவு அன்பு கூறுகிறான் என்பதை அவன கர்த்தருக்கு எவ்வளவு கொடுக்கிறான் என்பதின் மூலமாக கணிக்கப்படுகிறது. அதிகமாய் அன்பு கூறுகிறவர்கள் அதிகம் செய்கிறார்கள் (லூக் 7:36-48).

ஒரு ஏழை விதவை தனக்கு ஜீவனத்திற்கு உண்டாயிருந்த எல்லாவற்றையும் கர்த்தருக்குச் செலுத்திவிட்டதையும், கர்த்தர் அவளை மெச்சிக்கொண்டதையும் இங்கே நாம் கவனிக்கவேண்டும் (லூக் 21:1-4). நாங்கள் தான் வசனத்தின்படி நடக்கிறோம் என்று சொல்லுகிற அநேகர் தசம பாகம் கொடுக்கிறதில்லை. இன்னும் சிலர் தசமபாகங்களை தங்கள் இஷ்டப்

கிருபையோ அந்தப்பிரகாரமாக உனக்கு உலகப்பிரகாரமான ஆசீர்வாதமும் உண்டாகும். "கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும். அமுக்கி குலுக்கி சரிந்து விழும்படி நன்றாய் அளந்து உங்கள் மடியிலே போடுவார்கள். நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்" (லூக் 6 : 38). "...சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான். பெருக விதைக்கிறவன் பெருக அறுப்பான். அவனவன் விசனமாயுமல்ல, கட்டாயமாயுமல்ல, தன் மனதில் நியமித்தபடியே கொடுக்கக்கடவன்: உற்சாகமாய்க் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார்" (II கொரி 9 : 6, 7).

கர்த்தருக்குக் கொடுப்பது ஒரு விசேஷித்த கிருபையாகும். சிலர் எங்களுக்கு இல்லையே, எங்களுக்கு வருகிற வருவாய் போதுமானதாக இல்லையே என்கின்றனர். இல்லாததின்படியல்ல அவனவன் உள்ளதின்படியே அங்கீகரிக்கப்படும். கொடுக்க வேண்டுமென்ற விருப்பமுண்டாயிருக்கிறவர்கள் தங்களுக்கு இருக்கிறவைகளிலிருந்து அதை இப்பொழுதே, உடனே செய்து நிறைவேற்றி முடிக்க வேண்டும். உள்ளவைகளில் எடுத்து அதை நிறைவேற்று
(II கொரி 8 : 11,12).

மலைஜாதி மக்கள் மத்தியில் ஒரு ஊழியர் ஊழியம் செய்தார். அவர் மிகுந்த வறுமையிலும், கஷ்டத்திலும் கஷ்டப்பட்டு கொண்டிருந்தார். அவரை சந்திக்க ஒரு மிஷனெரி ஊழியர் அங்கே போனார். இவருடைய கஷ்டத்தைப் பார்த்து ஏன் ஐயா இவ்வளவு கஷ்டப்படுகிறீர்? என்று கேட்டார். அதற்கு அந்த ஊழியர் சொன்னார் இந்த ஜனங்கள் மிகவும் ஏழைகள், ஒன்றுமே கொடுப்பதில்லை என்றார். நீர் தசமபாகம் காணிக்கைகளைக் குறித்து இந்த ஜனங்களின் மத்தியில் பிரசங்கித்திருக்கிறீரா? என்று கேட்டார். அவர் இல்லை அப்படி தசமபாகம் காணிக்கைகளைக் குறித்து பிரசங்கித்தால் இந்த ஜனங்கள் ஓடிப் போவார்கள் என்றார். அதற்கு மிஷனரி ஊழியர் நீர் தேவனுடைய பிரமாணத்தை பிரசங்கம் பண்ணும் அப்பொழுது கடவுள் உம்மையும், ஜனங்களையும் ஆசீர்வதிப்பார். அப்படி செய்யாவிட்டால் நான் உமக்கு அனுப்புகிற உதவியை நிறுத்தி விடுவேன் என்று சொல்லி விட்டு போய் விட்டார். ஸ்தல ஊழியர் பயத்தோடும், நடுக்கத்தோடும் தசமபாகம் காணிக்கைகளைக் குறித்து மறு ஞாயிறன்று ஜனங்களுக்குப் பிரசங்கித்தார். ஜனங்கள் கவனமாய் கேட்டுக் கொண்டு இருந்து விட்டு போய் விட்டார்கள்.

மறு ஞாயிற்றுக்கிழமை ஊழியர் ஆராதனை நடத்த ஜெபப்பிறைக்குப் போனார். அங்கே ஒரு பெரிய அதிசயத்தைக் கண்டார். ஜெபப்பிறையின் முன்னால் ஆங்காங்கு குவியல் குவியலாக தானியங்களும்; ஒரு பக்கம் வெள்ளரிக்காய், கத்தரிக்காய் முதலிய காய்கறிக் குவியல்களும், இன்னொரு பக்கம் சில ஆடுமாடுகளும் கட்டியிருக்கக் கண்டார். இவர் போனதும் சிலர் வந்து சில பணங்களும் கையில் கொடுத்தார்கள். அவர் இது என்ன என்றார்? அப்பொழுது அந்த விசுவாசிகள் ஐயா போனவாரம் நீங்கள் பிரசங்கித்தீர்களல்லவா அந்த தசமபாகம் காணிக்கைகளைக் கொண்டு வந்திருக்கிறோம் என்றார்கள். ஊழியர் பிரமித்துப் போனார். அவைகளைக் கொண்டு ஊழியர் தன்னுடைய கஷ்டங்களைப் போக்கிக் கொண்டார். தொடர்ந்து ஜனங்கள் கொடுக்க ஆரம்பித்தார்கள். அந்த சபை வளர்ந்து பெருகி அநேக கிளை சபைகளை போஷிக்கத்தக்கதான பெரிய சபையாய் மாறிற்று.

இந்திய கிறிஸ்தவர்கள் எடுப்பார் கைப்பிள்ளைகள் போல் இருக்கிறார்கள். கொடுப்பதைப் பார்க்கிலும் வாங்குவதே பாக்கியம் என்று எண்ணுகிறார்கள். அநேக ஊழியர்கள் கூலிக்காக மாரடிக்கிறவர்கள் போல இருக்கிறார்கள்.

தன் தகப்பனுடைய திராட்சத்தோட்டத்தில் வேலை செய்கிறவனும் கூலியை எதிர்பார்க்கமாட்டான் கூலியை எதிர்பார்க்கிறவன் கூலியாள், அவன் குமாரனல்ல. மற்றவர்கள் பணம் கொடுக்க நான் ஊழியம் செய்தால் பணம் கொடுத்தவனுக்குத்தான் நான் ஊழியக்காரன் தேவனுடைய ஊழியக்காரன் அல்ல.

இழிவான ஆதாயத்தையே நோக்கமாகக் கொண்டு ஊழியம் செய்கிற ஊழியர்கள் உலகில் அநேகர் தோன்றியுள்ளார்கள். அவர்களுடைய விளம்பரத்தையும், பிரசங்கத்தையும் கவனித்துப் பாருங்கள். வல்லமையோடு தங்களுடைய ஊழியத்தை ஆரம்பித்த அநேகர் பிற்காலத்தில் பிழைப்புக்காக ஏதோ ஒரு ஸ்தாபனத்தில் சேர்ந்துகொண்டு தங்களுடைய பிழைப்பை நடத்த ஆரம்பிக்கின்றனர். இவர்களெல்லாரும் தெய்வீக அழைப்பில்லாதவர்களும், சுய ஆவியின் தூண்டுதலின்படி ஊழியம் செய்கிற தவறான ஊழியர்களாகும். இப்படி செய்து தங்களுடைய வல்லமையையும் ஆதிவெளிப்படுத்தல்களையும், தரிசனத்தையும், பிரதிஷ்டையையும் இழந்த அநேகர் உண்டு.

நீ செய்கிற ஊழியம் கூலிக்காக என்றால் நீ செய்கிற ஊழியத்தின் புண்ணிய பலன் உனக்கு பணம் கொடுத்தவனையே சாரும். பரலோகத்தில் உனக்கு ஒன்றும் கிடையாது. உனக்கு சம்பளம் கிடைக்கவில்லையென்றால், வருவாய் இல்லையென்றால் ஊழியத்தை விட்டுவிடுவாய்.

உண்மையுள்ள ஊழியக்காரனை கர்த்தர் ஒருபோதும் கைவிடுவதில்லை. எலியாவின் தேவன் இப்பொழுதும் ஜீவிக்கிறார். தம்முடைய காகங்களைக் கொண்டு தம்முடைய ஊழியக்காரனைப் போஷிப்பார். உண்மையுள்ள ஊழியர்களுக்கு உதவி செய்கிறவர்களை தேவன் ஆசீர்வதித்து அவர்களுடைய குறைவுகளை நிவிர்த்தி செய்து நிறைவாக்குவார்.

சாறிபாத் ஊர் விதவையை நினைத்துக் கொள்ளுங்கள் (1 இரா 17:1-14). சில ஊழியர்கள் தங்களுக்குக் கீழுள்ள ஊழியர்களுக்கு சம்பளம் கொடுக்கும் பொழுது தசமபாகத்தை எடுத்துக் கொள்ளுகிறதாக கேள்விப்படுகிறோம். எடுத்துக்கொள்ளாதே. கொடுத்து விடு. அவர்கள் தசமபாகம் கொடுக்கட்டும். எடுக்க அதிகாரமில்லை. மேலும் கர்த்தருடைய சந்நிதியில் வெறுங்கையோடே வரவேண்டாம். வாரத்தின் இடைநாளிலே காணிக்கையை ஆயத்தப்படுத்தி கர்த்தருடைய சந்நிதானத்தில் கொண்டுவந்து செலுத்து.

ஞாயிற்றுக்கிழமையன்று காணிக்கை தேடிக்கொண்டிருக்காதே. காணிக்கை இல்லையென்று சொல்லி தேவசமூகத்துக்கு வராமல் இருந்துவிடாதே. கர்த்தருடைய சந்நிதியில் வெறுங்கையோடே வராமல் உன் தேவனாகிய கர்த்தர் உனக்கு அருளிய ஆசீர்வாதத்துக்குத்தக்கதாக அவனவன் தன் தன் தகுதிக்கேற்றபடி காணிக்கையை கொண்டு வரக்கடவன் (உபா 16:17). என் சந்நிதியில் வெறுங்கையாய் வர வேண்டாம் (யாத் 23:15). உன் நிலத்தின் முதல் விளைச்சலின் முதல் கனியை உன் தேவனாகிய கர்த்தருடைய ஆலயத்துக்குக் கொண்டு வருவாயாக (யாத் 23:19).

ஊழியர்கள் தங்களுக்கு கர்த்தர் அருளும் ஆசீர்வாதத்தை தங்கள் இஷ்டப்படி தங்கள் உற்றார் உறவினர்களுக்கு கொடுக்கக் கூடாது. தாங்கள் உதவி செய்யக்கடமைப்பட்ட பெற்றோர் உற்றாருக்கு உதவி செய்யலாம். ஆனால், அவர்கள் கர்த்தருடைய காணிக்கைகளை விரயமாக்காதபடிக்கு கவனமாய் இருக்கவேண்டும். தங்களுக்கு கர்த்தர் அருளுகிற ஆசீர்வாதங்களை தங்களுடைய உறவினர்கள் தெரிந்தவர்கள் பழக்கமானவர்கள் என்று பகிர்ந்து கொடுக்கக் கூடாது. அவர்கள் அதில் ஒன்றையும் விற்கவும், தேசத்தின் முதல் விளைவை மாற்றவும், மற்றவர்களுக்கு கொடுக்கவும் தகாது. அது கர்த்தருக்குப் பரிசுத்தமானது (எசேக் 48:14).

நீ தேவனை வஞ்சித்துக் கொண்டிருக்கிறாயா? தசமபாகம் கொடுக்கிறாயா? இல்லையென்றால் உடனே அதை ஆரம்பித்து நிறைவேற்று. "முதலாவது தேவனுடைய இராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்" (மத் 6:3). கர்த்தர் உன்னை ஆசீர்வதிப்பார்.

(தொடரும்...)

# பக்தி வைராக்கியம்

"..பக்தியுள்ளவன் அற்றுப் போகிறான்... .." சங் 12:1.

பக்தியுள்ளவர்கள் பக்தி அற்று, கர்த்தரைவிட்டு பின் சென்று விடுகின்ற இந்த நாட்களில் பக்தியுள்ள நம்மை கர்த்தர் தமக்கென்று தெரிந்து கொண்டார் (சங் 4:3). கர்த்தர் நம்மை தெரிந்து கொண்டார் (உபா 7:6). அவரை சேவிக்கும்படியாக, அவரை தொழுது கொள்ளும் படியாக, அவர் பாதையில் நடக்கும் படியாக. இப்படியாக மெய் தெய்வத்தினிடம் வந்தவர்களாகிய நாம், நமது பக்தியில் விருத்தி அடைய வேண்டும் என கர்த்தர் விரும்புகிறார். நமது பக்தி நாளுக்கு நாள் விருத்தியடைந்து (எப்படி குழந்தை பருவம், வளர்ந்து வாலிபமாக மாறுகின்றது) இந்தப் பக்தியில் வைராக்கியம் உடையவர்களாக காணப்பட வேண்டும் என்பதே கர்த்தரின் வாஞ்சை.

இந்தக் கடைசி நாட்களில் நாம் நமது பக்தி வைராக்கியத்தை (1) நம்மை தெரிந்து கொண்ட கர்த்தர் மீதும், (2) தேவன் தெரிந்து ஏற்படுத்திய சபை மீதும், (3) தேவன் ஏற்படுத்திய அப்போஸ்தலர்கள் மீதும், (4) மெய்யான உபதேசத்தின் மீதும் காண்பிக்க வேண்டும் என கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வாஞ்சிக்கின்றார். ஏனென்றால் இந் நாட்களில் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு பக்தி வைராக்கியம் உள்ள ஊழியர்களும், ஆத்துமாக்களும் தான் தேவை.

**(1) நம்மை தெரிந்து கொண்ட கர்த்தர் மீது பக்தி வைராக்கியம் :-**

இஸ்ரவேல் ஜனங்கள் பாவம் செய்தார்கள். கர்த்தரின் கட்டளையை மீறி நடந்தார்கள். கர்த்தரின் கட்டளை, என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். அதை நமஸ்கரிக்கவும், சேவிக்கவும் வேண்டாம் என்பதும், விபச்சாரம் செய்யாதிருப்பாயாக என்பதும் (உபா 5:7-9, 5:18). ஆனால் இஸ்ரவேல் ஜனங்கள் ஒரே வேளையில் இந்த பாவங்களைச் செய்தனர் (எண் 25:1,2). எனவே பாவத்தை விரும்பாத கர்த்தரின் கடுங் கோபம் இஸ்ரவேல் ஜனங்கள் மீது உண்டானது (எண் 25:4).

மோசே ஜனங்களுக்கு கட்டளையிட்டார். அந்தக் கட்டளையைக் கேட்ட மாத்திரத்தில், ஆரோனின் குமாரனான எலெயாசாரின் மகன் பினெகாஸுக்கு பக்தி வைராக்கியம் உண்டானது. பக்தி வைராக்கியத்தினால் விபச்சாரம் செய்த ஒரு இஸ்ரவேல் மனிதனின் அறைக்குள் புகுந்து ஈட்டியைக் கொண்டு குத்தினான். எனவே விபச்சாரம் செய்த இருவரும் மாண்டனர். அதனால் வாதை நிறுத்தப்பட்டது. இந்த வாதையால் ஒரே நாளில் இருபத்து மூவாயிரம் பேர் மாண்டனர் (1 கொரி 10:8). வாதையால் செத்தவர்கள் இருபத்துநாலாயிரம் பேர் (எண் 25:9) இப்படியாக பினெகாஸ் பக்தி வைராக்கியம் காண்பித்தபடியால் அவருக்கும் அவர் சந்ததிக்கும் நித்திய ஆசாரியப் பட்டத்திற்குரிய உடன்படிக்கை உண்டானது (எண் 25:13).

அது மட்டுமின்றி பக்தராகிய மோசே, இவர் பக்தி வைராக்கியமுள்ள மனிதர் என கண்டு யுத்த களத்திற்கும் அனுப்புகிறார் (எண் 31:6) இந்தப் பிரகாரம் நமது பக்தி வைராக்கியமானது கர்த்தர் மீது இருக்க வேண்டும். நமது கிரியைகளில் காண்பிக்க வேண்டும். பக்தி வைராக்கியம் காண்பித்த பினெகாஸுக்கும் அவர் சந்ததிக்கும் மெய் தெய்வத்திற்கு ஊழியம் செய்யும்படியான கிருபை கிடைத்தது. இதைக் குறித்து சங்கீதக்காரர் இப்படி சொல்லுகிறார். "அப்பொழுது பினெகாஸ் எழுந்து நின்று நியாயஞ் செய்தான்; அதினால் வாதை நிறுத்தப்பட்டது அது தலைமுறை தலைமுறையாக என்றைக்கும் அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது (சங் 106:30, 31).

**(2) கர்த்தர் தெரிந்துகொண்ட சபை மீது :-**

சங்கீதக்காரராகிய தாவீது ராஜா சொல்லுகிறார் "உம்முடைய வீட்டைக் குறித்து உண்டான பக்தி வைராக்கியம் என்னை பட்சித்தது..." (சங் 69:9). கர்த்தர்

தெரிந்து கொண்ட கர்த்தரது வீடாகிய சபை மீது, சீயோனாகிய சபை மீது, எருசலேம் மீது நமது பக்தி வைராக்கியமும் இருக்க வேண்டும்.

நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து எருசலேம் தேவாலயத்திலே, ஆடுகள், மாடுகள், புறாக்களாகிய இவைகளை விற்கிறவர்களையும், காசுக்காரர் உட்கார்ந்திருக்கிறதையும் கண்டு, கயிற்றினால் ஒரு சவுக்கையுண்டு பண்ணி, அவர்கள் யாவரையும் ஆடு மாடுகளையும் தேவாலயத்துக்குப் புறம்பே துரத்தி விட்டு, காசுக்காரருடைய காசுகளைக் கொட்டி, பலகைகளைக் கவிழ்த்துப்போட்டு, புறா விற்கிறவர்களை நோக்கி இவைகளை இவ்விடத்திலிருந்து எடுத்துக் கொண்டு போங்கள்;என் பிதாவின் வீட்டை வியாபார வீடாக்காதிருங்கள் என்றார்(யோவா2:13-17). இப்படியாக நாமும் தேவன் தெரிந்து கொண்ட சபை மீது பக்தி வைராக்கியம் உடையவர்களாக காணப்பட வேண்டும். சபையை சுத்திகரிக்க வேண்டும்.

**(3) கர்த்தர் நியமித்த அப்போஸ்தலர்கள் மீது :-**

உதாரணமாக அப். பவுல் விஷயத்தைப் பார்க்கலாம். அப். பவுல் மீது கொரிந்து சபையார் வைத்திருந்த பக்தி வைராக்கியத்தை பக்தனாகிய தீத்து பார்த்து மக்கதோனியாவில் இருந்த அப். பவுலிடம் வந்து சொல்லுகிறார். இதை அறிந்த அப். பவுல் சரீரத்தில் இளைப்பாறுதல் ஒன்றுமில்லாமல், உபத்திரவப்பட்ட போதும், புறம்பே போராட்டமும் உள்ளே பயமும் இருந்த பொழுது கொரிந்து சபை மக்கள் உங்கள் மீது பக்தி வைராக்கியத்துடன் இருக்கிறார்கள் என தீத்து சொன்ன பொழுது ஆறுதல் அடைந்தாராம் (IIகொரி 7:7).

அப்போஸ்தலர் மீது சபை மக்கள் பக்தி வைராக்கியம் காண்பித்ததினால் ஊழியக்காரரும் சந்தோஷப்பட்டாராம் (தீத்து) அதைக்குறித்து கேள்விப்பட்ட அப்போஸ்தலரும் சந்தோஷப்பட்டாராம். அடுத்து கலாத்திய சபை மக்களைக் குறித்து அவர் எழுதும் போது, நான் சரீர பலவீனத்தோடு முதலாந்தரம் உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேன். அப்படியிருந்தும், என் சரீரத்தில் உண்டாயிருக்கிற சோதனையை நீங்கள் அசட்டை பண்ணாமலும், அரோசிக்காமலும், தேவதூதனைப் போலவும், கிறிஸ்து இயேசுவைப் போலவும் என்னை ஏற்றுக் கொண்டீர்கள். அப்பொழுது நீங்கள் கொண்டிருந்த ஆனந்த பாக்கியம் எங்கே? உங்கள் கண்களை பிடுங்கி எனக்கு கொடுக்கக்கூடுமானால் அப்படியும் செய்திருப்பீர்கள் என்று உங்களுக்கு சாட்சியாயிருக்கிறேன் என்று அப்.பவுல் சொல்லுகிறார் (கலா 4:15). சபை மக்கள் அப்போஸ்தலர் மீது தங்களது பக்தி வைராக்கியத்தை வைத்திருந்தார்கள் என வேதம் நமக்குப் போதிக்கின்றது. எனவே நாமும் தேவன் இந்த கடைசி நாட்களில் ஏற்படுத்தி இருக்கின்ற அப்போஸ்தலர்கள் மீதும் நமது பக்தி வைராக்கியத்தை காண்பிக்க வேண்டும். இதன் மூலம் நமது ஊழியர்களும், ஆறுதலும், சந்தோஷமும் அடைவர். நமது பக்தி வைராக்கியத்தைக் குறித்துக் கேள்விப்படும் அப்போஸ்தலர்களும் ஆறுதல் அடைவார்கள்.

4) நம்முடைய பக்தி வைராக்கியம் கர்த்தருடைய வசனத்தின் மேல் இருக்க வேண்டும். என் சத்துருக்கள் உம்முடைய வசனங்களை மறந்தபடியால் என் பக்தி வைராக்கியம் என்னை பட்சித்தது என்று சங்கீதக்காரன் சொல்லுகிறார் (சங் 119:139). தேவனுடைய பிள்ளையாகிய நாம் தேவனுடைய வசனத்தைக் கண்களைப் போல பாதுகாக்க வேண்டும். சாத்தானுடைய வெற்றி தேவனுடைய வசனத்தின் கூரை மழுக்குவதிலும், தேவனுடைய வசனத்திற்கு மாறாக வேறொன்றைச் செய்யச் சொல்வதிலும் தான் இருக்கிறது. தேவனுடைய வார்த்தையின் அர்த்தத்தை அப்படியல்ல, இப்படியென்று திரித்து கூறுவதில் சாத்தானுடைய வெற்றி அடங்கியிருக்கிறது. நாம் கர்த்தருடைய வசனத்தை தியானிக்கும் பொழுது வசனத்தின் அர்த்தத்தை இருக்கிற பிரகாரம் அப்படியே ஒப்புக்கொள்வதும், அதனுடைய ஆவிக்குரிய அர்த்தத்தையும் ஏற்றுக் கொண்டு கைக்கொள்வதும் அவசியம். சாத்தான் வசனத்தை தவறாய் உபதேசிப்பதினாலும், மறைப்பதினாலும் அதனுடைய கூரை மழுங்கச் செய்வதினாலும் மக்களை மேற்கொள்ளுகிறான்.

நாமோ தேவனுடைய வசனத்திற்காக பக்தி வைராக்கியமாக இருக்க வேண்டும். தேவனுடைய வசனமே சத்தியம். அதைக் கைக்கொள்வதினால் மிகுந்த பலன் உண்டு. நியாயத்தீர்ப்பு திருவசனத்தைக் கொண்டே நடைபெறப் போகிறது. என்னைத் தள்ளி என் வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளாதவனை நியாயந்தீர்க்கிறதொன்றிருக்கிறது. நான் சொன்ன வசனமே அவனை கடைசி நாளில் நியாயந்தீர்க்கும் (யோவா 12:48).

பலவிதமான சடங்காச்சாரங்களும், பழக்க வழக்கங்களும் பெரிய மனிதர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற மனிதர்களுடைய ஆலோசனைகளும், அபிப்பிராயங்களும் இன்றைய கிறிஸ்தவ சபைகளில் நடமாடுகின்றன. இவைகளை நாம் பகுத்தறிய வேண்டும். தேவனுடைய வசனத்தைக் கொண்டு சோதித்து அறிய வேண்டும்.

நம்முடைய மனந்திரும்புதல் தேவனுடைய வசனத்தின் படி ஆனதுதானா? நம்முடைய விசுவாசம் வசனத்தின்படி ஆனது தானா? நம்முடைய ஞானஸ்நானம் வசனத்தின்படியானதுதானா நம்முடைய ஆராதனை ஐக்கியம் வசனத்தின்படியானது தானா? நம்முடைய ஆவிக்குரிய வாழ்க்கை வசனத்தின்படி சரியானதுதானா? என்று சோதித்துப் பார்த்து தேவனுடைய வசனத்தின் மேல் பக்தி வைராக்கியம் உள்ளவர்களுமாய் தேவனுடைய வசனத்தைக் கைக்கொள்ளுவோமாக. உபதேசசட்டத்திற்கு பக்தி வைராக்கியம் உள்ளவர்களாக இருப்போமாக. அன்றியும் சகோதரரே கற்றுக் கொண்ட உபதேசத்திற்கு விரோதமாய் பிரிவினைகளையும், இடறல்களையும் உண்டாக்குகிறவர்களைக் குறித்து எச்சரிக்கையாயிருந்து அவர்களை விட்டு விலக வேண்டுமென்று உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன் (ரோம 16:17). உமது வசனத்தை காத்துக் கொள்ளாத துரோகிகளை நான் கண்ட போது எனக்கு அருவருப்பாய் இருந்தது (சங்க 119:158). பொய்யைப் பகைத்து அருவருக்கிறேன். உம்முடைய வேதத்தையோ நேசிக்கிறேன் (சங் 119:163). என்னுடைய கரம் இவைகளையெல்லாம் சிருஷ்டித்ததினால் இவைகளெல்லாம் உண்டாயின என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனாலும் சிறுமைப் பட்டு, ஆவியில் நொறுங்குண்டு என் வசனத்துக்கு நடுங்குகிறவனையே நோக்கிப் பார்ப்பேன் (ஏசா 66:2)

நாம் நம்முடைய தேவன் மீதும் சபை மீதும் அப்போஸ்தலர்கள் மீதும் தேவனுடைய வசனத்தின் மீதும் பக்தி வைராக்கியம் வைத்து அதை நமது கிரியைகள் மூலம் காண்பிக்க வேண்டும் என கர்த்தர் விரும்புகிறார். பக்தியுள்ளவனைக் கர்த்தர் தமக்கென்று தெரிந்து கொண்டார்.

---

'இரட்சியும் கர்த்தாவே, பக்தியுள்ளவன் அற்றுப்போகிறான். உண்மையுள்ளவர்கள் மனுபுத்திரரில் குறைந்திருக்கிறார்கள்'.

சங்12:1

---




## யாத்திராகமம் – புறப்படுதல்

யாத்திராகமம் தேவனுடைய மனுஷனாகிய மோசேயினால் கி. மு. 1450-ல் எழுதப்பட்டது. தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட ஜனம் எகிப்தின் அடிமைத்தனத்தில் சிக்குண்டு, நெருக்கப்பட்டுக் கொண்டிருந்தது. அங்கேயிருந்து தேவன் அவர்களை பஸ்கா பலியினால் விடுதலையாக்கி சிவந்த சமுத்திரத்தை கடந்து வனாந்திர மார்க்கமாய் கானானுக்கு நேரே யாத்திரையாகப் புறப்பட்டு போகச் செய்தார். இதனுடைய முக்கிய நோக்கம், தேவன் பிதாக்களுக்கருளிய வாக்குத்தத்த தேசத்தை அவர்கள் அடைந்து கொள்ள அவர்களை வழி நடத்தினதே.

அநேக வருஷங்களாய் ஒழுங்கான வழிபாடின்றி அடிமைகளாய் இஸ்ரவேலர்கள் ஜீவித்ததால் சீர்கெட்ட ஜனங்களாய் இருந்தனர். ஆவிக்குரிய வாழ்க்கையை தேவன் அவர்களுக்கு பயிற்றுவிக்க வேண்டும். அவர்கள் தம்மை எப்படி நம்பவேண்டுமென்றும், தமக்கு எப்படி கீழ்ப்படிய வேண்டுமென்றும் கடவுள் அவர்களை பயிற்சி செய்ததைக் குறித்து யாத்திராகமத்தில் படிக்கிறோம்.

யாத் 1:1-7: யோசேப்பின் காலத்தில் எகிப்துக்குப் போன இஸ்ரவேலர்கள் எழுபது பேர். யோசேப்பும் அந்த தலைமுறையார் யாவரும் எகிப்திலே மரணமடைந்தனர். இஸ்ரவேல் புத்திரர் மிகுதியும் பலுகி ஏகமாய் ஒரு பலத்த ஜாதியாய் எகிப்திலே பரவியிருந்தார்கள்.

யாத் 1:8-14: யோசேப்பை அறியாத இராஜன் ஒருவன் எகிப்திலே தோன்றினான். அவன் இஸ்ரவேல் ஜனங்களைப் பகைத்து அவர்களை ஒடுக்கினான். அவர்களை அடிமைகளைப் போல் நடத்தி, அவர்கள் மேல் விசாரணைக்காரரை ஏற்படுத்தினான். இஸ்ரவேலர்களைக் கொண்டு பண்டகசாலைகளையும், பட்டணங்களையும் கட்டினான். எகிப்தியர்கள் இஸ்ரவேலரை கொடுமையாய் நடத்தினார்கள். இஸ்ரவேலர்களுக்கு நெருக்கம் உண்டாயிற்று. அவர்களுக்கு தங்கள் ஜீவனும் கசப்பாய் அயிற்று.

யாத் 1:15-22: மேலும் பார்வோன் சிப்பிராள், பூவாள் என்னும் எபிரேய மருத்துவச்சிகளோடு பேசி இஸ்ரவேல் ஸ்திரீகள் கர்ப்பஸ்திரீகளாயிருந்து பிள்ளை பிறக்கும் பொழுது ஆண்பிள்ளைகளாயிருந்தால் கொன்றுபோடவும், பெண் பிள்ளைகளாய் இருந்தால் உயிரோடு வைக்கவும் கட்டளையிட்டான். இவ்விதமாய் சாத்தான் தேவ ஜனங்களை அழித்துப் போடும்படியாக அவர்களைக் கொடுமையாய் நடத்தினான். மருத்துவச்சிகளோ தேவனுக்குப்பயந்ததினால் ஆண்பிள்ளைகளை உயிரோடே வைத்தார்கள். அதை அறிந்த பார்வோன் இஸ்ரவேலின் ஆண்பிள்ளைகளைக் கண்டால் கொன்றுபோடும்படி நதியிலே போட்டு விடவும், பெண்பிள்ளைகளைத் தப்பவிடவும் தன் ஜனங்கள் எல்லாருக்கும் கட்டளையிட்டான்.

(தொடரும்)

---

'அன்றைய தினமே கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை அணி அணியாய் எகிப்து தேசத்தில் இருந்து புறப்படப் பண்ணினார்'

—யாத் 12:51.

---

## மோட்ச வழி

### குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

குரு: கிறிஸ்தவன் ஒவ்வொருவனும் தம்முடைய பிதாவாகிய தேவனை நோக்கி ஒருமனப்பட்டு ஜெபிக்க தெரிந்திருக்க வேண்டும். இது மிகவும் அவசியமானதாகும்.

சிஷ்ய: ஒருமனப்படுகிறதென்றால் என்ன? ஜெபிக்கும் பொழுது மனம் பலவாறாக குழம்பிப் போகிறதே அதற்கு என்ன செய்யவேண்டும்?

குரு: தம்முடைய வாழ்க்கை தேவனுக்குப் பிரியமான வாழ்க்கையாக இருக்க வேண்டும். பகல் வேளைகளில் நாம் எந்த வேலை செய்தாலும் தம்முடைய சிந்தனையெல்லாம் தேவன்

பேரில் இருக்க வேண்டும். தெய்வீக காரியங்களைச் சிந்திக்க வேண்டும். செய்கிற வேலையில் ஈடுபாடு உள்ளவர்களாக இருக்க வேண்டும். நம்முடைய மனமானது கிளை விட்டு கிளை தாவும், ஒரு மரம் விட்டு இன்னொரு மரம் தாவும் குரங்கைப் போல இருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்தி தேவன் பேரில், தெய்வீக காரியங்களின் பேரில் சிந்தையாய் இருக்க பழக்குவிக்க வேண்டும். தேவனுடைய வசனத்தை சிந்திக்க வேண்டும். அவருடைய வழியை சிந்திக்க வேண்டும். இப்படி தேவனைச் சுற்றியும், அவருடைய காரியங்களைப்பற்றியும் நம்முடைய மனம் சுழன்றுகொண்டிருக்குமானால், நாம் ஜெபிக்க முழங்கால் படியிட்டவுடனே நம்முடைய மனமானது தேவனைப்பற்றி சிந்தித்து ஜெபிக்க ஆயத்தமாகி விடும். அப்படியில்லாமல் பகல் முழுவதும் கண்ணு பின்னு என்று கண்டதையும் சிந்தித்து மனதை அலையவிட்டு, அப்படியே பாவ ஜீவியம் செய்துவிட்டு ஜெபிக்கப் புறப்பட்டால் மனமானது தான் சுற்றி வந்த இடங்களெல்லாம் அலைய ஆரம்பிக்கும். பிறகு ஒருமனம் உண்டாகவில்லை என்று சொல்வதில் அர்த்தமில்லை.

**சிஷ்ய:** வாழ்க்கையில் ஏற்படும் பாதிப்புகள், துக்க சம்பவங்கள், கவலைகள் மனதை ஆட்கொண்டு ஜெபிக்கும் பொழுது அவைகளே ஞாபகம் வருகிறதே அதற்கு என்ன செய்ய வேண்டும்?

**குரு:** ஜெபிக்க ஆரம்பித்ததும் பிதாவின் முன்னிலையை உணர்ந்து இயேசுவின் நாமத்தினால் பிதாவை ஸ்தோத்தரிக்க ஆரம்பிக்க வேண்டும். தேவனை மகிமைப்படுத்த வேண்டும். தேவன் நமக்கு செய்திருக்கிற நன்மைகள், உதவிகள், ஆகாரங்கள், பாதுகாப்புகள், நல்லுணர்வுகள், ஆலோசனைகள் இன்னும் தங்களுக்கும், பிறருக்கும், திருச்சபைக்கும் தேவன் செய்திருக்கிற நன்மைகளுக்காக தேவனை ஸ்துதிக்க வேண்டும். இப்படி நீண்ட நேரம் செய்துவிட்டு பின்பு ஜெபிக்க மனதை அமைதிபடுத்தி துவங்க வேண்டும். அப்படி ஜெபிக்கும் பொழுது மனதில் வருகிற, மனதில் ஏற்கனவே பாதிப்புண்டாயிருக்கிற காரியங்கள் ஞாபகத்திற்கு வந்தால் அவைகள் ஒவ்வொன்றோடும் பேசி அவைகளுக்குப் பதில் கொடுக்க வேண்டும்.

பின்பு அடுத்த காரியம் ஞாபகத்திற்கு வந்ததென்றால் அதற்கும் பேசி முடிவு செய்ய வேண்டும். இப்படி ஒவ்வொரு காரியமாக ஞாபகம் வருகிறவைகளுக்குப் பதில் கொடுக்க வேண்டும். இப்படி செய்து மனதில் ஞாபகம் வருகிற எல்லாவற்றிற்கும் முடிவு செய்ய வேண்டும். இப்பொழுது மனதில் எந்த எண்ணமும் இல்லாமல் காலியாகி மனம் ஒருமனப்படும். இப்பொழுது நீங்கள் பிரார்த்திக்கலாம். உங்களுடைய ஜெபம் திட்டமாகவும், தெளிவாகவும் இருக்கும். முதலாவது தேவனை ஸ்தோத்தரித்து தேவனுடைய காரியமாய் ஜெபம் பண்ணுங்கள். இரண்டாவது திருச்சபையின் பரிசுத்தவான்களுக்காய், சபையாருக்காய் ஜெபம் பண்ணுங்கள். இரண்டாவது திருச்சபையின் பரிசுத்தவான்களுக்காய், சபையாருக்காய் ஜெபம் செய்யுங்கள். பின்பு உங்களுக்காகவும், ஏவப்படுகிற காரியங்களுக்காகவும் ஜெபிக்கலாம். மனதில் ஞாபகத்தில் வருகிற காரியங்களை எதிர்த்துப் போராடுவதைப் பார்க்கிலும் அவைகளை மனதில் வரவிட்டு, அவைகளுக்காய் ஜெபித்து முடிவுகட்டி விட்டால் அவைகள் அகன்றுவிடும். பின்பு அடுத்த காரியத்திற்கும் அப்படியே செய்யவேண்டும். இப்படிசெய்து மனதில் தோன்றுகிற எண்ணங்களுக்கு முடிவுகட்டி விட்டால் பின்பு ஜெபிக்க ஜெப ஆவி நம்மில் கிரியை செய்யும்.

மனக்கட்டுபாடு உள்ளவர்கள் மனதில் வேறு எண்ணங்கள் வரவிடாதபடி தடுத்துவிட்டு தாங்கள் ஜெபிக்க வேண்டுமென்று எண்ணுகிற எண்ணங்களையே தேவனிடம் வைத்து ஜெபித்து வெற்றி அடைய முடியும்.

(தொடரும்)

---

'அவன் இப்பொழுது ஜெபம் பண்ணுகிறான்'

– அப் 9:11

---

# அவர் கர்த்தர் நீ ஜெபம் பண்ணு.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பூமியிலிருந்த நாட்களில், அவர் தொட்டவுடன் குஷ்டரோகி சுகமானான், குருடன் பார்வையடைந்தான், ஊமையன் பேசினான். அவர் ஒரு வார்த்தை சொன்ன உடனே பிசாசுகள் ஓடினது. வியாதியஸ்தர் குணமானார்கள், மரித்தவன் உயிரோடே வந்தான், முடவன் குதித்தெழுந்து நடந்தான். சீஷர்களுக்கும் இப்படிப்பட்ட அதிகாரங்களை கொடுத்திருந்தார் அதன்படியே அவர்களும் கிரியை நடப்பித்து வந்தார்கள்.

ஆனாலும் கர்த்தரைப்போல எல்லா சமயங்களிலும் சொன்ன உடனே பிசாசுகள் விலகவோ, வியாதிகள் சுகமாகவோ இல்லை. ஆனால் அதை செய்யும்படி அதிகாரம் இருந்தது. பெற்ற அதிகாரம் செயல்படுவதற்கு இவர்கள் ஜெபம் பண்ண வேண்டியதாயிருந்தது. உதாரணமாக: ஊமையும் செவிடுமான ஆவி பிடித்த ஒரு பையனை சீஷர்களிடத்தில் சுகம் பெறும்படி கொண்டு வந்தார்கள். ஆனால் சீஷர்களாலே அந்த ஆவியை துரத்தி விடமுடியவில்லை. ஆனால் கர்த்தர் அந்த இடத்துக்கு வந்து, அந்த ஆவியை அந்தப் பையனை விட்டு போகும்படி அதட்டினார். உடனே அந்த ஆவி அந்தப் பையனை விட்டு விலகிவிட்டது. சீஷர்கள் எங்களால் ஏன் துரத்தமுடியவில்லை, எங்களுக்கு அதிகாரம் கொடுத்திருந்தீரே என்று அதின் காரணத்தை அறியும்படி கேட்டார்கள். அதற்கு அவர்: இவ்வகைப் பிசாசு ஜெபத்தினாலும், உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டு போகாது என்றார் (மாற்கு 9:17-29).

ஆகவே சில காரியங்களுக்காய் ஜெபித்த உடனே காரியம் கைகூடிவரும். ஆனால் எல்லாக் காரியங்களுக்கும் அப்படியே நடக்க வேண்டும் என்றெதிர்பார்க்க கூடாது. சூரிய வெளிச்சத்திற்கும், சந்திர நட்சத்திர வெளிச்சத்திற்கும் வித்தியாசம் உண்டல்லவா. அப்படியே கர்த்தருடைய வல்லமைக்கும், நம்முடைய வல்லமைக்கும் வித்தியாசமுண்டு. ஆகையால் திரும்பத் திரும்ப ஜெபம் பண்ணி காரிய சித்தி பெற முடியும். எலியா தீர்க்கதரிசிக்கு கர்த்தர் கட்டளை கொடுத்து அனுப்பினார்.

எலியாவுடைய வார்த்தையில்லாமல் தேசத்தில் மழை பெய்யாது என்று கர்த்தர் சொல்லியிருந்தார் (I இரா 17:1, 18:1). எலியா மலை உச்சியின் மேல் ஏறி தரையிலே பணிந்து தன் முகம் தன் முழங்காலில் படக் குனிந்து ஜெபம் பண்ணிவிட்டு தன் வேலைக்காரனை நோக்கி நீ போய் சமுத்திர முகமாய்ப் பார் என்றார். அவன் போய் பார்த்துவிட்டு வந்து ஒன்றுமில்லை என்றான். நீ இன்னும் ஏழுதரம் போய் பார் என்றார். ஏழாம் தரம் போய் பார்க்கையில் உள்ளங்கையளவு மேகம் எழும்புவதைக் கண்டான். எலியா ஜெபத்தை முடித்து விட்டு மழைக்குத் தப்ப ஓட ஆரம்பித்தார் (I இரா 18:42-26, யாக் 5:18).

பாருங்கள், எலியா திரும்பத் திரும்ப ஜெபம் பண்ணினார். கருத்தாய் ஜெபம் பண்ணினார். ஜெபம் கேட்கப்பட்டது.

ஆகவே தேவனுடைய பிள்ளைகள் எதையாகிலும் தேவனிடமிருந்து பெற்றுக் கொள்ள விரும்பினால் ஜெபம் பண்ண வேண்டும். திரும்பவும் ஜெபம் பண்ண வேண்டும். திரும்பத்,திரும்ப ஜெபம் பண்ண வேண்டும். காரியம் கைகூடும் வரை ஜெபம் பண்ண வேண்டும். சோர்ந்து போகக் கூடாது. ஜெபத்தை விட்டு விடக் கூடாது. ஜெபம் ஜீவனைக் கொடுக்கும்.

'அவர் உன் இருதயத்தின் வேண்டுதல்களை உனக்கு அருள் செய்வார்'

—சங்37:4.

மாதர் பகுதி

# குடும்பம்

## புருஷனும், மனைவியும்

(தொடர்ச்சி)

அன்று சாயங்காலம் நல்லதம்பி தன் மனைவியிடம் தான் ஒரு அவசர காரியமாக வெளியூர் போவதாகவும், இன்று இரவு வர முடியாது நாளைதான் வர முடியும் என்று மாறுபாடாய் சொல்லிவிட்டு போய் விட்டான். போய் தன் சோரநாயகியிடம் நடந்த சம்பவங்களைச் சொன்னான். அவள் பேசாதிருந்தாள். சரியாக இரவு ஒன்பதரை (9½) மணிக்கு நல்லதம்பி ஒரு பெரிய கொடுவாளுடன் தன்னுடைய வீட்டின் கொல்லைப்புறத்தில் நிறுத்தியிருந்த கூண்டு வண்டிக்குள் வந்து ஒளிந்து இருந்து கொண்டான். வண்டியின் இடுக்கு வழியாய் மனைவியின் படுக்கை அறையை கவனித்துக் கொண்டிருந்தான்.

மணி பத்தும் (10) ஆயிற்று. பத்தரையும் (10½)யும் ஆயிற்று ஒரு ஆள் நடமாட்டத்தையும் காணவில்லை. சரியாக (10½) பத்தரை மணி இருக்கும். நல்லதம்பியுடைய சிறிய மகன் பாக்கியநாதன் அழ ஆரம்பித்து விட்டான். அப்பொழுது நல்லதம்பியினுடைய மனைவியாகிய எஸ்தர் எழுந்து கைவிளக்குடன் மகன் படுத்திருந்த பக்கமாக வந்தாள். பையன் எழுந்து உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான். எஸ்தர் விளக்கை ஜன்னல் புறமாக வைத்து விட்டு சிறுவன் பக்கமாக உட்கார்ந்து அவனைத் தட்டிக் கொடுத்து தூங்க வைக்க ஆரம்பித்தாள். நல்லதம்பி வண்டியை விட்டு எழுந்து வந்து ஜன்னல் பக்கமாக நின்று கவனிக்க ஆரம்பித்தான். பையன் தன் தாயை ஏறிட்டுப் பார்த்து தாய் அழுகிறதைக் கண்டு தன்னுடைய தகப்பனார் வீட்டில் இல்லாததினால்தான் அம்மா அழுகிறார்கள் என்று நினைத்து அம்மாவைப் பார்த்து தன்னுடைய மழலை மொழியில் பேச ஆரம்பித்தான். அப்பா போனா போகட்டும் நீங்க ஏன் அம்மா அழுகிறீர்கள். அப்பாதான் உங்களை பேசி, ஏசி அடித்து தொந்தரவு பண்ணுகிறார்களே. அவங்க வேண்டாம் போனா போகட்டும், நீங்க அழாதீங்க என்று கூறினான்.

தாய் அவன் வாயை பொத்தி மகனே அப்படிச் சொல்லாதே. அவுங்க நம்ம அப்பா இல்லியா! அவுங்க நல்ல சுகமாக சீக்கிரமாக வீட்டுக்கு வரவேண்டுமென்று தான் நான் அழுகிறேன். அப்பா இன்னும் என்னை அதிகமா அடித்து உதைத்து துன்பப் படுத்தினாலும் நான் அப்பாவுக்காக இறைவனிடம் வேண்டிக் கொண்டு அவர்கள் மனம்மாறி என்னை நேசிக்கும் நாட்கள் வருமென்று காத்திருக்கிறேன். நீ இனி அப்பாவைப் பற்றி இப்படிச் சொல்லாதே என்று கூறினாள்.

அதற்குச் சிறுவன் ஏன் அப்பாவுக்காக நீங்க ஜெபிக்கிறீங்க? என்றான். அதற்கு எஸ்தர் உன் அப்பா நல்ல சுகமாக இருந்தால் தான் நமக்கெல்லாம் சாப்பாடு கிடைக்கும், துணிமணி கிடைக்கும், நாம் நன்றாய் சுகமாய் இருக்கலாம் என்றாள்.

அதற்கு பாக்கியநாதன் ஏன் அம்மா நம்ம தாத்தாதான் இருக்காங்களே நமக்குச் சாப்பாடு போட என்றான அதற்கு எஸ்தர் நம்ம அப்பா நல்ல சுகமாக இருந்தால்தான் நம்ம தாத்தாவானாலும், யாராயிருந்தாலும் நம்மை கவனிப்பார்கள். நீ இப்படி இனி பேசக் கூடாது, அப்பாவுக்காக நீ ஜெபிக்கணும், குழந்தைகளின் ஜெபத்தைக் கேட்க ஆண்டவர் மிகவும் பிரியமாய் இருக்கிறார் என்றாள. அப்பொழுது பாக்கியநாதன் அப்படியானால் நானும் அப்பாவுக்காக ஜெபிப்பேன். எப்படியம்மா நான் ஜெபிக்க வேண்டும்? என்று கேட்டான்.

அப்பொழுது எஸ்தர் பிள்ளையை முழங்காற்படியிடச் செய்து, தானும் முழங்காற்படியிட்டு முக்காடிட்டுக் கொண்டு நான் சொல்லுகிறபடி சொல் என்று சொல்லி எங்கள் பிதாவாகிய தேவனே! எங்கள்

அப்பாவை ஆசீர்வதியும், எங்க அப்பாவுக்கு நல்ல சுகத்தை தாரும், எங்கள் அப்பாவை காத்துக் கொள்ளும், எங்கள் எல்லோரையும் ஆசீர்வதியும் இயேசுவின் நாமத்தில் ஆமென் என்று சொல்ல பிள்ளையும் அப்படியே சொல்லி ஜெபித்தான். பின்பு எஸ்தர் ஜெபம் பண்ணினாள் ஜெபம் பண்ணி முடித்த பிறகு பிள்ளையைப் பார்த்து மணி பதினொன்று (11) ஆகிறது நீ படுத்து தூங்கு என்றாள். அப்பொழுது பாக்கியநாதன் தாயை நோக்கி நீங்கள் ஏன் நேற்று அந்த லட்டரை என்னிடம் தரவில்லை. கண்ணம்மாவிடம் கொடுத்து வைக்க சொன்னீங்க என்று கேட்டான். என்ன லெட்டர்...? என்று விளங்காமல் பிள்ளையிடம் நீ என்ன சொல்லுகிறாய், நான் அவளிடம் லட்டர் ஒன்றும் கொடுக்கவில்லையே என்றாள். அப்பொழுது பாக்கியநாதன் நேற்று அந்த லட்டரை நீங்க நம்ம வேலைக்காரி கண்ணம்மாவிடம் கொடுக்கலியா? பிறகு ஏன் அவள் சேலையில் இருந்து ஒரு லட்டரை எடுத்து அந்த மூலையில்தான் வைத்தாள், நான் பார்த்தேன் என்று சொன்னான்.

அப்பொழுது எஸ்தர் நான் அவக்கிட்ட எந்த லட்டரும் கொடுக்கவில்லையே! என்று சொல்லிக் கொண்டு விளக்கை கையில் எடுத்துக் கொண்டு அந்த மூலையில் போய் தேடினாள் அவளுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. சரி காலையில் நான் அவளிடம் விசாரித்துக் கொள்கிறேன். நீ தூங்கு என்று பிள்ளையை தூங்க வைத்துவிட்டு எஸ்தர் எழுந்துபோய் தன் படுக்கையண்டையில் கொஞ்சநேரம் ஜெபித்து விட்டு படுத்து கொண்டாள்.

இதையெல்லாம் ஜன்னல் ஓரமாய் நின்று கவனித்துக் கொண்டிருந்த நல்லதம்பியினுடைய இருதயம் வெகுவாக உருகிப்போயிற்று. அவன் சத்தங்காட்டாமல் அங்கிருந்து வேகமாய் புறப்பட்டு அரிவாளுடன் வேலைக்காரியினுடைய வீட்டுக்கு நேரே சென்றான். சென்று கதவைத் தட்டினான். கதவைத் திறந்த உடன் அவளை வெளியே வரச் சொல்லி அரிவாளை காண்பித்து கோபத்துடன் நேற்று வீட்டு மூலையில் லட்டரை போடும்படியாக உனக்கு லட்டரைக் கொடுத்தது யார்? நீ உள்ளதை சொல்லாவிட்டால் உன்னை வெட்டிப் போடுவேன் என்று கண்டிப்பாய் அதட்டிக் கேட்டான்.

தன் எஜமானுடைய தீர்மானத்தை அறிந்த கண்ணம்மாள் பயந்துபோய் நீங்க அடிக்கடி போயிற்று வருவீங்கல்லியா அந்த வீட்டு அம்மாதான் கொடுத்து பீரோவுக்கு பின்னால் போடச் சொன்னாங்க என்று உள்ளதை சொல்லி விட்டாள். நல்லதம்பி நேரே தன் வீட்டிற்குப் போய் கதவைத் தட்டி தன் மனைவியின் பேரைச் சொல்லிக் கூப்பிட்டான். அவள் வேகமாய் எழுந்து வந்து விட்டீர்களா! என்று கதவைத் திறந்தாள். நல்லதம்பி வீட்டுக்குள் பிரவேசித்து அவளுடைய இரு கைகளையும் பிடித்துக் கொண்டு அவளிடத்தில் மன்னிப்பு கேட்டு நடந்த சங்கதிகளையெல்லாம் அவளிடம் சொன்னான். அவளிடம் சொல்லி இனிமேல் நான் இப்படி தப்பான வழியில் போக மாட்டேன் என்று உறுதிமொழி சொல்லி மனைவியுடன் ஒப்புரவானான்.

அதன் பின்பு நல்லதம்பி தன் சோரநாயகியின் வீட்டுப் பக்கமாய் போகவேயில்லை. தன் மனைவிக்கு பிரமாணிக்கமாய் இருந்து நல்ல கிறிஸ்தவனாய் தன் குடும்ப வாழ்க்கையை கட்டினான்

---

'துன்மார்க்கரும், தேவனை மறக்கிற எல்லா ஜாதிகளும் நரகத்திலே தள்ளப்படுவார்கள்' —சங் 9 : 17.

---

# சாட்சி

அங்கே பெரும்பாதையான வழியும் இருக்கும்; அது பரிசுத்த வழி எனப்படும் (ஏசா 35:8).

இந்தப் பரிசுத்த பாதையை கர்த்தர் படிப்படியாக எனக்கு காண்பித்தார். அவருடைய அளவற்ற இரக்கத்தால் என்னுடைய பாதையை செவ்வைப்படுத்தினர்.

என் பெயர் மார்தாராஜஸ்ரீ நான் ஒரு கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்திருந்தாலும் தெய்வத்தினிடம் வாஞ்சையோ, தாகமோ அற்ற நிலையில் இருந்தேன். மாறாக உலக ஆடம்பரங்களில் விருப்பமுற்றிருந்தேன். வளர, வளர உலக நாகரீகங்களில் (Fasion) என்னை ஈடுபடுத்திக்கொண்ட நிலையில் இருந்தேன். நகைகள் அணிந்து கொள்ளுதலிலும் உயர்ந்தரக வஸ்திரங்களை உடுத்திக் கொள்வதிலும், இன்னும் அலங்கார வஸ்துக்களை உபயோகிப்பதிலும், அதிக விருப்பமாயிருந்தேன்.

இப்படி நான் பின்பற்றி வந்த நாகரீகமானது கர்த்தருடைய பார்வையில் அருவருப்பானது என்று எனக்கு தெரியாது. உதாரணமாக கையில்லாதரவிக்கை (Sleeveless Blouse) போடுவது நன்ருக இருப்பதாக எண்ணிக் கொண்டேன். இந்நிலையில் ஒரு கைப்பிரதி (Tract) ஐ படிக்க நேர்ந்தது. அதில் "அரை நிர்வாணத்தை காண்பிக்கும்படி உடை உடுத்தும் நாகரீக பெண்கள் எல்லாம் பிசாசு பிடித்தவர்கள்" என்று எழுதியிருந்ததைக் கண்டு இருதயத்தில் குத்தப்பட்டேன். இந்த மாதிரி அலங்காரம் கர்த்தருக்கு பிரியமில்லாதது என அறிந்து அதை விட்டு விட்டேன்.

தேவகிருபையால் இரட்சிப்பின் சுவிசேஷத்தை கேட்கவும், கர்த்தரை வாஞ்சிக்கவும் எனக்கு மனதுண்டாயிற்று. இப்பொழுது ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் என விரும்பினேன். ஆனல் எனக்கோ நகையை கழற்றி விட்டு ஞானஸ்நானம் எடுப்பது போராட்டமான காரியமாயிற்று. எனக்கு நகையை பிரிய கொஞ்சமும் மனமில்லை. அந்நாட்களில் நாங்கள் ஒரிசா மாநிலத்தில் இருந்தோம். மனுஷை பிரியரான ஒரு ஊழியக்காரர் "நீங்கள் தென் இந்தியாவுக்கு போங்கள் அங்கே உங்களுக்கு நகையுடன் ஞானஸ்நானம் கொடுப்பார்கள். இங்கே அந்த வழக்கமில்லை என்று சொன்னர். எங்கள் வீட்டார் எல்லோரும் சந்தோஷத்துடன் தென் இந்தியா (எனது பூர்வீக இடம்) வர டிக்கட்டுகள் ரிசர்வ் செய்தோம். ஆனல் புறப்படுமுன் தேவன் என்னை அம்மை நோயினுல் (Chicken pox) சிட்சித்தார். ஆகையால் எங்களது பிரயாணம் தடைப்பட்டது.

இந்தப் பலவீன நேரத்தில் வேதத்தைப் படிக்கையில் (ஆதி 35:2-4) மூலம் என்னேடே பேசினர். "யாக்கோபு தன் வீட்டாரை நோக்கி உங்களிடத்திலிருக்கிற அந்நிய தெய்வங்களை விலக்கிப் போட்டு உங்களை சுத்தம் பண்ணிக் கொண்டு உங்கள் வஸ்திரங்களை மாற்றுங்கள், நாம் எழுந்து பெத்தேலுக்குப் போவோம். தேவனுக்கு அங்கே ஒரு பலிபீடத்தை உண்டாக்குவேன் என்ருர். அப்பொழுது அவர்கள் தங்கள் கையில் இருந்த எல்லா அந்நிய தெய்வங்களையும், தங்கள் காதணிகளையும் யாக்கோபிடத்தில் கொடுத்தார்கள். யாக்கோபு அவைகளை சீகேம் ஊர் அருகே இருந்த ஒரு கர்வாலி மரத்தின் கீழ் புதைத்துப் போட்டார்."

இதனுல் நான் உணர்த்துவிக்கப்பட்டு, நகையை கழற்றுவதைப் பற்றி வேதாகமத்தை ஆராய ஆரம்பித்து ஒரு வேதாகமப் பெண் (Bibilical woman) எப்படி இருக்க வேண்டும் என 1பேது3:3;1தீமோ2:9 மூலம் கண்டு, நகைகளை கழற்றி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டேன்.

இன்னும் எனக்கு உலக நேசம் இருந்து கொண்டே இருந்தது. உதாரணமாக விதவிதமான கலர்களில் உயரமான (High heels) செருப்புகள் வைத்து சேலைக்கு ஏற்ற கலர் செருப்பு போட வேண்டுமென்று ஆசையாயிருந்தது. ஆவியானவர் இதை விட்டு விடும்படி ஏவினார். நான் கீழ்ப்படியாமல் போகவே, காலில் ஒரு கட்டி வந்து விட்டது. டாக்டர் ஒரு சின்ன அறுவை சிகிச்சை செய்யவேண்டும் என்று சொன்னார். நான் கலங்கி, அழுது இந்த உயரமான செருப்பணியும் பழக்கத்தை விட்டுவிட ஒப்புக் கொடுத்தேன். அன்று இரவில் ஒரு சொப்பனம் கண்டேன்: வெள்ளை உடை அணிந்த பெரியவர் ஒருவர் என் காலில் உள்ள கட்டியை உற்றுப் பார்த்து, தன் கையினால் தொட்டார். அந்தக் கரம் ஆணி கடாவப்பட்ட இயேசு நாதரின் கரம் என்று எனக்குத் தெரிந்தது. கர்த்தருக்கு மகிமை உண்டாவதாக. காலையில் டாக்டர் பார்த்து விட்டு அறுவை சிகிச்சை (Operation) தேவையில்லை என்று கூறி விட்டார்.

1977-ம் ஆண்டு என்னை பெண் பார்க்கும்படி தேவ வெளிப்படுத்தல்படி, புதிய எருசலேம் சபை விசுவாசி ஒருவர், ஊழியர்களுடன் வந்து போனார்கள். அதன் பின்பு நான் ஒரு தரிசனம் கண்டேன். "ஒரு பர்வதத்தின் உச்சியில் ஒரு அழகான வீடு கட்டப்பட்டிருக்கிறது. எல்லா ஜாதியாரும் அதை அடையும்படி மலையின் மீது ஏறுகிறார்கள். நானும் அவர்களோடே ஏறுகிறேன். பாதி வழியில் களைப்படைந்து மேலே போக முடியாமல் திணறுகிறேன். இந்நிலையில் பரிசுத்தாவியானவர் நான் இயேசு, இயேசு என்று தீவிரமாய்ச் சொல்ல இயக்கவே, நான் வேகமாக மேலே ஏறி அந்த வீட்டை அடைகிறேன்.

அதன் கதவு நிலை அருகே வெள்ளையங்கி தரித்த ஒருவர் உட்கார்ந்து, புன்முறுவலுடன் என்னை வரவேற்று எப்படி இங்கு வந்தாய் என்று கேட்டார். நான் பட்ட கஷ்டத்தை அவரிடம் சொன்னேன். அவர் தனது விரலை நீட்டி இதோ பார் என்று காண்பித்தார். அங்கே அந்தக் கதவு நிலைக்கும் பூமிக்கும் இடையே பளிங்கு போல் ஒரு வெண்மையான ஏணி வைக்கப்பட்டிருந்தது. இதன் வழியாக எளிதாக வரலாம் என்றார். நான் ஆச்சரியப்பட்டு இது ஒருவருக்கும் தெரியவில்லையே என்றேன் அதற்கு அவர் பிரதியுத்திரமாக நான் யாருக்கு இதை "காண்பித்துக் கொடுக்கிறேனோ அவர்கள் மாத்திரம் எளிதாக என்னிடம் வரலாம் என்றார்.

இதனுடைய அர்த்தம் அப்போது எனக்கு விளங்கவில்லை. திருமணத்திற்குப் பின்பு ஏசா 2:2-3-ல் நான் வாசிக்கையில், கர்த்தர் புதிய எருசலேம் சபையைக் குறித்து இவ்வாறு வெளிப்படுத்தியிருக்கிறார் என்று அறிந்தேன். அந்த மலையுச்சியை எளிதாக அடையக்கூடிய பாதையே ஏசா 35:8, நீதி 16:17-ல் சொல்லப்பட்ட பாதை என்பதை அறிந்துகொண்டேன். சபையைக் குறித்து அறிய வேண்டும் என்ற ஆவல் என்னிலே அதிகமாய் உண்டானது. சபையில் செயல்படுகிற பாவமன்னிப்பின் உபதேசம் என் இருதயத்தில் அதிசமாக கிரியை செய்தது. இதுவே அந்தப் பரிசுத்த பாதை என்பதை அறிந்து கொண்டேன்.

இந்த உபதேசத்தை ஊழியர்கள் மூலம் தெளிவாய் கேட்டு விளங்கிக் கொண்டு பின்பு என் பாவங்களை அதிகாரமுடைய ஊழியர்களிடம் அறிக்கை செய்ய ஆரம்பித்தேன். அதன் மூலம் பரிசுத்தத்தின் மேல் பரிசுத்தம் அடைந்து, ஆவிக்குரிய வாழ்க்கையில் மேன்மை அடைய கர்த்தர் கிருபை செய்கிறார்.

புதிய எருசலேம் சபையை மெய்யான சபை என்று நான் ஒரே நாளில் ஏற்றுக் கொள்ளவில்லை. படிப்படியாக அறிந்து, பரிசுத்த ஆவியானவரின் திட்டமான வெளிப்படுத்தலினால் இதுவே வெளி 21-ம் அதிகாரத்தில் சொல்லப்பட்ட பூரணமான சபை என்று அனுபவத்தின் மூலம் அறிந்து சாட்சியாக அறிவிக்கிறேன்.

திருமதி. மார்தா சாம் இஸ்ரவேல்
புதிய எருசலேம் சபை
சென்னை.

---

'நானோ என் உத்தமத்திலே நடப்பேன், என்னை மீட்டுக் கொண்டு என் மேல் இரக்கமாயிரும்' சங் 26 : 11.

# புதிய எருசலேம் நடபடிகளில் சில

நம்முடைய தேவன் நேற்றும், இன்றும், என்றும் மாறாதவராய் இருக்கிறபடியால் அவரை ஸ்துதிக்கிறேன். கடந்த இரு மாதங்களுக்கு முன் கோவில்பட்டி சபை ஊழியத்தை பாஸ்டர் ஜோசப் அவர்களிடம் ஒப்படைப்பதற்காக கோவில்பட்டி சென்றிருந்தோம். பரிசுத்த ஆராதனையின் வேளையில் சுமார் 65 வயதுடைய ஒரு பெரியவரை ஒரு பாட்டியம்மா கைத்தாங்கலில் அழைத்து வந்து அமரச் செய்தார்கள். அவருக்கு இரண்டு கால்களும் நடக்க முடியாத ஒரு பெலவீனம். பல மருத்துவர்களை அணுகியும் உலக பிரகாரமாய் தங்களுக்குத் தெரிந்த எல்லா சிகிச்சைகளையும் செய்தும் சுகம் கிடைக்கவில்லை. புதிய எருசலேம் சபையில் தேவன் வாசமாய் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு சுகம் பெற்றுப்போக வந்திருந்தனர்.

ஆராதனை முடிந்ததும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை முழு இருதயத்தோடு விசுவாசிக்க வேண்டும் என்று அந்த பெரியவருக்கு ஆலோசனைக் கொடுத்து இறைவன் இயேசுவின் நாமத்தினால் அவருக்கு எண்ணெய் பூசி ஜெபித்தோம். நம்பிக்கையோடு கடந்து போனார். வழியில் செல்லும்போதே அவருடைய கால்களுக்குப் பூரணமான சுகம் கிடைத்து விட்டது. அவரும் அவருடைய மனைவியும் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஊர் போய் சேர்ந்தனர்.

(தொடரும்)



"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்..." லூக் 6:38

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு. புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. |
|---|---|---|
| 1. | 13 x 19 Printing Machine | 19000 |
| 2. | 32" Paper cutting Machine | 11000 |
| 3. | English Type | 10000 |
| 4. | Tamil Type & Cabinets | 11900 |

+ Tax 10%

without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 36 ★ DECEMBER 1986

### "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து எனக்கு தரிசனமாகி வெளிப்படுத்தி ஸ்தாபித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுகிறிஸ்து: தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப் 1:1—3).

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள் மத் 28:18; மாற்கு 16:15.

2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்—மத் 28:19. [இயேசு மாதிரி (Through action) காண்பித்தார்.]

3. திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28:20.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் —யோவா 20:23.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21:15-17.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப். 1:5-8

7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—1கொரி 11:23-26.

நான்: ஆண்டவரே! சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர், வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி என்றேன்.

இயேசு: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் 7 ஆகும்—எபி 9:1-6. இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களும் ஆகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்—அப 1:1; 10:40-43.

CHIEF PASTOR N. LAZAR

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிகை வெளியிடப்படுகிறது. (எபே 4:11-16)

டிசம்பர் 1986

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

"அறிவும் பெருகிப் போகும்" என்ற திருவசனத்தின் பிரகாரம் இந்தக் கடைசிக் காலத்தில் அறிவு பெருகியிருக்கிறது. எல்லாத் துறைகளிலும் அறிவு பெருகியிருக்கிறது. ஆனாலும் மனிதனுக்கு முடிவு காண முடியாத அநேக கேள்விகள் தொக்கி நின்று கொண்டுதான் இருக்கின்றன. இது என்ன? இது எப்படி? என்று மனிதன் குழம்பிக் கொண்டு இருப்பதை விட்டு விட்டு இறைவனால் வெளிப்படுத்தப் பட்டிருக்கிற மெய்யறிவாகிய இயேசுகிறிஸ்துவைப் பற்றி அறிந்து அவரைப் பற்றிக் கொண்டு, அவரால் உண்டாகும் விடுதலையையும், ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொள்வதே சாலச் சிறந்த தலையாய கடமையாகும். அதை விட்டு இது எப்படி என்று முடிவு கண்ட பின் தான் இயேசுகிறிஸ்துவை விசுவாசிப்பேன், அவரைப் பின்பற்றுவேன் என்று சொல்வாயானால் நீ ஆராய்ச்சி பண்ணி அறிந்து முடிவதற்குள் உன் ஆயுசு நாட்கள் முடிவடைந்து விடும். நீ எந்த நன்மையும் பெறாமல் அகாலமாய், அநாதையாய் மரித்துப் போவாய். ஆகையால் இப்பொழுதே அநுக்கிரக காலம்; இப்பொழுதே இரட்சண்ய நாள். இன்று கிறிஸ்து என்னும் இரட்சகர் உனக்காக தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார். இயேசுகிறிஸ்துவை விசுவாசி, ஏற்றுக்கொள்; அவருக்கு ஒப்புக்கொடு; உன்னுடைய குடும்பமும் இரட்சிக்கப்படும் உன்னுடைய வாழ்க்கை நோக்கமுள்ளதாக இருக்கும். நீயும் இரட்சிக்கப்படுவாய், உன்னுடைய அறிவும் பெருகிப்போம். எல்லாவற்றையும் இருக்கிற பிரகாரம் அறிந்து கொள்வாய்.

"பூரண இரட்சிப்பும், ஞானமும், அறிவும் உன் காலங்களுடைய உறுதியாயிருக்கும். கர்த்தருக்குப் பயப்படுதலே அதன் பொக்கிஷம்."

கிறிஸ்துவுக்குள்
Chief Pastor N. LAZAR.

"புதிய எருசலேம் செய்தி வாசகர்களுக்கு 1986-ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் வாழ்த்துதலையும், 1987-ஆம் புத்தாண்டின் புது வாழ்த்துதலையும் இயேசுவின் நாமத்தில் கூறிக் கொள்கிறோம். கர்த்தாவே நீர் ஸ்தோத்தரிக்கப்பட்டவர். கர்த்தருடைய ஆலயத்திலிருந்து உங்களை ஆசீர்வதிக்கிறோம்."

# நுசமபாகம் காணிக்கைகள்

[தொடர்ச்சி]

பொருத்தனைகள் :- 'என் இக்கட்டில் நான் என் உதடுகளைத் திறந்து என் வாயினால் சொல்லிய என் பொருத்தனைகளை உமக்குச் செலுத்துவேன்.'

ஆவிக்குரிய ஜீவியத்தில் அநேகர் தவறி விழுவதற்குக் காரணம் பொருத்தனையை நிறைவேற்றாததே. மனிதன் தேவனிடம் பொருத்தனை செய்து ஜெபிப்பது நல்ல காரியமாகும். தீராத பிரச்சினைகளை, இக்கட்டுகளை பொருத்தனை ஜெபத்தின் மூலம் தீர்த்துக் கொள்ளலாம். "நீ தேவனுக்கு ஸ்தோத்திர பலியிட்டு உன்னதமானவருக்கு உன் பொருத்தனைகளைச் செலுத்தி ஆபத்துக் காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு நான் உன்னை விடுவிப்பேன். நீ என்னை மகிமைப் படுத்துவாய்" (சங் 50:14,15) என்று தேவன் சொல்லியிருக்கிறார்.

பொருத்தனைகள் பல விதம். தேவன் யுத்தத்தில் தனக்குச் ஜெயம் கொடுத்தால் தன் வீட்டிலிருந்து முதலாவது தனக்கு எதிர் கொண்டு வருவது எதுவோ அதை சர்வாங்க தகனபலியாக கொடுப்பேன் என்று யெப்தா பொருத்தனை செய்தார் (நியா 11:30,31). அன்னாள் தனக்குப் புத்திர பாக்கியம் கிடைத்தால் அந்தப் புத்திரனை தேவ ஊழியத்துக்கு ஒப்புக் கொடுப்பதாக பொருத்தனை பண்ணினாள் (1சாமு 1:11).

சிலர் நசரேய விரதமாகிய பொருத்தனைகளைச் செய்தார்கள். சிலர் திராட்சை ரசம் குடிப்பதில்லை என்றும், விசேஷித்த உணவுகளை உண்ணுவதில்லை என்றும் பொருத்தனை செய்தனர். அப்படிப் போல பலர் பலவிதமான பொருத்தனைகளைச் செய்யலாம்.

கிறிஸ்தவர்கள் ஞானஸ்நானம் பெறும் பொழுது பாவத்தை விட்டு பரிசுத்தத்தை நாடுவோம் என்று பொருத்தனையாகிய வாக்குத்தத்தம் செய்கிறார்கள். இன்னும் சிலர் தங்களை விசேஷித்த பிரதிஷ்டை பொருத்தனை செய்கிறார்கள். ஊழியத்துக்காய் பொருத்தனை செய்கிறார்கள் பணம் பொருள்களை பொருத்தனை செய்கிறார்கள். இவ்விதமாய் செய்கிற எந்த பொருத்தனையாய் இருக்கட்டும், நிறைவேற்றி முடிக்க வேண்டும். பொருத்தனை செய்யாதிருந்தால் பாவமல்ல. பொருத்தனை செய்தவர்கள் அந்த பொருத்தனையை எப்படியாவது நிறைவேற்றி முடிப்பது அவசியம்.

"நீ உன் தேவனாகிய கர்த்தருக்கு பொருத்தனை பண்ணியிருந்தால் அதைச் செலுத்தத் தாமதஞ் செய்யாதே; உன் தேவனாகிய கர்த்தர் அதை நிச்சயமாய் உன் கையில் கேட்பார்; அது உனக்குப் பாவமாகும். நீ பொருத்தனை பண்ணாதிருந்தால் உன் மேல் பாவம் இல்லை. உன் வாயினால் சொன்னதை நிறைவேற்ற வேண்டும்; உன் தேவனாகிய கர்த்தருக்கு உன் வாயினால் நீ பொருத்தனை பண்ணிச் சொன்ன உற்சாக பலியைச் செலுத்தித் தீர்ப்பாயாக (உபா 23:21-23).

யாக்கோபு பொருத்தனை செய்தார் (ஆதி 28:20-22). தேவன் அதை யாக்கோபுக்கு ஞாபகப்படுத்தினார் (ஆதி 31:13;35:1). யாக்கோபு அந்த பொருத்தனையை நிறைவேற்றி முடித்தார். நீயும் உன் பொருத்தனையை நிறைவேற்றி முடி. தேவனே நான் உமக்குப் பண்ணின பொருத்தனைகள் என் மேல் இருக்கிறது (சங் 56:12). சிலர் புத்தியீனமான பொருத்தனைகள் செய்து கொண்டு செலுத்த முடியாமல் தவிக்கிறதுண்டு. இவ்வித தவறுகள் நேரிடாமலிருக்க தங்களுக்கு மேலுள்ள பரிசுத்தவான்களிடம் ஆலோசனை கேட்டுக் கொள்வது நல்லது.

பொருத்தனை செய்தால் அது தேவனை களைப்படுத்துகிற காரியமே. அதைச் செலுத்த தாமதியாது உடனே அதைச் செய். ஒன்றுக்குப் பதிலாய் இன்னொன்று செலுத்தாதே (மல் 1:13,14). பொருத்தனை செய்து விட்டு புத்திபிசகினால் செய்தேன் என்று சொல்லாதே. உன்னுடைய நன்மைக்காய்,

லாபத்திற்காய் நீ செய்த பொருத்தனையை தாமதியாமல் நிறைவேற்று.

நீ தேவனுக்கு ஒரு பொருத்தனை பண்ணிக்கொண்டால் அதைச் செலுத்த தாமதியாதே; அவர் மூடரில் பிரியப்படுகிறதில்லை; நீ நேர்ந்துகொண்டதைச் செய்யாமற் போவதைப் பார்க்கிலும், நேர்ந்து கொள்ளாதிருப்பதே நலம். உன் மாம்சத்தை பாவத்துக்குள்ளாக்க உன் வாய்க்கு இடங் கொடாதே. அது புத்தி பிசகினால் செய்தது என்று தூதனுக்கு முன் சொல்லாதே; தேவன் உன் வார்த்தைகளினாலே கோபங் கொண்டு உன் கைகளின் கிரியை அழிப்பானேன் (பிர 5:4–6).

சிம்சோன் தன்னுடைய பொருத்தனையாகிய பிரதிஷ்டையை அலட்சியம் செய்த போது அவனுடைய பலம் அவனை விட்டு நீங்கிற்று. கர்த்தர் சிம்சோனை விட்டு விலகி விட்டார் (நியா 14:19,20). நீ உன் பொருத்தனையை நிறைவேற்றி விட்டாயா? பொருத்தனைப் பண்ணி அதை உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு நிறைவேற்றுங்கள்.

அவரைச் சூழ்ந்திருக்கிற அனைவரும் பயங்கரமானவருக்கு காணிக்கைகளைக் கொண்டுவரக் கடவர்கள் (சங் 76:11).

மகா சபையிலே நான் உம்மைத் துதிப்பேன். அவருக்கு பயப்படுகிறவர்களுக்கு முன்பாக என் பொருத்தனைகளைச் செலுத்துவேன் (சங் 22;25).

---

"மகா சபையிலே உம்மைத் துதிப்பேன்; திரளான ஜனங்களுக்குள்ளே உம்மை புகழுவேன்"—சங் 35:18.

---

# கர்த்தருடைய பிறப்பு

"இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்" (லூக் 2:11).

மேசியா பிறந்திருக்கிறார் எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி ஆதாம் முதற் கொண்டு மனித ஜாதி எதிர்பார்த்தவர் பிறந்திருக்கிறார். ஆதாம் ஏவாள் மூலம் பாவம் உலகத்திற்குள் பிரவேசித்தது. மனுக் குலத்திற்கு சாபமுண்டாயிற்று. "ஒரே மனிதனால் பாவமும், பாவத்தினால் மரணமும் உலகத்தில் பிரவேசித்தது" என்று வேதம் சொல்லுகிறது. அது எவ்வளவு உண்மையென்று அநுபவரீதியாக நாம் உலகத்தில் காண்கிறோம்.

உலகத்தில் பிறந்த மனிதர்களில் இயேசு கிறிஸ்துவைத் தவிர மற்றவர்களெல்லாரும் தங்களுடைய சுயவிருப்பத்தின்படி பாவம் செய்த பாபிஷ்டிகளே. பாவத்திலிருந்தும் சாபத்திலிருந்தும், அஞ்ஞானத்திலிருந்தும் மனிதன் விடுதலை பெற எவ்வளவோ பிரயாசப்படுகிறான். ஆனால் அவன் கண்டடைந்தது அரைகுறையான விடுதலையே. அவனுக்குத் தென்பட்ட அறிவும் அரைகுறையானது. அவன் நினைத்த அளவு விடுதலையையோ, அறிவையோ அடையவில்லை. இதற்கெல்லாம் காரணம் பாவமும், பாவத்தைத் தொடர்ந்து சாபமுமேயாகும்.

பாவத்திற்குச் சரியான நிவாரணம் (பரிகாரம்) செய்யப்படவேண்டும். பாவத்திற்குச் சரியான பரிகாரம் செய்யப்படாத வரை பாவத்திலிருந்தும், அதின் சாபத்திலிருந்தும் மனிதனுக்கு விடுதலை கிடைப்பது அரிது. உலகத்தில் தோன்றிய மகா புருஷர்கள் என்று சொல்லப்படுகிறவர்களுள் இயேசு கிறிஸ்துவைத் தவிர மற்றவர்களால் உண்டாக்கப்பட்ட மதங்களும் பாவத்திட்டுள்ள மனிதர்களால் உண்டானவைகளாகும். அவைகளால் மனிதனுக்கு விடுதலை கிட்டவில்லை. காரணம் பாவத்திற்குச் சரியான பிராயச்சித்தம் செய்யப்படவில்லை.

ஆனால் கிறிஸ்தவமோ மனிதன் மீட்படையும் படியாய் இறைவனால் ஏற்படுத்தப்பட்ட வழியாகும். பாவத்தைப் போக்க

இறைவன் மனிதனாய் இந்த உலகத்தில் அவதரித்து வருவார், அவர் ஒரு பரிசுத்தமான ஸ்திரீயிலிருந்து தோன்றுவார் என்று பரிசுத்த வேதாகமம் (6000) ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கூறியுள்ளது (ஆதி 3:15) அக்காலம் தொடங்கி தேவன் மனிதனாய் இந்த உலகத்திற்கு வருவார் என்ற எதிர்பார்ப்பு உண்டாயிற்று. உலகத்தில் மனிதர்கள் மத்தியிலே காணப்படுகிற அநேக மதங்களில் இந்த நம்பிக்கை வெளியிடப்பட்டுள்ளது. ஆனபடியினால் உலகத்தில் தோன்றி சில விசித்திர காரியங்களை செய்த மனிதர்களை தேவனென்று (மனுஷர்களை ஸ்திரீகளை தேவன், தேவி என்று) மனிதர்கள் நம்ப ஆரம்பித்தார்கள். ஆனால் அவர்கள் தங்களைவிட கேவலமான முறையில் ஜீவித்து மடிந்துபோன மனிதர்கள் என்றும், அவர்களை வணங்குவதினாலோ, அவர்களுடைய கொள்கைகளைப் பின்பற்றுவதினாலோ தங்களுக்கு பாவத்திலிருந்து விடுதலையும், அறிவீனத்திலிருந்து ஞானமும் உண்டாகவில்லை என்று இந்த மனிதர்கள் உணரவில்லை. தங்களுடைய பாவ அக்கிரமங்களுக்கு தாங்கள் பின்பற்றுகிற மதமானது அநுசரணையாய் இருப்பதினால், இவ்விதமான தவறான மதங்களைப் பின்பற்றுகிறார்கள். இது அவர்களுடைய பாவ விருப்பத்தைக் காண்பிக்கிறது. பாவத்துக்கான தண்டனையை அவர்கள் அடைந்தே தீருவர்.

இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்பு எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி. உலகத்தில் மனுமக்கள் எல்லாரும் எதிர்பார்த்த தேவன் பிறந்து விட்டார். இயேசு என்னும் இரட்சகர் பிறந்துவிட்டார். இவர் பிறந்து தன்னுடைய பரிசுத்த ஜீவியத்தினாலும், உபதேசத்தினாலும் மக்களுக்கு வழி காட்டினார். பாவமின்றி ஜீவித்து பாவத்தின் மேல் ஜெயங் கொண்டார். பாவத்தின் சாபத்துக்குத் தப்பி தெய்வீக ஞானத்தை வெளிப்படுத்தினார். மனுமக்களுடைய பாவத்துக்காக பிராயச்சித்தம் செய்ய வந்திருக்கிறேன் என்றார். அப்படியே தன்னை பாவ விமோசன பலியாக சிலுவையில் ஒப்புக் கொடுத்தார். அவருடைய இரத்தத்தினால் மனுக்குலத்திற்கு பாவ மன்னிப்பாகிய மீட்பு உண்டாகிறது

இயேசு கிறிஸ்துவை தன்னுடைய மீட்பராக விசுவாசித்து ஏற்றுக்கொண்டு கீழ்ப்படிகிற மக்கள் அன்று தொடங்கி இன்று வரைக்கும் ஆயிரமாயிரமான மக்கள் பாவத்திலிருந்து விடுதலையாகி மெய்ஞானம் பெற்று பாவத்தின் சாபத்திலிருந்து விடுதலை அடைந்துள்ளார்கள்.

இன்று மனிதன் மீட்படைய இறைவனால் வகுக்கப்பட்டிருக்கிற ஒரு வழி இயேசு கிறிஸ்துவே. அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பில்லை என்பது அனுபவ ரீதியான உண்மை படித்தோர்களுக்கும், படிப்பறிவில்லாதவர்களுக்கும், ஐசுவரியவான்களுக்கும், ஏழைகளுக்கும், அறிவாளிகளுக்கும், சாதாரண மனிதர்களுக்கும் சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி: இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்காக பிறந்திருக்கிறார்.

---

"அவரை வந்து பாருங்கள். அவர் கிறிஸ்து தானோ.....?
—யோ 4:29

---

சுவிசேஷம் :

## மனிதனே, நீ பெற்றுக் கொண்டது என்ன?

உழைப்பாளிகள் காலையிலிருந்து மாலை வரை நெற்றி வேர்வை நிலத்தில் சிந்த வேலை செய்கிறார்கள். மாலையில் வீடு திரும்பும்போது உழைத்த கூலியை வாங்கி பகலில் பட்ட பிரயாசத்தின் பலனை பெற்றுக்கொண்ட நிறைவோடு வீடு திரும்புகிறார்கள். மாலையில் சக நண்பர்களுடன் விளையாடி வேர்த்து களைப்படைந்து வீடு திரும்பும் வாலிபன் தேக ஆரோக்கியம் பெற்று புத்துணர்ச்சியுடன் வருகிறான். கலாசாலையில் பலமணி நேரம் அமர்ந்து ஆசிரியர் சொல்வதைக் கவனித்து கேட்டு

எழுந்து வரும் மாணவன் அறிவைப்பெருக்கிக் கொண்ட அறிஞனாய், அறிவொளி வீச எழுந்து வருகிறான். தூர இடத்தில் இருக்கும் பெற்றோரைப் போய் பார்த்துவிட்டு வரும் பிள்ளைகள் சான்றோரின் முகத்தைக் கண்ட ஆறுதலுடன் திரும்பி வருகின்றனர்.

பசியோடு ஹோட்டலுக்குள் முகவாடலாய் சென்ற மனிதர் புசித்து முகமலர்ச்சியோடே திரும்புகிறார்.

இப்படியாக நியாயமான கிரியைகளை செய்கிறவன் அதற்கேற்ற பலனை பெற்று திருப்தி அடைகிறான். இப்பேர்ப்பட்ட கிரியைகளினாலே பாதிக்கப்படுவோர், நஷ்டமடைவோர் யாருமே கிடையாது.

ஒரு தேசமுண்டு. அங்கே முந்திரிக் கொட்டைகள் மிகவும் மலிவாக கிடைக்கும். ஆனால் வெங்காயம் அங்கே எவ்வளவு காசு கொடுத்தாலும் கிடைக்காது. அந்தத் தேசத்திலிருந்து ஒரு பெரியவர் தமிழ் நாட்டுக்கு வந்தார். வீதியிலே ஒரு வண்டிக் காரன் வெங்காயம், பெல்லாரி வெங்காயம், ரூபாய்க்கு ஒரு கிலோ என்று கூவிக் கொண்டு வந்தான். அந்தப் பெரியவரும் ஆசையால் தூண்டப்பட்டு, ஒரு ரூபாய் தானே என்று ஒரு கிலோ வெங்காயம் வாங்கினார். தனது இருப்பிடம் போய் அமர்ந்து மிகுந்த ஆவலுடன் உரிக்க ஆரம்பித்தார் அவருடைய ஆவல் பெருகிற்று. இன்னமும் உரித்தார். கண்களில் நீர் பெருகிற்று. பொருட்படுத்தாமல் உரித்தார். இன்னும் உரித்தார் முகமெல்லாம் வாடிப்போயிற்று. உரித்து உரித்து முடிவில் கிடைத்தது ஒன்றுமில்லை. பணம் நஷ்டம், கண்ணில் எரிச்சல், கையில் நாற்றம். இதுதான் அவருக்குக் கிடைத்தது.

அவசர அவசரமாக உடை (Dress) அணிந்து கொண்டு அதிவேகமாக ஓடி சினிமா சாலைக்குள் செல்கிறாள் ஒரு மாது. சில மணி நேரம் கழித்து திரும்பி வருகிறாள். அவள் முகம் அசடு வழிந்து பவுடரெல்லாம் கரைந்து எதையோ பறிகொடுத்த நிலையில் வருகிறாள். இவ்வளவு ஆவலோடே சென்றாளே, இவ்வளவு நேரம் இருட்டில் இருந்தாளே, இவள் திரும்பி வரும் போது பெற்றுக் கொண்டு வருவது என்ன? ஒன்றுமில்லை.

சக நண்பர்களுடன் சேர்ந்து உற்சாகமாய் ஊர்க் கதை பேசி விட்டு வீட்டுக்கு வரும் வாலிபன் என்னத்தைக் கொண்டு வருகிறான்? வெறுமை. சிகரெட் பற்ற வைக்கிறான். புகைத்து புகைத்து புகை விட்டு பக்கத்தில் இருக்கிறவர்களுக்கு எரிச்சலை உண்டாக்குகிறான் ஒரு பிரயாணி. முடிந்ததும் இன்னொன்றை பற்ற வைக்கிறான். இப்படி இரவு பகலாகப் புகைத்தும் அவன் பெற்றுக் கொள்வது என்ன? வியாதி, பணநஷ்டம், துர்நாற்றம், சீர் கெட்டவன் என்ற பட்டம்.

கதை புத்தகம் ஒன்றை புரட்டுகிறான் ஒரு வாலிபன். சில மணி நேரம் அதைப படிப்பதில் கருத்தாய் இருக்கிறான். முடிவில் அவன் என்னத்தைப் பெற்றுக்கொண்டான்? ஒன்றுமில்லை.

பேதையர்களாகிய வாலிபருக்குள்ளே ஒரு புத்தியீன வாலிபனைக் கண்டு கவனித்தேன். அவன் மாலை மயங்கும் நேரம் அவள் வீட்டு வழியாய் நடந்து போனான். வேசியின் ஆடை ஆபரணந்தரித்த தந்திரமுள்ள மாது அவனுக்கு எதிர்ப்பட்டாள். கண்களினால் அவனை தன் பக்கம் இழுத்தாள், உதடுகளின் மதுர வாக்கினால் அவனை வசப்படுத்தினாள், உடனே அவன் அவள் பின்னே சென்றான்; ஒரு மாடு அடிக்கப்படும்படி செல்வதுபோலும், ஒரு மூடன் விலங்கிடப்பட்டுத் தண்டனைக்குப் போவது போலும், ஒரு குருவி தன் பிராணனை வாங்கும் கண்ணியை அறியாமல் அதில் விழத் தீவிரிக்கிறது போலும் அவனுக்குப் பின்னே போனான். அம்பு அவன் ஈரலைப் பிளந்தது (நீதி 7:6-13).

வெகு நேரத்திற்குப் பின் திரும்பி வருகிறான். இவன் என்னத்தைப் பெற்றுக் கொண்டு வருகிறான்? இலச்சையே அல்லாமல் வேறொன்றுமில்லை.

இப்படியே பிரியமான பிள்ளைகளே, பொழுது போக்கிற்காகவும், பாவக் கிரியைகளுக்காகவும் செய்கிற எல்லாப் பிரயாசங்களும், செலவுகளும் விருதாவாகவே இருக்கும்.

சத்திய வேதம் இப்படிச் சொல்லுகிறது: நீங்கள் அப்பமல்லாததற்காக

பணத்தையும், திருப்தி செய்யாத பொருளுக்காக உங்கள் பிரயாசத்தையும் செலவழிப்பானேன்? (ஏசா 55 : 2). நீங்கள் எனக்கு செவிகொடுங்கள் என்று இயேசு கிறிஸ்து அழைக்கிறார். அவரை அவரது ஸ்தானாதிபதிகளை (ஊழியர்களை) அண்டிக் கொள்கிறவர்களுக்கு, தாங்கள் செய்கிற செலவுகளுக்கும், படுகிற பிரயாசத்திற்கு மேற்ற பலனை அடைந்து கொள்ளும் வழி கற்றுக் கொடுக்கப்படுகிறது.

உங்களுக்குக் கொடுக்கப்படுகிற காலத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ளுங்கள். இயேசு கிறிஸ்துவை அண்டி அவரை பின்பற்றுகிறவர்களாகுங்கள். இதோ தேவ ஊழியர்களாகிய எங்களுடைய ஐக்கியம் அவரோடே இருக்கிறது. நீங்களும் எங்களோடே ஐக்கியப்படுங்கள். இம்மையிலும், மறுமையிலும் பலன் அடைவீர்கள். உங்கள் கிரியைகளுக்கேற்ற பலனை நிச்சயமாய் பெற்றுக் கொள்வீர்கள். நன்மையானதைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

---

'மதுபானப் பிரியரையும், மாம்ச பெருந்தீனிக்காரரையும் சேராதே. குடியனும், போஜனப் பிரியனும் தரித்திரராவார்கள். தூக்கம் கந்தைகளை உடுத்துவிக்கும்'

—நீதி 23 : 20, 21.

---

# பெற்றோரின் பாவம் பிள்ளையைப் பாதிப்பது நியாயமா?

மனுமக்களிடையே உண்டாயிருக்கிற ஒரு கேள்வி என்னவென்றால் பெற்றவர்கள் பாவம் செய்து விட பிள்ளைகள் பாதிக்கப்படுவது நியாயமாகுமா? என்று. ஒருவர் தவறு செய்திருக்க இன்னொருவர் தண்டிக்கப்படுவது அநியாயமாயிற்றே! என்ற விவாதம் நிலவுகிறது. தேவ எச்சரிப்பு இப்படி உண்டாயிருக்கிறது: பிதாக்களுடைய அக்கிரமத்தை மூன்றும் நான்காம் தலைமுறை வரை விசாரிப்பேன் என்று (யாத் 20:5). பாதிக்கப்பட்டவர்கள் சார்பில் நிற்கிறவர்கள், இறைவன் அநியாயம் செய்கிறார் என்ற முடிவுக்கு வந்து விடுகிறார்கள்.

கன்னியாகுமரியில் ஒரு மனிதன் வசித்து வந்தான். தேசத்தில் பஞ்சம் உண்டாயிற்று. பஞ்சம் பிழைக்கும்படி வட இந்தியா போய் பஞ்சாப் பகுதியில் வேலையில் அமர்ந்து, தன்னுடைய பிள்ளைகளை அங்கே படிக்க வைத்து, முன்னேற்றி அவர்களும் அங்கேயே வேலை செய்ய ஏற்பாடு பண்ணி, அங்கேயே வீட்டைக் கட்டி, நிரந்தரமாகத் தங்க ஆரம்பித்தான். காலம் கடந்து சென்றது அவன் மரித்தான், அவனுடைய மக்களும் வயோதிபர்களாகி மரித்தார்கள். இப்படி சில தலைமுறைகள் கடந்து சென்றது. அந்தக் கன்னியாகுமரியிலிருந்து வந்தவனுடைய சந்ததியார் தாங்கள் பஞ்சாபை சேர்ந்தவர்கள் என்று சொல்ல ஆரம்பித்தார்கள். கன்னியாகுமரியைப்பற்றி அவர்களுக்குத் தெரியாமலே போய் விட்டது. அந்த கன்னியாகுமரிக்காரன் தனது சொந்த ஊரில் தங்கியிருப்பானானால், அவனுடைய இந்த சந்ததி தங்களை கன்னியாகுமரிக்காரர்கள் என்று சொல்லியிருப்பார்கள். ஆனால் அந்த மனிதன் அந்தக் காலத்தில் அங்கே போனபடியால் இன்று இவர்கள் தங்களை பஞ்சாப்காரர்கள் என்று சொல்லுகிறார்கள். இவர்களை இப்படிச் சொல்ல வைத்தது அந்த மனிதனுடைய செய்கையே.

அப்படியே ஒரு மனிதனுடைய பாவத்தினால் அவனுடைய சந்ததியும் பாதிக்கப்படுகிறது இயற்கையே என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

பாருங்கள், வழியிலே ஒருவன் மலஜலாதியிருந்துவிட்டு போய் விடுகிறான். அதனால் பாதிக்கப்படுகிறவர்கள் அந்த வழியே போகிறவர்களே. பெற்றோர்கள் பிரயாசப்பட்டு பொருள் சேர்த்து வைத்திருக்க அதற்கு பிள்ளைகள் மாத்திரமே உரிமையாளர்களாகுகிறார்கள். ஏன் ஒருவன் பிரயாசப்பட்டதை இன்னொருவன் அநுபவிக்கலாமா? என்று யாரும் கேட்பதில்லை. ஆனால் ஒருவன் (தகப்பன்) பாவம்

செய்திருக்க இன்னொருவன் (மகன்) பாதிக்கப்படுவது எப்படி என்று கேட்கிறார்கள். இது நியாயமா? அது எப்படி நியதியோ, இதுவும் அப்படியே.

ஆனாலும் அந்தக் கன்னியாக்குமரிகாரனின் சந்ததி தன்னுடைய சுய தேசம் எது எனக் கேட்டறிந்து, தன் முன்னோரின் தேசம் வரவிரும்பினால் வரலாம். அல்லது பஞ்சாபிலேயே தங்கி விடலாம். இது இப்போது இவனுடைய விருப்பத்தில் இருக்கிறது. வழியில் அசுத்தம் உண்டு என அறிந்து, வேறு வழியாய் போய் அதன் துர்நாற்றத்துக்குத் தப்பலாம். பெற்றோரின் பிரயாசத்தின் சுதந்திரம் பிள்ளைகளுக்கு இயற்கையாய் கடந்து வருகையில், இந்த பிள்ளை சுதந்தரித்து அனுபவிக்கலாம். அதை வெறுத்து ஒதுக்கியும் விடலாம். அப்படியே பெற்றோர்களின் பாவம் இயற்கையாகவே பிள்ளைகளிடத்திலே பிரதிபலனை உண்டாக்கும். அதில் தப்பித்துக் கொள்ள முடியும் என்று வேதம் ஆலோசனை சொல்லுகிறது.

இதெப்படி, குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தை சுமக்கிறதில்லையா என்று நீங்கள் கேட்டால், குமாரன் நீதியையும் நியாயத்தையும் செய்து என் கட்டளைகளைக் கைக் கொண்டு, அவைகளின்படி செய்தால் அவன் பிழைக்கவே பிழைப்பான், பாவம் செய்கிற ஆத்துமாவே சாகும், குமாரன் நீதி செய்தால் தகப்பனுடைய அக்கிரமத்தை சுமப்பதில்லை (நீதி செய்யாவிட்டால் நிச்சயமாகவே சுமப்பான்) என்று கர்த்தர் சொல்லுகிறார் (எசே 18:19,20).

பெற்றோரின் பாவத்தினால் முடவனாக, குருடனாக, ஊமையனாக பிறந்து பாதிக்கப்பட்டவன் நீதி செய்து, அவன் நீதி தேவனால் எண்ணப்படுமானால், அவன் சாபத்தினின்று மீட்படைய முடியும். பாருங்கள், லீஸ்திரா பட்டணத்தில் ஒருவன் தன் தாயின் வயிற்றிலிருந்து பிறந்தது முதல் சப்பாணியாய் இருந்து, ஒரு போதும் நடவாமல் கால்கள் விழங்காதவனாய் உட்கார்ந்து, பவுல் பேசுகிறதைக் கேட்டுக் கொண்டிருந்தான், அவனுடைய உள்ளத்தில் இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் உண்டாயிற்று. தேவன் அதை நீதியாக எண்ணினார். பவுலை ஏவினார் பவுல், நீ எழுந்து காலூன்றி நிமிர்ந்து நில் என்று, உரத்த சத்தத்தோடே சொன்னான், உடனே அவன் குதித்தெழுந்து நடந்தான் (அப் 14:8-10). தேவன் அநீதி உள்ளவரா? ஒரு போதும் அப்படிச் சொல்லாதே. அவர் நீதிபரர்.

**பெற்றோர்களின் கவனத்திற்கு:-**

பெற்றோர்கள் என்ன பாவம் செய்கிறார்களோ, அதே பாவத்தைப் பிள்ளைகளும் செய்வார்கள் (ஆதி 20:2; 26:7) தாய் எப்படியோ, பிள்ளையும் அப்படியே. தாய் அசுத்த நடக்கை உள்ளவளானால் மகளும் அப்படியே இருப்பாள். பிள்ளைகள் பெற்றோர்களின் பாவமாகிய விதையை சுதந்திரமாகப் பெறுகிறார்கள். அதை அவர்கள் விதைத்து, நீர் பாய்ச்சி, உரமிட்டு மிகுதியான பாவ பலனைப் பெறலாம். ஆகவே சில பிள்ளைகள் தாய், தகப்பனைக்காட்டிலும், பெரும் பாதகர்களாக காணப்படுகிறார்கள் (IIசாமு 12:10, 16:21,22). பெற்றோரிடம் பெற்றுக்கொண்ட இந்த பாவமாகிய விதையை விதைத்து அதிக பலனை பெறும்படி ஆலோசனை கொடுக்கிறவனும், ஒத்தாசை செய்கிறவனும் பிசாசு. இவனுடைய ஆலோசனைக்கு செவிகொடுக்காதவர்கள் நல்லவர்களாகவும் இருக்கலாம் (I இரா 14:1-13).

பெற்றவர்கள் பரிசுத்தமாக இருந்தால் பிள்ளைகளும் பரிசுத்தமாயிருக்கும் (Iகொரி 7:14). அநியாயம், செய்து அக்கிரமம் செய்து எப்படியும் வாழ்ந்து பிள்ளைகளுக்கு திரவியம் தேடி வைக்கிறார்கள் அநேகர். ஆனால் அந்த திரவியத்தோடே பாவத்தையும் பிள்ளைக்கு வைத்து போகிறார்கள் என்பதையும் அறிய வேண்டும். அநியாயத்தின் திரவியம் ஒன்றுக்கும் உதவாது. சரித்திரத்தில் எவ்வளவு பேர் பெற்ற இராஜாக்கள் இருந்தார்கள், எவ்வளவு ஆஸ்தி உடையவர்களாய் இருந்தார்கள். அநியாயக்காரர்களாகிய அவர்களுடைய சந்ததி இன்றைக்கு எங்கே இருக்கிறார்கள்? மாறாக ஒரு மனிதன் தேவனுக்கு முன்பாக நீதிமானாய் நடந்து, அவனுக்கு ஏற்றபடி ஜீவிப்பானானால் அவனுடைய சந்ததிக்கு

தேவன் தயவு பாராட்டுகிறார். ஆபிரகாம் தேவனுக்கு முன்பாக நீதிமானாய் இருந்தார். பல ஆயிரமாண்டுகள் கடந்து போன பின்பும், அவருடைய சந்ததி இஸ்ரவேல் என்னும் பெயரில் தேவதயவுபெற்று விளங்குகிறதை நாம் இன்றும் காண்கிறோம். நான் இளைஞனாய் இருந்தேன், முதிர் வயதுள்ள வனுமானேன். ஆனாலும் நீதிமான் கைவிடப்பட்டதையும், நீதிமானுடைய சந்ததி அப்பத்திற்கு இரந்து திரிகிறதையும் நான் காணவில்லை (சங் 37:25) என்று ராஜா ஒருவர் சொல்கிறார்.

ஆகையால் பெற்றோர்களே, நீங்கள் உங்கள் பிள்ளைகளை நேசிப்பீர்களானால் அவர்களுக்கு நீங்கள் சேர்த்து வைக்கும் மதிப்பிற்குரிய, விலை மதிக்க முடியாத பொக்கிஷம் எதுவென்று என்னைக் கேட்டால், உங்களுடைய நீதியே (தேவனுக்கேற்ற வாழ்க்கை) என்றே நான் சொல்லுவேன்.

---

'தேவன் நீதிமானுடைய சந்ததியோடே இருக்கிறாரே'

—சங் 14:5.

---

# கிறிஸ்துமஸ் பரிசு

அதிகாலை எழுந்து ஜெபிக்க தன்னை தயார் செய்து கொண்டு, குழந்தைகளையும், கணவனையும் எழுப்பினார்கள் மேரி அம்மா. அன்றைய தினத்திற்காக காலண்டரின் முந்தின நாள் காட்டி தாளை கிழித்தார்கள். நான் எல்லோருக்கும் முன்பாக இருக்கிறேன என்று தன்னை வெளிப்படுத்தியது முதல் தேதி. நான் மாதங்களில் கடைசியானவன் என்று வெளிப்படுத்தியது டிசம்பர்.

எல்லோரும் அதிகாலை ஜெபத்திற்கு தங்களை தயார் செய்து கொண்டனர். சாமுவேல் அவர்களின் குடும்பத்தினர். மேரி அம்மாள் தனது மூத்த குமாரன் டேவிட்டை நினைத்து வருந்தினார்கள். டிசம்பர் முதலாம் தேதியோடு தனது மகன் வெளியிடத்திற்கு சம்பாதிக்கச் சென்று வருடங்கள் மூன்று ஆகிவிட்டன. குதூகலமான கிறிஸ்துமஸ் நாளும் வருகின்றதே. மகன் எப்படி இருக்கிறானோ என கண் கலங்கினார்கள் அந்த அம்மா.

காலைதோறும் கர்த்தனே, உம் கிருபை இவ்விதம் பொழிகின்றீரே என்ற பாடலுடன் ஆரம்பமாகி, வீட்டுத் தலைவர் ஜெபம் செய்து முடித்த பின் காலை வேதபாகம் வாசித்து விட்டு, மற்றக் குழந்தைகள் ஜெபம் செய்த பின்னர், மேரி அம்மாளின் முறை வந்தது. மேரி அம்மா தேவனுடைய சமூகத்தில் தங்கள் பாரங்களை வைத்தார்கள். கர்த்தாவே! இன்றுடன் வருடங்கள் மூன்று கழிந்து விட்டன. பம்பாய் கடந்து சென்ற குமாரனை நீர் சீர்திருத்தும், அவன் மனந்திரும்ப வேண்டும். பிதாவே நீர் உம்முடைய ஒரே பேறான குமாரனை (கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை) இந்தப் பூலோகத்திற்கு அனுப்பினீர், அவரும் கடந்து வந்து உம்முடைய சித்தத்தை செய்து நம்மை முற்றிலுமாய் உம்முடைய கரத்தில் ஒப்படைத்தாரே, அப்படியே வெளியிடத்தில் இருக்கின்ற மகனும் அவனுடைய சித்தம் செய்யாமல், உம்முடைய சித்தம் ஒன்றே செய்யும்படியாய் அவனுக்கு ஓர் உணர்வுள்ள இருதயத்தைக் கொடும், பண்டிகை நாட்களும் நெருங்குகின்றன." அதற்கு வேண்டிய தேவைகளைச் சந்தியும் என ஜெபித்து, தேவ சமூகத்தில் தன் இருதயத்தை ஊற்றி விட்டார்கள். அவர்களது மனது மிகுந்த சந்தோஷம் அடைந்தது. கர்த்தர் எனக்காக யாவற்றையும் செய்து முடிப்பார் என்ற நம்பிக்கையுடன், ஜெபத்தை விட்டு எழுந்தார்கள். தனது வேலைகளை கவனிக்க ஆரம்பித்தார்கள். சாமுவேல் அவர்கள் வேலைக்குச் செல்லவும், குழந்தைகள் பள்ளிக்குச் செல்லவும் தங்களை தயார் செய்து கொண்டு புறப்பட்டுச் சென்றனர்.

தனது குடும்பத்திற்காக உழைக்கும்படி வந்த டேவிட், ஆரம்ப நாட்களில் வீட்டின் கஷ்டம் அறிந்து, வேலை செய்து சம்பாதித்து வீட்டிற்கு உதவி செய்து வந்தான். நாட்கள் சில கடந்த பின்னர் அவனது கெட்ட சகாக்களின் கெட்ட பழக்க வழக்கங்கள்

அவனைப் பிடித்து அலைக்கழித்தன. அவற்றினின்று அவன் விடுதலை பெற வேண்டும் என நினைத்தான். ஆனால் பாவம் செய்து பழகிப் போனபடியால் அந்தப் பாவமானது அவனைப் பிசாசு போல் பிடித்துக் கொண்டது. அவனால் எவ்வளவுதான் விடுபட வேண்டும் என முயற்சித்தாலும் விடுதலை பெற முடியவில்லை. தனது கெட்ட நண்பர்களின் நட்பையும் அவனால் தவிர்க்க முடியவில்லை. இப்படியாக அவனது நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தான்.

இப்படியாக டேவிட் ஜீவித்துக் கொண்டிருக்கின்ற நாட்களில் ஒரு நாள் ஒரு தேவ ஊழியரின் மூலம், மெய்யாக கர்த்தராகிய கிறிஸ்து இயேசு இவ்வுலகில் பிறந்ததின் நோக்கத்தையும், அவரால் கிடைக்கின்ற பாவ மன்னிப்பைப் பற்றியும் அவர் மூலமாய் மெய்யான சமாதானம், சந்தோஷம் கிடைக்கின்றன என்பதையும், எல்லாவற்றிற்கும் மேலாக பாவத்தினின்று விடுதலை கிடைக்கின்றது என்பதையும் அறிந்தான். அது முதற்கொண்டு அவனுக்குள் சிறிது மனமாற்றம் ஏற்பட்டு அந்த ஊழியரின் தொடர்பும், சபையின் தொடர்பும் ஏற்பட்டது. அவனை பிசாசு போல் பிடித்திருந்த பாவம் அவனை விட்டு நீங்கியது. பாவ மன்னிப்பு என்ற உபதேசத்தின் மூலம்.

கர்த்தராகிய கிறிஸ்து இயேசு இந்தப் பூலோகத்தில் பிறந்தார் என்பதற்கு அடையாளமாக, டிசம்பர் 25-ஆம் நாளைக் கொண்டாடுகின்றனர் என்பதையும் அந்தச் சந்தோஷத்தின் நிமித்தமாகத்தான் ஒருவருக்கொருவர் வாழ்த்துதலையும், பரிசுகளையும் வழங்குகின்றனர் என்பதையும் அறிந்தான். இப்பொழுது தான் கடந்த இரண்டு ஆண்டுகளாக தனது கெட்ட நண்பர்கள், கெட்ட நடத்தையின் மூலமாக மறந்த தனது பெற்றோர்களையும், சகோதர, சகோதரிகளையும் நினைவு கூர்ந்து மனம் கசந்து அழுதான். தேவனது சமுகத்தில் அதற்காய் அழுது ஜெபம் செய்தான். அதன் பின்னர் தனது பெற்றோர்களுக்கு ஒரு நீண்ட கடிதத்தையும், அவனது கையிலிருந்த ஆயிரம் ரூபாயையும் அனுப்பி வைத்தான்.

கடிதத்தில் பெற்றோருக்கு முதலாவது மன்னிக்கும்படி எழுதி விட்டு; இப்பொழுது தான் ஒரு மெய்யான கிறிஸ்தவனாக மாறி விட்டான் என்பதையும் விளக்கி எழுதியிருந்தான். கடைசியில், தனது பெற்றோருக்கு பிதாவாகிய தேவன் எப்படி மனுக்குலத்தை மீட்கும்படியாய் (பாவிகளுக்காய்), கிறிஸ்து இயேசுவை பரிசாக அனுப்பினாரோ, அதுபோல் இது முதற்கொண்டு முதலாவது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கும், இரண்டாவது உங்களுக்கும் என்னை பரிசாக அளிக்கிறேன். இதுவே எனது கிறிஸ்துமஸ் பரிசு என்று எழுதி முடித்து விட்டான்.

கடிதமும், பணமும் கிடைக்கப் பெற்ற டேவிட்டின் பெற்றோர்கள் மிகவும் சந்தோஷப்பட்டனர். மெய்யாக கர்த்தர் அவர்களது ஜெபத்தைக் கேட்டதற்காய் களி கூர்ந்தனர். பிள்ளைகளே! நாமும் கிறிஸ்துமஸ் பரிசாக நம்மை முதலாவது கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவிற்கு பரிசாக சமர்ப்பிப்போமாக.

---

"கிறிஸ்துவுடனே கூடச் சிலுவையில் அறையப்பட்டேன்; ஆயினும், பிழைத்திருக்கிறேன். இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்........"

—கலா 2:20

---



யாத் 2:1—4 மோசேயின் பிறப்பு:- லேவிக் கோத்திரத்தைச் சேர்ந்த அம்ராம், யோகெபேத் என்னும் ஸ்திரீயை விவாகம் பண்ணினார். இந்த நெருக்கடியான காலத்தில் இவர்களுக்கு மோசே பிறந்தார் (யாத் 6:20). பிள்ளை அழகுள்ளது என்று கண்டு மூன்று மாதமளவும் பிள்ளையை ஒளித்து வைத்தார்கள். இராஜாவினுடைய கட்டளையை மீறி

பிள்ளையை ஒளித்து வைத்தது மிகவும் ஆபத்துக்குரிய செயலாகும். தேவன் மீதுள்ள விசுவாசத்தினால் பிள்ளை பாதுகாக்கப்பட்டது. மேலும் பிள்ளையை ஒளித்து வைக்கக் கூடாமல் போனபடியால் ஒரு நாணல் பெட்டியை எடுத்து அதற்கு பிசினும், கீலும் பூசி; பிள்ளையை அந்தப் பெட்டியில் வைத்து நதியோரமாய் நாணலுக்குள்ளே மறைத்து வைத்தாள். பிள்ளைக்கு நேரிடுகிறதைக் காணும்படி அதனுடைய தமக்கையாகிய மிரியாம் தூரத்தியல நின்று கவனித்துக் கொண்டிருந்தாள்.

யாத்2:5—10 நதிக்கரையில் குளிக்க வந்த பாரவோனின் குமாரத்தி பிள்ளையின் அழுகுரலைக் கேட்டு பிள்ளையை எடுத்து வரச் செய்து அதைத் தனக்குப் பிள்ளையாக தத்து எடுத்துக் கொண்டாள். மோசேயினுடைய தமக்கையின் ஆலோசனைப்படி மோசேயை வளர்க்க மோசேயின் தாயையே பார்வோனின் குமாரத்தி நியமித்தாள். ஜலத்திலிருந்து குழந்தையை எடுத்தபடியினால் அதற்கு மோசே என்று பெயரிட்டாள்.

யாத் 2:11—14 மோசே பெரியவனான போது தன் சுய முயற்சியினால் தன்னுடைய ஜனங்களை மீட்கப் பிரயாசப்பட்டு, எபிரேயன் ஒருவனுக்கு அநியாயம் செய்த எகிப்தியன் ஒருவனை அடித்துக் கொன்று போட்டார். மறுநாளிலே தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்ட இரண்டு எபிரேயர்களை அவர் சமாதானப்படுத்த முயற்சித்த போது அந்த எபிரேயர்கள் மோசே முதல் செய்த காரியத்தைச் சொல்லிக் காட்டி, உன்னை எங்கள் மேல் நியாயாதிபதியாகவும், அதிகாரியாகவும் வைத்தவர் யார் என்று சொல்லி அவருடைய ஊழியத்தைப் புறக்கணித்து போட்டார்கள்.

யாத் 2:15—22 இந்தக் காரியம் பார்வோனுக்குத் தெரிய வந்தது. பார்வோன் மோசேயை கொல்ல வகை தேடினான். இதனால் மோசே பயந்து மீதியான் தேசத்துக்கு ஓடிப்போனார். அங்கே மீதியான் தேசத்து ஆசாரியருடைய ஆதரவிலே தங்கியிருந்தார். ரெகுவேல் என்னும் அந்த ஆசாரியன் தன்னுடைய மகள் சிப்போராளை மோசேக்கு விவாகம் முடித்து வைத்தார். மீதியான் தேசத்திலே மோசேக்கு ஒரு மகன் பிறந்தான். அவன் பெயர் கெர்சோம்.

யாத் 2:23—25 இஸ்ரவேலர்கள் அடிமைத்தனத்தினால் தவித்து தேவனை நோக்கி முறையிட்டார்கள். அவர்கள் முறையிடுகிற சத்தம் தேவ சந்நிதியில் போய் எட்டிற்று. தேவன் அவர்கள் பெருமூச்சைக் கேட்டார். ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களோடு தாம் செய்த உடன்படிக்கையை நினைந்தருளினார். நமக்குண்டாகும் நெருக்கத்திலே நாம் தேவனை நோக்கி கூப்பிடுவோமானால் நம்மையும் நினைந்தருளி நெருக்கத்தினின்று விடுவிப்பார்.

(தொடரும்)

"விசுவாசத்தினாலே மோசே தான் பெரியவனான போது...... அநித்தியமான பாவச் சந்தோஷங்களை அனுபவிப்பதைப் பார்க்கிலும்...... கிறிஸ்துவினிமித்தம் வரும் நிந்தையை அதிக பாக்கியமென்று எண்ணினான்"
—எபி 11:24-26.

(தொடர்ச்சி)

# மோட்சவழி

## குரு—சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன் :** வேதாகமத்தை வாசிப்பது எப்படி என்று அறிய விரும்புகிறேன்.

**குரு :** வேதாகமத்தை விளங்கிக் கொள்ள வெவ்வேறு விதத்தில் முயற்சி செய்யலாம். இது தேவன் அருளிய வேதம் என்று விசுவாசித்து ஜெபத்துடன் வாசிக்க ஆரம்பிக்க வேண்டும்.

**சிஷ்யன் :** வேதாகமம் எவ்வாறு, யாரால், எழுதப்பட்டது?

**குரு :** தேவன் தம்முடைய ஆவியினால் தாம் தெரிந்து கொண்ட மனிதர்களை வழி வெளிப்படுத்திக் காண்பித்து அவர்களைக் கொண்டு எழுதச் செய்துள்ளார். வேதாகமத்தில் மனித வரலாறும், தேவன் ஜனங்களோடே இடைப்பட்ட விதமும் இவைகளின் மத்தியில் மனிதர்களுக்கு இறைவன் அருளிய செய்தியும் அமைந்துள்ளது. இதை எழுதி முடிக்க பல நூற்றாண்டுகள் ஆயின. வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு தேசங்களில், இடங்களில் எழுதி வைத்துவிட்டு மரித்து விட்டார்கள். இவைகளெல்லாம் ஒன்றாய்க் கூட்டப்பட்டு ஒரு புஸ்தகமாக நம் கையில் கிடைத்துள்ளதே பெரிய அதிசயம். இதை கிட்டத்தட்ட 40 பேர்கள் எழுதியுள்ளார்கள். இவர்களில் அநேகர் ஒருவரையொருவர் சந்தித்ததில்லை.

**சிஷ்யன் :** வேதாகமம் உண்மையானது என்பதற்கு என்ன ஆதாரம்?

**குரு :** வேதாகமத்தின் ஒழுங்கும், அதனுடைய அமைப்பும், அது போதிக்கும் பொருளும் ஒன்று போலிருப்பது இதனுடைய மேன்மையாயிருக்கிறது. இதை வாசிக்கிற, ஆராய்கிற எந்த மனிதனும் இதை ஒரே ஆள் எழுதினதாக நம்பத்தக்க விதமாக இதன் ஒழுங்கு அமைப்பு காணப்படுகிறது. ஒரு பெரிய அதிசயம் இது எழுதப்பட்ட பிரகாரமே உலக சம்பவங்கள் நடந்து வருகின்றன. இனிமேலும் நடை பெறப் போகிறது. இந்த வேதாகமத்தில் சொல்லப்பட்ட தீர்க்கத் தரிசனங்கள் உலக சரித்திரத்தில் வேதாகமத்தில் எழுதியபடி நடந்தேறி முடிந்ததே இதன் உண்மைக்கு பலத்த சான்றாக இருக்கிறது. மேலும் நடைபெறப் போவதாக வேதாகமத்தில் எழுதப்பட்டுள்ள தீர்க்கத் தரிசனங்களின்படி உலக சம்பவங்கள் நடந்தேறி முடிவடையப் போகின்றன. ஆதலால் நீ வேதாகமத்தை பகுதி பகுதியாகப் பிரித்து படிக்கலாம். முதலாவது புதிய ஏற்பாட்டை வாசிக்கவும். பின்பு பழைய ஏற்பாட்டை வாசிக்கவும். ஜெப சிந்தையோடும், கவனமாகவும், ஞாபகத்தில் பதியதக்க விதமாயும் வேதாகமத்தை வாசிக்கவும். வாசிக்கும் பொழுது அதில் வருகிற சம்பவங்களை சரித்திர சான்றாகவும், போதனையாகவும், எச்சரிப்பாகவும், நீதியை படிப்பிக்கும் படியாக அறிவையும், ஞானத்தையும், கொடுக்கக் கூடியதாகவும் எண்ணி படிக்கவும். நீங்கள் படிக்கிற வேத வாக்கியங்களைக் கொண்டு தேவன் உங்களோடு பேசுவார். உங்கள் ஜீவியத்திலுள்ள குறைகள் உங்களுக்குக் காட்டப்படும். நீங்கள் நடக்க வேண்டிய வழி உங்களுக்கு முன்பாக வைக்கப்படும். நல்லதை பற்றிக் கொள்ளவும்.

**சிஷ்யன் :** வேதாகமத்தின் மூலமாக தேவன் எப்படி பேசுவார்?

**குரு:** வேதத்தின் நாயகரை ஏற்றுக் கொள்ளுகிறவர்களுக்கே வேதம் விளங்கும். தேவன் தான் செய்யப் போகிற சொல்லுகிற ஒவ்வொன்றிற்கும் வேதாகமத்திலுள்ள ஒரு வசனத்

தையோ, ஒரு பாகத்தையோ சுட்டிக் காட்டுவார். தேவன் பேசுகிறதற்கு தேவன் சுட்டிக் காட்டுகிற அந்த வேதபாகம் ஆதாரமாக இருக்கும்.

**சிஷ்யன் :** அப்பொழுது நான் வேதாகமத்தை விசுவாசத்துடன் படிப்பேன். அதை மனப் பாடம் செய்வேன்.

**குரு :** அப்படியே செய். இறைவன் உன்னை ஆசீர்வதிப்பார்.

(தொடரும்)

> "கர்த்தருடைய வேதம் குறைவற்றதும், ஆத்துமாவை உயிர்ப்பிக்கிறதுமாயிருக்கிறது"
>
> சங் 19:7

**மாதர் பகுதி**

# குடும்பம்

1. குடும்பத்தில் வியாதி வராமலிருக்க வீட்டுத் தலைவி கவனமாயிருக்க வேண்டும். தினந்தோறும் வீட்டின் மூலை முடுக்குகளையும் கவனமாய்ப் பெருக்கி சுத்தம் செய்ய வேண்டும். வீட்டின் சுவர்களிலும், கூரையிலும் ஒட்டடை பிடிக்க விடக் கூடாது. ஜன்னல்கள், கதவுகளிலும், ஒட்டடை போன்ற தூசிபடிய விடக்கூடாது. சுத்தமாயிருக்கிறவர்கள் அநேகவிதமான வியாதிகளுக்கு நீங்கலாம். பிரயோஜனமில்லாத பழைய தகரங்கள், பலகைகளை, தாள்களை வெளியே எறிந்துவிடவேண்டும்.

2. அடுத்தபடி உங்கள் படுக்கை அறையைச் சுத்தமாக வைக்கவேண்டும். மனிதன் தன் ஜீவிய நாட்களில் மூன்றிலொரு பாகத்தை படுக்கை அறையில் கழிக்க வேண்டியிருப்பதினால் உங்கள் படுக்கை அறையைப் பற்றி நீங்கள் அதிக கவலையாயிருக்க கடமைப்பட்டிருக்கிறீர்கள். இரவில் தூங்கி பகலில் அறையை விட்டு வெளியே போய் விடுவதால் அநேகர் படுக்கை அறையைப் பற்றி கவனிக்கிறதில்லை. படுக்கை அறை சுத்தமாயும் சுத்தமான ஆகாயம் (காற்று) உள்ளேவரவும் கெட்ட ஆகாயம்(காற்று) வெளியே போகக்கூடியதாகவும் இருக்கத் தக்கதாக அமைக்க வேண்டும். உன் வரவுக்கு தக்க படுக்கை அறையை அலங்கரி. உன் படுக்கை அறையின் ஜன்னல்களைத் திறந்துவைக்கப் பயப்படாதே. மழைக்காலத்திலும் கூட ஜன்னல்கள் திறந்திருப்பது நல்லது. கதவு ஜன்னல்களை நன்றாய் அடைத்து வைப்பாயானால் உன் படுக்கை அறையின் ஆகாயம் கெட்டுப் போகும். கதவுகளை அல்லது ஜன்னல்களை உனக்கு திறந்துவைக்க பிரியமில்லாவிட்டால் கதவுகளில் மேல் பகுதிகளிலாவது துவாரங்கள் அமைப்பது நல்லது. உன் ரத்தாசயத்துக்கு போதுமான காற்று கிடைக்க வழிசெய். வீட்டைச் சுத்தமாய் வைத்துக் கொள்வது மனைவியின் கடமை என்று புருஷர்கள் நினைத்து சும்மாயிருந்து விடக்கூடாது. வியாதியுண்டானுமானால் யாராவது வீட்டில் நோய்பட்டால் மனைவிக்கு மட்டுமல்ல, புருஷனும் வருத்தப்பட நேரிடும்.

3. நோயாளி இருக்கும் அறை மிக அமைதலாயிருக்க வேண்டும். நோயாளி திடீரென்று கவனிக்கக்கூடிய சத்தங்கள் உண்டாகாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். நோயாளி திடீரென்று விழிக்கும்படி செய்கிற எந்தச் சத்தமும் நம்முடைய கண்ணுக்குத் தெரியாத எத்தனையோ தீமைகளை நோயாளிக்கு விளைவிப்பதுண்டு. நோயாளியண்டை இருப்பவர்கள் அதிக

சாயமுள்ள வஸ்திரங்களைவிட சாதாரண சாயமுள்ள துணிகளை அல்லது வெண்ணுடைகளை உடுத்துவது நல்லது.

4. வியாதிக்காரர்களுக்கு உதவி செய்கிறவர்கள் எப்பொழுதும் கூடியமட்டும் சந்தோஷ முகத்தோடிருக்கவேண்டும்.

5. வியாதிக்காரன் படுத்திருக்கும் அறையில் வெளிச்சம் வரும்படி செய்ய வேண்டும்.

6. வியாதிக்காரர்களின் படுக்கை அறை சுத்தமாயிருப்பது மிக அவசியம். படுக்கைவிரிப்பு சுத்தமாயிருக்க வேண்டும். சாப்பாடு, தண்ணீர் கொண்டு வரப்படும் பாத்திரங்கள் உடனுடன் அகற்றப்பட்டு சோப்புத் தண்ணீரில் தோய்த்துக் கழுவப் படவேண்டும்.

7. படுக்கையிலிருக்கும் நோயாளிக்கு ஏதாவது புண்கள் உண்டாயிருந்தால் நல்ல அவிழ்தத்தை உபயோகித்து உடனே புண்ணை ஆற்ற வேண்டும்.

8. இரவும் பகலும் வியாதிக்காரர்கள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்று எண்ணக் கூடாது. அது வியாதிக்காரனுக்கு தொந்தரவாக இருக்கும். உனக்கும் சுகவீனத்தை உண்டாக்கும்.

9 வியாதிக்காரர்களுக்கென்று கவனமான சமையல் செய்யப்பட வேண்டும். சுகமாயிருக்கும்போது சாப்பாடு ஆயத்தம் படுத்துவதைவிட இப்போ அதிக கவனம் செலுத்தப்படல் தேவை.

10. நீ உன் கடமைகளை நிறைவேற்றிவிட்டு உன் பிரயாசத்தை ஆசீர்வதிக்கும்படி ஜீவனுக்கும் மரணத்துக்கும் அதிகாரியான ஜீவனுள்ள தேவனை நோக்கி வியாதிக்காரனுக்காக ஜெபி. போதகரை அழைத்து வந்து எண்ணெய் பூசி ஜெபி. கர்த்தர் சுகப்படுத்துவார்.

---

"வீடு ஞானத்தினாலே கட்டப்பட்டு, விவேகத்தினாலே நிலை நிறுத்தப்படும். அறிவினாலே அறைகளில் அருமையும் இனிமையுமான சகலவிதப் பொருள்களும் நிறைந்திருக்கும்"

நீதி: 24 : 3, 4

---

## சாட்சி

## என் அகக் கண்கள் திறக்கப்பட்டது

என் பெயர் பர்னபாஸ், எனக்கு வயது 60 ஆகிறது. நான் திருநெல்வேலி மாவட்டத்தில் சிங்கனேரி என்ற கிராமத்தில் ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தேன். என்னுடைய பெற்றோர்கள் எனக்கு இட்ட பெயர் கோட்டக்கரையான். என்னுடைய மூதாதையர் இந்துவாக இருந்தபடியினால் நானும் இந்து மரபின்படி நடத்தப்பட்டேன். என் 17 வயதில் இருந்து கோட்டக்கரையான் என்ற கடலைப் பிசாசை ஆடிவந்தேன். நான் என் வாலிபப் பிராயத்தில் துன்மார்க்கர்களோடு சேர்ந்து நான் செய்யாத பாவங்கள் இல்லை. என் தொழில் களவு, மற்றும் மலைகளில் போய் கள்ள சாராயம் காய்ச்சுவது போன்றதாகும்.

துஷ்டனைக் கண்டால் தூர விலகு என்று சொல்வார்கள். நான் குடித்துவிட்டு எங்கள் ஊரில் வரும்போது வாயில்வந்தபடி அசிங்கமான வார்த்தைகளை பேசிக் கொண்டு வருவேன். நான் வரும்பொழுது தெருவில் யாராவது நின்றால் என்னைக் கண்டு விட்டுக் குள்போய் விடுவார்கள். எதற்கும் அஞ்ச மாட்டேன். எதையும் துணிந்து செய்வேன். கோட்டக்கரையானை அவனிடம் எதுவும் பேசாதீர்கள், அவன் மிகவும் மோசமான மனிதன் என்று பிறர் சொல்லக்கூடிய அளவுக்கு சுற்று வட்டாரங்களில் அவ்வளவு கெட்ட பெயர் எடுத்திருந்தேன்.

இந்து தெய்வம்தான் உண்மையான தெய்வம் என்று நினைத்து அதற்கு செய்ய

வேண்டிய பணிவிடைகளை செய்து வந்தேன். ஒரு செய்வினை கோளாறினால் என் மனைவிக்கு உடல்நலம் சரியில்லாமல் ஆனது. நான் ஆடிய சுடலையிடம் என் மனைவியை காப்பாற்றும்படி வேண்டினேன். ஆனால் அது கை விட்டுவிட்டது. என் மனைவி மரித்து போனாள். ஆனாலும் என் அகக் கண்கள் குருடாக்கப்பட்ட நிலையில் இருந்ததினால் மீண்டும் அந்தச் சுடலைத்தான் மெய் தெய்வம் என்று எண்ணி அதையே வழிபட்டு வந்தேன். எனக்கு இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிவித்தவர்கள் நான்கு நேரி புதிய எருசலேம் சபையைச் சேர்ந்த சகோ. செல்வராஜியும், அவரது சகோ. மகிபாலனும்தான. ஒரு நாள் அவர்கள் என்னிடம் சகோதரரே நீர் வழிபட்டு வருவது மெய் தெய்வம் இல்லை, இயேசு கிறிஸ்து தான் மெய்யான தெய்வம். அவர் ஒருவராலேதான் நமக்கு பாவமன்னிப்பு உண்டு.

"வானத்திலேயும், பூமியிலேயும் தேவர்கள் என்னப்படுகிறவர்கள் உண்டு. இப்படி அநேக தேவர்களும் அநேக கர்த்தாக்களும் உண்டாயிருந்தாலும், பிதாவாகிய ஒரே தேவன் நமக்குண்டு. அவராலே சகலமும் உண்டாயிருக்கிறது. அவருக்கென்று நாமும் உண்டாயிருக்கிறோம். இயேசுகிறிஸ்து என்னும் ஒரே கர்த்தரும் நமக்குண்டு அவர் மூலமாய் சகலமும் உண்டாயிருக்கிறது. அவர் மூலமாய் நாமும் உண்டாயிருக்கிறோம் (1 கொரி 8:5,6)இவ்வாறு வேதம் சொல்லுகிறது. மெய்தெய்வம் இயேசு கிறிஸ்துதான். தேவனாகிய கர்த்தர்தான் நம்மை படைத்தார். இயேசு கிறிஸ்துவினால்தான் நம் ஆத்துமா பரலோகம் செல்ல முடியும். அவரை ஏற்றுக் கொள்ளாதவனுடைய ஆத்துமா நித்திய ஆக்கினை அடைந்து நரகத்திற்கு செல்லும். அங்கே அக்கினியும், கந்தகமும் இருக்கும். அங்கே அனுதினமும் நம் ஆத்துமா வாதிக்கப்படும். ஆதலால் சகோதரரே! இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளும் என்று எனக்கு அழைப்பு விடுத்தார்கள்.

நான் என்னுடைய தெய்வம் என்னை பரலோகம் கொண்டு செல்லும், நம்மை படைத்தது சிவன்தான் உங்களுடைய ஆண்டவர் இல்லை என்று அவர்களிடம் தர்க்கம் செய்ததுண்டு. பரம்பரை ஆண்டியா அல்லது பஞ்சத்துக்கு ஆண்டியா என்றும், பெற்ற தகப்பனைவிட்டு பெருத தகப்பனை தகப்பன் என்கிறீரே என்று கூட நான் அவர்களை பரியாசம் செய்ததுண்டு. தினமும் அவர்கள் அவர்களுடைய வீட்டில் நடக்கும் குடும்ப ஜெபத்திற்கு என்னை அழைப்பதுண்டு. இப்படி இருக்கும்போது எனக்குள்ளே ஒரு சிறு மாற்றம் ஏற்பட்டது. அவர்களுடன் குடும்ப ஜெபத்தில் கலந்து கொண்டேன். பின்பு அவர்கள் என்னை நான்குநேரி புதிய எருசலேம் சபைக்கு பரிசுத்த ஆராதனைக்கு அழைத்துச் சென்றார்கள். சபையில் உள்ள ஆராதனை ஒழுங்கு முறைகள் மற்றும் அன்பு என்னை பெரிதும் கவர்ந்தன. இவற்றிற்கும் மேலாக சபையில் தேவன் கிரியை செய்யும் விதம். இவற்றை நான் கண்டபோது மெய்யாய் தேவன் இங்கு வாசஞ்செய்கிறார் என்பதை அறிந்து கொண்டேன்.

இந்து தெய்வங்களை எடுத்துக்கொண்டால் அவைகள் மந்திரவாதிக்குக் கீழ்ப்பட்டு அவன் என்ன சொல்லுகிறானோ அவற்றின் படி நடக்கிறது, மனிதனை அடித்து கொல்லுகிறது. இதுபோன்ற செய்கைகளை நான் சிந்தனை செய்து பார்த்தேன். இப்பொழுது என் அகக் கண்கள் திறக்கப்பட்டது. யார் மெய்யான .தேவன் என்பதை கண்டு கொண்டேன். மனிதனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் தெய்வங்கள் எல்லாம் தெய்வங்கள அல்ல; கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தான் மெய்யான தேவன்; அவர் நம்முடைய பாவங்களை நீக்கி நம்மை இரட்சிப்பதற்காக ஒரு பாவமும் அறியாத தம்மையே நமக்காக சிலுவையிலே அறைய ஒப்புக்கொடுத்தார் என்பதை நான் அறிய முடிந்தபோது என் உள்ளம் உடைந்தது. என் வாழ்க்கையிலே எண்ணிறந்த (எண்ணிக்கைக்கடங்கா) பாவங்களைச் செய்துள்ளேன்! இந்நிலையில் நான் மரித்தால் நிச்சயமாக என் ஆத்துமா அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே தள்ளப்படும் என்று நான் சிந்தனை செய்யும் போது என் மனம் வேதனைப்பட்டது. நான் செய்த பாவங்களுக்கு பரிகாரி இயேசு கிறிஸ்தான். அவரையே அதுமுதல் என் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டேன்.

இப்படி இருக்கும்போது என் மகள் வீட்டுக்கு சேரன்மகாதேவிக்கு நான் சென்றேன். நீண்ட நாட்களாக என் மகளுக்கு ஒரு அசுத்த ஆவி பிடித்திருந்தது. அது அடிக்கடி என் மகளை அலைக்கழித்து துன்பப்படுத்துவதுண்டு. நான் சென்ற அன்றும் அப்படி ஒரு சம்பவம் நடந்தது. உடனே எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. திடீரென்று ஜெபம் செய் என்று என் மனதில் உணர்த்தப்பட்டது. உடனே நான் நம் ஆண்டவரை (இயேசு கிறிஸ்துவை) மனதில் நினைத்து ஸ்தோத்திரம் செய்து ஜெபம் செய்தேன். இந்த ஏழையின் விண்ணப்பத்திற்கு செவி சாய்த்த நம் இரக்கமுள்ள தேவன் கிரியை செய்து அற்புதமாக என் மகளுக்கு அசுத்த ஆவியின் தாக்குதலிலிருந்து விடுதலை கொடுத்தார், அவருக்கே மகிமை உண்டாவதாக. மற்ற நேரங்களில் அந்த அசுத்த ஆவி தாக்கினால் சுமார் ½ மணி நேரம் அலைக் கழிப்பதுண்டு. ஆனால் அன்று நான் ஜெபம் செய்த இரண்டு நிமிடங்களில் அந்த அசுத்த ஆவியின் தாக்குதல் நின்றது. இந்நிகழ்ச்சி இயேசு கிறிஸ்துவின் மேல் நான் வைத்த விசுவாசத்தை பன்மடங்கு உயர்த்தியது.

பின்பு ஒரு சனிக்கிழமையன்று "தன் பாவங்களை மறைக்கிறவன், வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனே இரக்கம் பெறுவான் (நீதி 28 : 13) என்ற வேதவாக்கியம் மனதில் உணர்த்தப்பட்டவனாக மறுநாள் வள்ளியூர் புதிய எருசலேம் சபைக்குப் பரிசுத்த ஆராதனைக்குச் சென்று பாஸ்டர் S. சுந்தர் ராஜ் அவர்கள் முன் பாவ அறிக்கை செய்வேன் என்று தீர்மானித்தவனாய் இருந்தேன். ஆனால் ஏவாளை வஞ்சித்து அதன் மூலம் மனுக்குலத்தையே பாவத்தில் ஆழ்த்திய சாத்தான் என்னையும் வஞ்சிக்க இந்த பாவ வாழ்வை விட்டு இவன் பரிசுத்தத்தை நாடி செல்கிறானே என்று அன்று இரவே பாம்பாக உருவெடுத்து என் வீட்டிற்கு வந்து என்னை பயமுறுத்தியது. அந்தப் பாம்பை நானும் சகோ. செல்வராஜும் சேர்ந்து அடித்துக் கொன்றோம்.

பின்பு மறுநாள் வள்ளியூர் புதிய எருசலேம் சபையில் பரிசுத்த ஆராதனையில் கலந்து கொண்டேன். அன்றே பாஸ்டர் S. சுந்தர்ராஜ் அவர்கள் முன் பாவ அறிக்கை செய்து தேவ சமாதானத்தைப் பெற்றுக் கொண்டேன் பின்பு 1956-ம் ஆண்டு ஜனவரி 1-ம் தேதி வள்ளியூர் புதிய எருசலேம் சபையில் பாஸ்டர் S. சுந்தர்ராஜ் அவர்களால் ஞானஸ்நானம் பெற்று ஆண்டவரோடு உடன்படிக்கை செய்து கொண்டேன்.

ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான். பழையவைகள் ஒழிந்து போயின. எல்லாம் புதிதாயின (II கொரி 5:17) என்ற வேதவாக்கின்படி என்னுடைய பழைய சுபாவங்கள் மாற ஆரம்பித்தது. சாராயம் குடியாமல் என்னால் ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது. ஆனால் அந்தப் பழக்கத்தைக்கூட தேவனாகிய கர்த்தர் மாற்றினார். பழைய எண்ணங்களைத் தூண்டும் வகையில் சாத்தான் இரவில் சொப்பனத்தில் பீடியை குடி என்று என் வாயில் திணிப்பான் மீண்டும் தீய பழக்கங்களுக்கு இடங்கொடாமல் தேவன் தடுத்து நிறுத்தினார்.

நான் இந்துவாக இருந்த போது இவன் மிகவும் மோசமான மனிதன் என்று என்னை வெறுத்து ஒதுக்கியவர்கள்; கோட்டக் கரையானா இப்படி மாறி விட்டான் என்று என் நல் நடக்கையைக் கண்டு ஆச்சரியப் பட்டனர். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டதின் மூலம் என் ஆத்துமாவை அழிவினின்று தப்புவித்துக் கொண்டேன்.

இதை வாசிக்கும் சகோதர சகோதரிகளே, நீங்கள் இரட்சிக்கப்படவில்லையானால் இன்றே இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனென்றால் மனிதனுக்கு ஆத்துமா என்று ஒன்று உண்டு. நம் உடலோ அழிந்து போகக் கூடியது. நம் ஆத்துமா அழியாதது. நாம் உயிரோடு இருக்கும் காலங்களில் நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டால் நம் ஆத்துமாவை அழிவினின்று தப்புவிக்கலாம், இல்லாவிட்டால் நம் ஆத்துமா அக்கினியும்,

"இருளின் அதிகாரத்தினின்று நம்மைவிடுதலையாக்கி தமது அன்பின் குமாரனுடைய இராஜ்யத்திற்கு உட்படுத்தினவருமாயிருக்கிற பிதாவை ஸ்தோத்தரிக்கிறேன்"

—கொலோ 1:13

---

# புதிய எருசலேம் நடபடிகளில் சில

(தொடர்ச்சி)

ஊருக்குப் போய் சேர்ந்ததும் அவர்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கக்கூடிய சம்பவம் என்னவென்றால் அந்தப் பெரியவருடைய முதுகில் ஒரு தேங்காய் பருமனான ஒரு கட்டி இருந்திருக்கிறது. இது இவருடைய ஐந்தாவது வயதில் சரீரத்தில் சிறியதாக உருவாகி இவருடைய 65-வது வயதில் பெரிய ஒரு கட்டியாக மாறிவிட்டதாம். உடம்பிலே சட்டைப் போட்டிருந்தால் அது ரொம்ப புடைப்பாக வெளியே தெரியுமாம். எங்களிடத்தில் அந்த கட்டிக்காக ஜெபிக்கச் சொல்லவில்லை. அது வளர்ந்து வரும் ஒரு உறுப்பைப் போல் உடலோடு ஒட்டி விட்டது. ஆனால் அதிசயமானவர் செய்த அற்புதம் என்ன தெரியுமா, சரீரத்திலுள்ள எல்லா பெலவீனங்களும் மாறிப்போகட்டும் என்று கர்த்தரிடம் வேண்டினபடியால் இந்தக் கட்டியையும் தேவனாகிய கர்த்தர் இவருடைய உடம்பைவிட்டு மாற்றி விட்டார்.

இவர் ஆலயத்துக்கு வரும் போது முதுகில் கட்டி இருந்தது. கஷ்டப்பட்டு சட்டையைப் போட்டுக்கொண்டு வந்தவர் வீட்டில் போய் சட்டையை கழற்றிய பொழுது கட்டியை காணவில்லை. அவர் வீட்டாரும் அந்தக் கிராமத்தார் யாவரும் இந்த அற்புதத்தைக் கண்டு அற்புதநாதர் இயேசுவை மகிமைப் படுத்தியிருக்கிறார்கள் அல்லேலூயா.

அவர் நீண்ட நாட்களாக கால் நடக்க முடியாதிருந்தவர் இப்பொழுது இவர் தன்னுடைய ஊர் சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. அங்கிருந்து நடந்தே ஆலயத்துக்கு வருகிறார். இவரைக் காணுகிற எல்லாரும் இவரிடம் ஆச்சரியமாய் நீங்கள் எப்படி குணமானீர்கள் என்று கேட்கிறார்கள். இவரிடம் கேட்கிற எல்லாரிடமும் என் கால்களுக்கு கிடைத்த சுகம் மட்டுமல்ல, என் முதுகிலிருந்த கட்டியும் மாறிவிட்டது. நான் கர்த்தருடைய ஆலயத்துக்குப் போனேன் கர்த்தர் எனக்கு சுகம் கொடுத்தார் என்று கூறிவருகிறார். சபையில் சாட்சி கொடுக்கும் பொழுதும் இது கர்த்தருடைய ஆலயம், கர்த்தர் இங்கே வாசமாய் இருக்கிறார் என்றே கூறுகிறார்.

ஆம் கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு மேலாய் உயர்த்தப்படும் எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடிவருவார்கள் (ஏசா 2:2).

ஒரு நாள் தேவ சமூகத்தில் ஜெபித்துக் கொண்டிருக்கும் பொழுது கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள அழகப்பபுரத்துக்குப் போகும்படி கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு வந்து பேசவேண்டியதெல்லாம் பேசி முடித்தாகி விட்டது. அவைகளெல்லாம்

பரிசுத்தாவியானவர் நம்முடைய ஊழியக்காரர்களைக் கொண்டு புத்தகமாய் எழுதி நம்முடைய கைகளில் தந்து விட்டார். இனி ஆவியானவர் பேச வேண்டிய அவசியமில்லை என்று வாதாடுகின்ற வாயாடிகள் மலிந்து போன காலத்தில் நாம் காணப்படுகிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு இம்மானுவேல் என்ற ஒரு பெயரும் உண்டு. "இம்மானுவேல் என்பதற்கு தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தமாம் (மத் 1:23) என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. நம்மோடு வாசம் பண்ணுகிற தேவன் ஊமையான தெய்வமானால் பேசமாட்டார். அவர் பேசுவார். ஆம் அவர் பேசுவார் பேசிக் கொண்டே இருக்கிறார். அல்லேலூயா!

அந்த அழகப்புரத்தில் புதிய எருசலேம் சபையின் ஊழியர் ஜூஸ் மைக்கேல் என்ற ஓய்வு பெற்ற ஆசிரியர் ஒருவர் இருக்கிறார். திடீரென்று அவர் எதிர்பாராத வேளையில் அங்கு போய் சேர்ந்தோம். அவர் ரொம்ப ஆச்சரியப் பட்டார். திடீரென்று வந்து விட்டீர்களே என்றார். கர்த்தருடைய ஆவியானவர் அனுப்பினார். ஆகையால் வந்தோம் என்று கூறினோம்.

அந்த ஊரிலுள்ள ஒரு சகோதரர் இவர் பெயர் புண்ணிய முத்து இவர் C.S.I. சபையில் போதகராக வேலை பார்ப்பவர். இவருக்கு ஒரு பயங்கரமான பெலவீனம் தாக்கி நாகர்கோவில் அருகே உள்ள புத்தேரி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு அங்குள்ள எல்லா டாக்டர்களும் பரிசோதனை பண்ணியும் வியாதி இன்னதென்பதைக் கண்டுக் கொள்ள முடியவில்லை. இவருக்கு பைத்தியமான நிலைமை உண்டாகி விட்டது. உடனே மருத்துவமனையிலிருந்து இவரை டிஸ்சார்ச் பண்ணி விட்டார்கள். முந்தின நாள் தான் இவரை தன்னுடைய ஊருக்கு கொண்டு வந்துள்ளார்கள். நாங்கள் போயிருந்த அன்று காலையில் நமது ஊழியரை ஜெபிப்பதற்காக அழைக்க வந்திருக்கிறார்கள். இவர் போய் அந்த நோயாளியைப் பார்த்ததும் நிலைமை பரிதாபமாக இருப்பதைக் கண்டு நீங்கள் இவரை வள்ளியூருக்கு புதிய எருசலேம் சபைக்குக் கொண்டு போவது நல்லது. ஆனால் அங்கே தேவனுடைய பரிசுத்தவான்கள் இருந்தால் நல்லது நான் கேட்டுச் சொல்லுகிறேன் என்று ஆலோசனை கூறி வந்திருக்கிறார்.

"நாங்கள் திடீரென்று அந்த ஊருக்குப் போனதும் நம்முடைய ஊழியருக்கு அது ரொம்ப ஆச்சரியமாயிருந்தது. எங்களிடம் இந்த நோயாளியின் நிலையை கூறினார். நாங்கள் அந்த ஊருக்கு அனுப்பப்பட்டதின் நோக்கத்தை ஆவியானவரிடம் கேட்டறிந்து அந்த நோயாளிக்காக ஜெபிக்கச் சென்றோம். அவர் யாரிடமும் அதிகம் பேசமாட்டார். ஆகாரம் சாப்பிட்டு அநேக நாட்கள் ஆகிவிட்டது. அவரை உட்கார வைத்து நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினால் பிசாசை கடிந்து கொண்டோம். அவருடைய தலையை ஒரு சர்ப்பம் சுற்றியிருப்பதுபோல் காட்சியில் தெரிந்தது. அந்தச் சர்ப்பம் கீழே விழுந்து மறைந்து விட்டது. அவருடைய வியாதி தலை எப்பொழுதும் வேதனை, எதையும் சிந்திக்க முடியாத நிலைமை. இப்பொழுது வேதனை மாறினது. நன்றாக ஆகாரம் சாப்பிட்டார். வீட்டாரும் உறவினர்களும் விசேஷமாய் அவருக்கு சிகிச்சை செய்த மருத்துவர்களும் ஆச்சரியப்படுகிறார்கள். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக, தேவனுக்கே மகிமையுண்டாவதாக!

Pastor S. SUNDARRAJ
Vallioor.

**வாசகர்கள் கவனிக்க :**

பத்திரிக்கையோடு (Post Card) போஸ்ட் கார்டு ஒன்று உங்களுக்கு அனுப்பப்படுகிறது. அதை பூர்த்தி செய்து தபால்தலை ஒட்டி அனுப்பிவைக்கவும். சந்தா செலுத்த முடியாதவர்களும் தங்களுக்கு பத்திரிக்கை தேவை என்றால் கார்டை (Card) பூர்த்தி செய்து தபால்தலை ஒட்டி அனுப்பி வைக்கவும்.